| பெர்கள். | பக்கம். |
|---|---|
| மாம்பழம்-காய-பிஞ்சு | உ௱உ |
| மாம்பிசின் | கசுஉ |
| மாம்பிஞ்சு | கஅசு |
| மாலிவெயில் | ஙசரு |
| மாவலி | கஉ௰ |
| மாவலிங்கமரம் | சாங |
| மாவலிங்கமரப்பட்டை | கசா௰ |
| மாலைக்குளியல் | ஙசஎ |
| மாலையதனில் | ஙஅ |
| மாணிறப்பசும்பால் | உகூ |
| மாணிறைச்சி | உஙஉ |
| மான்செவிக்கள்ளிப்பால் | ஙசா |
| மி | |
| மிருகாற்றுவிரும்புதல் | ஙஅகூ |
| மிசரிப்பருப்பு | உகசா |
| மிதாமிதவார்த்தை | ஙசச |
| மிதிபாகல்காய் | சகூஎ |
| மியார்கூந்தல் | கூங |
| மிருகஎலும்பு | ங௱க |
| மிருகக்கொம்பு | ங௱ச |
| மிருகப்பல் | ங௱ச |
| மிருதாரசிங்கி | ங௱உ |
| மிளகரணை | கூச |
| மிளகு-உ-கவி | உஉரு |
| மிளகுக்காய் | கசாகூ |
| மிளகுசம்பா | உஉங |
| மிளகுத்தக்காளி இலை-உ-கவி | சருகூ |
| மிளகோதனம் | ஙஎச |
| மீ | |
| மீன்கறிவகை | உசகூ |
| மு | |
| முகிழ்விரியாக்கத்திரிப் பிஞ்சு | கஅசு |
| முக்காட்டிட்டுக்கித்தி ரைசெய்தல் | ஙகூசா |
| முக்கால்கூறுகாய்ச்சு வெந்நீர் | உரு |
| முக்கார்குணடியநீர் சிரணகாலம் | ஙசாரு |
| முக்காளைவேர் | சஙக |
| முக்கியமாகமருந்துக் குதவாதவஸ்து | ஙங௰ |
| முக்குளிக்கீரை | கசாகூ |
| முக்கூட்டுநெய் | சஎ |
| முக்கூட்டுநெய்சேர்க்குவிதி | |
| முசலிறைச்சி | உஙங |
| முசல்செவிக்கள்ளிப்பால் | ஙசா |
| முசற்காதிலை | கசா௰ |
| முசட்டை | கூச |
| முசுமுசுக்கையிலை | சசா௰ |
| முசுமுசுக்கைவேர் | கஙசா |
| முசுறுமுட்டை | ங௱உ |
| முடக்கற்றான் | கூரு |
| முச்சுக்கஞ்சி | ஙஎ௰ |
| முண்டாசு | ஙருங |
| முட்காவேளைவேர் | சஙக |
| முதலைஇறைச்சி | உஙச |
| முதிர்ந்தபாகு | ருங |
| முத்தக்காசு | கஉச |
| முத்து | ஙசச |
| முத்துச்சிப்பி | ங௱ |
| முத்துச்சுண்ணம் | ஙஅரு |
| முந்திரிப்பருப்பு | உ௰ரு |
| முந்திரிகைமது | ருசா |
| முப்பத்திரி | உஎ௰ |
| முருக்கம்பிசின் | கசச |
| முருங்கைக்காய் | சஅசா |
| முருங்கைச்சமூலம் | கசச |
| முருங்கைப்பிசின் | க௰அ |
| முருங்கைப்பிஞ்சு | கஅங |
| முருங்கைப்பூ | கஎச |
| முருங்கைமரப்பட்டை | கஙகூ |
| முருங்கையிலை | கசசா |
| முருங்கையீர்க்கு | உ௰ரு |
| முருங்கைவித்து | உ௰ரு |
| முலாங்காய் | சகூச |
| முலைப்பால்-உ-கவி | உஎ |
| முலைப்பால்வெண்ணெய் | சக |
| முல்லைநிலம் | எ |

| பெயர்கள். | பக்கம். |
| --- | --- |
| முல்லைப்பூ | கஅஉ |
| முளகாய்ப்பழம் | உக0 |
| முளைக்கீரை | கசாஎ |
| முள் துளசி | அசா |
| முள்முருக்கமரம் | சாஅ |
| முள்முருக்கம்பூ | கஎசா |
| முள்வெள்ளரிக்காய் | ககூரு |
| முள்ளங்கிக்கிழங்கு | ககரு |
| முள்ளங்கியிலை | கருஎ |
| முள்ளங்கிவித்து | உயஎ |
| முள்ளம்பன்றியிறைச்சி | உயந |
| முள்ளிக்கீரை | கசாஎ |
| முள்ளிலவமரம் | சாரு |
| முருக்கு | நஎஎ |
| மூ | |
| மூக்குறட்டை | கூசா |
| மூங்கிலரிசி | உஉசா |
| மூங்கிலிலை | கசஅ |
| மூங்கில்மரம் | சாஅ |
| மூங்கிற்பாய் | நகூ |
| மூசுமல்லிகை | [illegible] |
| மூத்திரவகை | சகூ |
| மூலரோகாரிவஸ்து | நநந |
| மூன்றுமீற்றுபசும்பால் | நய |
| மெ | |
| மெருகன்கிழங்கு | ககச |
| மெழுகு | உகூஎ |
| மே | |
| மேககுலாந்தகன் | நஉஉ |
| மேகநாதப்பூண்டு | க0ச |
| மேல்வீடு | நசஉ |
| மேனியிலை | கருரு |
| மை | |
| மைக்கொன்றப்பூ | கஎக |
| மைகொன்றைமரம் | கூய |
| மைச்சம்பாஅரிசி | உஉச |
| மொ | |
| மொச்சக்காய் | கசாகூ |
| மொச்சக்கொட்டை | உஉகூ |
| மொந்தன்கடுக்காய் | உசாஅ |
| மொந்தன்பழம் | உரசா |
| மோ | |
| மோதகம் | நஎஎ |
| மோதகவல்லிமரம் | சாந |
| மோரின்மேல்சலம் சீரணகாலம் | நசாச |
| மோருஞ் அன்னமும் புசித்தல் | நசாஎ |
| மோர்சேர்ந்தபழயது | நஎக |
| மோர்ச்சோறுசீரணகாலம் | நகூஉ |
| மோரவகை | நகூ |
| ய | |
| யமுனைநதிநீர் | ய |
| யவாக்ஷாரம்-உ-கவி | உகூச |
| யா | |
| யானைத்திப்பலி | 235 |
| யானைநெருஞ்சில்-2-கவி | 99 |
| யானைப்பால் | 32 |
| யானைமூத்திரம் | 48 |
| யானையேற்றம் | 387 |
| ர | |
| ரசகர்ப்பூரம் | 305 |
| ரசதாளிக்கரும்பு | 51 |
| ரசபூபதி | 323 |
| ரசமசீரணகாலம் | 307 |
| ரசாஞ்சனம் | 304 |
| ரத்தபோளம் | 280 |
| ரத்தினக்கம்பளம் | 390 |
| ரா | |
| ராஜகண்டேச்சுரம் | 324 |
| ராஜகேசரிவடகம் | 324 |
| ராஜமிருகாங்கம் | 323 |
| ராஜராஜேச்சுரமாத்திரை | 324 |
| ரே | |
| ரேவல்சின்னிக்கிழங்கு | 145 |
| ரோ | |
| ரோசாப்பூ | 179 |
| ல | |
| லங்கேச்சுரம் | 352 |
| லவங்கப்பட்டை | 262 |

| பெயர்கள். | பக்கம். |
|---|---|
| லவங்கப்பத்திரி | 26 |
| லவங்கப்பூ-2-கவி | 239 |
| லே | |
| லேகியம்சிரணகாலம் | 398 |
| வ | |
| வகுளம்பூ | 173 |
| வங்கச்சிந்தூரம் | 321 |
| வங்காரவள்ளைக்கீரை | 264 |
| வங்கேஸ்வரம் | 323 |
| வசந்தகுசுமாகரம் | 324 |
| வசம்பு | 264 |
| வசலைக்கீரை | 165 |
| வச்சிரம் | 313 |
| வச்சிரவல்லி | 92 |
| வச்சிரயிலை | 161 |
| வடிகஞ்சி | 370 |
| வட்டக்கிலுகிலுப்பை | 72 |
| வட்டத்திருப்பி | 264 |
| வயல்நண்டு | 253 |
| வயல்நீர் | 16 |
| வயிரம் | 313 |
| வரகுச்சாதம் | 372 |
| வரால்மீன்கறி | 246 |
| வரிக்கடுக்காய் | 261 |
| வரிக்காளான் | 106 |
| வரிக்குமட்டியிலை | 161 |
| வரிக்கோவை | 95 |
| வரிப்புறாக்கறி | 244 |
| வரையாட்டிறைச்சி | 231 |
| வலம்புரிக்காய் | 172 |
| வலியன்குருவிக்கறி | 239 |
| வலைக்காளான் | 106 |
| வல்லாரை | 100 |
| வழுதலங்காய் | 198 |
| வளைதடிச்சம்பா | 223 |
| வளையலுப்பு | 291 |
| வள்ளைக்கீரை | 264 |
| வறட்பூலாயிலை | 150 |
| வற[illegible]பேதம் | 361 |
| வறுத்தமாசீரணகாலம் | 364 |
| வ[illegible]புராக்கறி | 245 |
| வன்னிமரம் | 61 |
| வஸ்திரவகை | 351 |
| வா | |
| வாகனவகை | 387 |
| வாகைப்பிசின் | 143 |
| வாகைப்பூ | 176 |
| வாகைமரம்-2-கவி | 64 |
| வாசனைப்புல் | 105 |
| வாணக்கந்தகம் | 306 |
| வாததேகிகட்குஊறுகாய் | 337 |
| வாததேகிகட்குக்கறி | 336 |
| வாததேகிகட்குக்கீரை | 336 |
| வாததேகிகட்குரசம் | 336 |
| வாததேகிகட்குவற்றல் | 336 |
| வாதமுதலியமூன்று தேகிகட்குஉப்பு | 335 |
| வாதராக்ஷசமாத்திரை | 321 |
| வாதரோகாரிவஸ்து | 332 |
| வாதுமைநெய் | 45 |
| வாதுமைப்பருப்பு | 215 |
| வாதுமைப்பிசின் | 144 |
| வாத்துக்கறி | 237 |
| வாயுவின்குணம் | 6 |
| வாய்விளங்கம் | 272 |
| வாலான் அரிசி | 220 |
| வாலுழுவை அரிசி | 273 |
| வாலேந்திரபோளம் | 281 |
| வால்மிளகு | 256 |
| வாழைக்காய் | 185 |
| வாழைநீர்-2-கவி | 20 |
| வாழைப்பழம் | 200 |
| வாழைப்பிஞ்சு | 183 |
| வாழைப்பூ | 179 |
| வாழைமச்சமூலம் | 110 |
| வாழையிலை | 357 |
| வாழைப்பருப்புசிலபிணிக்கு ஆகும் ஆகாதெனல் | 283 |
| வாள்அவரைக்காய் | 196 |
| வாணம்பாடிக்கறி | 238 |

| பெயர்கள். | பக்கம். |
|---|---|
| வான்கோழிக்கறி | 237 |
| வி | |
| விசயன்கடுக்காய் | 259 |
| விசிறிவகை | 392 |
| விச்சுளிக்கறி | 238 |
| விடத்தேறின்குணம் | 70 |
| விடத்தேரின்பிசின் | 144 |
| விதுகங்காய் | 192 |
| விதையத்திப்பழம் | 203 |
| வித்துக்களின்பொது | 219 |
| விநாயகர்துதி | 1 |
| விநாயகர்துதி | 3 |
| விராவியிலை | 151 |
| விலாங்குமீன் | 252 |
| விலாமிச்சுவேர் | 267 |
| வில்வமரத்தின்சமூலம் | 176 |
| வில்வமரவேர்-2-கவி | 125 |
| விழலரிசி | 273 |
| விழித்தவுடன்கண்ணாடி பார்க்குதல் | 343 |
| விழித்தவுடன்சுத்தசலம் அருந்தல் | 343 |
| விழித்தவுடன்பார்க்கத் தகாதவஸ்து | 343 |
| விழுதியிலை | 154 |
| விளாமரம் | 65 |
| விளாம்பழம் | 200 |
| விளாம்பிசின் | 143 |
| விஜேகைபைரவம் | 331 |
| விஷமூங்கிலிலை | 163 |
| விஷாரிவஸ்து | 133 |
| விஷ்ணுகிராந்தி | 101 |
| வீ | |
| வீடுனென்னும்பச்சைக் கர்ப்பூரம் | 286 |
| வெ | |
| வெங்காயப்பூ | 182 |
| வெங்காயம் | 124 |
| வெங்காயவிதை | 217 |
| வெங்காரம் | 292 |
| வெட்சிப்பூ | 182 |
| வெட்டிவேர் | 133 |
| வேட்டிவேர்விசிறி | 392 |
| வெட்பாலைமரம் | 67 |
| வெட்பாலையரிசி | 273 |
| வெண்கடுகு | 277 |
| வெண்கலக்கலம் | 157 |
| வெண்கலப்பாத்திரவெந்நீர் | 26 |
| வெண்கலம் | 110 |
| வெண்கழற்சியிலை | 161 |
| வெண்காக்கட்டான்வேர் | 134 |
| வெண்காலிமரவேர் | 128 |
| வெண்கீரைத்தண்டு | 164 |
| வெண்குன்றிசமூலம் | 171 |
| வெண்சாமரை | 393 |
| வெண்சிவதைவேர் | 283 |
| வெண்டிக்காய் | 191 |
| வெண்டுமுளகாய் | 193 |
| வெண்டக்காய் | 191 |
| வெண்ணாகம் | 311 |
| வெண்ணெய்வகை | 41 |
| வெண்ணெச்சிலிலை | 148 |
| வெண்ணெய்ச்சோறு சீரணகாலம் | 398 |
| வெண்பட்டு | 151 |
| வெண்பயறு | 234 |
| வெண்புருக்கறி | 240 |
| வெண்மைநிறக்கலுவம் | 317 |
| வெண்மைநிறப்பசும்பால் | 26 |
| வெதுப்படக்கி | 70 |
| வெதுப்படக்கியிலை | 152 |
| வெந்தியக்கீரை | 170 |
| வெந்தியம் | 278 |
| வெந்துபாகமானவிதை கள்சீரணகாலம் | 398 |
| வெந்நீரின்பொதுகுணம் | 24 |
| வெந்நீர்சீரணகாலம் | 398 |
| வெந்நீர்வகை | 24 |
| வெயிலாலுண்டாகுங் குணம் | 144 |

| பெயர்கள். | பக்கம். | பெயர்கள். | பக்கம். |
|---|---|---|---|
| வெளிச்சப்பிசின் | 281 | வெள்ளைபாஷாணம் | 308 |
| வெள்அல்லிவிதை | 219 | வெள்ளைப்பூண்டு | 280 |
| வெள்ளைஎலிஇறைச்சி | 235 | வெள்ளைமிளகு | 256 |
| வெள்வவ்வால்கறி | 125 | வெள்ளைவஸ்திரம் | 352 |
| வெள்வேலமரம் | 68 | வெற்பேதி | 82 |
| வெள்ளரிக்காய் | 195 | வெற்றிலை | 384 |
| வெள்ளரிப்பிஞ்சுகாய்பழம் | 195 | வெற்றிலைவள்ளிக்கிழங்கு | 123 |
| வெள்ளரிவித்து | 217 | வே | |
| வெள்ளறுகு | 87 | வேங்கைமரம் | 61 |
| வெள்ளாட்டிறச்சி | 210 | வேப்பநெய் | 45 |
| வெள்ளாட்டுத்தயிர் | 39 | வேப்பமரம் | 66 |
| வெள்ளாட்டுநெய் | 43 | வேப்பம்பிண்ணாக்கு | 285 |
| வெள்ளாட்டுப்பால் | 31 | வேப்பம்பூ | 175 |
| வெள்ளாட்டுப்புழுக்கை | 49 | வேப்பம்வித்து | 121 |
| வெள்ளாட்டுமூத்திரம் | 49 | வேப்பிலை | 463 |
| வெள்ளாட்டுமோர் | 39 | வேலம்பட்டைமது | 56 |
| வெள்ளாட்டுவெண்ணெய் | 41 | வேலிப்பருத்தியிலை-2-கவி | 162 |
| வெள்ளாமணக்கிலை | 149 | வேளைப்பூ | 179 |
| வெள்ளி-2-கவி | 309 | வேள்விப்புகை | 349 |
| வெள்ளிக்கலம் | 356 | வை | |
| வெள்ளிலோத்திரம் | 268 | வைகைநதிநீர் | 11 |
| வெள்ளீயம் | 311 | வைடூரியம் | 313 |
| வெள்ளெருக்கம்பால் | 32 | வைத்தியாங்கம் | 315 |
| வெள்ளைக்கிலுகிலுப்பை | 77 | ஸ் | |
| வெள்ளைக்குங்கிலியம் | 296 | ஸ்நானகாலவிதி | 350 |
| வெள்ளைச்சங்கு | 300 | ஸ்நானபானங்களுக்குதவாதநீர் | 17 |
| வெள்ளைச்சாரணை | 96 | | |
| வெள்ளைத்தாமரைப்பூ | 180 | ஸ்நானபானங்களுக்குரியசலம்உஷ்ணநிதானம் | 327 |
| வெள்ளைநாவற்பழம் | 204 | | |
| வெள்ளைநாவி | 228 | க்ஷவரத்தின்குணம் | 350 |


## பெயர் அகராதி.

முற்றிற்று.

## இப்போதுபதிப்பித்துவரும் வைத்தியசில்லறைக்

# கோர்வைகளாவன.

| | |
|---|---|
| சித்தர்கள்மூலவர்க்கம் | 6 |
| அகஸ்த்தியசூத்திரம் | 50 |
| அகஸ்தியர்பெருங்குழம்பு | 25 |
| அகஸ்தியர்சூத்திரமகாரசாரம் | 10 |
| அகஸ்தியர்ஞானம் | 32 |
| கொங்கணர்சரக்குவைப்பு | 100 |
| கருவூரார்நொண்டி | 100 |
| அகஸ்தியர்பூரணசூத்திரம் | 50 |
| சினத்திசாநொண்டி | 1 |
| அகஸ்த்தியர் | 16 |
| தம்மந்திரி | 6 |
| புலிப்பாணிதிலர்கம் | 56 |
| புலிப்பாணிசூத்திரம் | 100 |
| வால்மீகர் | 62 |
| அகஸ்தியர்சிவராஜயோகம் | 64 |
| ஊர்வசி | 19 |
| கொங்கணர்முப்பு | 22 |
| சட்டைமுனிசூஸ்திரம் | 24 |
| பதிப்பித்திருக்கும் புஸ்தகங்கள் | |
| அண்டக்கல்சுண்ணம் | 16 |
| அதிசயசூஸ்த்திரம் | 27 |
| வயித்தியசூஸ்த்திரம் அல்லது பச்சமொட்டு | 16 |
| தர்க்கசங்கிரகம் | 16 |
| ஞானம்-13-ஞானம் | 14 |
| ஞானோபதேசம் | 14 |
| முப்பு | 30 |
| பாலவாகடம் | 20 |
| ஞானம் | 30 |
| நவக்கிரகக்ஷம | |
| சோதிமணிசூஸ்திரம | 3 |
| முப்புதீட்சைசூஸ்திரம | 16 |
| குருநூல்முப்பு | 50 |
| ஞானசுருக்கம | 12 |

| | |
|---|---|
| சிவகுளிகை | |
| கன்மசூஸ்திரம் | 150 |
| தூக்கிடைசூஸ்திரம் | 36 |
| வாதசுருக்கம் | 12 |
| முப்பூசூஸ்திரம் | 10 |
| செந்தூரமுந்நூறுக்குசூஸ்திரம் | 36 |
| சுத்தஞானம் | 9 |
| கோரிகுருநூல் | 50 |
| சஞ்சீவியெண்ணெய் | |
| மதிவெண்பா | 100 |
| குருஜெயநீர்கெங்கை | 60 |
| வயித்தியம்முன்னெண்பது | 80 |
| மேற்படிபின்னெண்பது | 80 |
| தண்டகபட்சணி | 123 |
| நாதாந்தக்குறிப்பு | 19 |
| செயமுனிசூஸ்திரம் | 34 |
| ஊத்துமுறை | 21 |
| சரநூல்பஞ்சபட்சி | 100 |
| பூஜாவிதி | 200 |
| பரிபூரணம் | 400 |
| வயித்தியரத்னச்சுருக்கம் | 360 |
| ஞானோபதேசம் | 30 |
| ஞானோபதேசம் | 14 |
| சுப்பிரமணியர்ஞானம் | 32 |
| அகஸதியர்ஞானம் | 200 |
| வயித்தியம் | 100 |
| திருமந்திரம் | 16 |
| வகாரசூஸதிரம் | 16 |
| மேற்படிமுப்புசூஸத்திரம் | 30 |
| கருமானசுருக்கம் | 51 |
| வயித்தியம் | 20 |
| முப்புசூஸ்த்திரம் | 16 |
| கொ-பூஜாவதி பாடல் | 32 |
| கருவூரார்பூஜாவதி | 30 |

௨

கடவுள் துணை.

அற்புதசிந்தாமணி என்னும்.

# பதார்த்தகுணசிந்தாமணி.

மூலமும்-உரையும்.

## பாயிரம்.

விநாயகர்துதி-நேரிசைவெண்பா.

ஆதியுமைக்கருள் செயற்புதசிந் தாமணியை
யாதியுமையருளா லம்புவியுட்-கோதறுநற்
செந்தமிழாற் கூறுதற்குச் செம்பவளவேழமுகன்
கந்தமலர்ச் செஞ்சரணங் காப்பு.

(இதன்பதவுரை.)

ஆதி-பூர்வத்தில் ஆதி எப்பொருட்கு மிறைவனாகிய சிவபெருமான் உமைக்கு உமாதேவியாருக்கு அருள்செய் உபதேசித்தருளிய அற்புதம் புதுமையாகிய சிந்தாமணியை பதார்த்தகுணசிந்தாமணியை உமையருளால் அவ்வுமாதேவியாரது திருவருளைக்கொண்டு அம் அழகுபொருந்தியபுவியில் இவ்வுலகத்தில் கோது-குற்றம்-அறு- நீங்கிய-நல் - நல்ல செந்தமிழால் - இயற்றமிழ்ப்பாவினால்- கூறுதற்கு- சொல்லுதற்கு செம்பவளம்-சிவந்தபவளம்போலு நிறத்தையுடைய வேழமுகன் யானைமுக விநாயகக்கடவுளது கந்தம்-பரிமளம் பொருந்திய மலர் செந்தாமரைமலரையொத்த செஞ்சரணம் - சிவப்பாகிய திருவடிகள்-காப்பு காப்பாகும்-எ-று. எந்தக்கருமங்களையுந் தன்னைவணங்கித் தொடங்கின விக்கின நீக்குதற்கும் வணங்காது தொடங்கின் விக்கின மாக்குதற்குந் தலைவராகி விக்கினேஸ்வரரென்று பெயர்பெற்ற விநாயகக்கடவுளை ஆன்றோரொழுக்கத்தின்படி தாமெடுத்துக்கொண்ட நூல் இடையூறின்றியினிது முடிதற்பொருட்டு வணங்கித்தொடங்கி மேலேகூறப்படும் பாக்களுக்கெல்லாம் இதுமுதற் பாவாதலின் முதற்பாவாகிய வெண்பாவாற் கூறினர்.

(பொழிப்புரை.)

பூர்வத்தில் சிவபெருமான் உமாதேவியாருக்கு உபதேசித்தருளிய பதார்த்தகுணசிந்தாமணியாகிய ஆயுள்வேதத்தை அந்தஉமாதேவியார

து திருவருளைக்கொண்டு அழகியஇந்தவுலகத்தில்குற்றமற்றஇயற்றமிழ் பாடலாற்சொல்லுதற்கு சிவந்தபவளம்போலும் நிறத்தையுடைய பிரணவடிவமாகிய யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளது பரிமளம் பொருந்திய செந்தாமரைமலரையொத்த சிவந்ததிருவடிகள் காப்பாகும் சிவபெருமான் ஆன்மாக்கள் முத்தியடையும்பொருட்டு தனுகரணாதிகளைப்படைத்து ஊண் உறக்கமுதலிய தொழிற்குரியவைகளாக்கி உபகரித்தலை அவ்வான்மாக்களுணராது அஞ்ஞானத்தால் யான்எனதுஎன்னுஞ் செருக்குற்றுச்செய்கின்ற இருவினைக்குஈடாகவியாதிகளினால மெலிந்து வருந்துமேயென அவ்வான்மாக்களுக்குத்தாயாகிய பார்வதிதேவியார் இரக்கமுற்று விண்ணப்பஞ்செய்தலைச்சிவபெருமான் திருவுளத்தமைத்து அப்பிணிகளை நீக்குவதற்குச் சாதனமாகிய பலபல ஓடதிவகைகளை உபதேசித்தருள அந்தவுபதேசத்தைப்பெற்றுக்கொண்டபார்வதிதேவியார் சமஸ்கிரதபாஷையில் சுலோகபூர்வசமாகத்தேவி திரவியரத்தினாகரம் என்று அருளிச்செய்த சாஸ்திரத்தை தமிழ்ப்பாடலாகச் செய்தமையாலும் உமாதேவியாரது கிருபாநோக்கத்தாலன்றிக் கல்வியுஞ் செல்வமும் எய்துவதரிதாகலானும், உமையருளாற்கூறுதற்கென்றும் ஒவ்வொரு ஓடதிவகைகளும் அநேக அற்புதங்களையுடையவைகளாதலின் அவைகளின் பெருமைதோன்ற அற்புதசிந்தாமணியென அடைமொழி கொடுத்தும் இலக்கண அமையில்லாதஏனையநாட்டுப்பாடல்களைப்போலாது சிவபெருமான் தமது திருவாக்கினால் இயற்றமிழாசிரியராகிய அகத்திய மகாமுனிவருக்கருள்செய்யப்பட்டதும் இலக்கண அமைதியுடையதுமாதலின் செந்தமிழென்றும் பவளம் அசாத்தியரோகங்களையும் நீக்கி சரீரத்துக்கு உறுதியயப்பதுபோல தன்னைத்தோத்தரிக்கின்றவர்களுடைய கிராதமகாபாதகங்களையும் தீர்த்து அருளுதலின் செம்பவள வேழமுகனென்றும் செந்தாமரைமலர் இனிமையுங் குளிர்ச்சியுந்தந்து வெம்மைநோய்முதலியவைகளை நீக்குவதுபோல விநாயகக்கடவுளது திருவடிகள் அடியார்களுடைய பிறவித்துன்பமாகிய வெம்மைநோயைப்போக்கி நித்தியாநந்த வீட்டைத்தருதலின்கைந்தமலர்ச் செஞ்சரணமென்றுங்கூறினார்.

தேரையர்பாடல்.

பரசிவ வணக்கம்.

எல்லாப்பதார்த்தமுமா யெங்குநிறையொன்றைமுந்நூற்
சொல்லாப்பதார்த்தத்தைத் துப்புரவை-வல்லார்கள்

கூடற்பதார்த்தத்தைக் கொண்டேத்திக்கூறுதுமியாங்
கோடற்பதார்த்தகுணம்.

(இ-ள்) தாபரசங்கமப்பொருள்களும் எவ்விடத்தும் நீக்கமறப்பரிபூ ரணமாக நிறைந்திருக்கின்ற ஒருபொருளும் இத்தன்மையுடையதென்று துணிந்து சொல்லப்படாதபொருளும் அநுபவிக்கப்படும்பொருளும் ஐம்பொறிகளையும் வென்றவல்லவர்களாகிய பரமயோகிகள்சேருவதற்குரிய பொருளுமாயிருக்கின்ற பரமசிவத்தைத் தியானித்துத் தோத்திரஞ் செய்துயாவரும் நாடோறும் உண்ணத்தகுவனவாகிஇவ்வுலகத்திலிருக்கின்ற பதார்த்தங்களின் குணங்களைச்சொல்லுகிறோம்-எ-று.

கணபதி-குமாரவேள்-பரமசிவன்.

உமாதேவி-தன்மந்திரி சித்தர்கள்-துதி.

சீரார்பதார்த்தகுண சிந்தாமணிக்கரணுந்
தாரர்கஜமுகனுஞ் சண்முகனு-நீராருஞ்
செஞ்சடிலனும்பரையுந் தேவவயித்தியனும்
விஞ்சுசித்த நாதர்களுமே.

(இ-ள்) திருவாத்திப் பூமாலையைச்சூடிய யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுளும் ஆறுதிருமுகங்களையுடைய குமாரக்கடவுளும் கங்கையணிந்தசிவந்த சடையினையுடைய பரமசிவமும் உமாதேவியாரும் தேவவயித்தியராகிய தன்வந்திரியும்சித்தர்களுக்குள்மேலாகிய ஒன்பதுசித்தர்களும் சிறப்புப்பொருந்திய இந்தபதார்த்தகுண சிந்தாமணியாகிய ஆயுள்வேதத்துக்கு காப்பவர்-யென்றவாறு. (௧)

தே, பதார்த்த உற்பத்தியின் வரலாறு-விருத்தம்,

தேடரும்கண்டவொளிப் பிழம்பாழ்ஞான
நிதபூரணமாய்த்தற் செயல்கொண்டெல்லா
மூடவிடவல்லதுமாய்த் தனித்தவொன்றுண்
மூழ்கின்றமுக்குணச்சிற் சத்திதன்னில்
நாடனந்தம்பிறந்ததிற்கா லுதித்ததிற்றீ
நாரமண்ணுண்டாய் மாண்டானல்கவந்த
ஓடதியிலனமுமதி லுலகுநிற்கு
முபர்வாய்த்தவ்வோடதியி னுரிமைசொல்வாம்.

(இ-ள்) யாவருந்தேடிக் காண்பதற்கருமையாகியசகலசோதியாயும் ஞானத்தின்மேற்பட்ட பூரணமாயும் தனது செய்கையினாலெல்லாவற்றையும் ஒடுக்கவும் தோற்றுவிக்கவும் வல்லதாகியும் தனக்கு

உயர்வுமில்லாததுதானே யாவருக்குங்கடவுளாகியும் இருக்கின்ற ஒருபர சிவத்தினுள் மறைந்துநின்ற முக்குணங்கள் உடைய ஞானசத்தியினிடத்துபற்றுகின்ற அகந்தம் என்னும் ஆகாயமும் அவ்வாகாயத்தில் வாயுவும் அவ்வாயுவில்தேயுவும் அத்தேயுவில் அப்புவும் அவ்வப்புவில் பிருதிவியும் தோன்றி அப்பிருதிவிதோற்றுவிக்க உண்டான ஓஷதியென்னும் நெல்முதலிய மூலிகையில் அன்னமுண்டாகி அந்த அன்னத்தினால் உலகத்துயிர்கள் நிலைபெற்றிருக்கும்படியான உயர்வை ஆராய்ந்துணர்ந்த அந்த ஓஷதியாகிய பதார்த்தகுணங்களைச் சொல்லுகிறோமென்க. (௪)

## ஓஷதியின்வகை.

தே, கட்டளைக்கலித்துறை,

விருக்கஞ்செடிகொடிபுன்னுன் கொவ்வொன்றின்விரியனந்த
வருக்கந்தமிற்சிலவேராதிவித்துவனாக்குமெட்டா
யிருக்கும்பதார்த்த மவற்றிலொவ்வொன்றிங் கிருநிலத்துட்
செருக்கும்பன்னோயை முருக்குங்குணங்கண் டுதேர்வரிதே.

(இ-ள்) இந்த அகன்ற பூமியினிடத்து முளைத்த ஒஷதி நான்குவகைப்படும் அவையாவன மரம்-செடி-கொடி-புல்-யென்பவைகளாம் இதில் ஒவ்வொரு வருக்கங்களினின்றும் பிரிவுற்றபேதங்களைச் சொல்லுமிடத்து அளவிறந்தவைகளாம் அவைகளிற்சிலது வேர்முதல் வித்தீறாகயெண்வகைப் பதார்த்தங்களாக விருகின்றன இவற்றுள் ஒவ்வொன்றும்பற்பலரோகங்களைக்கொடுக்கும் ஆதலால் அப்பதார்த்தங்களின் குணங்களைக்கண்டு யூகித்தறிதல் அரிது-யென்க, (௫)

தே, பதார்த்தவகை-ருசிகள்-வெண்பா.

ஆதியுரியுண்ணீ ரடைமலர்மென்காய்விதையென்
றோதுபதார்த்தமிவை யோரெட்டுப்-பூதலத்துட்
கைப்புவர்ப்புதித்திப்பு சார்ப்புபுளிப்பு துவர்ப்பு
வைப்பிவை யாறும்பொருந்துமால்.

(இ-ள்) இப்பூமியில் நான்குவகையாகிய ஓஷதிகளிலிருக்கிற எண்வகைப்பதார்த்தங்களாவனவேர்-பட்டை-கட்டை-ரசம்-இலை-புட்பம் பழம்-வித்து-யென்பவைகளாம் இவற்றுள் ஒவ்வொன்றும் கசப்பு உப்பு தித்திப்பு-கார்ப்பு-புளிப்பு-துவர்ப்பு-ஆகிய ஆறுவகை ருசிகளையும்பெற்றிருக்கும்யென்க. (௬)

தே, அவையடக்கம்.

பதார்த்தகுணஞ் சொல்வதெவன் பாக்கின்றவெல்லாம்
பதார்த்தமெனினீக்கிறபழியாம் பதார்த்தமெனக்
கூறுகடற்குள்ளணுவின்கூற்றி னவ்வியத்தத்தோர்
கூறுரைத்தனம்பாருக்குள்

(இ-ள்) கண்களாற் பார்க்கப்படுவதுகளெல்லாம் பதார்த்தங்களாமென்றால் அப்பதார்த்தங்களின்வகைகளும் குணகுணங்களும் - எவ்வாறிருந்துசொல்லப்படும் சொல்லாமல்நீக்கிவிட்டாலே பாபமுண்டாகும், ஆதலால்பதார்த்தமெனச் சொல்லப்படுகிற சமுத்திரத்துக்குள் ஓரணுவளவில் கோடி கோடி கோடி கோடா கோடியில் ஒருபிரிவு இந்தவுலகத்திலிருக்கும் மனிதர்களுக்குத் தெரியும்படிக்குச் சொன்னோம்-என்க அவ்வியத்தம்-எண்பதுகோடி கோடி கோடி கோடாகோடியாம் பதார்த்தங்களின் குணகுணங்கள் தெரிந்தால் ஔதங்களுக்குச் சேர்க்கும்போது கிரமம்அறிந்து சேர்க்கப்படும் கிரமம்அறியாமல் சேர்த்தால் வியாதிநீங்காமலிருப்பதுமன்றிப் பிணியாளன்சரீரத்திற்கும் அபாயம்நேரிடும் ஆகலால் நீக்கிற்பழியாமென்றார். (எ)

பாயிரம்முற்றியது.

---

## நூற்பயன்.

இந்தப் பதார்த்தகுணசிந்தாமணி என்னுஞ்சாஸ்திரத்திற் சொல்லப்பட்டபதார்த்தங்களின் குணங்களையெல்லாம் நன்றாயறிந்து அவற்றுள் நித்தியபோசனத்துக்கு உதவத்தக்க பதார்த்தங்களை-சித்தபாசம்வீமபாகம்நளபாகம்-தேவபாகம்என்னுஞ் சாஸ்திரங்களிற்-சொல்லியபிரகாரம் பாகஞ்செய்து புசிக்கவேண்டும்-அவுஷதங்களுக்கு உதவத்தக்கபதார்த்தங்களைச் சுத்திக்கிரமம்என்னுஞ்சாஸ்திர விதிப்பிரகாரஞ்சுத்திசெய்து சிகிச்சாசாரம் என்னுஞ்சாஸ்திரசகிரமப்படி முப்பத்திரண்டுவித அவுஷதங்களாகக்கைபாகத்துடன்செய்து முடித்து ஜீவரக்ஷாமிர்தம்-யென்னுஞ்சாத்திரத்தில் சுரரோகம் ஆதியாகக்கிட பேதரோகமீறாக வகுக்கப்பட்டிருக்கின்ற சகலரோகத்தையும்-சிகிச்சாக்கிரமம்-யென்னுஞ்சாஸ்திரக் கிரமப்பிரகாரம்கொடுத்துநிவர்த்திசெய்யவேண்டும்இவ்வாறுமேற்சொல்லிய பதார்த்தங்களைஉண்டு அனுபவிப்பதுமன்றிச் சூரியோதயமுன்விழித்தல் முதலாகச் சொல்லப்பட்டதினக்கிரமங்களும் தவறாமல் நடப்பவர்கள்-அறம்-பொருள்-இன்பம்வீடு-யென்னு-புருஷார்த்தங்களை அடைவதங்கேதுவான அரோகதிடகாத்திரமும் சந்தானசௌபாக்கியமும் தீர்க்காயுளும்பெற்று இவ்வுலகத்தில்வாழ்வார்கள்.

நூல்.

## பஞ்சபூதவகை.

### பிருதிவியின் குணம்.

பூசவிரணம்பொருமல்போம் பொன்முதலாம்
ஆசையுள்ளபண்ட மதிலுண்டாம் நேசமதாய்த்
தின்றிடிற்பாண்டு செழிக்குமிகத்தேமொழியே
சென்றலகில் மண்குணத்தைத் தேர்.

(இ-ள்) மண்ணையணைத்துப் பற்றுப்போடுவதால் வாதத்தினாலும் உதிரத்தினாலும் பிறக்குங்கட்டியாகிய விரணங்களும் வாதப்பொருமலும் போம் அன்றியும்சொன்னரத்தின முதலியவைகள் பிறப்பதற்கு இடமாம் இதனைத்தின்றால் மிருத்திகாபுக்த பாண்டுரோகமுண்டாகும்.

### அப்புவின்குணம்.

காசமறுந்தங் கழலாதுமேகமுதல்
வீசும்லறணியும் வீரியமாம்-வாசமெவ
உந்திவளர்குன்ம முதிரஞ்சொறியிவைபோம்
இந்தநறுந் தண்ணீருக்கே

(இ-ள்) அப்புவென்கிற தண்ணீரால்நேத்திரத்தைப்பற்றிய பித்தகாசம் பித்தப்பிரமேகம்-தேகஉஷ்ணம்-பித்தகுன்மம் வெட்டுக்காயங்களினாற் பெருகாநின்றஉதிரம்-சொறி ஆகிய-இவைகள்போம்-பற்களுக்குறுதியும் சுக்கில்விருத்தியும் உண்டாம்-என்க, (௨)

### தேயுவின்குணம்,

கண்டைக்காணையுள்வலி காதம்போங்காய்ந்தக்கால்
விண்டேபலபிணியும் விட்டேகும்-விண்டோய்
பொருப்பனைய விட்டமுலைப்பூவையேகேளு
நெருப்பினது குணங்காணீ,

(இ-ள்) தேயுவென்கிறநெருப்பினால் கண்டைக்காலென்கிற சிறுதொடையினதுநோயும்-தேககடுப்பும்-வாதசிலேஷ்மங்களினால் பிறக்கின்ற சிற்சிலரோகங்களும் நீங்கும் என்க, (௩)

### வாயுவின்குணம்.

மேகக்கடுப்பை விளைவிக்கும்வீறிநின்ற
தாகமனலிளைப்பைச் சாந்திசெய்யுமேகத்தின்
புண்ணேறைக்கும் பொல்லாது பூவைபரோருட்சைக்குக்
கண்ணேறைக்கு மாகாது காற்று.

(இ-ள்) வாயுவென்கிற காற்றானது வெள்ளைவீழும்போது ஆண்குறியின் வாரத்தில் கடுத்தலை யுண்டாக்குவதுந்தவிர மிருதாகம் தேக உஷ்ணம் இளைப்பு ஆகிய இவைகளைத்தணிக்கும் ஆனால் மதுமேகவிரணம் சுரம்-கண்ணோய் இவற்றிற்கு ஆகாது என்க,

தே, ஆகாயத்தின்குணம்,

உலகுமனமும்பலவா மோடதியுமண்ணுஞ்
சகலமுனலுங்காலுஞ் சாற்ற-அலகில்
அநந்தம்பொருமு மடங்கவுழிநல்கும்
அநந்தந்தனைக்கண்டறி,

(இ-ள்) ஜீவராசிகளும்-அன்னரசமும் பலவகைப்பட்ட ஔஷதிகளும் பிரிதிவி அப்பு தேயுவாயுக்களும்-சொல்வதற்கு அளவுபடாத சகல பதார்த்தங்களும் அடங்குவதற்கு இடந்தருகின்ற ஆகாயத்தின்றன்மையைக்கண்டு நீ அறிவாயாக என்க மேற்கூறிய ஐம் பூதங்களுள்ளொவ்வொன்றி னின்றும் பிரிவுற்றபேதங்களையும் அவற்றின் குணங்களையும் தனித் தனியே சொல்லப்புகின் மிக்வும்பெருகும் ஆதலால் அவைகளைப்பூதகுணசுமம்மகாகுணபாடம் முதலிய நூல்களிற்காண்க, (ரு)

பஞ்சபூதவகை முற்றியது.

---

நிலத்தின்வகை.

குறிஞ்சிவருநிலத்திற் கொற்றமுண்டிரத்தம்
உறிஞ்சிவருசுரமு முண்டாம்-அறிஞருரைக்
கையமேதங்குதரத் தாமைவல்லையுங்கதிக்கும்
ஐயமேதங்கு மறி.

(இ-ள்) சிலேஷ்மவீடாகிய குறிஞ்சியென்றுபெயர் பெற்றமலைப்பூமியில் விளைகின்ற சகல ஔஷதமுதலிய பொருள்களுக்கும் வன்மையுண்டாம் இதில் வசிப்பவர்க்கு உதிரத்தைமுறிக்கின்ற சுரமும்-வயிற்றில் ஆமைக்கட்டியும்-உண்டாகும்-என்க. (சா)

தே, நெய்தனிலத்தின்குணம்.

நெய்தனில்மேறுப்பை நீங்கா துறினுமது
வெய்தனில்மேதங்கு வீடாகும்நொய்தன்
மருங்குடலைமிக்காச்சு வல்லுறுப்பைவீக்குங்
கருங்கடலைக்கிறிறக்குங் காண்.

(இ-ள்) நெய்தல் நிலம்மிகுந்த உலர்ப்பையகலாதிருந்தாலும் அதுபித்தவாயுதங்குவதற்கே இடமாம் இதில்வசிப்பவர் தேகத்திலுள்ள நுட்பத்தானங்களில் சிலேஷ்ம நீரானது கண்டுகண்டால் தடித்தலையுண்டாக்குவதுந்தவிரப் பாதமுதலிய வன்மையான உறுப்புக்களில் சிலீபதரோகத்தையும் குடலண்ட விருத்தியையும் உண்டாக்குமென்க, (எ)

தே, முல்லைநிலத்தின் குணம்.

முல்லைநிலத்தயமை முரிநிரைமேவினுமவ
வெல்லைநிலைத்தபித்த மெங்குறுங்காண்-அல்லையெனின்
வாதமொழியாத்தனுண் மன்னுமவைவழிநோயப்
பேதமொழியாதறையப் பின்பு

(இ-ள்) முல்லைநிலம்-ஆடு-எருது-பசு - இவைகளின்கூட்டத்தையுடைத்தாயிருந்தாலும் அதுபித்ததோஷம் அதிகரிப்பதற்கேயிடமாம்-அப்படியல்லவென்றால், அத்துடன்வாததோஷமும் நீக்கமின்றிப்பொருந்தும் அவ்விருவகைத்தோஷங்களால் உற்பத்தியாகிய ரோகபேதங்களைச் சொல்லப்புகின் அரிதாகும்-என்க; (அ)

சே, மருதநிலத்தின்குணம்.

மருதநிலநன்னீர் வளமொன்றைக்கொண்டே
பொருதநிலமாதியநோய் போக்கும்-கருதநிலத்
தாறிரதஞ்சூழ வருந்துவொன்றற்பிணியெல்
லேறிரதஞசூழ்புவிக்கு மில்,

(இ-ள்) மருதநிலம்நல்ல நீர்வளப்பமொன்றினால் வாதபித்தசிலேஷ்மங்களா லுண்டாகின்ற ரோகங்களைப்போக்கும் அன்றியும்அந்நிலத்தில் விளைகின்ற அறுசுவைப்பதார்த்தங்கள் சேர்ந்தஉணவை உண்பவர்தம் பேரைச்சொன்னாலும் ரோகங்கள்இவ்வுலகத்தில்இல்லை-யென்க, (கூ)

தே, பாலைநிலத்தின்குணம்.

பாலைநிலம்போத் படைப்புறப்பிறக
மேலைநிலமியாது விரித்தற்கு-வேலைநில
முப்பிணிக்குமில்ல முறையேயவற்றலா
மெய்பிணிக்கு மில்லமஃதெண்,

(இ-ள்) பாலைநிலம் துன்மைத்தருதற்கிடமாவதுந்தவிர உலகிற்சொல்லும் வாதபித்தகபங்களுக்கும் அவைகளால்முறையே வருஞ்சகலபிணிகளுக்கும் இடமாமென்க, (ய)

நிலத்தின்வகை முற்றியது.

## ஜ ல வ ¨ க.

### மாரிசலத்தின் குணம்.

சீதமுறுங்குளிர்ச்சி சேருமேசித்தத்துட்
போதந்தெளிவாய்ப் பொருந்துங்கா-ணுதமொடு
விந்தும்வளர்ந்துவரு மேதினியிலெவ்வுயிர்க்குஞ்
சிந்துமழை நீராற்றெளி,

(இ-ள்) சீதளம் பொருந்திய மாரிநீரால் சீவராசிகளுக்குக்குளிர்ச்சிந ல்லறிவு சுக்கிலம்-சேரணிதம்-இவைகள் அதிகரிக்கும் என்க. (௰௧)

### ஆலாங்கட்டி சலத்தின்குணம்,

வெண்மாசிமேகமுடன் வீறும்பெரும்பாடு
கண்மாசிகாந்தல் கடிதகற்றுந்-தண்மீறும்
விக்கற்சுவாசமுடன் மெய்ம்மயக்கமும்போக்கும்
கக்குமாலாங்கட்டி காண்.

(இ-ள்) ஆலாங்கட்டி நீரானது சிவேஷ்மப்பிரமேகம்-பெரும்பாடு நே த்திரத்திற் புகைச்சம்மல்-கை-கால்- எரிவு-விக்கல்-சுவாசம்-மயக்கம்-இ வைகளை நீக்கும் குளிர்ச்சியையுண்டாக்கும் என்க. (௰௨)

### பனிநீரின்குணம்.

பனிச்சலத்தையெல்லுதயம் பானஞ்செய்வாரைத்
தனிச்சொறிசிரங்கு குட்டந்தாபங்-கொனிகயக்கால்
முத்தோஷநீரிழிவு மூடழல்கிராணியிவை
கொத்தோடுதாழ்ந்தகலும் கூறு,

(இ-ள்) பனிநீரைச் சூரியோதயகாலத்தில் அருந்தவர்க்குச்-சொறி-சி ரங்கு-குஷ்டம்-தாபம்-காசம்-கிராணி-றனிவாதம்-கோபம்- திரிதோஷம் தேகவறட்சி-நீரிழிவு-ஆகிய இவைகள் இல்லை என்க. (௰௩)

### தண்ணீரின் குணம்.

தண்ணீர்க்குணமெல்லாந் தான்கேண் மடமயிலே
மண்ணின்குணமல்லான் மற்றுமுண்டோ-உண்ணுங்கால்
ஆறுகுளமேரிமடு வாழ்ந்தகூபஞ்சனையுள்
ளேறருவியென்னு முலகு

(இ-ள்) தண்ணீர்குணங்களெல்லாம் மண்ணின்குணமேயன்றிவேறில் லை அதன் விவரம்-ஆறு-குளம்-ஏரி-மடு-கிணறு-சுனையென்னும் ஆறுதகை இடங்களிற்றங்கி அவ்வவற்றின்குணங்களைப்பெற்று நீரானதுண்ணுமிடத்தி ல் அவ்வவ்விடப்பெயர்பெற்றநீரெனச்சொல்வர்என்க. (௰௪)

ஆற்றுநீரின் குணம்,

ஆற்றுநீர்வாத மனலங்கபத்தோடு
தோற்றுகின்றதாகந் தொலைக்குமே-ஊற்றமிகுந்
தேகத்திறுளையெல்லாஞ் சிறித்துரத்திவிடும்
போகத்திற்குதுவுமாம் போற்று.

(இ-ள்) ஆற்றுநீரானது வாதம் பித்தகோபம் கபதோஷம் தாகம்சரீரத்திற்-பித்தசம்பந்தமான சிற்சிலரோகம் ஆகிய இவைகளைப்போக்கும் சுக்கிலவிருத்தியை உண்டாக்கும் என்க. (௰௫)

கங்கைநதி நீரின்குணம்,

கங்கைநதிநீர்பிறவிக் காட்டுக்கோர்பேரனலாந்
துங்கமுறவப்புனலைத் தூய்க்குங்கால்-அங்கவெப்பு
மந்தங்கயம்பித்தம் வாயுமேகங்காந்தல்
உந்துந்தாகங்களும்போ முன.

(இ-ள்) பிறவியாகியகாட்டுக்கு அக்கினியை நிகர்த்த கங்காநதிநீரை அருந்தினால் உட்சூடு-மந்தாக்கினி க்ஷயம் பித்தகோபம் வாதாதிக்கம் கிழ்ப்பிரமேகம்தேகயெரிச்சல்தாகம்-ஆகிய இவைநீங்கும் என்க. (௰௬)

யமுனாநதி நீரின்குணம்,

யமுனைநதிநீரா லதிசுரம்வெண் குட்டஞ்
சமனைநிகர்காசம் வெட்டைதாகம்-வமனமுறு
பித்தமிளைப்பிளைப்பு பேசரியகாதுநட்டஞ்
சுத்தவெள்ளைப் பாண்டிவைபோஞ்சொல்

(இ-ள்) யமுனைநதிநீரினால் அதிசுரம் வெண்குஷ்டரோகம் இருமல்வெட்டைதாகம் பித்தவாந்தி சுவாசம் அயர்ச்சி விந்துநஷ்டம் வெண்பாண்டுரோகம் ஆகிய இவைகள் ஒழியும் என்க, (௰௭)

கோதாவிரிநதியின்குணம்.

கோதாவிரியென்னுங் கோதினதிநீரதனால்
வாதாதிமுத்தோஷ வன்சினமும்-பேதாபே
தச்சொறியுமுட்சிரங்குந் தாவுநளிர்ச்சுரமு
மிச்சகுவிட்டேகு மிசை,

(இ-ள்) கோதாவரிநதிநீரினால் முத்தோஷகோபம் பலவிதச்சொறிகள் உள்சிரங்கு நளிர்சுரம் ஆகிய இவைநீங்கும் என்க, (௰௮)





துங்கபத்திரிநதிநீரின் குணம்

மா துங்கபத்திரிநீர் வன்றுகவெப்புருக்கி
யோதுங்கரப்பா ணரோசிகநோய்-தாதுநட்டம்
நேத்திரதோஷங்காச நீரடைப்புமெய்விவன்னக்
கோத்திரமென்றேதிவை போக்கும்

(இ-ள்) துங்கபத்திரிநதி நீரானது வெப்பம் யென்புருக்கிரோகம் கரப்பான் விந்துநஷ்டம் கண்புகைச்சல் இருமல் மூத்திரக்கிரிச்சரம் சரீர நிறமாறல் ஆகிய இவைகளை நீக்கும், (௰௯)

நருமதாநதிநீரின் குணம்,

நருமதாவென்னு நதிப்புனலால்வாந்தி
சுரம்விக்கல்காமிலத்தின் றேஷம்-பொருமலிரு
கைகாலெரிவுநீர்க் கட்டுகோழைக்கட்டோ
டைவாதமென்பவைபோ மாங்கு,

(இ-ள்) நருமதாநதி நீரினல் வாந்திவிக்கல் காமாலை வயிற்றுப்பிசம் கைகால்யெரிவு பித்தகிரிச்சரம் கபச்சேர்க்கை சிலேஷ்மவாததொந்தம் ஆகிய இவைகள் நீங்கு மென்க, (௨௰)

சிந்துநதி நீரின்குணம்,

சிந்துநதிப்புனலாற் றேகந்துறுங்கடுப்பு
புத்திமயக்கம்மேகம் புணவியர்வை-விந்துநட்டம்
அத்திசுரம்வெட்டை யடர்மூத்திரச்சிக்கல்
முற்றியதாகப்பிணிபோ முன்.

(இ-ள்) சிந்துநதிநீரால் சரீரக்குடைச்சல் புத்திமயக்கம் வெட்டை புண்வியர்வை தாதுநஷ்டம் அஸ்திதாதுகதசுரம் வெள்ளை மூத்திரகிரிச்சுரம் விதாகம் ஆகிய இவைகள் விலகு மென்க. (௨௧)

வைகைநதி நீரின்குணம்.

வைகைநதிப்புனலால் வாதநீர்குஷ்டொடுமெய்ச்
செய்கைதவிர்க்குஞ்சோபை திண்கரப்பான்-மெய்யெரிவு
தாகநடுக்கனிலக்தாது நஷ்டஞ்சிலவிடமு
மேகுமிந்தவையம் விடுத்தே.

(இ-ள்) வைகையாற்றுச்சலத்தினல் வாதமேகம் குஷ்டம் சோபா ரோகம் கரப்பான் தேகயெரிச்சல் தாகம்பாதாசேஷ்பவாதம் தாதுநஷ்டம் சில்விஷம் ஆகிய இவைகள் நீங்குமென்க, (௨௨)

சித்திரநதி நீரின்குணம்.

சித்திரநதிப்புனற்குத் தேகத்துறுங்கடுப்பு
நொத்துகரப்பான்சாத்தி சூலைகுன்மங்-குத்துகின்ற
மூத்திரதோஷந்தோஷ மூடுவாத கோபக்
கோத்தலுன்வீக்கமும்போங் கூறு,

(இ-ள்) சித்திரநதி, நீரினால் சரீரநோவு கரப்பான்வாந்திதேகத்தின் குத்தல் வயிற்றுவலி மூத்திரம் தோஷம் சங்கவாதமதிரிதோஷம் வாத கோபம் சரீரவீக்கம் ஆகிய இவைகள்போமென்க

காவிரிநதிஜலத்தின் குணம்,

காவிரிநீராற்பொருமல் காச்சுவாசஞ்சோகை
நீவுதொண்டைக்கட்டிளைப்பு நீரேற்றம்-பூவுலகின்
மன்னுதிரக்கட்டியொடு வாயுலரலென்பவைபோம்
பின்னுடற்குக் காந்தியுமாம்பேசு,

(இ-ள்) காவிரியாற்றுச் சலத்தினால் வயிற்றுப்பிசம் இருமல் இளைப்புவீக்கம் கபக்கட்டு ஆயாசம் சலதோஷம் ரத்தகுன்மம் நாவறட்சி ஆகிய இவைகள்நீங்கும் அழகுண்டாமென்க, (உ௪)

தாம்பிரபன்னிநதி ஜலத்தின்குணம்,

தாம்பிரபன்னிப்புனலாற் சர்வசுரம்பித்துவிழித்
தூமபிரமுட்காய்ச்சல சுவாசநோய்-சொம்பிமிகக்
கக்குக்ஷயமென்புருக்கி கைகாலெரிவுடனே
மிக்குறுதாகங்களும்போம் விள்,

(இ-ள்) தாம்பரபன்னிநதி ஜலத்தினால் சகலசுரம்பித்ததோஷம் கண்புகைச்சல் உட்சுரம் சுவாசரோகம் க்ஷயம்எலும்புருக்கி கைகால் எரிவுதாகம் ஆகிய இவைகள்விலகுமென்க, (உ௫)

பச்சையாற்றுஜலத்தின்குணம்,

பச்சையாற்றுப்புனலைப் பார்த்துவந்தபேர்தமக்கு
நச்சிருமலிளைகப நண்ணுமோ-நச்சயமா
யவ்வளவோவென்னி லனிலமுதிரக்கடுப்புங்
கவ்வுசுரமுஞ்சானும் காண்,

(இ-ள்) பச்சையாற்றுநீரால்-நச்சிறுமல் - இளைப்புகபாதிக்கம் வாத கோபம்-ரத்தக்கடுப்பு சுரம்-ஆகியஇவைகள்-டாம்-என்க, (உ௬)

குளத்துஜலத்தின்குணம்.

குளத்துசலந்தானே சொடிதானைவாதம்
வளர்த்திவிடமப்பான் மதுவாங்-குளிர்ச்சியையு
மெத்தவுண்டாக்குமெனை மேதினியோர்தஞ்சனூர்கு
கொத்தலரும் பூங்குழலாய்கூறு.

(இ-ள்) புட்பசகொத்துகளலரும்அழகிய கூந்தலையுடையபெண்ணே குளத்து-சலமானது வாதரோகத்தை விருத்திசெய்வதுமன்றி மதுப்பிரமேகசலத்தையும் சீதளத்தையும் உண்டாக்கும்என்க, (உஎ)

தாமரைக்குளத்து ஜலத்தின்குணம்,

தண்டாமரைக்குளத்திற் றங்குபுனலதனா
லுண்டாகும்வாதபித்த முண்மையே-பண்டான
வெக்கைநோய்மாறாது வீறுதவனமுமா
மைக்கருங்கண் மாதே வழுத்து.

(இ-ள்) மை-பணிந்தகண்களையுடையமாதே தாமரைக்குளத்துத் தண்ணீரால் வாதபித்ததொந்தம்-புராணசுரம்-அதிதாகம்-ஆகியஇவைகள் அதிகரிக்கும்-என்க, (உஅ)

அல்லிக்குளத்து ஜலத்தின்குணம்.

அல்லிக்குளத்திநீர்க் கினிமந்தப்பேதி
மெல்லச்சொறிசிரங்கு வெப்புடனே-தொல்லுலகில்
தாலுதனிலட்சரமுந் தாதுநஷ்டமுங்கொடுக்குங்
கோலமலர்த்திருவே கூறு,

(இ-ள்) அல்லிக்குளத்துசலம் அஜீரணபேதி சொறி-புண்சுரம்-தாலுகண்டகரோகம்-தாதுநஷ்டம்-இவைகளை உண்டாக்கும்-என்க, (உகூ)

அதிகுளிர்ச்சிசரகூறல் உள்ளகுளத்துஜலத்தின்குணம்,

சீதமிகுந்தசலம் தேகத்தளர்ச்சிவிக்கல்
வாதகபங்கடிகள் வாந்திகளிர்-மோதிருமல்
வீறுகுன்மநோயிவை விளைக்குஞ்சரகுமதி
லூருமெனி ஞெய்பலவாமுன்,

(இ-ள்) அதிகுளிர்ச்சியையுடைய குளத்துசலமானது-தேகங்கட்டு-விவிக்கல்-வாதசிலேஷ்மதொந்தம்-வண்டுகடிமுதலிய கில்விஷம்வாந்தி-ர்-காசம்-வயிற்றுவலி ஆகிய இவைகளையுண்டாக்கும் அதில்சகதியுமானால் [illegible] உண்டாகுமென்க, (௩௰)

ஏரிசலம்-சுனைசலம்-இவைகளின்குணம்.

ஏரிசலம்வாத மிலைக்கதுவர்ப்பாகுங்
கூறியதோர்கற்சுனைநீர் கூறுங்காற்-சீரியதோர்
வாதமொடுபித்தமெழும் வைத்தொருநாட்பின்னுண்ணிற்
சீதமில்லையுட்டிணமாகுஞ் செப்பு,

(இ-ள்) இலைக்த துவர்ப்புச்சுவையை யுடைய ஏரிசலமானது வாயுவைவிருத்தி செய்யும் கற்சுனை சலம்வாத பித்ததோஷமாம் அதையொருநாள்வைத்திருந்து மறுநாளருந்தில் குளிர்ச்சிநீங்கி உஷ்ணமுண்டாகும்-என்க, (௯.௫)

ஓடை-ஜலத்தின்குணம்.

ஓடைதருசலம்யுண்ணவதி தாகமுமா
மோடையெனத்தோட்பலனு மெத்தவா-மோடைமலர்க்
கண்ணுயது துவர்ப்புங் காணுமதுரமுமாம்
எந்நாளும்பாரி லியம்பு,

(இ-ள்) தாமரைமலரையொத்த கண்களையுடையபெண்ணே துவர்ப்பும் மதுரம்உள்ளஓடை சலங்குடிப்பவர்களுக்கு மிகுந்ததாகமும் புஜபலமும் உண்டாகும்-என்க, (௯௨)

கிணற்றுசலத்தின்குணம்.

ஆசாறக்கூபத் தறலாலதிதாகம்
வீசாகச்சூடுபசி மெய்க்காங்தன்-மாசூலை
மெய்புள்வலிகடுப்பு விழ்மயக்கஞ்சோபைபித்தம்
பையவறு மீளையம்பார்,

(இ-ள்) குற்றமில்லாதகிணற்றுஜலத்தினால் மிகுதாகம் உஷ்ணம்தீபனம் தேகஅழற்சிசூலை சரீரக்குத்துகடுப்பு இடுப்புக்குடைச்சல் மயக்கம் வீக்கம் பித்ததோஷம் சுவாசம் ஆகிய இவைகள்விளக்கும்-என்க, ()

சுனைசலத்தின்குணம்,

சுனைப்புனலைக்குடித்தார்க்குஞ் சூழ்ந்ததிற்றோய்ந்தார்க்குக்
கனைப்புறுசீதச்சுரமுங் காணும்-வினைக்குரிய
வாதமுறுமந்தால் வருமேகடுக்கவின்னும்
ஓதுபித்தகோபமுமா மூன்.

(இ-ள்) சுனைத்தண்ணீரையுண்டவர்க்கும் அதில்ஸ்நானஞ்செய்தவருக்கும் இருமலோடுங்கூடிய சீதசுரம் வாதகோபம் கபவாதரோகம் பயித்தியதோஷம் இவைஉண்டாகும்-என்க, (௯௪)

ஊற்றுசலத்தின்குணம்,

ஊற்றுசலம்பித்தமொழிக்கு முனுப்பாகும்
ஆற்றிசிந்தாநத்தைய யப்பொழுதே-கூற்றுவிழித்

கொம்பரிடையாய் குறைகுணங்களைத்தெளிவாய்
நம்பியுலகோரறிய நாட்டு,

(இ-ள்) மதுரமபொருந்திய ஊற்றுஜலமானது மிகுந்தபித்தத்தையு
ம் அதிதாகத்தையுமஉடனேசாந்திசெய்யு-மென்க, (௧௫)

பாறைஜலத்தின்குணம்.

பாறைமீதூறுகின்ற பானீயந்தன்னையுண்ணி
லேறுமுடலமெல்லா மீரிப்பே-வீறுகின்ற
வாதகோபத்துடனே மாறுச்சுரமுமெழும்
ஓதசனத்துண்டா முவர்ப்பு,

(இ-ள்) போஜனந்தத்தில் உவர்ப்பைத்தருகின்ற பாறைஜலத்தினால்
தேகஞ்சில்லிடலும் வாததோஷமும சந்தசுரமுமஉண்டா-மென்க, ()

சுக்கான்பாறைஜலத்தின்குணம்-விருத்தம்.

நீர்க்கடுப்பொழு நெஞ்சினிற்சிறுக்கட்டு
பார்க்கிற்பித்தம் பலபிணிசூழ்வதாந்
தீர்க்கதாயுவைத் தீர்த்திடுஞ்சிந்தைநோய்
தாக்குஞ்சுக்கான் றணிப்பாறைத்தோயமே,

(இ-ள்) சுக்கான்பாறைஜலம் மூத்திரக்கடுப்பு நெஞ்சிற்கபகட்டு பித்
தாதிக்கம் கபத்தைப்பற்றிய சிற்சில ரோகங்கள் மனோவியாதிஆகிய இ
வைகளையுண்டாக்கும் ஆனால் மகாவாதரோகத்தைவிலக்கு-மென்க, ()

கரும்பாறைஜலத்தின்குணம்-வெண்பா,

கரும்பாறைத்தண்ணீர் கனசோபைவாந்தி
பெருமபாடுபித்தசுரம் பீடை-யருந்தயக்க
நீர்க்கடுப்புதாகமிவை நீக்கிவித்தைபுத்தியழ
சேற்கவளர்ப்பிக்குமெய்யை யென்,

(இ-ள்) கரும்பாறைஜலமானது வீக்கம் சர்த்தி அசிர்க்காரோகம் பி
த்தசுரம் மயக்கம மூத்திரக்கடுப்பு தாகம்ஆகிய இவைகளைவிலக்கும் வீ
ரியம் புத்திஅழகுஆகிய இவற்றைஉண்டாக்கு-மென்க, (௧௭)

அருவிஜலத்தின்குணம்,

அருவிநீர்மேக மற்றுங்கபத்தை
வருவிக்குமரத்தபித்த மாற்றும்-பெருமிதமாம்
வேலையுலகின் மிகுத்தபலமுண்டாக்குங்
காலைமலர் [illegible] காண்,

(இ-ள்) தாமரைமலரைநிகர்த்த முகத்தையுடையபெண்ணே மலையருவி ஜலப்பிரமேகத்தையும் ரக்தபித்தரோகத்தையும் விலக்கும்சிலேஷ்மத்தையும் தேகபலத்தையும் உண்டாக்கும்-என்க. (௩௯)

அடவிஜலத்தின்குணம்,

அடவிப்புனலா லதிசீ தாதிக்கம்
உடலிற்கனப்பிளைப்பு முண்டாம்-உடல்வயிறு
நாவிவ்விடம்வெதுப்பு நண்ணுந்தலைப்பாரந்
தீவவ்வாட்சுரமாந் தேர்;

(இ-ள்) கான்யாற்றுஜலத்தைக்குடிப்பவர்க்கு அதிகசீதளம் தேகபாரிப்பு இளைப்பு சரீரம்வயிறு நர ஆகியஇவ்விடங்களில் வெப்பமதலைக்கனம் வலியவிஷம் சுரம்ஆகியஇவைகள்உண்டாமென்க, (௪௰)

சிவந்தஜலத்தின்குணம்-விருத்தம்.

காசபித்தத்தாற் காந்தியுமேகிடும்
ஊசலுட்டின முட்சுரங்காந்தலாம்
நாசதாதுவு நண்ணிடுமெம்முறை
வாசமிற்சிவப்பாம புனல்வண்மையே,

(இ-ள்) சிவந்தநிறத்தண்ணீரால் இருமலாற்பிறந்த பித்தவுஷ்ணமவிலங்கும சுரமும-எரிவும்-விந்துநஷ்டமும உண்டாகுமென்க, (௪௧)

கறுத்தஜலத்தின்குணம-வெண்பா,

கறுத்தஜலமவாந்தி கரப்பான்வெப்புகாந்தல்
இறுக்கநெஞ்சுக்கட்டிருமல் லீளை மறைப்பின்சுர
நீக்கரியநெஞ்செரிப்பு நீளதோஷங்களிர்
போக்குமனலங்கொடுக்கும போற்று,

(இ-ள்) கருமைநிறத்தண்ணீர் வாந்திகரப்பான் உஷ்ணம்யெரிவுமார்புச்சளி காசம் சுவாசம விடாச்சுரம புளித்தேப்பம சகலதோஷம் தாகம் நடுக்கல்ஆகிய இவைகளை விலக்கும் பசியைத்தரும்என்க, (௪௨)

வயல்ஜலத்தின்குணம்,

மேகம்போந்தாகம்போம் வெட்டையுடனேசுரம்போந்
தேகங்குளிர்ச்சியுற்றுத் தேறுங்காண்-சோகமெல்லா
மாறுமிரத்தாய மாறுநோய்க்கோபமிக
மாறும்வயற்புனற்கு வை

(இ-ள்) நெற்கழனிகளிலிருக்குந் தண்ணீரால் பிரமேகவிதாகம்வெள்ளைசுரம் மூர்ச்சை ரத்தகாசம் சுரவேகம்ஆகிய இவைகள்விலங்கும் சப்ததாதுக்களுங் குளிர்ச்சியடைந்து தேகம்பலிக்கும்என்க, (௪௩)

நண்டுக்குழிநீரின்குணம்.

வாந்தியறுந்தாகமறு வாறுதவிக்கலறுங்
காந்தலெரிவுங் கடிதேகுந்-தோய்ந்துவருங்
கண்டுக்குயர்ந்த கனிமொழியேபன்னூரு
நண்டுக்குழிநீரை நாடு.

(இ-ள்) கண்டினுமினிய மொழியையுடைய பெண்ணே வயல்களிலிருக்கின்றநண்டுக்குழிநீரினால் வமனம்விதாகம்-நீங்காதவிக்கல்-தேகவெப்பம் எரிவுஆகிய இவைபோம்-என்க, (சச)

பாசிநீர்முதலியபலநீரின்குணம்-விருத்தம்.

பாசித்தண்ணீர்நோயாக்கும் பருத்தவோடைத்தெளிவூறல்
நேசித்திடவேபிணியில்லை நிலைநீர்க்குண்டாங்குடல்வாதம்
மாசித்தண்ணீர்பித்தகற்றும் வளர்க்குஞ்சுரத்தைச்சரகூறல்
தேசத்தண்ணீர்க்குணந்தன்னைத்தெரியச்சொன்னேந்திண்ணமிதே.

(இ-ள்) வழுவழுத்தபாசிஜலம் பலபிணிகளையும்உண்டாக்கும் ஊற்றுள்ள ஓடைஜலத்தால் சகலநோய்களும்நீங்கும் கட்டுக்கடை ஜலத்தால் குடல்வாதம்பிறக்கும் பனிமாசுபடிந்தஜலமானதுபித்தகோபத்தைவிலக்கும் சரகூறியஜலம சுராதிக்கத்தைச்செய்யும்-என்க, (சரு)

இதுவுமது

ஆற்றுத்தண்ணீர்க்கழகுண்டா மடைந்தசுனைக்குமகோதரமாந்
தூற்றுமாறிமெய்யிறக்குந் துலையாக்கிணறேகயந்திரட்டும்
மாற்றுங்குளமேவியாதில்லை மாறுக்குளமேவியாதியுண்டு
தோற்றுமதுரமொழிமயிலே துலங்குந்தண்ணீர்க்குணங்காணே.

(இ-ள்) மதுரம்பொருந்தியசொல்லையும் மயில்போலுஞ்சாயலையுமுடையபெண்ணே ஜீவநதிஜலத்தால்அழகுண்டாம் நிழலையடைந்தசுனைஜலத்தால்பெருவயிறும் மழைஜலம் தளர்ந்ததேகத்தையும்இறக்கும்இறைப்பில்லாதகிணற்றுஜலம் க்ஷயத்தைவளர்க்கும் வரத்தும்போக்குமுள்ள குளத்துஜலத்தால் நோயில்லை இவ்வாறுமாற்றாத குளத்துசலம் பிணியைத்தரும்-என்க, (சசு)

ஸ்நானபானங்களுக்குதவாதநீர்-வெண்பா.

சந்திராதித்தர்வலி சாராதநீர்புழுதாற்
கந்தமதிசேறு கனப்பிலையு-திரந்தநீர்
தங்குசுவையில்லாநீர் சாற்றுமிவைஸ்நானபா
னங்களுக்காகாவுறிஞோ யாம்.

(இ-ள்) சந்திரசூரியகிரணங்கள் காற்று இவைகள் அணுகாததும்-கிரு மிதுர்வாசனை சேறுதடித்தல் சரகுதிரல் ருசியின்மைஎன்னும் இவைகள்பொருந்தியதும்ஆகிய ஜலமானவை ஸ்நானபானங்களுக்கு ஆகாவாம் ஆகில ரோகசம்பவமாம்-என்க, (சஎ)

நீராகாரநீரின்குணம்.

வாதபித்தவைய வறட்சிகளைமாற்றிவிடுந்
தாதுவுமுண்டாக்குந் தாகம்போக்கு-மாதர்மெச்ச
வாராகாரங்கொடுக்கு மாமதுரத்தைக்கொடுக்கு
நீராகாரத்தெளிவு நீர்.

(இ-ள்) மிகுமதுரமான நீராகாரத்தெளி ஜலமானது வாதபித்தசிலேற்பனவரட்சிகளையுந் தாபத்தையும்விலகும் சுக்கிலத்தையும் அழகையும் விருத்திசெய்யும்-என்க, (சஅ)

காடிநீரின்குணம்.

பித்தமயக்கமறும் பேரவுஷதம்முறியும்
உற்றபிணியிற்சிலவை யோடுங்காண்-சற்றும்
வழங்காவசீரணமும் வன்பேதியும்போம்
பழங்காடிக்குள்ள பயன்.

(இ-ள்) பழைமையாகிய காடிச்சலத்தினால் பித்தமயக்கமும் சோபாரோகம்முதலிய சிற்சிலரோகங்களும் அசீரணமும்வாதாதிசாரமும்பெரிதாகிய ஔஷதங்களின் நற்குணங்களும் விலகுமென்க, (சகூ)

உப்புநீரின்குணம்.

உப்புநீராலுலவை யுள்ளிலோடிக்குத்தும்
எய்ப்பசனமாம்பித்த மேறிடுங்காண்-செப்புகின்ற
வாயிலூறுஞ்சலமு மாதுவர்ப்பாமாதரசே
யோயுங்குடல்வாத மோர்.

(இ-ள்) உப்புத்தண்ணீரால் சரீரத்தில் ஓடிக்குத்துகின்றவாயுவும் அற்பபோஜனமும்-பித்தமதிகரிப்பும் வாயில்துவர்ப்பாக வூறுகின்றஜலமும் அதிகரிக்கும் ஆனால்குடல்வாதம் விலகுமென்க, (ருௐ)

சமுத்திரநீரின்குணம்.

கடலின்புனலாற் கவிகைபெருநோய்
உடலின்கடுப்புதிரச் சூலை-யடர்குஷ்டம்
வாதகுன்மம்வெப்பிரத்த வாதநீராமை
சோதரம்பிலீகமலுங் கூறு.

(இ-ள்) கடற்சலத்தினால் கவிகையென்னும் ஒருவித உதரரோகம்பெருவியாதி சரீரக்குடைச்சல் ரத்தகுன்மம் குஷ்டம வாதகுன்மரோகம் சுரமஉதிரவாதம் நீராமைக்கட்டி பெருவயிறுபிலீகத்தைப் பற்றியவியாதி ஆகியஇவைகள்விலகுமென்க, () பிலீகமென்பது இருதயத்துக்கிடப்புறத்திலிருக்கும் ஒருவிதமாமிசக்கண்டம். (௫௧)

இதுவுமது-விருத்தம்.

குன்மவாயு சூடற்சரியென்பது
வன் மமான மலசலபந்தமுங்
கன்மமாகும் வன்னோய்களுங்காணுமோ
றுன்மைவாரிநீர் காய்ச்சிநுகரினே.

இதுவுமது,

உடற்கடுப்புட னூற்றெழுகோணிதம்
நடுக்குவாதமு நாப்பிடிப்போடுபல்
இடுக்கிரத்தமு னிற்றுவிழுவதுந்
துடுக்கதாஞ்சந்தி தோஷமுமோடுமே.

(இ-ள்) சமுத்திரசலத்தைக் காய்ச்சியுண்டால் வாதகுன்மம்-குடற்கரிரோகம் மலசலபந்தம்-பிருவுழைப்பினால்-வந்தவியாதிகள்-தேககடுப்பு-சோணிதவாதம-கம்பவாதம்-நாக்குப்பிடிப்பு சிதாஅதரோகம் தந்தபுப்புடரோகம்-சந்திதோஷம் ஆகியஇவைகள்விலகு-மென்க. (௫௨)

நாவல்நீரின்குணம்-வெண்பா.

நாவல்வேரூறுசுல நாளுமதிசாரத்தை
மாவலியமேகத்தை மாற்றுங்காண் பூவுலகில்
விந்தோடதிசீதம் வீறுபலம்வெப்பையம்
மந்தமிவையுண்டாக்கு மால்.

(இ-ள்) நாவல்வேரூறிய சலமானது பித்தாதிசாரத்தையும் மதுமேகத்தையும்-நீக்கும்-சுக்கிலவிருத்தி அதிகுளிர்ச்சி தேகபலம் சுரம்சிலேஷ்மகோபம்- அக்கினிமந்தம்ஆகியஇவைகளைஉண்டாக்கு-மென்க, (௫௩)

கருங்காலிநீரின்குணம்,

குட்டங்கமரோகங் குன்மம்பெருவயிறு
நெட்டைப்புழுதிமிரு நீரிழிவும்-விட்டே
யருங்கானகத்தேகு மஞ்சுகமேசல்ல
கருங்காலிநீரதனைக் கண்டு.

(இ-ள்) கிளிபோல்வசனிக்கும் பெண்ணே கருங்காலிவேரூறிய சலத்தினால் அவதும்பரகுஷ்டம பித்தக்ஷயம்-பித்தகுன்மம்-மகோதரம் பெரும்பூர்ாகக்கிருமி-ரத்தப்பசையற்றதிமிர்வாதம் நீரிழிவும் ஆகியஇவைகள்விலகு-மென்க, (௫௪)

இலவுநீரின்குணம்.

அட்டகுன்மநீரிழிவு மற்றிடுமேதேகத்திற்
கெட்டவிரணக் கிருமியறு-மட்டலறுங்
கூந்தன்முடிமாதரசே கோதிலிலவின்புனலாற்
சேர்ந்தவழலுந்தணியுஞ் செப்பு.

(இ-ள்) தேன்பொருந்திய புட்பங்களையணிந்த கூந்தலையுடையமாதரசே இலவமரத்தின் வேரூறியசலத்தால்-அஷ்டகுன்மம் நீரிழிவுரத்தமற்ற விரணக்கிருமி உட்சூடுஆகியஇவைபோம்-என்க, (௫௫)

வாழைநீரின்குணம்,

வாழைநீர்சீதவெப்பு வல்லபலமுண்டாக்கும்
பேழைவயிறுடைக்கும் பெண்மயிலே-யீழும்வல்லி
ரத்தக்கிரிச்ச மெரிநீரிவையுடனே
சிற்றிரணம்போக்குந் தெரி.

இதுவுமது.

சோமரோகங்க டுலையுமிளைப்புழலை
நாமமறும்பாண்டுவகை நாடாதே-பூமிதனில்
காமாலையெலும்புருக்கி காணுவண்ணகரசே
வாழைநீர்க்கென்றுளத்தில் வை.

(இ-ள்) வாழைக்கிழங்கில் ஊறுகின்றசிதோஷ்ணநீரானது பெருவயிறு ரத்தக்கிரிச்சரம் எரிமூத்திரம் அற்பவிரண்டும்சோமரோகம் அயர்வு உழலைநோய் பாண்டுஎலும்புருக்கிஆகியஇவைகளைவிலகும் தேகத்திற்குவண்மையையுண்டாக்குமமாதரசே-என்க, (௫எ)

மட்டைநீரின்குணம்.

மட்டைநீராற்கிரிச்ச மாறுமடமயிலே
யொட்டிநின்றநீரிழிவு மோடுங்காண்-கெட்ட
வெவுத்திரமும்புண்ணும் பறக்குமபயந்தே
புலிக்குள்வயிற்றுக் கடுப்பும்போம்.

(இ-ள்) தெங்கு-பனை முதலிய மட்டைகளிற் பிழிந்தநீரினால் மூத்திரக்கிரிச்சரம்-நீரிழிவு-பகந்தரரோக-விரணம-வயிற்று அளைவு ஆகிய இவைபோம்-என்க, (௫௬)

இளநீரின் பொதுக்குணம்,

இளநீரால்வாதபித்த மேகுமனதுந்
தெளிவாய்த்துலங்குமிரு திஷ்டிக்-கொளிவுங்
குளிர்ச்சியுமுண்டாகுங் கோடியவனனீங்குந்
தளிர்த்தகனமொய்தாகுஞ் சாற்று,

இதுவுமது,

என்றுமிளனீர்நி ரிறக்குங்கபமறுக்குந்
துன்றனலாஞ்சீதமெனச் சொல்லுவர்கா-ணின்றெழும்பும்
பித்தமொடுவாந்தியும்போம் பேதிகட்டிரண்டுமுண்டாங்
கொத்தலரும் பூங்குழலாய் கூறு,

(இ-ள்) கொத்துக்களினின்று மலர்ந்தவழகிய கூந்தலையுடைய பெண்ணே முறைமையாக இளநீரைப்பருகினால் வாதபோகம்-பித்ததோஷம் வெப்பமதேகபாரிப்பு-கயாதிக்கம்-பயித்தியகோபம்-வமனம்- அதிசாரம் ஆகியஇவைவனீக்கும்-மனத்தெளிவு-நேத்திரத்துலக்கம்குளிர்ச்சி மூத்திரப்பெருக்கம்-மலப்போக்கு-ஆகிய இவைஉண்டாகும் இதுஉஷ்ணசீதளத்தையுடையது-என்க. (௬௰)

செவ்விள னீரின்குணம்,

பித்தமொடுதாகம்பெருத்த வழிநடையா
லெய்தலாயாசமிவையேகு-நித்தியமுஞ்
செவ்விளநீருண்டக்காற்றீரும்பலகயமு
மவ்விளநீர்கொங்கைமின்னேயாய்,

(இ-ள்) தினமுஞ்செவ்விளநீரை யருந்தில் பித்தவிருத்தி-தாகம்-வழிநடையாலாம் இளைப்பு-அயர்வு-பற்பலக்ஷயம்-ஆகிய இவைநீங்கும் அந்தச்சிவந்த விளநீரனைய கொங்கைகளையுடைய மின்னேநீயறிவாயாக, ()

புதியபழைய இளநீரின்குணம்,

புதியிளநீர்பித்தமறும் பூதலத்தோருண்ணும்
பதமுடனேயுண்பார் பரிவாய்-நிதநிதமு
முண்ணப்பழவிளநீ ருண்டா பலவகைநோ
யெண்ணி யறிவாயினி,

(இ-ள்) இளவழுக்கையுடைய புதிதாகப்பறிக்கப்பட்ட இளநீரையுண் பவருக்குப் பித்தகோபம் விலகும் பழையஇளநீரையுண்டால் ஜலதோ ஷமுதலிய பற்பலரோகங்களும் உண்டாகும்-என்க, (௬௩)

பச்சை இளநீரின்குணம்

பச்சிளநீர்மேகம் பழஞ்சுரங்களைப்போக்குங்
கச்சிமுலைமாதேகபமறுக்கு-மெச்ச
வயிற்றிற்கிருமியொடு வன்சொறிகண்டோடம்
அயர்த்தோடச் செய்யுமறி,

(இ-ள்) வாரிருக்கிய தனங்களையிடையபெண்ணே பச்சையிளநீர்-கிம் ப்பிரமேகம்-பழையசுரம்கபாதிக்கம்-எறிகிறமியானைச்சொறி-கண்ணோ யாகிய இவற்றைநீக்கும்-என்க, (௬௪)

கேளிஇளநீரின்குணம்,

கேளியுண்ணமேகம்போங் கேளாய்மடமயிலே
நீளகட்டுக்கிடங்கிலையாவாங்-தாளாத
தாகமோடுமந்தமறுங் தானேகரப்பனும்போய்
வேகவனலுந்தணியுமே,

(இ-ள்) இளமைபொருந்திய மயில்போலுஞ் சாயலையுடையமாதே கேளியிளநீரையுண்பவர்க்கு ரத்தமேகம்-மலக்கிருமி-விதாம்- மந்தாக்கி னிகரப்பான்-அதிசுரம்-ஆகிய-இவைனிங்கும்-என்க, (௬௫)

மஞ்சள்கச்சி இளநீரின்குணம்

பித்தம்போஞ்சோபையறும் பேருகிலியாவருக்குந்
தொத்துகபமுந் தொலையுங்காண்-தத்துகின்ற
பொல்லாப்பழஞ்சுரமும் போகுமஞ்சட்கச்சிக்குப்
பொல்லாப்பொன்றில்லைப் புதல்,

(இ-ள்) மஞ்சள்கச்சி யிளனீரை யருந்தினல்பித்த தோஷம் - சோபை சிலேஷ்மாதிக்கம் பழயசுரம் ஆகிய இவைவிலகும என்க, (௬௬)

அடுக்குளனீரின் குணம,

அடுக்குளனீரையத்தை யண்டாதுகற்றும
வடுக்கண்ணுபுன்னும வகுப்போம-படுக்குமபேர்
நண்டாற்சுகமெய்து முள்ளாங்கிருமியிதைத்
கண்டாலிறந்துவிடுங்காண்,

(இ-ள்) மாவடுவையொத்த கண்களையுடையபெண்ணே இன்னுஞ் சொல்வேன் நித்திரைக்குமுன் அடுக்கிளநீரையுண்டால் கபதோஷமும் மலப்பையைப்பற்றிய கிருமியும்போம் நன்மையுண்டாம்-என்க ()

கருவிளநீரின்குணம.

மருமலர்வாழ்யானேகேள் வையகத்தோர்கித்தங்
கருவிளநீருண்ணக் கபமுங்-கிருமிநெளி
புண்ணுங்கரப்பானும் போகுமிகக்காந்தியுறு
மெண்ணுமனப்பூரிப்பா மென்.

(இ-ள்) வாசனைபொருந்திய தாமரைமலரில்வசிக்கின்ற மான்போலுங்கண்களையுடையபெண்ணே கருமைநிறஇளனீரால் கபாதிக்கமும்புழு நெளிகின்றவிரணமும கரப்பானுமநீங்கும் தேஜசும மகிழ்ச்சியும உண்டாம-யென்க, (சுஅ)

சோரியிளநீரின்குணம.

காரிலருகூந்தற் கருங்கண் மடமயிலே
சோரியிளநீருந்தச் சோபையறுங்-கூறியதோர்
பூச்சிகிருமிபொன் றும் பொன்மேனியாமுடலம
பேச்சிற்றெளிவுண்டாம பேசு,

(இ-ள்) மேகமபோலக் கறுத்தகூந்தலையும கரியகண்களையும மயில் போலுஞ்சாயலையுமுடையபெண்ணே ரத்தவன்னஇளநீரால் வீக்கமும நீர்ப்பாமபுக்கிருமியும சன்னக்கிருகியுமபோம தேகசுமதெளிந்தவசனமுமுண்டா-மென்க, (சுக)

ஆயிரங்கச்சியிளநீரின்குணம,

வேகமுறுந்தீபனமாம விட்டோடும்வாதகப
மாகமதிற்சோர்ந்த வரிப்புமபோம-வாகுறுபுண்
வாயிரங்குசீழும வயிற்றுவலியுந்தொலையும
ஆயிரங்கச்சிக் கறி.

(இ-ள்) ஆயிரங்கச்சியிளநீரால் வெப்பமும்பசியும ஆமவாதகபத்தொந்தம மேச்சல்-விரணச்சூழ்குன்மம ஆகிய இவைநீங்கு-மென்க, (எம)

குண்டற்கச்சியிளநீரின்குணம.

அண்டையிலேநின்றூர்க் கரோசிகெடுந்தீபனமாங்
கெண்டைவிழிமாதரசே கேளின்னுங்-கண்டபடி
குண்டற்கச்சிக்குக் கொடுந்தாகமாறிவிடும
பண்டைப்பழமலமபோம் பார்,

(இ-ள்) மகரநோக்கியே கேளின்னமுங்குண்டற் கச்சியிளநீரால் அருசிவிதாகமநாட்பட்ட பழையமலம ஆகிய இவைபோம ஜடராக்கினியுண்டாம-யென்க. (எக)

உண்பதற்குமுன்பருந்துமஇளநீரின்குணம

ஊனுக்குமுன்பிளநீ ருண்டாற்பசிபோகும
வீனுக்குக்குன்மம விளையுங்காண்-பேணியிதை
மாலைதனிலருந்த மன்னுபுழுச்சாகும
வேலையொத்தகண்ணாய் விளமபு.

(இ-ள்) வேலைநிகர்த்த கண்களையுடையமாதே காலைப்புசிப்பிற்குமுந்தி இளநீருண்டால் பசிநீங்கலன்றிக்குன்மம ஆம மாலையில்உண்டால்யெரிகிருமிகள்ஒழியுமஎன்று சொல்லுவாயாக, (எஉ)

உண்டபின்பு அருந்தும இளநீரின்குணம.

வாதபித்தமீறு து வன்பயித்தியந்தீருங்
கோதின்மலஞ்சாறுங் கொடுமபசியா-மாதரசே
மீண்டியதோர்வராதுமேனி மினுமினுக்கும
உண்டபின்புநல்லிளநீ ருண்.

(இ-ள்) பெண்களுயகமே புசித்தபின்பு இளநீரையுண்டால் வாதபித்த கோபந்தணிவதுமன்றித் தனிப்பித்ததோஷம, விலகுமதாராளமாகமலங்கழியும, அதிதிபனமுங்உண்டாம நோய் அணுகாது-என்க,

காய்ந்தாறியஇளநீர்-செவ்விளநீர்-கெளிபுபாத்திரை இளநீர் இவைகளின்குணம்.

காய்ந்தாரறியவிளநீர் காசங்கபந்தீர்க்கு
மாய்த்திடாத்தாகசுர மாற்றுங்காண் ஆய்ந்ததொரு
செவ்விளநீர்பித்தஞ் சிதைக்குங்கெவுளிகொண்டால்
யெவ்வளவுந்தாபமிலை யென்.

(இ-ள்) மட்டையைச்சீவித் தண்ணீரிற்போட்டுக்காய்ச்சி யாற்றியஇளநீரானது இருமல்சகலதோஷம வறட்சுரமஇவைகளைப்போக்குமசெமமைநிறமுள்ளஇளநீர் பித்ததோஷத்தைவிலக்கும கெவுளிபாத்திரையென்னும இளநீரையுண்டால்உஷ்ணமவிலகு-மென்க, (எச)

## வெந்நீர்வகை.

வெந்நீரின் பொதுக்குணம.

நெஞ்செதிர்ப்புநெற்றிவலி நீங்காப்புளியேப்பம்
வஞ்சமுறவந்த வயிற்றுநோய்-விஞ்சியே
வீழாமக்கட்டோடு வெப்பிருமற்சுட்டநீர்
ஆழாக்குட்கொள்ள வரும்.

(இ-ள்) ஆழாக்குளன்னும் அளவாகக்குடிக்கின்ற வெந்நீரினால்-எதிர்க்கின்றஉணவுநெற்றிநோவு-புளியேப்பம்-குன்மம்-சீதக்கட்டு-சுரம்-காசம்ஆகிய இவைகள்போம்-என்க, (எ௫)

காய்ந்தாறியவெந்நீரின்குணம்.

காய்ந்தாறவைத்தநீர் கட்டுழலைவிக்கலொடு
வாய்ந்தவதிசாரபித்த மாற்றுங்காண்-சேர்ந்துவரு
மூர்ச்சைவிஷஞ்சாந்தி மூன்மயக்கமேகமதி
யூர்ச்சிதமுத்தோஷம் போக்கும்.

இதுவுமது.

காய்ந்தநீருண்ணுங்காற் கண்செவிநோய்சூலைகுன்மச்
தோய்ந்தசுரவேகந் தொடையயம் பாய்ந்தடரும்
வாதத்தின்கோபமிவை மாறுமெனலாதியருள்
வேதத்தின்வாக்கியமாம் விள்.

(இ-ள்) காய்ச்சி ஆற்றியவெந்நீர் உழலைநோய் - விக்கல்-பேதியாற்-கிளைத்த பித்தகோபம்-மூர்ச்சை-சில்விஷம்-வாந்தி-மயக்கம்-சுக்கிலமேகம் திரிதோஷம்-கண்ணோவு-செவிக்குத்தல்-சூலை-குன்மம்-சுரவேகம்-கோழை-வாதாதிக்கம்-இவைகளைநீக்கும்-என்க, (எள)

கால்கூறு அரைக்கூறுகாய்ந்த வெந்நீரின்குணம்.

காற்கூறுகாய்நீராற் காரிகையேபித்தம்போ
மேற்கூறுபாதிசுட்ட வெந்நீரான்-மேற்கூறும்
வாதமொடுபித்தம்போம் வைத்தொருநாட்சென்றுண்கு
ரோதம்போமோடி யொளித்து.

(இ-ள்) வைத்த அளவைக்குக் காற்பாகஞ்சுண்டிய வெந்நீரால்பித்தகோபம்நீங்கும் பாதிசுண்டியவெந்நீரால் வாதபித்ததோஷம் விலகும அதைமறுநாள்வைத்துண்ணில் திரிதோஷகோபம்போம்-என்க. (எஅ)

முக்காற்கூறுகாய்ந்த வெந்நீரின்குணம்.

முப்பங்கறக்காய்ந்த மூத்தவெந்நீரால்வாதஞ்
செப்புங்குளிர்நடுக்கல் தீச்சுரம்வெக்-கைப்பலநோய்
வாதபித்தவையமிவை மாறுஞ்சுரிகுழலே
பூதலத்துள்ளும் புகல்.

(இ-ள்) சுரித்தகூந்தலை யுடையபெண்ணே முக்காற்பாகஞ் சுண்டிய வெந்நீரால் வாதவிருத்தி-குளிர்-நடுக்கல்-கொடுஞ்சுரம்-பற்பலபேதி திரிதோஷம் இவைபோம்-என்க, (எகூ)

ஊணுக்குமுன்புபின் நடுஇக்காலங்களில்அருந்தும்
வெந்நீரின்குணம்.

ஊணுக்குமுன்புவெந்நீ ருண்டாக்காற்றீபனம்போம்
ஊணுக்குப்பின்பருகதி லூதியமாம் ஊணுக்குப்
பாதியிலுண்டாற்பசியுப் பாதியாம்வெந்நீரோ
யோதுசுரவாத மகற்றும்.

(இ-ள்) உணவுக்குமுந்தி வெந்நீரைக்குடித்தால் பசிமந்தப்படும் பின்புஉண்டால் நன்மையுண்டாம் சாப்பிடும்போது மத்தியிலருந்தினால்பசியுமத்தியமாம் மேலும்வெந்நீரின்சுபாவம் வாதசுரத்தைநீக்குமென்க,

## பாத்திரபேதவெந்நீரின்வகை.

(*)

பொற்கெண்டி வெந்நீரின்குணம்.

பொற்கெண்டிதன்னில்வெந்நீர் பூரித்துட்கொள்ளுங்காண்
மற்கொண்டவாயுகபம் வாயருசி யெற்கொண்ட
மெய்யழல்வெப்புந்தணியும் விந்துநற்புத்தியொடு
மெய்யறிவுமோங்குமென விள்.

(இ-ள்) வெந்நீரைப்பொற்கெண்டியில் ஆறவைத்தருந்தில் வாதவிருத்தி-கபகோபம்-அரோசகம்-சரீரவுஷ்ணம் சுரம்ஆகிய இவைபோம்சுக்கிலமும் நல்லறிவும் ஸ்பரிசஞானமுமுண்டா-மென்க, (அக)

சரிகைவெள்ளிக்கெண்டி வெந்நீரின்குணம்.

சரிகைவெள்ளிக்கெண்டிதனி லெட்டிலொன்றாய்ப்
பெருகக்காய்ச்சும்புனலைப் பெய்தே-பருகுங்கால்
வெப்பொடுதாகங்குன்மம் வீறுபித்தக்காச்சலும்போந்
துப்பொடுடலெஞ்செழிக்குஞ் சொல்.

(இ-ள்) எட்டிலொருபங்காய்க்காச்சி நீரைச்சரிகை வெள்ளிக்கெண்டியில்விட்டுச் சாப்பிட்டால் உஷ்ணம்-தாகம்-குன்மம்-பித்தசுரம் இவைவிலகும் தேகத்திற்குவன்மையும் புஷ்டியுமுண்டாமென்க, (அஉ)

தாம்பரமவெள்ளி-பஞ்சலோகம்வெண்கலம்
இப்பாத்திரங்களின் வெந்நீரின்குணம்.

இரவிவட்டிற்றாமிரத்த பித்தம்போக்கும்
இரசிவட்டிற்கைய மேகும்-வருகலப்பு
வட்டிலறல்முத்தோஷ மாற்றும்வெண்கலச்சலமெய்க்
கொட்டரந்த தாதுவைச்சேர்க்கும்.

(இ-ள்) தாம்பரக்கிண்ணி வெந்நீர்கண்புகைச்சலேயும் ரத்தபித்தப்பிணியையுந்நீக்கும் வெள்ளிக்கிண்ணத்துவெந்நீருக்குக்கபரோய் நீங்கும் பஞ்சலோகவட்டில் வெந்நீர்திரிதோஷத்தைவிலக்கும் வெண்கலப்பாத்திரவெந்நீர் உதிரத்தைப்பெருக்குமென்க இரவி-தாம்பரம். (அரு)

கெண்டிவெந்நீரின்குணம்.

கெண்டிதனிற்காய்ந்திட்ட லாலமதையாற்றியுண
வுண்டியரோயு மடர்சிரங்கும்-பண்டைக்
குடைச்சலுங்கைகாலிற் குடைச்சலொடுசந்தின்
குடைச்சலும்போமன்றாகக் கூறு.

(இ-ள்) கெண்டியில்காய்ந்தநீரை யாற்றியுண்ணச்-சுரம்-சிரங்கு-அஸ்தி கைகால் இடுப்பு இவ்விடங்களில் குடைச்சல்ஆகியஇவைபோமென்க. (அ௬)

பன்னீர்ச்செம்பு வெந்நீரின்குணம்.

பன்னீர்ச்செம்பிற்காய்ந்த பானியும்விட்டருந்த
பன்னியசுவாசமவிக்கல் மாபிரமை-பன்னரிய
பித்தசிலேஷ்மவளி பேசரியதாளின்வலி
யித்தரையைவிட்டகலு மெண்.

(இ-ள்) பன்னீர்ச்செம்பில் காய்ந்தவெந்நீரைவிட்டருந்த இரைப்பு-விக்கல்-சித்தப்பிரமை-திரிதோஷம் - தாளுபாகரோகம் ஆகியஇவைபோமென்க. (அ௭)

இரும்புக்கெண்டி வெந்நீரின்குணம்.

இரும்புறுங்கெண்டிதனி லேந்தியவெந்நீரை
விரும்பியுணப்பாண்டு விலகும்-இரும்பவுமோர்
தாதுவுமாநாடிகளுந் தாமுரக்குந்தேகந்திற்
சீதசுகமுண்டாந் தெளி.

(இ-ள்) இரும்புக்கெண்டி வெந்நீருக்குப் பாண்டுநீங்கும்தாதுவிருத்தியும்-நரம்புகளுக்குறுதியும்-தேகத்திற்சீதோஷ்ணசுகமுமுண்டாகும்,

நீர்வகை-முற்றியது.

---

# பால்வகை.

முலைப்பாற் பொதுக்குணம்,

தன்னியமென்றோதிற் சருவதோஷங்களும்போம
உன்னியதாப மொழியுங்காண்-சந்நியொடு
வாதசுரம்பித்தசுரம் வன்கபச்சுரந்தணியுந்
[illegible] யுண்டாங் கூறு.

இதுவுமது.

இருக்தோஷம்போக்கு மிகற்கிரிச்சந்தீர்க்கும்
அருந்துமருந்தி னனுபானம்-பொருந்தும்
அஞ்சனத்திற்காகு மறல்வறட்சிநீக்கிவிடும்
பஞ்சினடிமாதர்முலைப் பால்.

(இ-ள்) முலைப்பால் எழுவகைத்தோஷங்கள் வெப்பம்-சந்நிபாதம்வாதபித்த-கபசுரங்கள்-திரிதோஷம்-வாதகிரிச்சரம்- நாவறட்சி ஆகியஇவைகளைவிலகி வன்மையைத்தரும் ஔஷதஅனுபானத்திற்கும் கலிக்கத்திற்கும் ஆகுமென்க தன்னியம்-என்பது-முலைப்பால். (அஅ)

கருமை-செம்மை-நிறமாதர்களின்-முலைப்பாற்குணம்,

கரியநிறமாதர் கலசமுலைக்ஷீரம்
அரியவிழிக்காமருந்திற் காகா-திருநீலத்துள்
நோயணுகாச்செய்ய நுடக்கிடையார்தம்முலைப்பால்
தீயமுத்தோஷம்போக்குஞ் சேர்,

(இ-ள்) கரியநிறமாதர்முலைப்பால் கண்வியாதியங்களுக்கேயன்றிஔஷதங்களுக்குபயோகமாகாது வியாதியில்லாத செம்மைநிறமாதர் முலைப்பால் வாதாதிமூன்றுதோஷங்களையும்போக்கும். க்ஷீரம்-பால் (அக)

பரத்தையர் முலைப்பாற்குணம்.

பரத்தையர்முலைப்பாற்குப் பாரமுத்தோஷங்கள்
உரத்துவரும்வாதமு முண்டாகும்-இரத்தச்
சொறிகிரந்திபுண்ணுந் தொடர்கழனோய்சேருங்
குறியறிந்துநீக்கிக் கொடு.

(இ-ள்) வேசையர்முலைப்பாலால் திரிதோஷங்கள் வாதரோகம் இரத்தச்சொறி கிரந்தி விரணம் கழல்வாதம் இவைஉண்டா-மென்க,(கூ0)

பசுவின்பாற்பொதுக்குணம்.

பாலர்கிழவர் பழஞ்சுரத்தோர்புண்ணுளி
சூலையர்மேகத்தோர் துற்பலத்தோர்-ஏலுமிவர்
எல்லார்க்குமாகு மிளைத்தவர்க்குஞ்சாதகமாம்
நல்லாய்பசுவின்பால் நாட்டு.

(இ-ள்) பசுவின்பாலானது பாலருக்கும் விருத்தருக்கும் பழயசுரம் விரணம சூலை பிரமேகம் துர்ப்பலம் அதிசுஷ்கரோகம் ஆகிய இவைகளையுடையவர்களுக்கும் ஆகு-மென்க, (கூக)

வெண்மை-செம்மை-கருமை-கபிலை என்னும்-இன்னிறமுள்ள பசுக்களின் பாற்குணம்,

வெண்பசுவின்பால்போக்கும் பித்தத்தைமெய்சிவந்த
வண்பசுவின்பால்போக்கும் வாததைதக்-கண்சிறந்த
காராவின்பால்போக்கு மையங்கபிலைப்பால்
ஆரமிர்தாங்தோஷ மறுக்கும்

(இ-ள்) வெண்மைநிறப்பசுவின்பால் பித்தகோபத்தையும் செம்மைநிறப்பசுவின்பால் வாததோஷத்தையும் கருமைநிறப்பசுவின்பால் கபரோகத்தையும் கபிலைநிறப்பசுவின்பால் திரிதோஷத்தையும் போக்கும் கபிலை-என்பது, கருமைகலந்த பொன்னிறமாம்-என்க, (கஉ)

காராம்பசுவின் பாற்குணம்.

கண்ணோய்பகற்றுங் கயரோகந்தான்போக்கு
மண்ணிலுள்ளபால்தோஷம்மாற்றுங்காண்-பெண்ணே
இரத்தபித்தம்போக்கு மிராசவசியங்
கறுத்தபசும்பாலதனைக் காண்.

(இ-ள்) காராம்பசுவின்பால்-விழிப்பிணிக்ஷயம்-மற்றைபாலின் தோஷங்கள்-ரத்தபித்தரோகம்-இவைகளைநீக்கும் - ராஜவசியமாம் - பெண்ணே-என்க, (கந)

நாரைமான்-கபிலைஎன்னும் இன்னிறமுள்ள பசுக்களின் பாற்குணம்.

நாரைப்பசுவின்பால் நாளுமுயலேயகற்று
மானைனிறப்பசும்பால் வாய்த்திடினே-வேனையுறு
முப்பிணியுமபோகு மொழிகபிலையின்பாலுங்
கெப்பிணியும்போமே யிறங்கி.

(இ-ள்) நாரைப்பசும்பால் முயல்வலிதீர்க்கும் மானிப்பசும்பாலால்திரிதோஷமும் கபிலைனிறப்பசும்பாற்குப் பலபிணியும்நீங்கும்-என்க, ()

கொம்பசையும் பசுவின்பாற்குணம்.

கொம்பசையுமாப்பாலோ கூறுபித்தம்போக்கிவிடுந்
தம்பவாதத்தைத் தருவிக்கும்-வம்புமுலை
மானேகேள்விந்துவை வளர்ப்பிக்கும்வன்கபத்தைத்
தானேயெழுப்புமெனச் சாற்று,

(இ-ள்) கச்சணிந்த தனங்களையுடையபெண்ணே அசைகின்றகொம்பையுடைய பசுவின்பால்பித்தரோகத்தைநீக்கும் தனுஸ்தம்ப வாதம் சுக்கிலதாது கபநோய்இவைகளை விளைக்கும், (கரு)

தே, மூன்றுமீற்று-நான்காமீற்றுப் பசுக்களின்பாற்குணம்,

மூன்றுமீற்றின்பான் முதிர்கபத்தைப்போக்கிவிடும்
என்றநாலாமீற் றெனும்பாலுங்-கூன்றுதிரி
தோடமகலுஞ் சுகமுண்டிவ்வாப்பாற்சந்
தோடமெவர்க்குமுண் டாக்கும்.

(இ-ள்) மூன்றும்ஈற்றுப்பசுவின்பால் நீடித்தசிலேஷ்ம நோயைநீக்கும் நான்காம் ஈற்றுப்பசுவின்பாலுக்கு வாதாதிமூன்றுதோஷங்களும் நீங்கும் சரீரசவுக்கியமும் மகிழ்ச்சியும்உண்டாகு-மென்க, (௬௯)

ஆகாப்பசுவின்பாற்குணம்-விருத்தம்,

விஞ்சுவரனை தாராநோய் மிகுந்துச்சுழலல்வெண்புள்ளி
துஞ்சியலைந்துமலமருந்தல் சுடுகாடேகிவெலும்புண்ணலிவ்
வஞ்சுவகைபினுவின்பா லாகாதனுஙிரமிரிதோஷம்
செஞ்சிலடையுங்கயநோயா னிறைந்தவயதுங்குறைந்திடுமே

(இ-ள்) ஆகாப்பசுவின்பால் ஐவகைப்படும் அவையாவன அரனைநோய்தாராநோய்மிகவுஞ் சுற்றுதலோடுவெண்மைப்புள்ளி தூங்கித்திரிந்து மலம்அருந்தல் சுடுகாட்டெலும்பு உண்ணல் ஆகியஇவைகளையுடையபசுக்களின்பாலாம் இவைசேருமாகில் வாதாதிமூன்று தோஷங்களும் மார்பிற்சேர்ந்து க்ஷயத்தைவிளைப்பதும் ஆயுளைக்குறைப்பதுமா-மென்க,( )

பகற்பசுவின் பாற்குணம்-வெண்பா,

பகற்பால்சிசுக்கட்குப் பக்குவமென்றாலும்
விகற்பமோடைப்பெருக்கு மெய்யே-யதற்குமிகத்
தீதடாச்செய்யுமித்தாற் சேராதுட்காய்ச்சலனல்
காதவிழும்பூங்குழலே சாற்று.

(இ-ள்)மகரந்தங்களுதிரமலரணிந்த அழகியகூந்தலையுடையாளே பகற்பசுவின்பால் குழந்தைகளுக்குப்பக்குவமாமென்றாலும்பற்பலகபநோயையும் தாம்பூலம்புளிப்புமுதலிய சேருமிடத்துக் கெடுதியையும்செய்யும் உட்சூட்டையும்-வெப்பத்தையும்நீக்கு-மென்க, (௬௮)

தே, இராப்பசுவின் பாற்குணம்

பகற்பசும்பால்காய்ச்சிப் பருகினழலும்
இரற்பமுமினையுமிராவாம்-புகல்பித்த
மிகமும்பேரமேனியெல்லாமேரிக்காதவுமாம்
பேரகமுமுண்டாகும் புகழ்

இதுவுமது.

இரவின்பால்கண்ணி லெழுபிணிபோக்கும்பின்
பரவியநோயும்போக்கும் பாரில்-விரகமுற்றார்க்
கத்தியமபன்னவிழி யாயிழையேயாவருக்கும்
பத்தியமாமென்றைக்கும் பார்.

(இ-ள்) அயிலே சிகர்த்தகண்களையும் ஆராய்ந்திழைக்கப்பெற்ற ஆபரணத்தையுமுடையபெண்ணே பகலிற்கரந்து இறவிக்கறக்கின்ற பாலேவிதிப்படி காச்சியருந்தில்தேகஅழற்சி கபரோகம்-சுவாசம்- பித்தகோபம் நேத்திரவியாதி விந்துவின்கெடுதி யாலனுசரித்தசிற்சிலரோகங்கள் ஆகிய இவ்வைநீங்கும் தேகத்தில்மினுமினுப்பும்-சுக்கிலப்பெருக்கமும் மாதர் மேல்விருப்பமும்உண்டாகும் இதுபத்தியத்திற்குதவும என்க, பகல்முழுவதுஞ் சுரந்திருந்து இறவில்கறப்பது பகற்பாலாம் (௯)

தே, எருமைப்பாற்குணம.

வாதத்திமிரைவர வழைக்கும்புத்தியினற்
போதத்தெளிவைவனி போக்குங்காண் -கோதற்றே
யங்கத்துறுமருந்தை யன்றேமுறித்துவிடும்
பங்கத்துறுமேதிப் பால்.

(இ-ள்) எருமைப்பால் திமிர்வாயுவைத்தருவிக்கும் தெளிந்தபுத்தியின் கூர்மையையும் நல்லமருந்தின்குணத்தையும்கெடுக்கு-மென்ச, (௰௧)

வெள்ளாட்டுப்பாற்குணம்.

வெள்ளாட்டுப்பாலுக்கு மேவியசுற்றீபனமாந்
தள்ளாடுவாதபித்தஞ் சாந்தமாம-உள்ளிளைப்புச்
சீதமதிசாரஞ் சிலேஷ்மமறும்புண்ணுறும்
வாதகிலேசமும்போ மாய்ந்து

(இ-ள்) வெள்ளாட்டுப்பாலினால் வாதபித்ததொந்தம் சுவாசகாசம் சீதாதிசாரம் கபதோஷம விரணம் வாதத்தாலுண்டாகிய வீக்கம்முதலியதுய்பம் இவைநீங்கும் நல்லபசியும உண்டாமென்க, (௰௨)

செம்மறியாட்டுப்பாற்குணம்

செம்மறிப்பால்பித்தாஞ் சிலேஷ்மத்தையுண்டாக்கும்
விம்முமவயிறுமிக மேன்மூச்சாங்-கொம்மை
வருமுலையாய்பத்தியத்தில் கூடாதுவாய்வாம்
பருகுவர்க்குநாளும் பார்.

(இ-ள்) திரட்சியாய்வளர்ந்துவருவனவாகிய தனங்களையுடையபெண்ணே வாதரூபமானசெம்மறியாட்டுப்பால் பித்தசிலேஷ்மதொந்தம் வயிற்றுப்பிசம் மேற்சுவாசம பத்தியத்திற்குதவாது வாய்வுயதிகரித்துஇவகளையுண்டாக்கு-மென்க, (௱௩)

யானைப்பாற்குணம்.

வாதமபோந்தாதுபுஷ்டி வந்தடருமவன்பலமோ
யாதுபித்தங்கூடி யழகுதிக்குந்-தாதுமலர்த
தேனைப்பாலிற்கலந்த தித்திப்பைபோலிருக்கும
யானைப்பாலுண்ணு மவர்க்கு.

(இ-ள்) தேனும்பாலுங்கலந்த ருசிபோன்றயானைப்பாலைக் குடிப்பவருக்கு வாதகோபமநீங்கும சுக்கிலவிருத்தியும மிகுவன்மையும பித்தசமபந்தமான தேகஅழகுமஉண்டாகு-மென்க, (௱௪)

குதிரைப்பாற்குணம,

வீரியவிருத்தி விளைக்குமழகுண்டாகுங்
காரியத்திற்காமங் கதிப்பிக்கும்-வார்ார்
கரகமெனச்செப்புமுலைக் காரிகையேகேளாய்
துரகதப்பால்செய்யுந் தொழில்.

(இ-ள்) வாரிஞலிறுக்கிய பொற்கலசமெனப்புகலுங் கொங்கைகளையுடையமங்கையரே குதிரைப்பால் சுக்கிலப்பெருக்கத்தையும சரீரவனப்பையும புணர்ச்சியில் திருவாகத்தையும உண்டாக்குமென்க, (௱௫)

ஒட்டைப்பாற்குணம.

ஒட்டைப்பாலுக்குமந்த மூர்வாதசூலையோ
டட்டகுணக்கரப்பா னூர்வதன்றி-மட்டிடாக்
காதிரைச்சன்மந்தமதி காசஞ்சுவாசமுமா
மாதரைக்குணனும் வழுத்து,

(இ-ள்) ஒட்டைப்பாலினல் அக்கினிமந்தம வாதசூலை எண்விதகரப்பான் கர்ணநாதசெவிடு அதியிருமல் இரைப்பு இவையுண்டாகும ()

கழுதைப்பாற்குணம.

கழுதைப்பால்வாதங் கரப்பான்விரணங்
தழுதளையுள்வித்திரதி தானே-யெழுகின்ற
ஒட்டியபுண்சிழ்மேக மோடுசொறிசிரங்கு
கட்டியிவையோக்குங் கழறு,

இதுவுமது

கத்தவத்தின்பாற்குக் கரியகிரந்தியறுஞ்
சித்தப்பிரமைபித்தந் தீருங்காண்-தத்திவருமே
ஐயமொழியு மதிகமதுரமுமாஞ்
செய்யமடமயிலே செப்பு.

(இ-ள்) அழகுமிளமையும பொருந்தியமயிலனையபெண்ணே கழுதை ப்பால் மிகுமதுரத்தையுடையது இதுவாதநோய் கரப்பான் புண்தழு தலைரோகம உள்வித்திரிதிக்கட்டி-ஓட்டுக்கிரந்தி சீழ்ப்பிரமேகம்சொறி சிரங்கு-அற்புதவிரணம-சித்தப்பிரமை-பித்ததோஷம-கபநோய்இவைக ளைப்போக்கும-என்க, (௬௭)

பாத்திரபேதத்திலுண்டாகியபாற்குணம.

செம்பிலமெபால்வாத சீதமொழிக்குமபொன்மண்
குமபத்தபால்போக கு மபித்தை-யமபுவியுள்
வெள்ளியறையிரும்பில் விட்டுக்காய்ச்சும்பாலாற்
றுள்ளியுறையைமருஞ் சொல்.

(இ-ள்) செப்புப்பாத்திரத்தில் காய்ச்சியபால் வாதசிலேஷ்ம தொந்த த்தையும் பொன்-மண்-இப்பாத்திரங்களிற்காய்ச்சியபால் பித்ததோஷத் தையும்-வெள்ளி-வெண்கலம்-இருப்பு-இப்பாத்திரங்களிற் காய்ச்சியபா ல் காசரோகத்தையும்போக்கு-மென்க, (௬௮)

ஆடையெடுத்தபாற்குணம்,

ஆடையெடுக்கும்பாலா லக்கினிமந்தப்படுமே
வாடைநல்லாய்சிரணமாம் மாதமறுங்-கோடையிடி
போலுமெழுந்தபித்தம் போகுமையமேகுமயில்
வேலனையகண்ணாய் விதி.

(இ-ள்) கூரியவேலனைய கண்களையுடையபெண்ணே ஏடுநீக்கியபா லால் அக்கினிமந்தமும் சப்ததாதுகளின் சீரணமும்உண்டாம் வாதபித்த கபதோஷங்கள் நீங்குமென்க, (௬௯)

காய்ச்சும்பாலுக்கு நீரளவைகூறல்,

ஆடுபசும்பால்காய்ச்சி லஷ்டபாகம்புனலாம
நீடெருமைசெம்மறிக்கு நேர்நேராங்-தேடரிய
சுக்குசிறுகாஞ்சொறிவேர் கூட்டிச்சுவரியபா
லொக்கும்வெள்ளாட்டுப்பாற் குணம்

(இ-ள்) வெள்ளாடு-பசு-இவைகளின்பாற்கு எட்டிலொருபங்கும்-எருமை செம்மறியாடு இவைகளின் பாற்குச்சரிபங்கும் ஜலமவிட்டுக்காய்ச்சவேண்டுமெ யெவ்விதபால்களுக்கும் சுக்கு சிறுகாஞ்சொறிவேர் சேர்த்துக்காய்ச்சில் அவைகள்வெள்ளாட்டுப்பாலுக்கு நேராமென்க, (௱௰௧)

பாலேட்டின்குணம்.

பாலேட்டாற்பித்தமறும பாழ்த்தகொடுஞ்சர்த்தியும்போம
மாலாட்டுமூர்ச்சையும்போம வன்பலமா-மேலாலே
தாதுமிகுந்தீபனமாந் தானேயினித்தவர்க்குக்
கோதுமறுமாமயிலே கூறு,

(இ-ள்) பாலிலுண்டாகும் ஏட்டினால் பயித்தியநோயும் கொடியவாந்தியும மூர்ச்சையும்நீங்கும் மிகுபலமும் சுக்கிலமும ஜாடராக்கினியும விருத்தியாம இதைத்தற்பல தேகிகளுண்டாலுங் குற்றமில்லை-என்க,

தேங்காய்ப்பாற்குணம்,

வாதம்மாம்பித்தமுறும் வன்கரப்பனும்படரு
தாதுவும்விருத்தியாந் தாழ்குழலே-யோதகல்ல
அன்னமிறங்கு மதியுரிசையுண்டாகுந்
தென்னங்காய்ப்பாலாற் றெளி,

(இ-ள்) தாழ்ந்தகூந்தலே யுடையபெண்ணே மிகுமதுரத்தால் உணவையுட்செலுத்துகின்ற தெங்கின்பாலால் வாதவிகாரம பித்தாதிக்கமக ரப்பான் சுக்கிலவிருத்தியும் ஆம், (௱௰௩)

ஆலம்பாற்குணம,

ஆலம்பால்மேக மறித்தசையும்பல்லிறுக்குங்
கோலமுடிக்குக் குளிர்ச்சிதரும்-ஞாலமதின்
மெத்தவுமேசுக்கிலத்தை விர்த்திசெய்யுந்தப்பாமற்
சுத்தமதிமுகத்தாய் சொல்,

(இ-ள்) களங்கமற்றபூரணசந்திரனைநிகர்த்த முகத்தினையுடையபெண்ணே ஆலம்பால் பிரமேகத்தைநீக்கும் ஆடுமபற்களையிறுக்கும சிரைக்குக் குளிர்ச்சியையும் தாதுபுஷ்டியையும உண்டாக்குமென்க, (௱௰௪)

அத்திப்பாற்குணம்,

காரமோடிட்டினமாங்காதுகின்றபித்தத்தை
கீரிழிவைச்சூலைகளை நீடாத்தஞ்-சேருங்
இரிச்சரத்தைப்போக்குங் கிளர் ※ கோளியென்னும்
மாச்சுருமப்பாலதனை வழங்கு,

(இ-ள்) காரமும் - உஷ்ணமுமுள்ள-அத்திப்பால்-பித்தம்-நீரிழிவுரு லைரத்தமூத்திரகிரிச்சரம் இவைகளைநீக்கும் () கோளி-அத்திமரம ()

பேயத்திப்பாலின்குணம்,

வெடிப்பைமேகப்புண்டையை வீறிவருகுட்டத்
தடிப்பைமூலரணத்தைச் சாடும்-படிக்குண்மயி
லென்னவொளிர்மாதரசே யெங்குஞ்சுணைகணிறை
பன்னமுறுபேயத்திப் பால்

(இ-ள்) மயிலென்னவிளங்குகின்றபெண்களுயகமே சுணைகளையுடைய பேயத்திப்பால் பாதபேதரோகம் மேகச்சொறிகுஷ்டரோகத்தடிப்பு மூலவிரணம் இவற்றைவிலக்கும். (௱௪௬)

மட்டிப்பாற்குணம்

தலைவலிநீரேற்றந் தணித்தவடல்வாத
மலைவுறுமேல்வாந்தி யரோசி-நிலைகுலையும்
வட்டுப்பால்வஞ்சம்வைத்த மாமுலைமாதேமணக்கு
மட்டுப்பாலிற்கு மருண்டு,

(இ-ள்) சூதாடுகருவியை வெற்றிகொள்ளும வஞ்சம்பொருந்தியபெரியதனங்களையுடையபெண்ணே வாசனையையுடைய மட்டிப்பாலினால்தலைவலி சலதோஷம் பாதசூலைபகவாதம் கபவாந்தி அருசி ஆகியஇவை போமென்க (௱௪௭)

காட்டுப்பிராய்-ஈழத்தலரி-இவைகளின்பாற்குணம்.

காட்டுப்பிராய்பாலோ காணுகின்றபல்நோயை
நாட்டில்வைக்காதோட்டிவிடு நங்கையே-கோட்டாரும்
ஈழத்தலரிப்பா லேறுபுரைப்புண்தொடையின்
வாழைப்புற்றும்போக்கு மால்.

(இ-ள்) காட்டுப்பிராயமரப்பால்-பற்கநோயைநீக்கும் ஈழத்தலரிப்பால் புரைவிரணத்தையும் தொடைவாழைப்புற்றையும்விலக்கும் ()

சங்கஞ்செடி-புங்கமரம்-இவைகளின் பாற்குணம்,

சங்கம்பால்வீக்கம்தைத் தான்போக்குநீர்வடிக்கு
மங்குசுரவெப்பகற்று மையமிலை-கொங்குலவு
புங்கம்பால்புண்ணாற்றும் பொல்லாதவாய்வகற்றுந்
தங்கம்போன்மெய்யளிக்குந் தான்,

(இ-ள்) முட்சங்கின்வேர்க்கட்டையை மெல்லியதாய்ச் சீவிப்பிழிந்த பால் சோபையைப்போக்கும் நீரேற்றத்தையுஞ் சுரவேகத்தையும்நீக்கும் புன்

போல்பிழிந்தபுங்கமபால் விரணத்தையும் வாதவலியையும்நீக்கும்தேக த்தில் பொன்போல்ஒளிவையுண்டாக்கு-மென்க, (௬௱௯)

திலைமரத்தின்பாற்குணம்.

பாரிசவாதஞ்சந்நி பாதஞ்சூலங்குஷ்டஞ்
சேருமுடவாதம்வலி சில்விஷம்போம்-பேருரைக்க
இல்லையில்லையென்றோடு மெண்பதுவாதமுமே
தில்லைமரப்பாலாற் றெளி.

(இ-ள்) தில்லைமரப்பாலால் பக்ஷகாதவாதம் சந்நிபாதம் சூலை குஷ்ட-ரோகம் முடவாதம அமரகண்டன்முதலிய ஐவகைவலிகள் சில்விஷம் (அப்) விதவாதரோகங்கள் ஆகிய இவைபோ-மென்க, (௬௱௨௰)

திருகுகள்ளிப்பாற்குணம்,

வாதமுடக்கலும் வன்கிரந்திகுட்டமபோஞ்
சீதமொழியுங்கிருமி சேராவாம்-மாதே
பருகுபக்கநோயுடனே பாழ்ங்கரப்பான்றீருந்
திருகுகள்ளிப்பாலாற் றெளி,

(இ-ள்) திருகுகள்ளிப்பாலினால்-கஞ்சவாதம-கிரந்தி-பெருவியாதி சீத க்கட்டு-கிருமிரோகம-பக்கச்சூலை-கரப்பான்-இவைபோ-மென்க (௬௱௨௰௧)

சதிரக்கள்ளிப் பாற்குணம்.

குட்டங்கடிசூலை குன்மமேகம்வாயு
துட்டக்கிருமியொடு தூறுபுண்ணும்-முட்ட
முதிரக்கரப்பனும்போ மொய்குழலோனுஞ்
சதிரக்கள்ளிப்பாற்குத் தான்,

(இ-ள்) நெருங்கியகூந்தலையுடையபெண்ணே சதிரக்கள்ளிப்பாலால் குட்டம்-காணுக்கடி-சூலை-வாதப்பிரமேகம் வாதாதிக்கம் கிருமிநெளிகி ன்றதுட்டவிரணம்-கரப்பான் ஆகியஇவைகள்விலகு-மென்க, (௬௱௨௰௨)

மான்சேவிக்கள்ளிப் பாற்குணம,

மான்செவிக்கள்ளிப்பாற்கு மாறுவிரணங்கள்
ஏன்கிளைக்குநன்மல் மிறங்குங்காண்-ஊண்சேர்
வரிகிரந்திநீங்கா வறட்சிசொறியோடு
பொறிகிரந்தியும்போம பொரிந்து,

(இ-ள்) மான்செவிக்கள்ளிப்பாலால் ஆறுதபுண்கள் மாமிசத்தைப்ப ற்றிய வரிக்கிரந்தி-தேகவறட்சி-புடை-பொரிகிரந்திஎன்னும ஒருவில்இ வைநீக்கும் தோஷமற்றமலமுஞ் சாருமென்க, (௬௱௨௰௩)

இலைக்கள்ளிப்பாற்குணம்-இதுவேமுசற்செவிக்கள்ளியாம்,

செய்யகரப்பான் செவிநோய்வாதமபோக்கும்
பையவருஞ்சூலைதனைப் பாழாக்கு-வெய்யின்மிக
ஊதுகிரந்தியோடட் புண்ணையாற்றிவிடு
மேதுமிலைக்கள்ளிப்பா லொர்,

(இ-ள்) இலைக்கள்ளிப்பால்-செங்கரப்பான்-செவிநோய்-வாதவிகாரம் சூலைவிசர்ப்பிக்கிரந்தி உள்விரணம் இவைகளைநீக்கும்என்க, (௱உச)

கொடிக்கள்ளிப்பாற்குணம்,

துய்யகரப்பான்சொறிசிரங்கும் புண்ணும்போஞ்
செய்யகடிகுஷ்டநோய் சேருமே-மெய்யி
லடிக்கடியாங்குன்மவலி யத்தனையுந்தீருங்
கொடிக்கள்ளிப்பாலுக்குக் கூறு,

(இ-ள்) கொடிக்கள்ளிப்பாலால் கரப்பான்-சொறிசிரங்கு பெருவிரணம் அக்கினிகீடக்கடி குஷ்டம் அடிக்கடிவலிக்குங்குன்மம இவைகள்போமென்க, (௱உரு)

எருக்கம்பாற்குணம்,

எருக்கம்பாற்கட்டிகளை யேகரைக்குமவாய்வைத்
திருக்கறவேகொன்றுவிடுந் தீராச்-செருக்கான
சந்நிவலிதீர்க்குஞ் சார்ந்தபலசிந்தூர
முன்னமுடிக்குமென் றோர்,

(இ-ள்) எருக்கம்பால் வாதக்கட்டிகளைக் கரைப்பதன்றி வாதநோய்சந்நிபாதம ஐவகைவலிஆகிய இவைகளைப்போக்கும் பற்பலசரக்குகளைச் சிந்தூரஞ்செய்யநினைக்கில் முடிப்பிக்குமென்க, (௱உசா)

தே, வெள்ளெருக்கம்பாற்குணம

வலியின்வலிசுளுக்கு மாவாதசந்நி
யெலியின்விஷஞ்சுரங்க ளெல்லாம-வலியற்றுக்
காலைத்தொழுதே கடற்புக்குமவெள்ளெருக்கம
பாலைத்தொடுவாரைப் பார்,

(இ-ள்) வெள்ளெருக்கமபால் ஐவகைவலியின்வன்மை சுளுக்கும்காவாதம சந்நிபாதம யெலிவிஷம குளிர்ச்சுரமஇவைபோம, (௱உஎ)

தே, காட்டாமணக்கின்பாற்குணம,

விழுமேகவெள்ளைகுன்ம மேல்விரணந்தோலி
விழுமேருக்கட்டியிவை யெல்லாந்-தொழுதோடுங்
கூட்டாமணக்குழமைக் கொண்டவணக்கொங்கையின்னே
காட்டாமணக்கம்பாற் கண்டு,

(இ-ள்) கலவைச்சாந்தணிந்த கொங்கைகளையுடையபெண்ணே காட்டாமணக்கம்பாலால் மூத்திரக்தோடுவிழுகின்றமேகம வெள்ளைவயிற்றுவலிகுஷ்டவிரணம சருமக்கட்டி இவைநீங்கும, (௩௨௮)

எலியாமணக்கின் பாற்குணம

எலியாமணக்கே வெலிவிடமவித்துப்பாற்
பலவிடமுநீக்கிவிடும பாரில்-வலுபேதி
யுண்டாகச்செய்யு முயாபிலீகங்குன்ம
மண்டாமலோட்டுமிதை யாய்,

(இ-ள்) யெலியாமணக்கின்பால் யெலிவிஷம்-பீஜவீக்கம்-வண்டுகடிமுதலிய பற்பலவிஷம-பிலீகரோய்-வயிற்றுவலி ஆகிய இவைகளைநீக்குவதுமன்றி அதிகவிரேசனத்தையுண்டாக்குமென்க, (௩௨௯)

தே, பிரமதண்டின்பாற்குணம,

கண்கூசல்கண்ணுருகல் கண்ணொழுகல்கண்ணோதல்
கண்சிவத்தலெல்லாங் கடிதேகுந்-திண்ணச்
சரமதன்றனைப்பிளக்குஞ் சாயகக்கண்மாதே
பிரமதண்டனற்பாற்குப் பேர்ந்து,

(இ-ள்) பலமபொருந்திய மன்மதனையுமவருத்துஞ் சாயகம்போலுங் கண்களையுடையபெண்ணே பிரமதண்டின்பாலால்-கண்கூசுதல்- கண்குறுகல்-கண்ணீர்வடிதல்-கண்வலி - கண்சிவப்பு ஆகிய இவைகள்போமென்க, (௩௩௰)

பால்வகைமுற்றியது.

---

## தயிர்வகை.

பசுவின்தயிர்க்குணம.

பசுவின்றயிராற் பசிமிகவுண்டாகு
மிசிவுமுமகிரணமே யேகும-பசையகன்ற
தாகமிளைப்பிருமல் தாங்கொணு மெய்யெரிவு
மேகுமுலகி லியாபு.

(இ-ள்) பசுவின்தயிரால் பசியுண்டாகும் இசிவுறுமசீரணரோகத்:க ம் ஆயாசமகாசம சரீரஎரிச்சல் ஆகியஇவைநீக்குமென்க, (௱௩௩)

ஆடையெடுத்ததயிர்க்குணம.

ஆடையெடுத்த தயிரையயிளைப்பறுக்கு
நாடுகிரிச்சரத்தை நாடவொட்டா-தாடொலியா
லுண்டாங்கிராணியுறை மேகம்போக்கிவிடுந்
தண்டார்குழலணங்கே சாற்று,

(இ-ள்) குளிர்ந்தமாலையணிந்த கூந்தலையுடையபெண்ணே ஏடுநீக்கிய தயிரானதுசிலேஷ்மரோகம ஆயாசம மூத்திரக்கிரிச்சரம் வாதகிராணி-குஷ்டமேகம் இவைகளைநீக்குமென்க, (௱௩௨)

எருமைத்தயிர்க்குணம,

எருமைத்தயிருக் கெரிவுபித்தம்போம்
வருமைக்கரப்பனொடு வாதம்-பெருமிதஞ்சேர்
தூலவுடலூமான் றூயறிவுமந்தமுறுங்
கோலவிழிகுளிருங் கூறு,

(இ-ள்) எருமைத்தயிருக்கு யெரிச்சலும் பித்தநோயும் போக்கும் கபத்தைப்பற்றிய கரப்பான்வாதரோகம அதிதூலரோகம் புத்திமந்தம்கண் ணுக்குக்குளிர்ச்சி ஆகியஇவைகள்உண்டாகுமென்க, (௱௩௩)

வெள்ளாட்டின்-தயிர்-மோர்-இவைகளின்குணம்.

வெள்ளாட்டின்வெண்டயிரோ மிக்கனலமாகுமதற்
குள்ளாடையான்மந்த முண்டென்பார்-வெள்ளாட்டின்
மோரோமேகத்தை முதிராதடித்துவிடும்
பாரோரறியப் பகர்,

(இ-ள்) வெள்ளாட்டின்தயிரால் அதிஉஷ்ணமுண்டாம் அதன்ஏடால் மந்தமவிளையும் மோரானதுபிரமேக ரோகத்தைப்-போக்கும், ()

செம்மறியாட்டுத் தயிர்க்குணம்,

செம்மறியின்றன்றயிரைத் தின்னமதுரமிகுங்
கொம்மைமுலைமாதரசே கூறக்கேள்-அம்ம
கரப்பான்சொறியுங் கடுப்பிரத்தவாய்வு
முரப்பாமுடல்கெடுமென் றோர்,

(இ-ள்) இளமைபொருந்தியதனங்களையுடையமாதரசே மதுரமுள்ள செம்மறியாட்டின்தயிரைஉண்டால் கரப்பான் புடைமூலக்கடுப்பு ரத்த

மூலம் வாதரோகம ஆகிய இவைகள்பலப்படுவதுமன்றிச் சரீரத்திற்கு க் துன்பமஉண்டாகுமென்க, (௱௩௫)

ஒட்டைத்தயிர்க்குணம்

தீபனமுமுண்டாஞ் சிறுகரப்பான்புண்ணுமாம்
பூபதிபொன்மேனி புளிக்குந்-தாபதமாம்
ஒட்டைத்தயிர்கிதமு முண்ணவதிதாகம்போந்
துட்டக்கிருமியறுஞ் சொல்,

(இ-ள்) ஒட்டைத்தயிரைக்குடிக்கில் ஜடராக்கினி சிறுகரப்பான்விற ணம் அதிற்றாலரோகம் ஆகியஇவைஉண்டாகும தாகமும மலக்கிரிமி ரோகமும்நீங்கும சரீரமினுக்குமென்க, (௱௩௬)

தயிர்வகை-முற்றியது,

## மோர்வகை,

பசுமோர்க்குணம்.

வீக்கமகோதரமுள் வீறுகுன்மம்பாண்டுபித்தந்
தாக்குமருந்திட்டசதி சாரமொடு-கூக்குரலே
மாறுந்திரிதோஷ மந்தமனற்றுகமபோம
வீறுவின்மோருக்கு மெய்,

(இ-ள்) பசுவின்மோருக்கு வீக்கம மகோதரம வயிற்றுவலி பாண்டு ரோகம பித்தகோபம இடுமருந்தால் வருமநோய்கள் பேதிதிரிதோஷம அக்கினிமந்தம் வெப்பம்ஆகிய இவைகள்போமென்க, (௱௩௭)

எருமைமோர்க்குணம,

தாகங்கிராணி சலக்கழிச்சல்காமாலே
ஆகங்குடைபுழுவு மற்றுப்போ-மோகமுறுந்
தேவாமிருதமுமாஞ் சீர்மானிடர்தமக்கு
மூவாமருந்தெருமை மோர்,

(இ-ள்) எருமைமோரினால் தாகம்கிராணிரோகம சலக்கழிச்சல்காமா லை கிருமி ஆகியஇவைகள்நீங்கும போகவிருப்பமாமசிறந்தமானிடர்களு க்கு கெடாதவமுதமாகுமென்க, (௱௩௮)

ஒட்டைமோர்நெய் இவைகளின்குணம்,

ஒட்டைமோர்மெத்தவன லோங்கியவாதந்தணிக்குங்
கிட்டுமந்தநெய்ப்பெருமை கேட்டீரால் கெட்டுலகின்
மந்தஞ்செய்தாலும வலிவிந்துவைப்பெருக்கு
மந்தஞ்சேர்கண்ணு யறி,

(இ-ள்) ஒட்டைமோரானதுபித்தவாததொந்தத்தைச் சாந்திசெய்யும் அதன்நெய்யானது அக்கினிமந்தஞ் செய்வதாயிருந்தாலும் சுக்கிலதாதுவைவிருத்திசெய்யும்-என்க, (௱௩௬)

மோர்வகைமுற்றியது.



# வெண்ணெய்வகை.

தே-முலைப்பால் வெண்ணெய்க்குணம்

கண்ணெரிவுங்கையெரிவுங் காலெருவுநாசிகளி
லண்ணெரிவுமண்ணி லகன்றிடுங்காண் - தண்ணு
ரலைப்பால்மாணமந்துக் கணிசெய்யுமாதர்
முலைப்பால்வெண்ணெய்க்கு முறிந்து.

(இ-ள்) சிறந்தமாதர் முலைப்பால்வெண்ணெய்க்கு-கண்-கை-கால்-நாசி-இவ்விடங்களில் உண்டாகும் எரிச்சல்நீங்கும்-என்க, (௱௪௰)

பசுவெண்ணெய்க்குணம்,

கண்ணிலெழுநோயுங் கண்ணெரிவும்பீளையும்போ
மெண்ணுபசியு மெழும்புங்காண் - நண்ணிரிய
ஆவினறும்வெண்ணெய்க் ககலும்வன்மேகமெல்லாம்
பூவினரர்க்கெல்லாம் புகல்,

(இ-ள்) பசுவின்வெண்ணெய்க்குக்-கண்ணோய்-கண்ணெரிச்சல்-பீளைசாரல்-பிரமேகரோகம்-இவைபோம் தீபாக்கினி உண்டாமென்க, ()

எருமைவெண்ணெய்க்குணம்,

எருமைவெண்ணெய்க்கில் லெரிகீரிழிவு
பருவமயிலேகேளிப் பாரிற்-கிருமியுறும்
மந்தமாம்வாதமிகு மாருக்கபங்கரப்பான்
றொந்தமாநோயடருஞ் சொல்

(இ-ள்) பருவமயில்போலுஞ்சாயலையுடையபெண்ணே எருமைவெண்ணெயினால் பித்தமூத்திரகிரிச்சரம்நீங்கும் மலாசயக்கிரிமி அக்கினிமந்தம் வாதரோகம் கபாதிக்கம் கரப்பான் தொந்தரோகம் ஆகியஇவைகள் உண்டாகுமென்க, (௱௪௨.)

வெள்ளாட்டுவெண்ணெய்க்குணம்,

வெள்ளாட்டுவெண்ணெயது வீறுசுரந்தான்போக்குந்
தள்ளாடுபித்தந் தணிக்குங்காண் - தெள்ளுமொழி

மானேபசியெழுப்பும் வன்கரப்பனேக்கடற்குட்
டானே துரத்திவிடுஞ் சாற்று

(இ-ள்) தெள்ளியமொழியையுடையபெண்ணே வெள்ளாட்டுவெண்ணெய்-சுரரோகம்-பித்தநோய்-கரப்பான்ஆகிய இவைகளைநீக்கும் பசியைஉண்டாக்கு-மென்க, (௱சங)

ஒட்டைவெண்ணெய்க்குணம்,

கட்டழகுசெய்யுநற் காரிகையீர்கேண்மின்கள்
ஒட்டைவெண்ணெய்மந்த மொடுவாதங்-கிட்டவைக்கும்
நீரிழிவுக்கேற்கு நிறைபித்தம்போக்கிவிடும்
பாரறியச்சொன்னேம் பகுத்து.

(இ-ள்) ஒட்டைவெண்ணெய்பானது நல்லஅழகையும்-மந்தத்தையும் வாதரோகத்தையும் உண்டாக்கும் நீரிழிவையும்-பித்தகோபத்தையும் நீக்குமென்க. (௱சச)

வெண்ணெய்வகை-முற்றியது.

---

## நெய்வகை.

பசுவின்நெய்க்குணம்,

தாகமுழலைசுட்கஞ் சர்த்திபித்தம்வாயுபிர
மேகம்வயிற்றெரிவு விக்கலழல்-மாகாசங்
குன்மம்வறட்சி குடற்புரட்டலஸ்திசுட்கஞ்
சொன்மூலம்போக்குநிறைத் துப்பு,

(இ-ள்) பசுவினதுநெய்யானது தாகம்-உழலைப்பிணி அதிசுட்கரோகம் வாந்திபித்தாதிக்கம் வாதவிஷமம் விரணப்பிரமேகம்-வயிற்றிலெரிவு-பித்தவிக்கல் இருமல்வயிற்றுவலி சினைப்புகுடல்நெளிதல் அஸ்திசூம்பல் மூலரோகம்ஆகிய இவைகளைநீக்குமென்க, துப்புநெய் (௱சரு)

காராம்பசுநெய்க்குணம்,

காராம்பசுநெய்பாற் கண்ணுக்கொளியுண்டா
நீரார்விழிபுருவ நெற்றிசிரச்-சூரொழியும்
மெய்யிற்குழைவு மிளர்பொன்னிறமும்வரும்
நெய்யிலிதுமேலா நிகழ்த்து,

(இ-ள்) காராம்பசுநெய்யால் நேத்திரத்திற்கொளிவும் சரீரபுஷ்டியும் பொற்சாயலும்உண்டாம் கண்புருவம் நெற்றிசிரசு இவைகளைப்பற்றிய நோய்கள்விலகுமென்க, (௱சசு)

எருமைநெய்க்குணம்.

புத்திகெடுமெய்யழகு போதக்கெடுநயனம்
மெத்தவொளிமாறிவிடு மேதினியிற்-சத்தியமாம்
முறுவாதமொடுபித்த மாருக்கரப்பானுங்
கோதெருமைநெய்யருந்திற் கூறு.

(இ-ள்) எருமைநெய்யால் அறிவு-அழகு-கண்ணொளி-இவைகள்மத்தியமாம் வாதபித்ததோஷம் கரப்பான் இவையுண்டாமென்க, (௱௪௭)

வெள்ளாட்டுநெய்க்குணம்.

ஐயைப்போக்கும்வாதத் தாண்மையைக்கெடுத்துவிடும்
வெய்யைவளர்க்கும்விழியைத் துலக்கும்-வையகத்திற்
பத்தியத்திற்காகும பயமிலைவெள்ளாட்டின்னெய்
நித்தியங்கொண்டாலுங் கொண்ணீ

(இ-ள்) வெள்ளாட்டுநெய்யையுண்ணில் அதுசிலேஷ்மாதிக்கத்தையும் வாதகோபத்தையும்போக்கும் சரீரத்தைவளர்ப்பதுமன்றிக் கண்ணுக்கொளியையுண்டாக்கு பத்தியத்திற்குதவுமென்க. (௱௪௮)

செம்மறியாடு-பள்ளையாடு-இவைகளின்-நெய்க்குணம்.

செம்மறியின்னெய்யதனைத் தின்னமதுரமுமாங்
கொம்மைமுலைமாதரசே கூறக்கேளம்முறுங்காண்
பள்ளையின்னெய்பித்தொழிக்கும் பாருலகிலெல்லாருங்
கொள்ளத்தான்மந்தமுறுங் கூறு.

(இ-ள்) இளமைபொருந்திய தனங்களையுடையபெண்ணே மதுரமுள்ள செம்மறியாட்டுநெய்யால் கபநோயதிகரிக்கும் பள்ளையாட்டுநெய்பித்தநோயையொழிக்கும் மந்தமாமென்க. (௱௪௯)

கலப்புநெய்க்குணம்,

நெய்யுட்பலநெய்க்கு நீளசுக்கிலம்பெருகும்
வெய்யபசியுண்டாம் விடும்பித்த-மெய்யனலா
லுள்ளபித்தவெக்கைபோ மோங்குயிருந்தானிலைக்குங்
கொள்ளத்தெரியுங் குணம்.

(இ-ள்) எருமைநெய்முதலிய கலப்புநெய்யால் சுக்கிலம்பெருகும் தீபனமும்உண்டாம் பித்ததோஷமும்-தேகக்கொதிப்பலாகிய பித்தசுரமும்போம் உயிரைத்தாங்குகின்றவுடலும் புலக்குமென்க, . (௱௫௰)

பன்றி-உடும்பு-காக்கை-இவைகளின்நெய்க்குணம்.

பன்றிநெய்நீர்க்கடுப்பு பாயுமூலத்திரத்தங்
கன்றியாதக் கடுப்புமுதற்-றன்றியநோய்
போக்குமுடும்பின்னெய்போ மிரத்தம்போக்கிவிடுங்
காக்கைநெய்காமாலைக்காங் காண்.

(இ-ள்) பன்றிநெய்யானது மூத்திரக்கடுத்தலையும் ரத்தமூலக்கிராணியையும் வாதக்கடுப்புமுதலிய பிணிகளையுநீக்கும் உடும்பின்நெய் ரத்தக்கிராணியைநீக்கும் காக்கைநெய் காமாலைரோகத்திற்குதவும். (௱ருக)

ஆமை-ஓணான்-கரடி-இவைகளின்நெய்க்குணம்.

ஊணாமைநெய்மூல மோட்டுமோணானெய்க்குக்
காணாப்பிறவவிநோய் காணுவாம்-பூணார்
முலைபாய்கரடிநெய்க்கு முன்வாதமோடும்
புலியாருங்கால்வெடிப்பும் போம்.

(இ-ள்) ஆபரணங்களையணிந்த தனங்களையுடையபெண்ணே ஆமைநெய் ரத்தமூலம்நீக்கும ஓணான்நெய்யால் பின்னிசிவுதீரும்கரடிநெய்யால் வாதவேகமும் பாதவெடிப்பும் நீங்கும். (௱ருஉ)

ஆமணக்குநெய்க்குணம்.

ஆமணக்குநெய்பா வனலமுண்டாமியாவர்க்கும்
பூமணக்குமேனி புரிகுழலே-வாய்மணக்கக்
கொள்ளில்வயிறுவிடுங் கோரமுள்ளவாயுவறு
முள்ளில்வருகுன்மம்போ மோர்.

இதுவுமது.

அம்பொனிறமும்விந்து மாங்குடலினேற்றமறு
மைம்பொறிச்சூடெறிவு மாறுங்காண்-அம்புவியிற்
பரமணக்குமின்பமொழிப் பாவாய்நலஞ்செறிந்த
ஆமணக்கின்நெய்யுண் டறி.

(இ-ள்) புட்பங்கள்பரிமளிக்காநின்ற அழகுபொருந்திய கட்டப்பட்ட கூந்தலையும் யினியமொழியையுமுடைய பெண்ணே உஷ்ணதிக்கமுள்ள முத்துக்கொட்டைநெய்யை முறைமைப்படிக்குக் குடித்தால் விரோசனமாம் இதனால்-கோரவாதம்-குன்மம்-குடலேற்றம்-தேகம்கண்மூக்கு செவிவாய் இவைகளிலுண்டாகிற யெரிச்சலும்நீக்கும் பொன்னிறமும சாதுவிருத்தியுமுண்டாம். (௱ருக)

நே, சிற்றாமணக்குநெய்க்குணம்.

மருந்தினழலும் வளியான்மூலத்துட்
பொருந்துமழலுமறப் போக்குங்-குருந்திற்கு
நன்றாயெனவளர்க்குநாளுமழலைத்தனிக்குஞ்
சிற்றாமணக்கினெய்தான் றேர்

(இ-ள்) சிற்றாமணக்குநெய் பற்பலஔஷதங்களின் வெப்பங்களையும் வாயுவினால் மூலத்திலுண்டாகின்ற உஷணங்களையும்நீக்கும் அன்றியும் சிசுக்களைத்தாய் வளர்ப்பதுபோல உடலைவளர்ப்பிக்கும்-என்க, (௱௫௪)

எள்ளின்நெய்க்குணம்,

புத்திநயனக்குளிர்ச்சி பூரிப்புமெய்ப்புகளுஞ்
சத்துவங்காந்தி தனியிளமை-மெத்தவுண்டாங்
கண்ணோய்செவிநோய் கபாலஅழல்காசநோய்
புண்ணோயபோமெண்ணெய்பாற் போற்று.

(இ-ள்) எள்ளினதுநெய்யால் புத்திக்குத்தெளிவு விழிக்குக்குளிர்ச்சி மனமகிழ்ச்சி தேகபுஷ்டிபலம் தேஜசுவாலிபத்தன்மைஎன்னும் இவைகள் உண்டாகும் அன்றியும்நேத்திரநோய் கர்ணரோகம் கபாலஉஷ்ணம் காசம் விரணம்ஆகிய இவைகள்நீங்கும்என்க. (௱௫௫)

வாதுமைநெய்க்குணம்.

அழலெல்லாமாற்று மரியவுடம்பி
லழலைமிவிந்துவை யுண்டாக்கும்-வழுவழுப்பைப்
பூண்டகபமபோக்கும் பொறிகட்கொளிவுசெய்யு
நீண்டஅடப்பம்விதை நெய்

(இ-ள்) வாதுமைநெய் ஔஷதங்களினாலும் உழைப்பினாலுமுண்டாகித்த வெப்பங்களையும் கபதோஷத்தையுமநீக்கும் சமோஷ்ணங்சுக்கிலம் பஞ்சேந்திரிகளுக்கொளிவு இவைகளை உண்டாக்கும்என்க. (௱௫௬)

வேப்பநெய்க்குணம்,

வாதம்போம்பித்தமிகு மாறுக்கிரந்தியொடு
மேதுகரப்பான்சிரங்கு முன்னிசுவும்-ஓதுடலின்
நாப்பணுறுசுரமு நாடிசந்நியுந்தொலையும்
வேப்பநெய்யென்றோருகால் விள்.

(இ-ள்) வேப்பின்நெய்க்கு மகாவாதம்கிரந்தி கரப்பான் சிரங்குஆகிருஷ்ணஸ்தம்பனவாதம் சுரம்சந்நி இவைநீக்கும்பித்தமாம், (௱௫௭)

இலுப்பைநெய்க்குணம்,

கரப்பானடருங் கடிசிரங்குபுண்ணு
முரப்பாமிடிப் புல்லிபோடுங்-கரப்பான்

பாகுமொழிமாதே பலமுண்டாந்துற்பலம்
போகுமிலுப்பைநெய்க் கே,

(இ-ள்) கற்கண்டனைய மொழிக்காரிகையே இலுப்பைநெய்யால் கரப்பான் கடிவிஷம் சிரங்கு விரணம்வன்மை இவைஉண்டாம் சகனவாதமும் துர்பலமும்நீக்கும், (௱௫௮)

புன்னைநெய்க்குணம்.

புன்னையிலுண்டாநெய்யாற் பொங்குசந்நிபாதமுதன்
மன்னியுலைக்குங்கொடிய வாயுவுமுன்-பின்னிசிவும்
பொல்லாவலியினமும் புண்கிருமியுந்தொலையு
மல்லார்குழலே யறி,

(இ-ள்) இருண்டகூந்தலையுடையபெண்ணே புன்னைநெய்யால் சந்நிபாதம் மகாவாதரோகம் முன்னிசுவும்பின்னிசுவும் ஐவகைவலிவிரணம் கிருமிஆகிய இவைகள்நீங்கும்-என்க (௱௫௯)

புங்கின்நெய்க்குணம்,

அங்கமழகிடும்வெற்பாம் புங்கிநெய்தனக்குத்
தங்கம்போற்காந்தியது தானுண்டாந்-திங்கண்முக
மானேகரப்பான்போம் வன்சொறியுஞ்சிரங்குந்
தானேவிலகுமெனச் சாற்று,

(இ-ள்) சந்திரனைபொத்த முகத்தையும் மானையொத்தகண்களையுமுடையபெண்ணே மலைப்புங்கின்பருப்புநெய்க்கு அழகும் ஒளிவும்உண்டாம்கரப்பானும்சொறிசிரங்குமொழியும்என்க, (௱௬௦)

தேங்காயின்நெய்க்குணம்,

தேங்காயினெய்யதனாற் றீயால்வருபுண்போம்
பாங்காகக்கூந்தற் படர்ந்தேறு-நீங்காத
பல்லடியின்நோயும் படர்தாமரைசிரங்கு
மல்லறப்போமென் றறி,

(இ-ள்) தேங்காய்நெய்யினால் தீயால்வருவிரணம் தந்தமூலரோகம் படர்தாமரை சிரங்குஆகிய இவைகள்போம் தலையிர்வளரும், (௱௬௧)

கடுகுநெய்க்குணம்.

கோஷ்டநோய்பித்தரத்தங் குஷ்டமடல்வாதம்
வீட்டுகபமூல விரணமறும்-பூட்டின்
முடுகியெழுசூலையொடு மொத்தநோயேகுங்
கடுகின்னெய்பாலனலாங் காண்

(இ-ள்) சூடுள்ள்கடுகுநெய்யால்குன்மம்-ரத்தபித்தம-குஷ்டம்மாகவா தம்-க்ஷயம்-மூளைமூலவிரணம்-சூலைமுதலியபிணிகள்நீங்குமமெனக, ()

கோஷ்டமென்பதுவயிறு.

தே, நீராமுத்து நெய்க்குணம்.

பூசுகுடிவாதகணம் பொங்குகிரந்திபுடை
வீசுகுட்டஞ்சூலையிவை விட்டேகும்-தேசஞ்சச்
சீரடியையொத்தநடைத் தெய்வமடமயிலே
நீரடிமுத்தின்நெய்யை நீ

(இ-ள்) அழகுபொருந்திய அன்னத்தையொத்த நடையையும் தெய்வத்தன்மைபொருந்திய மயில்போலுஞ் சாயலையுமுடையபெண்ணே நீரடிமுத்து நெய்யைமேனிற்பூசினும் உள்ளுக்குடிக்கிலும் வாதகூட்டம் சிரங்கு சொறிபெருவியாதிசூலை இவைநீங்கும, (ஈகூங)

சேங்கொட்டைநெய்க்குணம்.

தர்துவும்புருணமுமாந் தத்துருபரங்கிப்புண்
கோதுபுரியிருமைக் குட்டிணங்கன்-காதுங்
கரிமுகியூரற் கரப்பான்திமிர்போ
மெரிமுகிநெய்யாலென் றெண்

(இ ள்) எரிமுகியென்னுஞ் சேங்கொட்டைநெய்யால் தடிப்புபரங்கிப் புண் கருங்குஷ்டம் வெள்ளைகுஷ்டம்முதலிய குஷ்டரோகங்கள் கருஞ்சொறி கரப்பான் திமிர்வாதம்ஆகிய இவைகள்போம் சுக்கிலவிருத்தியும் கருப்போற்பத்தியும்உண்டாம் புருணம்கருப்பம், (ஈகூச)

தே, முக்கூட்டுநெய் சேர்க்கும்விதி.

ஆவெண்ணேரண்டமெண்முத் தாமுத்தாவெண்ணெய்
மூவெண்கலாதி முறையேகேள்-மேவுநெறி
யொன்றிரண்டுமூன்றாகு மொன்றிரண்டுமூன்றாகு
மொன்றிரண்டுமூன்றாகு மூற்று.

(இ-ள்) வாதமுதலியமூன்றுதோஷக்குக்கூட்ட வேண்டியமுறைமை (வாததேகிகளுக்குப்பசுவின்னெய்(ங)பங்கு-எண்ணெய்(உ) பங்குஆமணக்குநெய்(ங)பங்குபித்ததேகிகளுக்கு யெண்ணெய் (க) பங்குஆமணக்குநெய்(உ)பசுவின்நெய் (ங) பங்குசிலேஷ்பதேகிகளுக்கு ஆமணக்குநெய்(க)பங்குபசுவின்னெய்(உ)பங்குயெண்ணெய் மூனுபங்கு இவ்வாறுகூட்டவேண்டுமென்க, (ஈகூரு)

தே, முக்கூட்டுநெய்க்குணம்,

நாவுநெய்க்கையநுவலா நெய்க்குப்பித்தம்
மேவுமுத்துநெய்க்கனிலம் வீறுவாம்பூவுலகின்

மூன்றுமளவாய்க்காச்சி மூழ்கிலந்தப்பிணியா
லூன்றுநோய்யியாவும்போ மோர்.

(இ-ள்) எள்ளின்நெய் பசுநெய் ஆமணக்குநெய் இவைச்சுமுறையேக ப் பித்தவாதகோபங்கள்மீறாமல் தத்தம்நிலையிற் பொருந்துவனவாம்ஆ தலால் அம்மூவிதநெய்களையும் கிரமப்படிக் கூட்டிக்காய்ச்சி ஸ்நானஞ் செய்யில் அத்திரிதோஷங்களால் வருஞ்சகலரோகமும்நீங்கும், (ராசுசு)

ஐங்கூட்டுநெய்க்குணம்.

அஞ்செண்ணெய்யைக்காணி லாலித்தபின்னிசிவுந்
தஞ்சமெனவாய்வுந் தணியுங்காண்-பஞ்சாய்ப்
பறக்குமேசந்நிசுரம் பாரிலையச்சேஷ்டை
யிறக்குமேமென்று மியம்பு.

(இ-ள்) ஆமணக்கு யெள்ளுவேம்பு புன்னைபுங்கு இவற்றின்நெய்களை யொன்றறக்கலந்து தயிலமாகச்செய்து உபயோகிக்கில் பின்னிசுவுமகாவா தம் சந்நிபாதசுரம் கபதோஷம்ஆகியஇவை நீங்கும்மென்க, (ராசுஎ)

நெய்வகை முற்றியது

---

## சாணவகை,

பசுவினதுசாணத்தின்குணம்

ஆவினதுசாண மடிபடுவீக்கம்முதிரந்
தாவிவருகிருமி சார்ந்தகப-மேவுசுரந்
தங்குந்தாகம்போக்குஞ் சாற்றின்மெய்ச்சுத்தியப்பால்
தெங்கின்பாலுக்கொக்குந் தேர,

(இ-ள்) பசுஞ்சாணம் கல்முதலியவைகளால் அடிப்பட்டவீக்கம் ஒழு குகின்றஉதிரம கிருமிரோகம் சுபசுரதாகம் இவைகளைநீக்கும் தேகசு த்தியுண்டாம் இதுதேங்கின்பாலை ஒக்குமென்க (ராசுஅ)

எருமைச்சாணத்தின்குணம்,

வயிற்றுப்சமிரத்த வாந்திகாமாலை
நியத்தபெரும்பாடு புண்ணீக்கும்-வியத்த
கருமைச்சாரங்கவிழிக் காரிகையேகாளும்
யெருமைச்சாணத்தி னியல்பு,

(இ-ள்) மான்போலுங்கண்களையுடைய மையணிந்தபெண்ணே யெ ருமைசாணத்தால் வயிற்றுபொருமல் ரத்தவாந்தி காமாலைபெரும்பாடு புண் ஆகிய இவைகள்நீக்கும், (ராசுகூ)

வெள்ளாட்டுப்புழுக்கையின்குணம்,

உருக்கைகீருக்கு முதரநோய்போக்குந்
திருக்கானவாதநோய் தீர்க்கு-நெருக்கான
தோட்டுக்குழையணங்கே தொல்புவியோர்சொல்லிடுவெள்
ளாட்டுப்புழுக்கை யது,

(இ-ள்) காயாபரணத்தையணிந்த வரமகளிரையொத்த பெண்ணே வெள்ளாட்டுப்புழுக்கை உருக்கை அல்லது எஃகுஎன்னும்லோகத்தை பஸ்மிக்கும் மகோதரத்தையும் வாதநோயையும் நீக்குமென்க, ()

சாணவகைமுற்றியது,

---

## மூத்திரவகை.

சிறுநீரின் குணம்,

காணுக்கடிபோங் கதித்தெழுந்தவீக்கமது
காணுதுகாயசித்தி கைக்குளாம்-பூணே
பதித்தகொங்கைமாதே பகர்மாந்தருக்கு
துதித்தசிறுநீருக்கென்றோர்,

தே, இதுவுமது-விருத்தம்,

அங்கியுவருநைசிறுநீர் வாசம்போக்கு
மதைப்பருகிலிருமலிரைப் பாத்தநோயு
பொங்கிவருமேக விகாரங்கிரந்திப்
பண்களும்போமதைநசியம் புரியிற்கூடும்
தங்கியதோர்பஸ்மாரஞ் சந்நியாசஞ்
சருவவிடம்விடசுரமுந் தவறுண்டோடும்
மிங்கதனைத்தொட்டலம்பிற் கண்முகங்கா
திவ்விடத்துளெழும்விரண மிரியுங்காணே,

(இ-ள்) மாந்தர்களின் ஜடராக்கினி யவர்ச்சுவையையுடைய சிறுநீரினால் கணுக்கடிவிஷமும் சோபையும் வாததோஷமுந்நீரும் அதைமே றைபடிப்பருகில்-இருமல் சுவாசம்-அசிர்க்கரம்-மேகமூத்திரம் கிரந்தி விரணம்-ஆகிய இவைகள்போம் நசியஞ்செய்தால் சுரம் அபஸ்மாரம் சந்நியாசம்-சருவவிஷம் விஷசுரம் ஆகிய இவைகள் நீங்கும் அந்த நீரால் கழுவினால் விழிமுகம்செவி இவ்விடங்களில் பிறக்கின்ற கட்டிகள் விலகும் அன்றியும் காயசித்திக்கு உதவுமென்க, (௱௭௩)

தே, பசுமூத்திரக்குணம்-வெண்பா,

விடபாண்டுசோபைபல வீக்கஞ்சகல
விடமுதிரமாலையென மெத்தப்-படவிதனிற்

பேசலக்கணேடுதெந்தப் பீடையுமகன்றிடுமே
கோசலத்தாலாரணங்கே கூறு,

(இ-ள்) கோசலத்தால் விஷபாண்டு சோபை பற்பலவீக்கம் சகலவிஷம் அசிர்க்கு காமாலை பன்னோய் முதலியபிணிகள்போமென்க. ()

எருமைமூத்திரக்குணம்.

உதரநோய்பாண்டோ டிரத்தகாமாலை
விதிரவருசோபை மேகம்-முதிர்க்கிருமி
யாகியநோயேகுமட லெருமை மூத்திரத்தால்
மீதிலனலுண்டாகு மே,

(இ-ள்) எருமைமூத்திரத்தால் பெருவயிறு பாண்டுகாமாலை சோபை பிரமேகம்-கிருமி முதலியநோய்களும்போம் இதிற்சூடுண்டாம், ()

வெள்ளாட்டு மூத்திரக்குணம்,

சோபையொடுபாண்டுவைத் துரத்தும்பலவீக்க
தாகமகற்றும்முதிரத்தைப் போக்கும்-கோபமுடன்
உள்ளாட்டுத்துர்ச்சதையோ டோங்குதரநோயகற்றும்
வெள்ளாட்டுமூத்திரம் விரைந்து,

(இ-ள்) வெள்ளாட்டுமூத்திரம் சோபை பாண்டுபற்பல வீக்கத்தின் எரிச்சல் ரத்தகபம் துர்மாமிசம் மகோதரம் இவைகளைநீக்கும், ()

யானைமூத்திரக்குணம்,

அதிதூலஞ்சோபை யனிலங்கிருமி
யெதிர்விடங்கருங்கரப்பானேகும்-அதிராத
யானையெனப்பலமு மங்கபுஷ்டியுங்கொடுக்கும்
யானைவிடுமூத் திரம்,

(இ-ள்) யானை மூத்திரத்தால் அதிதூலநோய் சோபை வாயுவு கிருமிவிஷம் கருங்கரப்பான் இவைபோம் ஆனையைப்போலவன்மையும் சரீரபுஷ்டியுமாம், (௱எஎ)

குதிரைமூத்திரக்குணம்,

பாதவன்மீகம் படர்தடிப்புநீள்கிருமி
வாதமொடுகபமு மாறுங்காணேதரிய
பொற்குவட்டையொத்தமுலைப் பூவையரோகூடுமுண்டா
நற்குதிரைமூத்திரத்தினல்,

(இ-ள்) பொன்மலையையொத்த கொங்கைகளையுடையமாதே கூடுள் குதிரைமூத்திரத்தால் பாதப்புற்றுகண்டுகெண்டாகத்தடித்தல்கிருமிரோகம் வாதநோய் கபதோஷம்இவைபோம், (௱எஅ)

ஓட்டை மூத்திரக்குணம்,

மேலையூருந்தடிப்பு வீசியெழுஞ்சந்நி
சூலைபுதாவாத்தந் தொடர்குன்மஞ்-சீலநனே
மண்டலகுஷ்டேகும-வரும்ஓட்டை மூத்திரத்தா
லுண்டனலமாதே யுரை,

(இ-ள்) வெப்பத்தையுடைய ஓட்டை மூத்திரத்தினால் சரீரத்திலோடிப் புடைக்கின்றதடிப்பு சந்நிபாதம் சூலைபிடிப்பு உதாவர்த்தவாதம் வயிற்றுவலி மண்டலகுஷ்டம் ஆகிய இவைகள் நீங்குமென்க, (௱எக)

கழுதை மூத்திரக்குணம்

※ வேசரிநீரால்வெப்பம வீரியநஷ்டங்குஷ்டங்
காசமிளைப்புவிஷங் காற்கிருமிவீசிடுபுண்
மேகமபஸ்மாரம வெடியச்சுரங்கிரந்தி
போகுமின்னுஞ் சேய்ப்பிணியும்போம,

(இ-ள்) கழுதை மூத்திரத்தால் உஷ்ணம-தாதுநஷ்டம-அவதம்பாகுஷ்டம காசம இளைப்பு சில்விஷம காலகளுள்ளகிருமி விரணம தந்திமேகம அபஸ்மாரம் ஜிக்வாகண்டகரோகம கிரந்தி பாலரோகங்கள் ஆகிய இவைபோம※வேசரி-கழுதை, (௱அ௰)

மூத்திரவகை முற்றியது,

---

## மதுரவகை,

செங்கரும்பு-ரசதாளிக்கரும்பு-புல்லகண்டங்கரும்பு,

இவைகளின் குணம-விருத்தம்,

செங்கரும்பதனற்சாறு தீர்த்திடும்பித்தமெல்லாம
அங்குறுமிரசதாளிக் ககன்றிடுந்தாகவேகம
மங்குறுப்பல்லகண்டம வாதகோபத்தைப்போக்குங்
கங்குல்வார்குழலினளே காரியமறிந்துகூறே,

(இ-ள்) இரண்டு நீட்சியுற்ற கூந்தலையுடைய பெண்ணே செங்கரும்பின் ரசம பித்ததோஷத்தைநீக்கும ரசதாளிக்கரும்பினது சாற்றினால் தாகவெப்பம்போம புல்லகண்டம என்கிறகருப்பஞ்சாறனது வாததோஷத்தை நீக்குமென்க, (௱அக)

நாணற்கரும்பின் குணம்-வெண்பா,

வாயுபித்தம்வாந்திநீர் மாறுமதிதால
நோயுளெழும்வயிற்றி னோய்கலங்கு-மோயாத
ஈளையொடுபாண்டு மெதிராதடங்கிநிற்கு
நாணநாணற்கரும்பினால்,

(இ-ள்) காணற்கருமபின் ரசத்தினால்வாதபயித்தியம வமனம அருசி அதிதூலம வயிற்றிலெழுநோய்-இரைப்பு-பாண்டு இவை மீறுமற்சாந்தமாம், (௫௮௨)

கருமபின்சாறு-வெல்லம-இவைகளின் மிதாமிதகுணம

கருமபிரதமெத்தவுண்டாற் காணுங்கபநோய்
விருமபிமெல்லமெத்தவுண்டால் மேகந்-தருமதுநீ
நுண்டாமவைமிகமா யுண்டால்மேகமபித்தம
மிண்டாமற்சாந்தமுறுமவிள்,

(இ-ள்) கருமபின்ரசத்தை மிகவுங்குடிக்கில் சிலேஷ்மரோ யுண்டாம வெல்லத்தையதிகமாகத்தின்றால் மதுமேகங்காணும அதுகளைமிதமாகப்புசித்தால் பிரமேகம பித்தகோபம-இவைவீறுமல்அடங்கும, ()

தேன்பாகின்குணம,

அலைலாலெழுந்த வருசிசர்த்திதாழும
புலைலாருங்கோழையது பொங்குங்-கனலாருந்
தேன்பாகுக்கென்றுமதைச் சேரோஷதியதனால்
காஞ்பாவுநோய்க்கூட்டங் காண்,

(இ-ள்) தேன்பாகினால் பித்தஅரோசகம வாந்திஇவைநீங்கும நெஞ்சிற்கோழைக்கட்டுண்டாம இதைஒஷதிகளிற்சேர்த்து ஔஷதமாக உபயோகித்தால் கபதோஷமுதலிய நோய்கள்விலகுமென்க, (௫௮௪)

மணப்பாகின்குணம,

பித்தவருசிகெடும் பேசிலற்பவாதமறுந்
தத்தனலமமெள்ளவுள்ளே தாவிவரு-மெத்த
வணப்பாகையொத்த மொழிமாதேமுறுகா
மணப்பாகுக்கென்றே மதி,

(இ-ள்) பாகைநிகர்த்தமொழியையுடையபெண்ணே மணப்பாகினால் பயித்தியஅரோசகமும அற்பவாதமுமநீங்கும அன்றியுமசரீரத்தில் உஷ்ணாமபமா-மென்க, (௫௮௫)

முதிர்ந்தபாகு-பழயவெல்லப்பாகு-இவைகளின்குணம்.

முதிர்பாகுக்கள்ளெரிவு மூத்திரக்கட்டோடே
யதிர்வாதமாகிய நோயாகுந்-துதிபழைய
வெல்லப்பாகுக்கருசி வீறுபித்தம்பேதிவாய்
வில்லைப்பாமாதேயினி.

(இ-ள்) முறுகியவெல்லப்பாகினால் வயிற்றிலெறிச்சலும் வாதகுண்டலி மூத்திரமும் கம்பவாதமும்உண்டாம் பழையவெல்லப்பாகுக்கு அரோசிமை பித்தாதிக்கம் அதிசாரம் வாதகோபம் இவைநீங்கும், ()

நல்லவெல்லத்தின்குணம்,

குன்மபித்தம்போக்குமதி கோழைதனையுண்டாக்குந்
துன்மலத்துட்கீடத்தைத் தோன்றுவிக்கும்-நன்மைபோல்
வெல்லமதுநீரை விளைவிக்குமாமதுர
மெல்லமெனநாளும் விளம்பு.

(இ-ள்) நல்லவெல்லம பித்தகுன்மத்தைநீக்கும் நெஞ்சிற்கபக்கட்டுமலாசயக்கிருமி மதுமேகம் இவைகளையுண்டாக்குமென்க, (௱அஎ)

தே, உண்டைவெல்லத்தின்குணம்,

சூலமேகங்குன்ம முட்சூலைவித்துவுமாங்
காலடர்குமட்டல்பித்தங் காசமும்போம்-நீலவரிக்
கெண்டைவிழியாய் கெளுமியநாணற்கன்ன
லுண்டைவெல்லமிக்குண்பார்க் கோது,

(இ-ள்) கறுத்துசெவ்வரிபொருந்திய மகரநோக்கியே நாணற்கரும்புஞ்சாற்றாலாகிய உண்டைவெல்லத்துக்கு மூலமூளை மதுப்பிரமேகம் வயிற்றுநோய் பக்கநோய் சுக்கிலவிருத்தி இவையுண்டாம் வாதஅரோசகமும் பித்தமும இருமலும்போம். (௱அஅ)

தெங்கின்வெல்லம்-பனைவெல்லம்-இவைகளின்குணம்.

தெங்கின்வெல்லத்தாற் செரியாக்குணஞ்சோபை
யங்கமூறுநீரு மதிகரிக்குந்-தங்குபனை
வெல்லத்தால்வாதபித்தம் வீறுசபஞ்சந்நிநோய்
வல்லருசிகுன்மமறு மால்

(இ-ள்) தெங்கின்வெல்லத்தால் செரியாமந்தம்வீக்கம் நீரேற்றம் இவையதிகரிக்கும் பனைவெல்லத்தால் வாதபித்ததொந்தம் சிலேஷ்மதோஷம சந்நியாதம் அரோசகம் வாதகுன்மம் இவைநீங்கும், (௱அகூ)

தே, ஈச்சம்வெல்லத்தின்குணம்,

நீடுபேரீச்சினயிர் நின்மலப்புத்திக்குமந்த
மோடுகபவாத முட்சீத-மாடுமதி
பித்தமுடனே பெருந்திமிர்வாய்யாதிகளை
யித்தரையிலுண்டாக்கு மெண்.

(இ-ள்) பேரீச்சம்வெல்லம் புத்திமந்தம் சிலேஷ்மவாதம் உள்ளிற்சீதளம் பித்தகோபம் திமிர்வாயு இவையுண்டாக்கும அயிர்வெல்லம், ()

சருக்கரையின் குணம்

அருந்துமருந்திற் கனுபானமாகப்
பொருந்துமடல்வாந்திபித்தம் போக்கும்-வந்தருசி
நீக்குமதிகபத்தைநீன்று மகிழ்ச்சியையுண்
டாக்குநறுஞ் சருக்கரை

(இ-ள்) சருக்கரையானது மருந்துகளுக்கு அனுபானமா யிருப்பதுந் தவிரவாந்திபித்தம் அரோசகத்தையும்போக்கும் கெட்டிப்பட்ட கபத்தையிளக்கி மகிழ்ச்சியைத்தரும், (ரூகக)

சீனிச்சருக்கரையின்குணம்.

சீனிச்சருக்கரைக்குத் திராதவன்சுரமுங்
கூனிக்கும்வாதத்தின் கூட்டுறவு-மேனிற்கும்
வாந்தியொடுகிருமி மாறாதவிக்கலுமே
போந்திசையைவிட்டுப் புரண்டு.

(இ-ள்) சீனிச்சருக்கரைக்கு வாதசுரம் வக்கிரிக்கின்ற வாதநோய்கள் வாந்தி கிருமிரோகம நீங்காதவிக்கல்ஆகிய இவைபோமென்க. (ரூகஉ)

கற்கண்டின்குணம்,

ஈறின்தடிப்பு மிருமலும்பல்வாந்திகளுஞ்
சீறுக்டமூட்டினமுஞ் சேராதே-தேறியநற்
சொற்கண்டிளங்குயில்கள் சூழுமடவனமே
கற்கண்டெனவுரைக்குங்கால்,

(இ-ள்) இனியசொற்கேட்டிளங் குயில்கள்சூழும் இளமைபொருந்திய அன்னத்தைநிகர்த்த நடையையுடையமாதே கற்கண்டினால் பல்லரணைகாசம் பற்பலவாந்தி அதிகரித்தசிலேஷ்மதோஷம் வெப்பம் ஆகிய இவைகள்நீங்குமென்க, (ரூகங)

தே. தெங்கின்கற்கண்டின்குணம்

நெஞ்சிற்றிமிருஞ் செங்நீரிலமூக்கும்புடைய
மஞ்சுகபவாதமொடு வாதமுமே-விஞ்சுமிளந்
தொங்கினதேகர்க்கயர்வுந தூயபுத்திமாத்முமாந்
தெங்கினதுகண்டாற் றெளி,

(இ-ள்) தெங்கின்கற்கண்டினால் தொண்டைக்குள் திமிர்உதிரத்தில் மூக்கு சொறிமேகம் சிலேஷ்மவாததொந்தம் வாதம இளைத்ததேகிகளுக்கு ஆயாசம மந்தபுத்திஆகிய இவையுண்டாமென்க, (ரூகச)

மனங்கற்கண்டின்குணம,

மேகவனலுமிக வீசும்சூரிகையா
லாகமுறுகனலு மாறுங்காண்-மோனத்திற்
றங்கிவருநீர்ச்சுருக்குந் தாகவெப்பமுந்தணியு
மிங்குபுனங்கற்கண்டுக் கே

(இ-ள்) புனங்கற்கண்டுக்கு மேககுரம் மசூரிகையின்வெப்பம் தங்கிவரும் நீர்ச்சுருக்கு உஷ்ணதாகம் இவைநீங்குமென்க, (ரூகரு)

தே, யீச்சங்கற்கண்டின்குணம்.

அரியமருந்தையெலா மன்றேமுறிக்குந்
திரிவிதகபத்தைவரச் செய்யுந்-தெரிவரிய
பன்னோய்விளைக்கும் பகரறிவைமங்குவிக்கு
மன்னோய்வீச்சங்கண் டிசை

(இ-ள்) யீச்சங்கற்கண்டு அவுஷதங்களையும் அறிவையுங்கெடுக்கும் காச்சுவாச க்ஷயங்களையு கேரணற்கரிய பலபிணிகளையுந்தரும், ()

தே, தேனில்உண்டாகுங் கற்கண்டின்குணம்,

தேனிற்பிறந்த செழுங்கண்டாற்கண் விழிக்கு
ளூனிற்படர்படல மோடிடுங்காண்-கானத்திற்
காகுஞ்சுரமாகு மண்டுமபசிகபங்கா
லேகுஞ்சுரமேகு மெண்,

(இ-ள்) தேனிலுண்டாகுங்கற்கண்டினுல் கண்ணிற்படருகின்ற துர்மாமிசபடலம உதராக்கினி கபநோய்-வாதநோய்-சுரரோகம் இவைநீங்கும இசைப்பாட்டுக்குரிய குரற்றொனியுண்டாமென்க, (௱கஎ)

மதுரவகை-முற்றியது.

---

## மதுவின்வகை.

தெங்கின்மதுக்குணம்.

நாதவிந்தூறு நாளிர்பாண்டொடுசோபை
வாதபித்தங்கிராணி வன்கரப்பான்-பேதியிவை
பொங்கியதிகரிக்கும் புத்திகெடுமேகமுண்டாந்
தெங்கின்மதுவிற்கென்றே செப்பு,

(இ-ள்) தென்னங்கள்ளுக்குச் சோணிதசுக்கிலப்பெருக்கம் பாண்டுரோகம சோபைவாதபித்ததொந்தம் ரத்தக்கழிச்சல் கரப்பான் பேதிபிரமேகம ஆகியஇவைகள்உண்டாகும் அறிவுங்கெடுமென்க, (௱கஅ)

பனையின்மதுக்குணம்.

விந்துதிரமூறுமதி வெப்புடனேதாகம்போம்
பந்தமாந்தாதுவுமோ பாரிக்கு-முந்துபித்தந்
தோன்றும்பாஷாணங்கள் சுத்தியுமாந்தோணாமின்னே
யென்றபனை மதுவிற்கே

(இ-ள்) மயில்போலுஞ்சாயலையுடையபெண்ணே பனங்கள்ளுக்குச் சுக்கில் சோணிதவிருத்தி சப்ததாதுகளுக்கும உறுதிபித்தாதிக்கம் இவையுண்டாகும் தேகஉஷ்ணமும விதாகமுமநீங்கும இதில்பாஷாணவகைகள் சுத்தியாகும், (௱௯௯)

யிச்சமதுக்குணம்,

வெப்பகலுமெய்குளிரு மேகக்கிரிச்சரம்போஞ்
செப்பருசிபோமபித்தஞ் சேருங்கா-ணெப்படியும்
பூச்சுதிமிருண்டாம பொங்கறிவுங்கெட்டிடுமே
யீச்சமதுவ தனுக்கே

(இ-ள்) யீச்சங்கள்ளு உள் அழலைபிரமேகம் மூத்திரக்கிரிச்சரம அரோசகம் புத்திஆகியஇவைநீங்கும் சரீரத்தில்குளிர்ச்சி பித்தகோபம் வீக்கம்திமிர்வாயுவுஆகிய இவைகள்உண்டாகுமென்க, (உ௱)

முந்திரிகையின்மதுக்குணம்,

முந்திரிகைக்கள்ளுக்கு மூடுதிரிதோஷமபோம
விந்துறுமிரத்தமுறும் வெப்பகலும-இந்தவகைக்
கள்ளெல்லாங்காமமுறுங் காமமற்றோருண்டக்கால்
விள்ளரிதோஷமிலை மெய்,

(இ-ள்) முந்திரிகை மதுவென்கிற திராட்சிப்பழச் சாராயத்திற்கு வாதபித்தகபதோஷங்களும தேகஅழற்சியுமநீங்கும விந்துவும ரத்ததாதுவுமவிருத்தியாம இந்தமதுவருக்கங்களெல்லாம காமத்தையுண்டாக்குமஆதலால் காமமற்றபெரியோர் அருந்தில்குற்றமில்லை-என்க, (உ௱க)

அரிசி-வேலமபட்டைதெங்கு இவைகளின்மதுக்குணம,

சாலிமதுவாதத் தாற்சளிசேருண்டாக்கும
வேலின்மதுபித்தமழைக்கும வேண்டாவாஞ்-சாலவுயர்
தெங்கின்மதுசீதந் திரிதோஷமுண்டாக்கு
மங்குவிடுகள்குலையே யாம,

(இ-ள்) அரிசியிலிறக்கிய சாராயமவிருத்தி வாதகபத்தையும நீரேற்றத்தையுமஉண்டாக்கும வேலமபட்டைச்சாராயம பித்தகோபத்தைவருவிக்கும உயர்ந்ததென்னங்கள்ளானது குளிர்ச்சியையும வாதபித்தகபதோஷங்களையும உண்டாக்கும-என்க, (உ௱உ)

அத்திமரத்தின் மதுக்குணம்.

அத்திமேகஞ்சூட திகமயக்கந் தாகமும்போ
மத்திமரவேரி லுண்டா மதுவில்-நித்தியமுஞ்
சீனியேனும்பேயன் செங்கனியேனுங்கலந்தே
பானுவுதயங்குடித்துப் பார்.

(இ-ள்) அத்திமரவேரிலியங்கியகள்ளில் சீனிச்சருக்கரையாவதுபேயன் வாழைக்கனியாவதுகலந்து தினமும் சூரியோதயகாலத்தி லுண்டுவர அஸ்திமேகம்-உட்சூடு-மூர்ச்சை-தாகம்-இவைநீங்கும். (உ௱ந)

மதுவின்வகை முற்றியது.

—(*)—

## தேன் வகை,

மலைத்தேனின் குணம்.

ஐயிருமல்விளைவிக்க லக்கிப்புண் வெப்புடல்நோய்
பையவொழியும்-பசியுமுறும்-வையகத்தி
லெண்ணுமிசையாமருந்திற் கேற்றவனுபான
கண்ணுமலைத்தே னென்றில்.

(இ-ள்) மலையிலிருக்குந் திஞ்சித்தேனினால் சிலேஷ்மகாசம் சுவாசம் விக்கல் கண்விரணம்சுரம் தேகக்கடுப்பு இவை நீங்கும்தீபனமும் நல்ல தொனியுண்டாம் இது ஔஷத அனுபானங்களுக்குதவும், (உ௱ச)

கொம்புத்தேனின்குணம்,

வாதபித்தவையத்தை மாற்றுமுளமாந்ததனைக்
காதமெனவோடக் கடியுங்காண்-பூதரமாம்
வம்புமுலைமாதே வருமருசிநீக்கிவிடுங்
கொமபுத்தேனன்றாகுங் கூறு.

(இ-ள்) வாரிறுக்கியமலையனைய கொங்கைகளையுடைய பெண்ணேமாமரம் முதலிய மரக்கொம்புகளிற் கட்டுகின்றதேன் திரிதோஷங்களையும் உளமாந்தையையும் அரோசகத்தையும்நீக்கும், (உ௱ரு)

தே, மரபொந்துத்தேனின் குணம்,

பசிவெப்பாம்வாந்திமந்தம் பல்விக்கல்வெய்ய
ருசிமுக்கபந்தூல ரோகம்-நசிவகலாக்
கொந்துத்தேன்பாடுங் குழலணங்கேகாவின்மரப்
பொந்துத்தேனுண்டாயிற் போம்.

(இ-ள்) அன்புநீங்காத வாசனைபொருந்திய வண்டுகள்பாடுங் கூந்தலையுடையபெண்ணே மரப்பொந்துத்தேனினால்ஜடராக்கினியும்உஷ்ணமும் உண்டாம் வமனம் மந்தாக்கினி பலவிதவிக்கல் ரோகம அரோசகம் இருமல்சுவாசம் க்ஷயம் அதிதூலரோகம் ஆகிய இனவ்கள்போம். ()

புற்றுத்தேனின்குணம்.

கொப்பணியுமாதே குவலயத்துளெல்லார்க்கு
மொப்பகின்றவைய மொழிக்குங்காண்-கொப்பளிக்குங்
காச்சுவாசம்வாந்தி கண்ணிலெழுநோய்களறும்
வீசுபுற்றுத்தேனுக்குமெய்,

(இ-ள்) கொப்பென்னுங் காதணியையுடையபெண்ணே புற்றில்கட்டுகின்றதேனுக்கு கபதோஷம் இருமல் ஈளை வாந்திநேத்திரரோகம் ஆகிய இவைகள்நீங்கும், (உ௱ஏ)

மனைத்தேனின்குணம்,

புண்ணும்புரையும்போம் போகாக்கரப்பனது
மெண்ணரியதீபனமா மேந்திழையே-கண்ணுகளிற்
பூச்சிபுழுவெட்டுகபம் பொல்லாவிருமலறும்
பேச்சின்மனைத்தேனுக்குப் பேசு.

(இ-ள்) வீடுகளிற்கட்டுகின்ற தேனுக்கு விரணம் புரையோடல் கரப்பான் நேத்திரவிரணக்கிருமி புழுவெட்டு சிலேஷ்மகோபம் காசம் ஆகிய இவைகள் நீங்கும் ஜடராக்கினியுண்டாகுமென்க, (உ௱அ)

தே, புதியதேனின்குணம்.

ஆயுளுடனுட்டின மரோசியகக்கபமு
மேயவழகும் வளர்ந்தேறுங்-காண் தூய
மதியமெனும்வதன மாதரசேநாளும்
புதியநறுந்தேனாற் புகல்,

(இ-ள்) பூரணசந்திரனென்றுரைக்கும் வதனத்தையுடைய மாதரசே புதுத்தேனினால் நிறை ஆயுளும் சரீரவெப்பமும் தேஜசும் உண்டாகும் இதுமிகவுஞ்சேர்ந்தால் அருசியும் நெஞ்சிற்கபமும்விளையும்,(உ௱சு)

தே, பழையதேனின்குணம்.

வாதப்பெருக்கை வயிற்றெரிவைத்தந்துறையைச்
சேதப்படுத்துமின்னுஞ் செப்பவோ-மாதரசே
சத்திப்புறுமரசந் தன்னைததூண்டும்புளிப்புத்
தித்திப்புறும்பழைய தேன்,

(இ-ள்) பெண்களுக்குள் நாயகம்போல்பவளே புளிப்பும் இனிப்புங் கலந்த சுவையையுடைய பழையதேனானது வாதரோகக் கூட்டத்தையும் வயிற்றெரிச்சலையும் வாதமூலரோகத்தையும் விளைக்கும் மருந்தினது நற்குணங்களைக்கெடுக்கும். (உ௱ய)

தேனின்வகைமுற்றியது.

## (மரவகை.)

சந்தனமரத்தின் குணம்,

நற்சந்தனமரத்தா னல்லறிவுமின்பமெழிற்
பொற்செந்திருவருளும் பூமிதத்துண்-மெச்சுஞ்
சருமவழகுந் தனிமோகமுமாம
பிரமிநோயேகும் பிறழ்ந்து.

(இ-ள்) சாதிச்சந்தனமரக்கட்டையைக் கிரமப்படி யனுபவிப்பவர்கட்கு நல்லவிவேகமும் மனமகிழ்ச்சியும் லட்சுமிவிலாசமும் சருமதாது ஒளிவும் மாதரிடத்திச்சையு உண்டாகும் கிழ்ப்பிரமியம நீங்கும், ()

தேவதாருவின்குணம்-இதுதேவதாரம் எனமருவியது.

தேவதருக்குணந்தான் சேர்த்துவளாபீநசத்தை
காவகத்திலோட்டுங் காப்பலவேமாவலர்கள்
சொல்லும்புராண சுரமோடுநீரேற்றத்தை
வெல்லுமனற்றணிக்கும் விள்,

(இ-ள்) தேவதாருக்கட்டை நாசிகாரோகம் பழையசுரம் சலதோஷம் சரீரவெப்பம் ஆகிய இவைகளை நீக்குமென்க. (௨௰௨)

சரளதேவதாருவின்குணம்,

சாளமெனுந்தேவ விஞற்தாருகண்ணீர்
விரளமாகுங்கபமும் வீடுந்-தாளவெயிற்
றுமயஞ்சுவாசம்வலி யண்ணுதங்கம்பக்காற்
போவயச்சுரத்துரமும் போம்,

(இ-ள்) சாளதேவதாருக்கட்டையினல் கபஸ்ராவரோகம் சிலேஷ்மதோஷ தந்தநோய் இரைப்பு ஜவகைவலி கர்ணநாதரோகம் நடுக்குவாதம் கபச்சுரம் இவைகள் நீங்குமென்க*அள் என்பதுகாது. (௨௰௩)

அகில்மரத்தின் குணம்,

தளர்ந்தவிருத்தருக்காந் தக்கமணத்தா
லுளைந்தசுரமுழுது மோடும்-வளந்திகழு
மானேயகிற்புகைக்கு வாந்தியுரோசகம்போந்
தானேதளர்ச்சியருஞ் சாற்று,

(இ-ள்) வண்மைதிகழும்பெண்ணே அகில்கட்டைச்சந்தனலேபனம் விருத்தர்களுடைய தளர்ந்ததேகத்தையும் இறுக்கும் இதன்வாசனையால் சிற்சிலசுரம் நீங்கும் புகையால் வாந்தியும் அருசியும் அயர்ச்சியும் நீங்குமென்க. (௨௰௪)

அகருமரத்தின்குணம்,

காசியடைப்பு நவிரவிடிதாளுநோய்
வீசுநமைப்புடைகள் விட்டேகும்-வேசிற்
சுகருமயங்குந் துணைமுலையாய்நல்ல
அகருமரத்தா லறி.

(இ-ள்) சுகருமயக்குந் தனங்களையுடையபெண்ணே அகருக்கட்டையினால் பீநசம்கலேக்குத்து விவர்தாசியவாதம் தினவுள்ளபுடைகள் ஆகிய இவைகள் போகுமென்க, (உ௰ரு)

சரக்கொன்றைமரத்தின்குணம்,

குட்டங்கிருமி கொடுஞ்சூலைவாதமையந்
துட்டமலமருசி தூரப்போங்-தட்டிச்
சிரக்கின்றபேதியுண்டாந் துய்க்கத்துவர்க்குஞ்
சரசகொன்றைக்காரணங்கே சாற்று,

(இ-ள்) தெய்வமகளிரனையதெரிவையே சரக்கொன்றை மரத்தால் பெருவியாதி கிருமிரோகம் சூலைவாதகபதொந்தம் விஷம்மலம் அரோசகம் ஆகிய இவைகள்போம் இதில்துவர்ப்புவுண்டு விரோசனம் ஆமென்க, (உ௰சு)

சிறுகொன்றைமரத்தின்குணம்

சிறுகொன்றைநற்கசப்பாஞ் சென்னியனலா
லுறுகின்றகண்களினோயோட்டே-பெருமுடலி
னுட்டினமுள்மூலமிவை யோடுமதிபலமுங்
கட்டழகுமுண்டதனாற்காண்,

(இ-ள்) மிகுந்தகசப்பையுடைய சிறுகொன்றைமரத்தால் கபாலக்குட்டினால் உதித்த நேத்திரரோகங்களும் தேக உஷ்ணமும் உள்மூலமும் நீங்கும் சரீரவலிமையும் அழகும் உண்டாகுமென்க, (உ௰எ)

நரிக்கொன்றைமரத்தின்குணம்.

பையவேயூறிப் படருமியானைச்சொரியு
மொய்பகிமிகொண்ட நுண்புடையு-மெய்யி
லரிக்கின்றவன்புடையு மாழிபுகுமாதே
நரிக்கொன்றைதன்னை நவில்,

(இ-ள்) நரிக்கொன்றைமரத்திற்கு யானைச்சொறியும் தவிட்டுக்கிருமிப்புடையும் தினவுள்ளவிரணப்புடையும் நீங்குமென்க, (உ௰அ)

மைக்கொன்றை மரத்தின்குணம,

குடல்வாதஞ்சூலை கொடுமேகமெல்லா
மடவாகப்போக்க வலேந்தே-படிமீது

லெக்கொன்றைத்தேடிநெஞ்சி லெண்ணமிடுவானேன்
மைக்கொன்றையிங்கிருந்து மால்.

(இ-ள்) மைக்கொன்றைமரம் குடல்விருத்திவாயும் சூலமேகரோகத்தையும்-என்க, (உ௰௯)

மருதமரத்தின்குணம்.

ஓகமெனுநீரிழிவை போட்டும்பிரமேகங்
காதமெனவோடக் கடத்துங்காண்-போத
மயக்கமொடுதாக மாறுச்சுரத்தின்
றயக்கமறுக்கும்மருதந் தான்.

இதுவுமது

குட்டரோகக்கிருமி கோரவயிற்றுவலி
துட்டவறட்சூலை தொலையுங்காண்-கிட்டிப்
பொருதம்பாவென்னும்விழிப் பூவையரோநாளு
மருதம்பாரென்றள்வில் மாய்ந்து.

(இ-ள்) போர்புரியுமம்பாமென்னும் கண்களையுடையபெண்ணே மருதமரமானது வெகுமூத்திரம் பிரமியமதயக்கம் விதாகம்நீங்காதசுரத்தில்வரும ஆயாசம் பெருவியாதி கிருமிரோகம உதரநோய் வறட்சூலை இவைகளைப்போக்கும்-என்க, (உஉக)

வேங்கைமரத்தின்குணம்.

குன்றிருமல்வெட்டையொடு கூறுமுளமாந்தையிவை
யெத்திசையும்வாரா திடையுங்காண்-சத்தியமாய்ப்
புண்ணிருமல்சீழொழுகல் போகுமலமிறங்கும்
கண்ணொளிரும்வேங்கைக்குக் காண்,

(இ-ள்)வேங்கைமரத்தினல்-குற்றிருமல்-வெள்ளைவீழல்-உளமாந்தைவிரணம்-காசம்-சீழ்ப்பிரமேகம்ஆகிய இவைகள்நீங்கும் கண்ணுக்கு ஒளிவும் மலவிரேசனமும் உண்டாம்-என்க, (உஉஉ)

வன்னிமரத்தின்குணம்,

வாதசங்கிதோஷம்று மாறுத்தழலுளதென்
றோதுவரிவ்வன்னிக்கு வமையுண்டோ-பூதலத்திற்
காணுர்விஷமுங் கபமுஞ்சொறியும்போந்
தேனேயினதயறிந்து செப்பு,

(இ-ள்) தேன்போன்றமொழியினையுடையபெண்ணே வெப்பத்தையுடைய வன்னிமரத்திற்கு வாதசங்கிபாதம் திரிதோஷம் விஷம்சிலேஷ்மகோபம் புடைஇவைநீங்கும், (உஉ௩)

புரசமரத்தின்குணம்-இதுவேபலாசு.

புரசுவாதம்பித்தம் பொங்குகபங்குன்மங்
கிருமியுடனே கிராணி-பெருவலிநோ
போட்டிமதிதீபனத்தை யுண்டாக்குமப்பொழுதே
நீட்டியவேற்கண்ணாய் தெளி,

(இ-ள்) நீட்டியவேல்போன்ற கண்களையுடையபெண்ணே புரசமரமானது வாதாதிக்கம்பித்தகோபம் சிலேஷ்மகோஷம் வயிற்றுநோய்மலக்கிருமி கிராணிரோகம் தேகக்குடைச்சல் ஆகிய இவைகளைநீக்குமஉதராக்கினியை யுண்டாக்கும்-என்க. (உஉச)

இருவாட்சிமரத்தின்குணம்,

கண்ணொளிவுமெய்யிற் கமழ்மணமுநீடழகு
நண்ணும்வலிமூர்ச்சை நாசமாம்-பண்ணளியுங்
கங்குலும்வாழ்வார்குழலே காரமொடுவெப்பமிகத்
தங்குமிருவாட்சிமரத் தால்,

(இ-ள்) இசையையுடையவண்டுகளும் கங்குலும்வாழ்கின்ற நீண்டகூந்தலையுடையபெண்ணே உஷ்ணமும்கார்ப்புச்சுவையுமுள்ள இருவாட்சிமரத்தால் நேத்திரபிரகாசமும் தேகத்தில்சுபாவவாசனையும் வனப்பும்உண்டாம் தேகக்குத்தலும் மூர்ச்சாரோகமும்நீங்கும்-என்க, ()

காட்டாத்திமரத்தின்குணம்,

அதிசாரமிந்தமிக வாலித்தகாசம்
விதிராம்விஷமும் விலகு-மெதிரொருவர்
மூட்டாத்தீயென்றுமதி மோகந்தருமணங்கே
காட்டாத்திக்கென்றுளத்திற் காண்

(இ-ள்) மூட்டாதஅக்கினியென்னும் அதிமோகந்தருமபெண்ணேகாட்டாத்திமரத்திற்கு-அதிசாரபேதி அக்கினிமாந்தம்-இருமல்தாவரசங்கம் விஷம்ஆகியஇவைகள்நீங்கும்-என்க. (உஉரு)

பெருங்குமிழமரத்தின்குணம,

பெரியகுமிழின்பேரைப் பேசின்மேகத்தி
னெரிவுசுக்கிலக்கடுப்பு மேகும்-பிரியாத
வல்லவனற்சுரமும் வாதசுரமுந்தணியும்
மெல்லெனமுத்தோஷம்போம வின்,

(இ-ள்) பெருங்குமிழமரத்தினால் மதுமேகஎரிச்சல் வெள்ளைவிழலிற்கடுப்பு பித்தசுரம்வாதசுரம் திரிதோஷகோபம்- இவைபோம்-என்க,

மாவிலிங்கமரத்தின்குணம்

சுரங்கடியின்றோஷந் தொலையாதவாத
முரம்யெறுவிஷங்க ளொழியும்- அரமுங்
சருமாவடுவையிலுங் கண்டஞ்சுங்கண்ணு
யொருமாவிலங்குக் குளை

(இ-ள்) அரம்மாவடுவேல் கண்டுபின்னிடையும் கண்களையுடைய பெண்ணே மாவிலிங்கமரத்திற்கு சுரங்களின்தோஷம் மகாவாத ரோகங்கள் சர்ப்பகீடவிஷம்ஆகிய இவைபோக்கும்-என்க, (௨௨௮)

அழிஞ்சில்மரத்தின்குணம்.

அழிஞ்சிலதுமாருதத்தை யையத்தைத்தாழ்த்து
மொழிஞ்சபித்தத்தை யுயர்த்தும்-விழுஞ்சிழாங்
குட்டமெனுநோயகற்றுங் கூறுமருந்தெய்திடில்
இட்டமெனவறிந்து தேர்,

(இ-ள்) அழிஞ்சில்மரமானது வாதகோபம் கபதோஷம் சிழ்வடியும் பெருநோய்இவைகளைநீக்கும் பித்தாதிக்கத்தைச்செய்யும், (௨௨௯)

கடலழிஞ்சில்மரத்தின்குணம்,

தீதில்கடலழிஞ்சில் செய்யுங்குணங்கேளா
யோதுமதுமேக மொழிப்பதன்றி-வாதத்தில்
வந்தசலம்பித்தசல நாகபச்சலந்தாகத்
தொந்தசலமும்போக்குஞ் சொல்.

இதுவுமது

கமலவிரணங் கசிதீரகற்றும்
நிமலசுரம்விலக்கு நேரே-கமலமுக
மாதேகடலழிஞ்சில் வன்பட்டைபேதிகட்டுஞ்
சீதமேகம்போக்குந் தேர்,

(இ-ள்) கடலழிஞ்சில்மரமானது-மதுநீர்வாதாதிமூன்றுநீர்தாகத்தைத்தராநின்ற தொந்தமூத்திரம்படர்தாமரை சொட்டுமூத்திரம் தனிச்சுரம் அதிசாரம்-சீதமேகம் இவைகளைப்போக்கும் என்க, (௨௩௧)

மோதகவல்லிமரத்தின்குணம்-இதுவேசொழுக்கட்டைமரமாம்,

பொங்கிவருவெள்ளைப் புனலினசிர்க்குங்காலா
லங்கியுங்கவீழுமிரத் தாமயநோய்-தங்காவே
போதகத்துச்சியெனப் பூரித்தமாமுலையாய்
மோதக்ப்பூருசத்தை முன்.

(இ-ள்) யானைமத்தகத்தைப்பூரித்து நிகர்த்துநெருங்கிய தனங்களையுடையபெண்ணே மோதகவல்லிமரத்தினால் அசிர்க்கரமும் வாதத்தால் மூலாக்கினிதள்ள வீழாநின்றரத்தசிதமும்நீங்கும் பூநகமமரம-என்க,

பூகமரத்தின்குணம

பூகதருருட்சையது போக்கும்பலவிஷத்தை
வாதமென்றநோயனைத்து மாற்றுங்காண்-தீதுபுரி
சந்நிகளைத்தப்பாது சண்ணிவிடும்பூதலத்து
ளுண்ணிமகிழ்வா யுரை.

(இ-ள்) பூகவிருட்சம்என்கிறஆலமரம் சுரம்பற்பல்விஷம் வாதரோகங்கள் சந்நிபாதங்கள்ஆகிய இவைகளைநீக்கு-மென்க, (உகூ)

வாகைமரத்தின்குணம்.

வாகைகாரங்கசப்பை வைத்திருக்குமுள்ளபடி
யோகையுறப்பசியை யுண்டாக்குந்-தோகையரே
தீராவிஷத்தோடு சில்விஷத்தையுந்தீர்க்கு
குரகாயத்தோன்று மறு,

இதுவுமது,

வாகையனல்விரணம் வாதவறட்சியுடன்
தாகசுரமுந் தணிக்குங்கா-ளுகமதி
வக்கரமெல்லா மகற்றிவிடுமபூவனமே
யக்கணத்திலென்றே யறி,

(இ-ள்) கர்ப்புமகைப்புள்ளவாகைமரம ஜடராக்கினியை விருத்திசெய்யும் சர்ப்பகீடவிஷங்கள் பித்தவிரணம் வாதச்சொறி தாகசுரம் கந்தாளிரோகங்கள் ஆகிய இவைகளைநீக்குமென்க, (உகூரு)

கருவாகைமரத்தின்குணம்,

விரணமோடேட்டினமும் வீறுகின்றவாய்வுந்
திரணமெனுங்கிருமிச் சேர்வு-மறணமுறச்
செய்யுங்கபத்தின் செயலுங்குடிவிலகும்
வெய்யகருவாகைக்கு விள்,

(இ-ள்) கருவாகைமரத்திற்கு புண்-வெப்பம்-விரதகோபம்- சன்னக்கிருமி மரணமுறச்செய்யுஞ் சயரோகமஆகிய இவைகள்நீங்குமஎன்க,

இவைமரத்தின்குணம்,

நீர்க்கடுப்புநீரெரிவு நீண்டொழுதமேகமும்போ
மார்க்கும்விந்துஊடைக்கு-மாண்மையுறும்-பார்க்குள்

நிலவுமதிவதன நேரிழையேலப்பா
மிலவுமரத்தா லியம்பு.

(இ-ள்) விளங்குகின்ற சந்திரனையொத்த முகத்தினையுடைய் பெண்ணே உஷ்ணமுள்ள இலமரத்தினால் வாதகிரிச்சரம்-எரிமூத்திரம் தந்துமேகம் இவைபோம் சுக்கிலமும்-ரசதாதுவும பலப்படும். (உகஎ)

முள்ளிலவ மரத்தின்குணம்,

தந்துமேகஞ்சிறுநீர்த் தாரைவெப்பம்வாய்
வுந்தவருபேதியிவை யோட்டுங்காண்-முந்திக்
கிளர்வள்ளைபாயும் வரிக்கெண்டைவிழியாய்
வளர்முள்ளிலவ மரம்.

(இ-ள்) விளங்குகின்ற வள்ளையை கிர்த்தகாதுகளைத்தாவுங் கெண்டையையொத்த கண்களையுடைய பெண்ணே முள்ளிலவமரம் பஞ்சிநூலைப்போலவீழ்கின்ற தந்துமேகத்தையும் மூத்திரகாளச்சூட்டையும் வாதாதிசாரத்தையும் போக்கும், (உகஅ)

விளாமரத்தின்குணம்.

காச்சுவாசங் கதித்தவருசிமுதற்
பேசரியதாகமிவை பேருங்காண்-வீசு
தபித்தலைச்செய்பித்தந் தரிக்குமோபூவிற்
கபித்தமரமிருக்குங் கால்.

(இ-ள்) கபித்தம் என்கிறவிளாமரத்தினால் இருமல் இரைப்புகதித்த அரோசகம் சொலற்கரியதாகம் தபித்தலைசெய் பித்தகபரோகம் ஆகிய இவைகள் நீங்குமென்க, (உகக)

தே, கருநெல்லிமரத்தின் குணம்,

பதினெட்டெனுஞ் சந்நிபாதந்தயக்கம்
மதிநைந்திடச்செய் வினைமாறும்-பதியிற்
சகித்தகருவுருவந் தானும்வேறாகுந்
தனித்தகருநெல்லிமரத்தால்,

(இ-ள்) கருநெல்லிமரத்தினால் பதினெண்வகைசந்நிபாதங்களும் மயக்கமும்-மனோவியாதியும் நீங்கும் காயசித்தியாமென்க. (உசய)

அருள்மரத்தின்குணம்.

வாதமகலும் வளருகின்றமந்தமறுஞ்
சீதரத்தஞ்சோபை சுரந்திருங்காண்-ஓதும்

இருளாருங்கூந்த லெழிலணங்கேமூத்த
அருளென்னும் நன்மரத்தாலாய்,

(இ-ள்) கருநிறமபொருந்திய கூந்தலையும் அழகையுமுடையபெண்ணே அருள்யென்கிற முதிர்ந்தமாதுமரத்தினால் வாதகோபம் மந்தாக்கினி சீதரத்தபேதிசுரவீக்கமாகிய இவைகள்போமென்க, (௨சக)

வேப்பமரத்தின் குணம்.

ஓதரியவேம்பை யுரைக்கிற்சுரமுடனே
வாதமரமூலகண மந்தம்போந்-தீதா
யுதிருமெரிபூச்சிகுன்ம தோதொழியுஞ்
சிதறுமலம்போகு மெனத்தேர்,

(இ-ள்) வேப்பமரத்திற்கு சுரம்வாதகோபம் மூலகணமாந்தம் எரிகிருமி-வயிற்றுநோய்-சிதறுகின்றமலப்பேதி இவைநீங்கும். (௨சஉ)

மலைவேப்பமரத்தின் குணம்.

மலட்டுப்புழுவும் வயிற்றின்வலியு
மலட்டுவாய்வும் போமடங்கிக்-கொலட்டு
முலைவேஞ்சினவேற் மண்ணேஇமமேகேளாய்
மலைவேம்பின்பேரா வழுத்து.

(இ-ள்) கருமானுலைவயிற்காய்ச்சிய சினவேலனையகண்களையுடைய அன்னமே மலைவேப்புமரத்திற்கு மலட்டுக்கிருமிரத்தகுன்மரோகம் ஓடி ஓடிக்குத்துகின்றவாதம் ஆகிய இவைகள் விலகுமென்க, (௨சங)

தே, சருக்கரைவேப்பமரத்தின்குணம்,

காயசித்தியாகுங் கடியசிலேஷ்மமறுந்
தூயவிந்துநாதமிவை சுத்தியுமாந்-தூயவருக்
கெத்திக்குங்கிட்டு மிலையருந்தில்வாயெல்லாந்
தித்திக்கும்வேம்புதற்குத் தேர்,

(இ-ள்) தூயவர்களுக்கெத்திக்கிலுங் கிட்டுகின்ற இலையில் மதுரமுள்ளசருக்கரைவேம்பினால் காயசித்தியும் சுக்கிலசோணிதசுத்தியும் வுண்டாம் கபரோகம் நீக்குமென்க. (௨சச)

பாலைமரத்தின் குணம்.

வாதப்பெருக்குபித்த மாறுச்சுவாசமுத
லோதுசர்வதோஷமும் விட்டோடுங்காண்-தீதுபுரி
வேலைப்பொருவுவிழி மெல்லியலேகாட்டிலுறை
பாலைக்கெனு வுன்னிப்பார்.

(இ-ள்) குலைத்தொழில்புரியும்வேலனையகண்களையுடையபெண்ணே பாலமரத்திற்கு வாதநோய்க்கூட்டங்கள் பித்தரோகம் தமககுவாசம் திரிதோஷம ஆகிய இவைகள் ஒழியுமென்க. (உசரு)

தே, வெட்பாலைமரத்தின்குணம்.

அக்கினியைவைத்திருக்கு மார்ந்தவாதம்போக்குந்
திக்குள்திரிதோஷத்தைத் தீர்த்துவிடுஞ்-சொக்கவிரு
கட்பாலைக்கூற்றைவைத்த கானமடமயிலே
வெட்பாலைநன்மருந்தாம் விள்

(இ-ள்) மயங்கும்படியாக விருகண்ணிடத்திலியமனை வைத்தபெண்ணே அக்கினிக்குணத்தையுடைய வெட்பாலைமரமானது வாதவலியையும் திரிதோஷகோபத்தையும் நீக்குமென்க, (உசகா)

தீம்பாலை மரத்தின்குணம்,

மேகவட்டைசந்தி விஷபாகநேத்திரநோய்
தாகமுததோஷஞ்சர்த்தி சாரனலம்-வேகமோ
டேறுசலம்பீசநமி ரத்தமுந்தீம்பாலையெனிந்
*றூறுவாதிகளுஞ் சொல்,

(இ-ள்) தித்திப்புப்பாலைமரத்திற்கு மேக உஷ்ணவெள்ளை சந்திவிஷபாகம் கண்ணோவு தாகம்திரிதோஷம்வாந்தி பித்தகோபம் நீரேற்றம் நாசிநோய் ரத்தக்கிராணி இவைநீங்கும்*றூறுவாதிதீம்பாலை, (உசஎ)

மலைப்பாலை மரத்தின்குணம்,

விக்கல்வலிவாந்திகுன்ம மீறுபக்கச்சூலையொடு
மைக்கரப்பான்மந்தமிவை மாறுங்காண்-மைக்கண்
நிரைப்பாலையொத்தமொழி நேரிழையேகேளாய்
வரைப்பாலையை யுண்டவர்க்கு,

(இ-ள்) மையணிந்தகண்களையும் பாலன்னமொழியையு முடையநேரிழையே கேட்பாயாக மலைப்பாலை மரத்திற்கு விக்கல்-ஐவகைவலிவாந்தி வயிற்றுவலிவிலாக்குத்தல்கருங்கரப்பான்மந்தாக்கினிஇவைநீங்கும்,

குடசப்பாலை மரத்தின்குணம்,

வாதமறும்பேதிகட்டு மாருதநீரிழிவுங்
காதம்போமேகங் கடக்குங்காண்-தீதடாப்
பொங்குகரப்பானும் போகாவிரணமும்பே
மிங்குகுடசப்பாலைக் கெண்,

(இ-ள்) குடசப்பாலைமரத்திற்கு வாதநோய் அதிசாரம் நீரிழிவுதந்தி ப்பிரமேகம்தீதாடப்பொங்குகரப்பான்சிரங்கு ஆகிய இவைபோமென்க.

குளப்பாலை மரத்தின்குணம்

சுவாசகாசம்பக்கக் சூலையதிசார
மவாசவியர்ப்போ டனலங்-தவாத
கரப்பானிவைவிலகுங் சாரிகையோநாளு
முரப்பாங்குளப்பாலை யுண்.

(இ-ள்) பலமுள்ளகுளப்பாலைமரத்தினால் சுவாசகாசம்பக்கச்சூலை அதிசாரவியர்வை சுரம்காப்பான் இவைபோம், (உ௫ ௰)

முள்முருக்கமரத்தின்குணம் இதுவேகல்யாணமுருக்கு

முள்ளுமுருக்கதுதான் மோதுகின்றசாத்திகுன்மங்
கள்ளமறத்தீர்க்குங் கனற்சுரமும்-விள்ளரிய
அக்கரமும்போக்குமனல்வாய்வேக்காடகற்று
மிக்கவலிகொடுக்கும் விள்,

(இ-ள்) முள்முருக்கமரம் வாந்தி வயிற்றுவலிபித்தசுரம் அக்கரம் ஆகிய இவற்றைநீக்கும் மிகுவன்மையையுண்டாக்கும், (உ௫க)

ஊழலாற்றி மரத்தின்குணம்,

அடவிவதிருழ லாற்றியெனுமூலி
படவிரணமபுண்கொறுக்கை பாமை-கடிதடத்தால்
வந்தவரையாப்புவெள்ளை வாதப்பிடிப்புகுட்ட
மிந்தவகைகோயகலு மெண்,

(இ-ள்) காட்டில்வளர்கின்ற ஊழலாற்றிமரத்தால் மேகவிரணம் ஒட்டுப்புண் ஆண்குறிவிரணம் பாமையென்கிறசிரங்கு போகத்தால்வந்த அரையாப்புவெள்ளைகில்வாதம் பெருநோய் ஆகிய இவைகள் நீங்கும்.

வெள்வேல்மரத்தின்-குணம்,

பித்தமயக்கமறும் பேருலகின்மானிடருக்
குற்றசுரவாத மேகுங்காண்-குத்துகின்ற
சந்துக்குடைச்சல்விடுஞ் சர்வாங்கவாதம்போங்
கொந்துலவும் வெள்வேலுக்கு.

(இ-ள்) வெள்வேல்மரத்திற்கு பித்தமயக்கம் வாதசுரம்சந்துக்குடைச்சல் சர்வாங்கவாதரோகம் ஆகிய இவைகள் நீங்குமென்க, (உ௫உ)

மூங்கில் மரத்தின்குணம

சூதகவாய்வினது சோணிதந்தங்காதுவரு
மர்தேசுரந்தணியும் வாதம்போம்-பூதாமே
லோங்கிவளர்ந்திழையு மோங்கலெனுமூங்கிலுக்கு
வாங்குஞ்சுவாசம்போ மாய்ந்து

(இ-ள்) மலையிலோங்கி வளர்ந்திழைகின்ற மூங்கில்மரத்திற்கு மாதாரகருதுச் சோணிதக்கட்டு சுரம்-வாதநோய்-இளைப்பு-இவைகள்போம்,

மரவகை முற்றியது

(*)

## செடிவகை.

தே, ஆவாரையின்குணம்,

சொல்லுதற்குமட்டோ தொலையாதமேகநீ
ரொல்லாமொழிக்கு மெரிவகற்று-மெல்லவச
மாவாரைப்பம்பரம்போ லாட்டுந்தொழிலணங்கே
சாவரைமூலி யது.

(இ-ள்) மெல்லவசமாவாரைப்பம்பரம்போலாட்டுகின்ற தொழிலையுடையமாதே ஆவாரைச்செடியானது சர்வபிரமேக மூத்திரரோகங்களையும் ஆண்குறி எரிவந்தத்தையும் கெடுக்கும்-என்க, (உருச)

தே, பொன்னுவரையின்குணம்,

வெடிப்புதுவக்குதிரல் மேகப்புடைகள்
தடிப்புதினவுகடி தங்கா-அடிக்கடியிங்
கென்னுவறைய விசையுமவெழிலணங்கே
பொன்னுவரையதனைப் போற்று,

(இ-ள்) என்னுவினுற்சொல்லமுடியாத வழகினையுடையமாதே பொன்னுவரைச்செடியினால் சருமவெடிப்புசொறிந்தால் சருமத்துள்சிந்துதல் மேகப்புடைகள்கண்டு கண்டாகத்தடித்தல் நமைச்சல் கரனுக்கடி ஆகிய இவைகள்போம்-என்க, (உருரு)

நீர்ப்பூலாவின்குணம்,

மாந்தங்கனமபொருமல் மாறுச்சலத்துடனே
சேர்ந்தசொறிசிரங்குந் தீருங்காண்-ஏந்தெழிலைச்
சேர்ப்பாகக்கொண்ட செழுந்திருவேபூவிலுறை
நீர்ப்பூலாப்பூண்டை நினை,

(இ-ள்) சந்து எழிலை சேகரமாகக் கொண்டவிலக் குயிலனையபெண்ணே நீர்ப்பூலாச்செடியால் மாந்தம் கணச்சூ வயிறிரைச்சல் சொறிசிரங்கு அதிமூத்திரம் ஆகியஇவைபொழியும்-என்க, (உருசு)

பேய்மிரட்டியின்குணம் இதுவேவெதும்படக்கி.

மாந்தகணங்கழிச்சல் மாறுவயிற்றுவலி
சேர்ந்துவ்நகரப்பான் சீச்சுரமும்-பேர்ந்துவிடும்
வேய்மிரட்டுங்தோளுடைய வெல்லியலேராசியமாய்ப்
பேய்மிரட்டிவென்றொருகாற் பேசு.

(இ-ள்) மூங்கிலைமிரட்டுந் தோள்களையுடையபெண்ணே பேய்மிரட்டிகணமாந்தம் பேதிவயிற்றுநோய் கரப்பான்கோரசுரம்ஆகையினால்இவைகள்போம்-என்க. (உருஎ)

குன்மக்குடோரியின்குணம்,

சூலையோடீளைதொலை யாககாசக்கயநோய்
காலனென்றகுன்மங் கலங்குங்காண்-ஞாலமிசை
நன்மைக்குரியகுண நல்குவமென்றுற்றிலுறங்
குன்மக்குடோரி தனக்கு,

(இ-ள்) ஆற்றோரங்களிலிருக்கும் குன்மக்குடோரிச் செடிக்குச்சூலை சுவாசம் இருமல்க்ஷயம் குன்மரோகம்-இவைநீக்கும். (உருஅ)

விடத்தேரின்குணம்,

மூளையைவருவிக்கின்ற மூலரோகத்தை
யிளையுமூத்திரத்தை யடங்கா-துளைதாக
வேகத்தைப்போக்கிவிடும் வெய்யவிடத்தேர்சக்கிர
வாகத்தைக்காய்மூலையாய் வாழ்த்து,

(இ-ள்) வெப்பத்தையுடைய விடத்தேரின்செடிக்கு மூளையைவருவிக்கின்ற மூலம் வயிற்றுப்பிடுங்கலையுடைய ரத்தகிராணி அதிதாகம் இவைபோம், (உருகூ)

தகரையின்குணம்,

தகரைபடர்தாமரையைச்சொறியைத்
தகரவடிக்குமந்தத் தன்னோ-டிகலான
அத்திசுரத்தையு மதனுசெய்யுமிம்மூலி
யுத்தமமாமென்றே யுரை,

(இ-ள்) தகரைச்செடியானது படர்தாமரைசொறி அக்கினிமந்தம் அஸ்திசுரம் ஆகியஇவைகளைநீக்கும்-என்க, (உசுய)

நின்றுசிணுங்கி நிலம்புரண்டி இவைகளின்குணம்,

நின்றுற்சிணுங்கியது நீலவிஷம்போக்குரினுங்
குன்றுந்தனத்தியரைக் கூட்டுவிக்கு-மென்று
மலம்புரண்டநோயகற்று மாள்வசியமர்க்கும்
நிலம்புரண்டிமூலி நினை

(இ-ள்) நின்றுற்சிணுங்கிச் செடியானது சர்ப்பவிஷத்தைநீக்கும்-ஸ்திரிவசியத்திற்காகும் நிலம்புரண்டிச்செடியானது உற்பவிஷரோகங்களையொழிக்கும் புருஷவசியத்திற்குதவும்-என்க, (௨௬௧)

உரலாமணக்குக் குரத்தவலிகுலே
விரைவானகுன்மமும்போம் விள்ளப்-பிரிவாம்
முளைமூலமோடிரத்தம் முன்கால்விரணங்
கொளுமேகமெல்லாம்போங் கூறு,

இதுவுமது,

ஏலியாமணக்கோ எலிவிஷமுஞ்சேர்ந்த
பலவிஷமுமோட்டிவிடும பாரில்-வலுபேதி
யுண்டாக்குவிக்கு முரத்தகுன்மம்பீலிக
மண்டாமலோட்டிவிடு மால்,

(இ-ள்) உரலாமணக்கஞ்செடிக்கு சரீரநோவுநீலதைப்பின் குத்தல்குன்மம் முளைமூலம கழல்வாதவிரணம் ரத்தமேகமுதலிய சிலமேகங்கள் எலிவிஷம் சில்விஷம் வயிற்றுவலி பிலீகரோகம்ஆகியஇவைநீங்கும்இதுவிரோசனத்தை யுடையது-என்க, (௨௬௨)

சணப்பின்குணம்,

கைப்பும்உறைப்புங் கலந்திருக்குந்தின்றக்கால்
மெய்ப்புள்ளபித்தம் விலக்குங்காண்-நெய்ப்பாங்
கருப்பங்களெல்லாங் கரைந்துவிழுமே
உருப்பங்காமாஞ்சணப்புக் கோர்,

(இ-ள்) கசப்புங்காரமுமுள்ள சணப்புச்செடிக்கு பித்தகோபமுஞ் சிலவாதரோகங்களும் நீங்கும் இளங்கருப்பங்கள்கரையும், (௨௬௩)

மாமாலேயின குணம்,

பாண்டுடனேமெய்பிற் படர்சோபையைத்துரத்துந்
தூண்டுநீராமயமேனுந் துன்பொழிக்கும்பூண்டதோர்

நீரையிறக்கு நெடுந்துயரமாற்றிவிடு
நாறியசேமாமாலை நன்று,

(இ-ள்) மாமாலைச்செடியானது பாண்டரோகம் சரீரத்திற்படர் சோமை நீராம்பல்ரோகம்ஆகிய இவைகளைநீக்கும அதிகமாகநீரையிறக்கும்

கோடகசாலையின்குணம்.

கோடகசாலைக்குக்கொடிய அனல்மேகமொடு
போடகங்கிரந்திகுஷ்டம் புண்ணுறும்-நாடகஞ்செய்
யப்பித்தவாய்வு மலர்வரம்விரணமும்போம்
பொற்புற்றபொன்னே புகல்

(இ-ள்) அழகுபொருந்திய திருவனையபெண்ணே கோடகசாலைச்செடிக்கு சுரம்வாதப்பிரமேகம் விஷ்டபோடகரோகம் சிரங்குகுஷ்டம் விரணம் பித்தவாததொந்தம் ஜிக்வாகண்டகரோகம்ஆகியஇவைகள்விலகும்-என்க, (உசுசு)

வட்டம்கிலுகிலுப்பையின்குணம,

வட்டக்கிலுகிலுப்பை மாறுச்சொறிகிரந்தி
துட்டகண்டமாலைபல சோபைநோ-வட்டமுலை
மானேவிரணவகை மாந்தமுதனேயெல்லாந்
தானேயகற்றுமெனச் சாற்று,

(இ-ள்) வட்டமாய்பறந்த முலைகளையுடையபெண்ணே வட்டக்கிலுகிலுப்பைச்செடி சொறிகிரந்திகண்டமாலைபற்பலசோபைவிரணங்கள் அக்கினிமந்தம் இவற்றைநீங்கும், (உசுஎ)

வெள்ளைக்கிலுகிலுப்பையின்குணம்,

விடவினங்களைப்பிடித்து விண்ணேற்றும்வந்த
விடசந்நிரோகயை விரட்டுந்-தடமாரும்
வெள்ளைக்கிலுகிலுப்பை மென்பூண்டதுபுவிக்குட்
கிள்ளைக்குதலைமின்னே கேள்

(இ-ள்) கிளிபோன்ற குதலைமொழியையுடைய மின்போல்பவளே மலையில் முளைத்தவெள்ளைக்கிலுகிலுப்பை தாவரசங்கம விஷங்களையும் விச்சந்நிபாதரோகத்தையும நீக்கும்என்க, (உசுஅ)

சந்திரகாந்தி சூரியகாந்தி இவைகளின்குணம்,

சந்திரகாந்திக்குத் தழலெரிச்சல்நீர்க்கடுப்பும்
உந்திவலியாவு மொடுங்குங்காண்-சந்திலுறும்
பாரியவாதம்பருகு நீரேற்றமும்போஞ்
சூரியகாந்திக்குச் சொல்,

(இ-ள்) சந்திரகாந்திச்செட்டிக்குப் பித்த எரிவும் நீர்க்கடுப்பும் தொப்புள்வலியும் நீங்கும் சூரியகாந்திச்செட்டிக்கு சகனுவர்த்த வாதரோகமும் சலதோஷமும் நீங்குமென்க, (உ௬௯)

பே, பேயகத்தியின்குணம் இதுவே சிமையகத்தியாம்,

தம்மைநக்கண்டாலிரத தாதுவிலாம்பொட்டுகளும்
வெம்மைப்புடைநணையும் வீறு*நெய் யம்மையுறுந்
தூயகத்தியுங்கலங்குந் தோதகக்கண் மாதே
பேயகத்திமூலிகண்ட பேர்,

(இ-ள்) பேயகத்தியால் ரசதாதுக்கிருமிகளும் உஷ்ணச்சொறியும் கிணவும் நீங்கும் ரத்தநரம்புபிரகாசிக்கும்*நெய்ரத்தம் அம்மை அழகு

ஈச்சுரமூலியின் குணம்.

பலபலவிக்கஞ்சன்னி யாதங்களோடு
கலமகல்விஷங்கள் நடுக்குங்-கலகலெனப்
பேச்சுரமுண்டாகுமலர்ப் பெண்ணனமேநீகேளா
யீச்சுரமூலிதனக் கின்று,

(இ-ள்) மலரில்வசிக்கும் பெண்ணன்னம்போன்றவளே யீச்சுரமூலியால் விஷசோபைமுதலிய சோபைகளும் சன்னிகளும் பலவிஷங்களும் நீங்கும் உரத்தவார்த்தையுண்டாமென்க, (உஎ௧)

நீலவிளாவின்குணம்,

அழன்றகணவேக மதிதாசந்தீருந்
சுழன்றுவருபித்தந் தொலையு-முழன்று
பொருந்திலமேகத்துடனே புண்சுரமும்போகு
மருநிலைவிளாவுக் கயர்ந்து,

(இ-ள்) நிலவிளாவினல் வெதும்புகின்றாணச்சுரம் அதிதாகம் பித்தகோபம் மாறுப்பிரமேகம் விரணசுரம் ஆகிய இவைநீங்கும். (உஎ௨)

சங்கங்குப்பியின் குணம்,

கரப்பான்கிரந்தி கருங்குட்டரோக
முரப்பானமேக மொழியுங்-கருப்பக்
கருங்கிரந்திசெவ்வாப்புக் கட்டிகளுமேகு
மருஞ்சங்கங்குப்பிக் கறி.

இதுவுமது,

வெட்டைசொறிசிரங்கு வீறிவருஞ்சூலே
துட்டவாதங்கபந்து னுக்கிருமல்-கெட்டவிஷம்

அங்கங்கொள்பூச்சியிவை யாவும்போம்பித்தமுறுஞ்
சங்கங்குப்பிக்கெனவே சாற்று,

(இ-ள்) சங்கங்குப்பிச்செடிக்கு அனைக்கடுவன்சிரங்கு விகர்ச்சிகாகுஷ்டம் வாதப்பிரமேகம கருப்பத்திலுண்டாகிய கருங்கிரந்தி குண்டாலக் கட்டி வெள்ளைதவளைச்சொறி விரணம் இல்லிக்கச்குத்தல்மகாவாதம் சிலேஷ்மதோஷம் வறட்டிருமல் சர்ப்பவிஷம் ரத்தக்கிருமி ஆகிய இவைகள்போகும் பித்தாதிக்கமெண்க, (உஎச)

கறிமுள்ளியின்குணம்.

ஈளையிரும் லிளைப்புச்சுவாசமறும
வாளைவென்றகண்ணாய் லழுத்தக்கேள்-நாளையென்
றில்லைக்கபச்சுர மதின்றேவிலகிடுங்
கொல்லைக்கறிமுள்ளி கொள்,

(இ-ள்) வாளைவென்றகண்களையுடையாளே சொல்லக்கேட்பாயாக கறிமுள்ளியினால் நெஞ்சிற்கோழைக்கட்டு காரம் தமகசுவாசம் சிலேஷ்ம சுரம் ஆகிய இவைகள் நீங்கும், (உஎரு)

செம்முள்ளியின் குணம்,

செம்முள்ளியென்றாற் சிலேஷம்நடுநடுங்கும்
விம்முமுலைமாதே விளம்பக்கேள்-கம்முகின்ற
மாந்தகணமையமிவை மாறுஞ்சிறுவருக்குச்
சேர்ந்தசுரதோஷமும்போஞ் செப்பு,

(இ-ள்) விம்முகின்ற தனங்களையுடையபெண்ணே விளம்பக்கேள்செம்முள்ளியினால் கபப்பெருக்கம் கணமாந்தம் சுவாசம் குழந்தைகளுக்குண்டாகின்ற சுரதோஷம் இவைபோம். (உஎசு)

கண்டங்கத்தரியின்குணம்,

காச்சுவாசங் கதித்தக்ஷயமந்தனல்
வீச்சுரஞ்சன்னிவிளை தோஷமாசுறுங்கா
வித்தையுணிற்கா வெரிகாரஞ்சேர்கண்டங்
கத்தரியுண்டாமாகிற் காண்,

(இ-ள்) வெப்பமுங்கார்ப்புமுள்ள கண்டங்கத்திரியினால் காசம்சுவாசம் க்ஷயம் அக்கினிமந்தம் தீச்சுரப் சன்னிபாதம் எழுவகைத்தோஷங்கள் வாதரோகம் ஆகிய இவைகள்போமென்க, (உஎஎ)

தேட்கொடுக்கின் பொதுக்குணம்,

தேட்கொடுக்குண்டாயிற் றினவடங்குந்தப்பாது
நாட்பட்டபுண்கரப்பான் நாசமாங்-கீட்டபட்ட

மாந்தகணமும்று மாவிலத்துச்சில்விஷம்போம
போந்தமறுந்தாகும் புகல்.

(இ-ள்) தேட்கொடுக்கச்செடியால் நமைச்சல்பழையவிரணம் கடுவ ன் கணமாந்தம் சில்விஷம ஆகிய இவைவிலகுமென்க, (உஎஅ)

பெருந்தேட்கொடுக்கின் குணம்,

சுடுகாடுமுட்டா னெனப்பெரியோர்சொல்லும்
நெடியபெருந்தேட்கொடுக்கால் நீரா-பொடிக்கிருமி
புண்கிரந்திமேகப்புண் பொல்லாக்கருங்கிரந்தி
விண்கரநதுபோகாதோ விள்,

(இ-ள்) சுடுகாடுமுட்டானென்கிற பெருந்தேட்கொடுக்கால் ரசதாது வைப்பற்றிய அணுக்கிருமி விரணக்கரந்திமேகப்புண்கருங்கிரந்தி ஆகி ய இவைகள் நிவிர்த்தியாகுமென்க. (உஎகூ)

சிறுதேட்கொடுக்கின்குணம்,

சிறுதேட்கொடுக்கதனாற் சேயிழையேகேளாய்
சொறிசிரங்குபுண்கரப்பான் சூலை-கொறுமாந்தை
மேகவெட்டைபித்தவெட்டை மீளாவெலும்புருக்கி
யாகம்விடுத்தோடு மறி,

(இ-ள்) செவ்வியபாணத்தை யணிந்தபெண்ணேசிறுதேட்கொடுக்கா ல் நமைச்சிரங்கு விரணக்கரப்பான் சீல்வீக்கம்கொறுக்குமாந்தை ஒழு க்குப்பிரமேகம் பித்தவெள்ளை அஸ்திசிராவம் ஆகிய இவைகள் நீங்கு மென்க, (உஅ0)

நிலவேம்பின் குணம்,

வாதகரநீரேற்ற மாற்றுஞ்சுரதோஷங்
காதமெனவோட்டக் கடியுங்காண் -மாதரசே
பித்தமயக்கறுக்கும் பின்புதெளிவைக்கொடுக்குஞ்
சுத்தநிலவேம்பின் றொழில்,

(இ-ள்) பெண்களுபகமே நிலவேமபுவாதசுரம மேகநீர்க்கோவை சு ரதோஷமபித்தமயக்கம ஆகியஇவைகளைநீக்குமதெளிவையுண்டாக்கும

தே, சிவனார்வேமபின் குணம,

சாய்க்குமிடிப்புண்பழமபுண் சர்மகுட்டமபிளவை
※தீக்கடுகாலவுன்பெருநோம ஙிந்துமா-நோய்க்கு
விதையாதிவேமபிது மெய்க்கழகுகாலை
யுதையாதிவேமபிது வுண்

(இ-ள்) சிவனார்வேமபினால் ஆகந்துகவிரணமநாட்பட்டபுண் சர்மதல கூட்டம ராஜப்பிள்ளைவசர்ப்பவிஷமமகரவாதமகுஷ்டு அக்கினிமந்தமஇவைநீங்கும அழகுண்டாம*தீக்கடுபகாவிஷம் (உஅஉ)

நீர்முள்ளியின்குணம

பாண்டுகுளுப்பையறும பாரித்தநீரேற்ற
மாண்டுவிடுநீர்க்கட்டு மாறுங்காண்-பூண்டமொரு
வீக்கமெல்லாநீதாய்விடுமேநீர்முள்ளிக்குத்
தாக்குமயில்விழியாய் சாற்று,

(இ-ள்) கூரியவேலனையகண்களையுடையபெண்ணே நீர்முள்ளிச்செடிக்குப் பாண்டுகுளுப்பை சலகோவை மூத்திரச்சிக்கல் வீக்கங்கள் ஆகிய இவைகள்விலகுமென்க, (உஅங)

பெருமருந்தின்குணம,

திரிதோடமவெப்பு சிரங்குசொறிகஞ்சோ
டரிதேமல்வன்புடையு மாண்டாதொருவா
னருமருந்தையொத்த வணங்கேயுலகிற்
பெருமருந்தைநீயொடுத்த பின்

(இ-ள்) தேவாமிர்தத்தையொத்தபெண்ணே பெருமருந்தினால் வாதாதிமுக்தோடம சுரமசமைக்கிரந்தி விடமதினவுத்தேமல்மேகப்புடை இவை நீங்குமென்க, (உஅச)

ஊமத்தையின் குணம,

நாய்க்கடியால்வந்து நலிசெய்விரணமுமபோம
வாய்குழிப்புண்கட்டிகளு மாறுங்கண்-தீர்குணத்தைச்
சேமத்தில்வைத்தவிடந் தீருமுத்தோடமறும
ஊமத்தையின் குணத்தையுன்,

(இ-ள்) ஊமத்தையினால்-நாய்க்கடிப்புண் குழிவிரணம வித்திரிசிக்கட்டிகள் கஞ்சுதிரிதோடம் ஆகிய இவை நீங்குமென்க, (உஅரு)

கருவூமத்தையின் குணம,

விந்துவிரதங்கள்கட்டு மேனிதருங்குஷ்ட மொடு
வாந்தவியர்ப்பரிப்பை மாற்றுங்காண்முந்தப்
பெருமத்தஞ்செய்சுரத்தைப் போக்குங்கயப்பாங்
கருமத்தமான்மூலி காண்,

(இ-ள்) கசப்பையுடையகருவூமத்தை சுக்கிலத்தையும்பாதரசத்தையும்கட்டும் உடலுக்கு அழகையுண்டாக்கும் பெருவியாதி வியாவைத்தினவு பயித்தியம் சுரம் ஆகிய இவைகளைநீக்கும் என்க, (உஅசு)

பொன்னூமத்தையின் குணம்,

பொன்மத்தமுண்டாகிற் பூவையரேபுண்கிரந்தி
தொன்மைக்கிராணிவருகுசிகா-வன்பேதி
பித்தசுரத்துடனே பேராவிடச்சுரமுஞ்
சுத்தவதிசாரமும்போஞ் சொல்,

(இ-ள்) பெண்ணே பொன்னூமத்தையினால் விரணக்கிரந்தி நாட்சென்றகிரகணி கருமபாதிசாரம் பித்தவிஷசுரங்கள் தளிப்பேதி இவைநீங்கும். (உஅஎ)

மருளூமத்தையின் குணம்,

சீதசுரம்நீரேற்றஞ் சிலவிடங்கள்மந்தத்தோ
டேதையிவையெல்லா மொழியுங்காண்-போத
இருளூருங்கூந்தறெழின்மாதேகான
மருளூமத்தைக்கறிந்து வை

(இ-ள்) இருண்டகூந்தலையுடைய அழகுபொருந்தியபெண்ணே மருளூமத்தைக்குக் குளிர்ச்சுரம் சரீரத்திற் சகலக்கோவை அற்பவீரிஷம் அக்கினிமந்தம் வாததோஷம் இவைவிலக்கும் (உஅஅ)

நிலக்குமிழின்குணம்

பேதியொடுகணசொருகற்பே ராசசீதளமும்
வாதவலிகொட்டாவி மாந்தமுமபோம-ஞ்சச்
சலக்குமிழையொத்த தனக்கருங்கண் மாதே
நிலக்குமிழைக்கையிலெடு நீ

(இ-ள்) நீர்க்குமிழியனையகொங்கைகளையும் கறுத்தகண்களையுமுடையபெண்ணே நிலக்குமிழினால் சலமந்தப்பேதி விழிசொருகலசீதளிப்பு வாதக்கடுப்பு அதிகோட்டாவிமந்தம ஆகியஇவைபோமஎன்க, ()

தே, நிலத்துத்தியின்குணம

தொடங்கரசங்கட்டி தொலையவப்புலோக
மடங்கிநீறுசவெண்ணீ னமபொற்-குடம்போ
லலத்துத்திபூத்தலே நல்லாரமிர்தே
நிலத்துத்திமூலியை நினே

(இ-ள்) தேமல்படர்ந்தகுடமபோன்ற தனங்களையுடைய வமிதத்தையொத்தபெண்ணே நிலத்துத்திமூலியானது ஆரம்ப மூலரோகத்தையும் வித்திரிக்கட்டிகளையும்போக்கும் கருவங்கத்தைப் பஸ்மம்செய்யும்,

பெரும்பீளைச்செடியின்குணம்,

※ பாடாணபேதியெனப் பன்னுபெரும்பீளைக்கு
மேடானவீக்கம் விலகுங்காண்-நாடறயப்
பேய்பூதமும்பறக்கும் பேசிற்கலபிணிபோந்
தாயோரறிவரிதைச் சொல்,

(இ-ள்) பாஷாணபேதியென்கிற பெரும்பீளைச்செடிக்கு மிகுசோபையம் பைசாசமுதலிய சங்கைதோஷமும் கல்லடைப்புமுதலிய சிலரோகங்களுமதீரும் பாஷணம் கல் பேதித்தல்தள்த்தல், (உகூக)

சிறுபீளைச்செடியின்குணம்-இதுவேகற்பேதியாம்,

பாண்டுபெரும்பாடு பகர்மூத்திரக்கிரிச்சம்
பூண்டகிரிதோஷமிவை போகுங்காண்-தாண்டிப்
பரிபவேளைத்துரத்தும் பாரவயிற்கண்ணாய்
சிறியபீளைக்குச் சிதைந்து,

இதுவுமது,

நீரடைப்புகல்லடைப்பு நீங்காற்குடற்குலே
போடிரத்தகணம் போக்குங்காண்-வாருறக்கும்
பூண்மூலையேகேளாய் பொருந்துஞ்சிறுபீளை
யாமிதுகற்பேதி யறி.

(இ-ள்) மாரனைவெத்திகொள்ளும் வேலனையகண்களையுடையபெண்ணே சிறுபீளைச்செடிக்குத் தேகம்வெளிறல் அசிர்க்கரரோகம் வாதமூத்திரகிரிச்சரம் முத்தோஷம மூத்திரச்சிக்கல் அஸ்மரி ஆந்திரபித்தவாதம் சோணிதவாதங்கள் ஆகியஇவைபோகும் (உகூரு)

பல்லிப்பூண்டின்குணம்,

வல்விடந்தோடசுரம் வாதபித்தங்களொடு
பல்வலியும்பஞ்சாய்ப் பறக்குங்காண்-நல்லோர்பாற்
சொல்லிப்பார்பாடாண தாளகமுஞ்சுத்தியதாம்
பல்லிப்பூண்டுண்டாயிற் பார்,

(இ-ள்) பல்லிப்பூண்டில் சர்ப்பவிஷம் சுரதோஷம் வாதபித்ததொந்தம பல்வலிஇவைபோம் பாஷாணமும்தாளகமும் சுத்தியாம், (உகூச)

தாணிப்பூண்டு பொரிபூண்டு இவைகளின்குணம்,

தாணிப்பூண்டேயிருந்தாற் றவிவருமேகத்தை
நாணிப்போகச்செய்யு நானிலத்துள்-வீணி
லெரிகிரந்திமேக மிருக்குமோவூரிற்
பொரிபூண்டின்பேரைப் பகல்,

(இ-ள்) தாணிப்பூண்டு ரத்தபிரமேகத்தைநீக்கும பொரிபூண்டினல் அக்கினிகிடகிரந்தி அரித்திராமேகம் இவைநிற்கவாம், (உகூ௫)

குருவிச்சிப்பூண்டின்குணம்,

குருவிச்சிப்பூண்டெனவே கூப்பிட்டாற்போது
வருவிச்சகுஷ்டம் மலடும்-ஒருமிச்ச
மேகக்கரப்பான் விடமாந்தஞ்சிதரத்தம்
பேதமறப்போமொருகாற் பேசு,

(இ-ள்) குருவிச்சிப்பூண்டினல் பெருவியாதி மலடுசிலேஷ்மமேகம் கரப்பான் விஷமாந்தம் சிதரத்தகிரகணி இவைகெடும், (உகூசு)

தலைச்சுருளின்குணம்,

பாண்டகற்றுமெய்யிற் படர்குஷ்டநோய்விலக்கும்
நண்டவிருதயநோய் நீக்குங்காண்-நாண்டதமடை
முன்னேயொழித்துவிடு மூவாத்தருச்சுருளி
யென்னேயுலகி லிசை,

(இ-ள்) தலைச்சுருளிப்பூண்டு உடல்வெளுப்பு புண்டரீககுஷ்டம் இருதயநோய் ஆகந்துகசோபை ஆகிய, இவைகளைப்போக்கும், (உகூஎ)

கருப்புமணத்தக்காளியின்குணம்,

வெவ்வழலுமாறும் விரிசுரக்கம்மற்போகு
மொவ்வுசிசுவுக்கா முலவைவிடுஞ்-செவ்வி
யருமணிக்கச்சுமுலை யாயிழையேகேளாய்
கருமணத்தக்காளிதனைக் கண்டு,

(இ-ள்) அரியவிரத்தினக்கச்சணிந்த தனங்களையுடையபெண்ணே கருமணத்தக்காளியினல் பயித்தியவெப்பம் சுரசாதரோகம் வாததோஷம் இவைபோம் இதுபாலர்சிகிச்சைகளுக்குதவும், (உகூஅ)

சிவப்புமணத்தக்காளியின்குணம,

கந்தாளிப்புண்ணைக் காங்கையினுலுள்ளுக்குள்
வந்தவெக்காட்டைமிக மாற்றுங்காண்-முந்தனில

ஜயவினையையகற்றி விடுநற்புலத்துச்
செய்யமணத்தக்காளிச் சீர்

(இ-ள்) சிவப்புமணத்தக்காளியானது சுந்ததாளிவிரணம உட்சுரவேகம் வாதகபதொந்தம் ஆகிய இவைகளைப்போக்கும்-என்க, (உகூகூ)

நல்வேளையின்குணம்,

சிரநோய்வலிகுடைச்சல் தீராச்சயித்திய
முரநோயிவைக ளொழியு-முரமேவும
வில்வேளைக்காயும் விழியாய்பசிகொடுக்கும்
நல்வேளை தன்னை நவில்,

இதுவுமது,

நல்லவேளைப்பூண்டை நாடுங்காலவாதமும்போஞ்
சொல்லும்ஜயத்து டினை சோபையறும்-மெல்லமெல்லத்
தக்கவனலுமபித்துந் தாமெழும்புஞ்சாந்தமின்றி
சக்கரநோய்விஞ்சு மறி,

(இ-ள்) கரும்புவில்லேந்திய மதனைக்கோபிக்குங்கண்களையுடையபெண்ணே நல்வேளையினால் சிரஸ்தாபரோகம் சரீரநோவு குடைச்சல் சீதளம்-மார்புவலி-வாதகோடம்-கபகோபம்-வீக்கம்-இவைபோம் பசியுங்கூடும்-பித்தாதிக்கமும் ஜிகவாகண்டகரோகமும்உண்டாம், (௩௱)

நாய்வேளையின்குணம,

வாதமுடற்கடுப்பு வன்சூலைகரதிரைச்சு
லோதமிகுசீசமு மோடுங்காண்-போதெறிந்து
காய்வேளைக்காயுமவிழிக் காரிகைதயவையமதில்
நாய்வேளையுண்டு நவில்

(இ-ள்) புட்பபாணம்விடுத்து கோபிக்கநின்றமதனைச்சினக்குமவிழிக்காரிகையே நாய்வேளையால்-வாதப்பொருமல்-தேகக்கடுப்பு-குத்தல்-கர்ணாதரோகம-சிலேஷ்மபீன்சநோய் ஆகியஇவைபோமஎன்க, ()

கொள்ளுக்காய்வேளையின்குணம,

வாதமிக்கதென்பார்க்கும வாய்வறட்சியென்பார்க்கு
மீதுதந்தமூலநோ யென்பார்க்கு-மோதமுற்ற
சொள்ளுக்காதாரகபந் தோற்றியதென்பார்க்குமொரு
கொள்ளுக்காய்வேளைதனைக் கூறு

(இ-ள்) கொள்ளுக்காய்வேளையினால் வாதாதிக்கமும்-தாவரட்சியம் ச ந்தமூலநோயும்-சொள்ளுவடியச்செய்கின்றகபமும் போம். (கூாக)

கல்லுருவிப்பூண்டின் குணம்,

கல்லுருப்பூண்டுபல கட்டிகளையுங்காக்கும்
வல்லுதிரக்கட்டறுக்கும் வந்தபுண்ணை-வெல்லரிய
மேகத்தைவல்விடத்தை யீருதொடுக்கிடுமு
லோகத்தைச்சுத்திசெய்யு மோர்,

(இ-ள்) கல்லுருவிப்பூண்டு-பலகட்டிகள்- ரத்தத்தடிப்பு-கிரந்தி - பிர மேகம் சாப்பவிஷம்-இவைகளைநீக்கும் இரும்பைச்சுத்திசெய்யும். ()

எரிசாலை-குதிரைக்குளம்படி-இவைகளின்குணம்,

பூவில்எரிசாலைப் பூண்டுக்கிழுப்புவலி
கூவியழுஞ்சூலையனி லக்குறையுந்-தாவு
குதிரைநடைவாயுசந்நி கூறுதினவும்போங்
குதிரைக்குளம்படியைக் கூறு.

(இ-ள்) எருசாலைப்பூண்டுக்கு தனுஸ்தம்பவாதமும்சூலகுத்தலும்வா தகோபமும் நீங்கும் குதிரைக்குளம்படிப் பூண்டுக்கு அஸ்வவாதமுமச ந்நியும் தினவும் விலகும் இதனைக் குளித்திப் பூண்டுயென்பர். ()

சுளுக்குநாயகத்தின்குணம்-விருத்தம்,

சுளுக்குநாயகந் தோடஞ்சுரமொடு
சுளுக்கும்வாங்குந்-தொடுத்தகை-கால்களின்
சுளுக்குமேற்கறடுங் களைக்குஞ்சொன்னேஞ்
சுளுக்குமேல்வீழிரத்தந் துடைக்குமே,

(இ-ள்) சுளுக்குநாயகப்பூண்டு சப்ததோஷம் சுரமெனுவினால் வந்த தேகச்சுளுக்கு சுபாவக்கைகால்களின் சுளுக்கு ரத்தங்கட்டியசுறடுகளுக் கு மேலுண்டாகிற ரத்தத்தடிப்பு ஆகிய இவைற்றை நீக்கும். (கூாசு)

கிரந்திநாயகத்தின்குணம் வெண்பா,

சிதமறுமாவிடமுந் திரும்விழிநோயகலும்
பூதமொடுமருளும் போகுங்காண்-மேதினியுள்
ளாயகத்துப்புண்கிரந்தி யாலுமயிலேகிரந்தி
நாயகத்தினாலே நவில்.

(இ-ள்) மயில்போன்றசாயலையுடைய பெண்ணே கிரந்தி நாயகப் பூ ண்டினால் சீதளம் சர்ப்பவிஷம் கண்ணோவுபைசாசமுதலிய சங்கை தோஷம் உள்புண் கிரந்தி இவை நீங்கும், (கூாஎ)

பிளவைகொல்லிப்பூண்டின்குணம்,

பிளவைகொல்லிப்பூண்டிருந்தாற் புண்விரணம்பேரு
மளவையுறுமேக மடங்கு-முளமாந்தை
யாறுப்பிளவைகட்டி யெல்லாமுலர்ந்திடுமே
மாறுக்கவினணங்கே வாழ்த்து,

(இ-ள்) நீங்காவழகினையுடையபெண்ணே பிளவைகொல்லிப் பூண்டினால் சிறுசிரங்குகிரந்தி ஒழுக்குப்பிரமேகம் உளமாந்தைராஜப்பிளவைக்கட்டி இவைநீங்கும். (௩௱௮)

மலைதாங்கிப்பூண்டின்குணம் இதுவேவெற்பேந்தி

வாதமெண்பதுஞ்சுரமும் வாதசயித்தியமுங்
காதுவலிபாரங் கரந்திடுங்காண்-போதச்
சிலைதாங்கிநின்றநுதற் செந்திருவேநீயும்
மலைதாங்கிப்பூண்டை வழுத்து.

(இ-ள்) வில்வனையபுருவங்களையுடைய விலக்குமியை நிகர்த்தபெண்ணே மலைதாங்கிப்பூண்டுக்கு சமஸ்வாதரோகங்கள்ருட்சைவாதகம்தொந்தம் கர்ணசூலைதேகபாரிப்பு இவைநீங்குமென்க, (௩௱௯)

குடியோட்டுப்பூண்டின்குணம்.

புண்ணெடுகரப்பான் பொடிசிரங்குசில்விஷங்கள்
சண்ணிருமல்மேகவலி தண்மேக-மெண்ணிற்
படியோட்டுமாவிடமும் பலநோயுந்தீரும்
குடியோட்டுப்பூண்டால் குலைந்து

(இ-ள்) குடியோட்டுப்பூண்டினால் பெருவிரணம் காப்பான் சிறுசிரங்கு சிலவிஷங்கள் காசமேகவாயுசலப்பிரமேகம் சர்ப்பவிஷம் தந்தரோகம் ஆகிய இவைகள்விலகுமென்க. (௩௱௰)

ஆடுதீண்டாப்பாளையின்குணம்.

ஆடுதொடாப்பானைக் கக்கிருமிவன்சிலந்தி
நீடுகருங்குஷ்டம் நிறைகரப்பான்-ஆடிடச்செய்
யெண்பதுவாய்வு மிக்லகுஷ்டமுந்தீருந்
திண்பெறுநற்றுதுமாஞ் செப்பு.

(இ ள்) ஆடுதீண்டாப்பாளைக்கு மலகபரத்தாசயக் கிருமிகள் வாத்திச்சிலந்திப்பூச்சிவிஷம் கருங்குஷ்டம்கரப்பான்சருவவாத ரோகங்கள் கிரபகுஷ்டம இவை நீங்கும் பலமும்-சுக்கிலமும் உண்டாம், (௩௱௰௧)

குழிமீட்டான்குணம்,

கணத்திலெழுமாந்தத்தைக் காணுவெட்குட்டைக்
கணத்திலேவேளைக் களையும்-மணத்தமுலைப்
பாலைச்சுரப்பிக்கும் பாரிற்குழிமீட்டான்
காலைத்தொழுதுண்ணுங் கால்.

(இ-ள்) குழிமீட்டான்பூண்டு கணமாந்தத்தையும் உள்வெப்பத்தையு
ம் போக்கும் முலைப்பாலைச்சுரக்கும் படிக்குச் செய்யு மென்க, (௩௰௨)

செருப்படையின் குணம்,

செருப்படைக்குவாத மந்தஞ்சேர்வானமேக
மிருப்படிகொள்பொல்லா இசிவும்-விருப்படிக்குஞ்
சூலையொடுவாதகுன்மந் தோற்றுதொருநாளும்
வேலையொத்தகண்ணாய் விளம்பு,

(இ-ள்) வேலைநிகர்த்தகண் களையுடையபெண்ணே செருப்படைக்கு
வாதகேஷபம் மந்தாக்கினிவெள்ளைவீழ்தல் ஆகிருஷ்ணஸ்தம்பனவாதம்
சூலைகுன்மம் நீங்கும். (௩௰௩)

கல்தாமரையின் குணம்.

வீரியவிருத்திதரு மெய்க்குபலங்கொடுக்குங்
கூறியகுஷ்டிதனைக் கோபிக்கும்-காரியத்தை
நற்றும்பரமாக்கு நங்காயடுக்கலுறை
கற்றாமரையதனைக் காண்,

(இ-ள்) மலையில்முளைத்தகல்தாமரை சுக்கிலத்தையும் பலத்தையும்
விருத்தியாக்கும் குஷ்டம்நீக்கும் காரியத்தைச்செம்மையாக்கும், (௩௰௪)

கஞ்சாங்கோரையின் குணம்,

மாந்தக்கழிச்சலறும் மாந்தஞ்சுரங்கணம்போஞ்
சேர்ந்தமுலத்தின் றினவடங்கும்-பூந்தடக்கை
யன்னமேமேகமறுங் கஞ்சாங்கோரையினை
யுன்ன இருமலிலையோர்.

(இ-ள்) மலைநிகர்த்தவிசாலமானகைகளையும் அன்னம்போன்றநடை
யையுமுடைய பெண்ணே கஞ்சாங்கோரையால் மாந்தபேதி அசிர்ண
ந்தம சுரம் கணச்சூடு குதாங்குரதினைச்சல் பிரமேகம்காசம் இவைநீங்
கும். (௩௰௫)

கீழ்வாய்நெல்லியின்குணம்.

சீதமதிபித்தவட ஞ் செவ்விழிநோய்க்கூட்டம்
பூதமொடுபேயிரத்தப் போக்குகளும்-பூதலத்துட்
டாழ்வாய்ப்பணிந்தேகுந் தப்பாதுநற்புலத்துக்
கீழ்வாயெனுநெல்லிக்கே.

இதுவுமது.

கீழாநெல்லிக்குணந்தான் கேளாய்மதுமேகந்
தாழாக்காமாலைகளைச் சண்ணுந்*தா-தேழனலுந்
தொக்கினனலுந்தொலைக்குந் தொன்மேகம்போக்கிவிடுந்
தக்கவிரணங்கெடுக்குந் தான்.

(இ-ள்) கீழ்வாய்நெல்லிக்கு ஆமக்கட்டு அக்கினி கீடவிஷம் நேத்திரரோகங்கள் பூதமுதலிய சங்கைதோஷம் ரத்தாதிசாரம் மதுப்பிரமேகமூத்திரம் காமாலைசப்ததாது கதசுரம்சரும் தாதுவெப்பம் நாட்பட்டமேகம்புண் ஆகிய இவைகள்போகும்*காதுளமூ. (௩௰௭)

மயிர்மாணிக்கத்தின் குணம்.

மயிர்மாணிக்கத்தால் வளர்மேகம்போகுஞ்
செயிரானமேகவெட்டை தீருங்-கயரோகம்
மாவிரணம்போக்கஇதில் வல்லிரதஞ்சேர்த்தரைத்துத்
தாயுண்பாருண்டறிந்தோர் தாம்.

(இ-ள்) மயிர்மாணிக்கத்தினால் வளர்கின்றமேகமும் வெள்ளையும் க்ஷயமும்நீங்கும் இதில்முறைப்படி சூதஞ்சேர்த்துண்ண விரணம் ஆறும்

துளசியின்குணம்.

ஐயம்வயிறுளைச்சலஸ்திசுரந்தாகமும்போம்
பையசுரமாந்தப் பறக்குங்காண்-மெய்யா
வாயினரோசகம்போம்வன்காரஞ்சூடுள்ள
தூயதுளசிதனைச் சொல்.

(இ-ள்) கார்ப்புப்வெடிப்பும் உள்ள துளசியினால் கபதோஷம்வயிறளைதல் அஸ்திதாதுகதசுரம் அருசி இவைபோம். (௩௰௧)

செந்துளசியின் குணம்.

செய்யதுளசிவிஷந் தீர்க்குங்கபமறுக்கும்
வெய்யபூடிவிஷத்தை விண்ணேற்றுந் தையலரே

முத்தோஷத்துண்டா முரணேட்டுமெவ்வழியா
மெத்தோஷமும்போக்கு மெண்,

(இ-ள்) சிவப்புத்துளசி விஷம்சுபாதிக்கம் - அக்கினிகீடவிஷம் திரிதோஷத்தால் சனிக்கின்றபற்பலரோகங்கள் இவற்றைவிலக்கும், ()

கருந்துளசியின்குணம்,

இருமலொடுநெஞ்சி விழுப்புச்சுவாசங்
கிருமிசலதோஷங் கேவல்-மருமச்
சளிருட்சைசூலைவிஷஞ் சந்நியிவைபோக்குந்
தளிரார்கருந்துளசி தான்,

(இ-ள்) கருந்துளசி-காசம-தொண்டைக்குள் குறுகுறுவென்னும் ஒரு சத்தம் இரைப்பு-கிருமி நீர்கோவை இருமலால்வருங்கேவல்மார்புச்சளி சுரம்-குத்தல்விஷம-சந்நிபாதம் - இவைகளை - ஒழிக்கும் என்க. ()

நிலத்துளசியின்குணம.

நிலத்துளசிமாதர்தரு நீண்முலைப்பால்மந்தம
வலுத்தசுரமபித்தக்கண்மாற்றும-அலத்துகண
மாந்தசுரமபித்தசுர மாபெரியசீதசுரஞ்
சேர்ந்தோடச்செய்யுந் தெளி,

(இ-ள்) நிலத்துளசிமுலைப்பாலால்வருமந்தம்-வாதசுரம-பலபித்தநோய்கள்கணச்சூடு-மந்தசுரம-பித்தருட்டை-குளிர்ச்சுரம-இவற்றைநீங்கும

நாய்த்துளசியின் குணம்,

கபத்தொடுகுற்றிமல் காணுதொழிக்குஞ்
சபத்தைச்செய்முததோஷஞ்சாடும்-விபத்தழலைச்
சாய்த்துடலைப்போஷிக்குந் தாரணியிலுள்ளோர்க்கு
நாய்த்துளசியீது நவில்.

(இ-ள்) நாய்த்துளசியானது-கோழை-பொடியிருமல்-திரிதோஷமாகிய இவைகளைமாற்றும சரீரத்தைப்போஷணைசெய்யும் என்க, (கூஉக)

கல்துளசியின் குணம,

தாபச்சுரமுந்தனி வித்திரிதிகளுஞ்
சோபச்சிலவிஷமுந் தோற்றுவே கோபிச்சங்
குற்றுளசிலேஷ்மத்தா லூன்ற காசமபறக்குங்
கற்றுளசிப்பேருணாக்குங் கால்.

(இ-ள்) கல்துளசியால் தீச்சுரம் வித்திரிதிக்கட்டிநீர் வண்டுமுதலியசி லவிஷம் கோழையைத்தள்ளுகின்றசுபகாசம் இவைதீரும், (௩உ௪)

முள்துளசியின் குணம்,

எலிவிஷம்போம்வெட்டுண் டிருக்கும்விரணக்
கிலிவிடும்விஷங்கள்கிளைக்கா-துலவிவரு
மட்டுறச்சிவந்தமலர் மண்டபத்துள்வாழனமே
முட்டுளசிப்பேரா மொழி,

(இ-ள்) தேனையுடையசிவந்தமலராகிய மண்டபத்துள்வாழ்கின்றவன் னைபோல்பவளே முள்துளசியால் எலிவிஷம்வெட்டுப்புண் அற்ப விஷமும் போம், (௩உ௫)

கழுதைத்தும்பையின் குணம்,

அரையாப்புக்கட்டி யனிலமுதிரம்
பிரியாச்சிதக்கடுப்பும்பெருந்-தரையிற்
பழுதைக்கொள்ளாச்செய்ய பங்கயப்பெண்ணேகேள்
கழுதைத்தும்பைச்செடியைக் கண்டு,

(இ-ள்) குற்றமற்ற சிவந்ததாமரையில் வசிக்குமிலக்குமியனையபெண் ணே கழுதைத்தும்பையால் அரையாப்புக்கட்டி வாதநோய் ரத்தமுஞ் சீதமுங்கலந்துவிழலால் வருங்கடுப்பு ஆகிய இவைபோம், (௩உ௬)

நெய்ச்சட்டியின் குணம்-இதுவேசகதேவி தேவகந்தம்,

நெய்ச்சுட்டியென்றால் நிறையுமெய்யுட்சுக்கிலமும்
பொய்ச்சிட்டகண்ணொளியாம் பூவையரே-வெய்ச்சிட்ட
மேகமறுந்தீபனமாம் வெட்டையழலுந்தணியுந்
தாகமறும்பித்தமும்போந் தான்,

தே-இதுவுமது,

தாயழகுறப்புரியுஞ் சூதகந்தமாதிகளால்
வாயழுகிநாறுபுண்ணை மாற்றிவிடுந்-தீயழலை
நீக்கிவிறிநிம்பநெய்யை நெய்யாக்கிடும்வமனம்
போக்கிவிடுநெய்ச்சட்டிப் பூண்டு,

(இ-ள்) நெய்ச்சட்டிப்பூண்டு வீரியவிருத்தி நேத்திர ஒளி பசி அழ கு இவைகளையுண்டாக்கும் பித்தமேகம் வெள்ளை-உட்சூடுதாகம் பித்த கோபம் ரசகந்தகமுதலிய வற்றாற்பிறந்த வாய்ப்புண் அழற்சிவாந்தி இ வைகளைநீக்கும்-வேப்பெண்ணெய்க்குரிய கசப்பைவிலக்கும். (௩உ௭)

எழுத்தாணிப்பூண்டின் குணம்.

பழமலங்கள்சாறும் பருங்குடற்சிதம்போ
செழுமலச்சிதக்கடுப்புமேகு-மொழியாக்
கரப்பான்சொறிசிரங்குஞ் சாணுதகலு
முரப்பாமெழுத்தாணிக் கோர்,

(இ-ள்) எழுத்தாணிப்பூண்டுக்கு மலக்கட்டு குடலின்சிதளம் எழுகின்றமலச்சிதக்கடுப்பு கரப்பான்-புடைகிரந்தி ஆகியஇவைகள்போமென்க.

கொட்டைக்கரந்தையின் குணம்,

கொட்டைக்கரந்தைதனைக் கூசாமலுண்டவர்க்கு
வெட்டைதணியு மதி மேகம்போந்தூட்டச்
சொறிசிரங்குவன்கரப்பான் றேன்றுமலப்பை
மறிமலமுந்தாணிறங்கு மால்.

(இ-ள்) கொட்டைக்கரந்தைக்கு வெள்ளை ஒழுக்குப் பிரமேகம் சொறிசிரங்குகரப்பான் இவைநீங்கும் மறிப்பட்டமலமுஞ்சாரும், (கூஉக)

சிவகரந்தையின்குணம்,

வாந்தியரோசகத்தை மாற்றும்பசிகொடுக்குஞ்
சாய்ந்தவிந்துவைக்கட்டுந் தப்பாதே-ஏந்தழகைத்
தண்டா தறச்சேர்க்குஞ் சார்ந்தபரியளத்தைத்
தண்டாச்சிவகரந்தைதான்.

தே, இதுவுமது-விருத்தம்,

கந்தநாறு கரந்தையதன்குணம்
மந்தவாதங் கரப்பனைமாற்றிடுந்
தொந்தரோகந் துடைக்குமிருமல
மந்தநோயுந்தணிக்கு நம்மாணையே

(இ-ள்) மணமுள்ளசிவகரந்தை வாந்தியரோசகம் விந்துஷ்டம் டீணவாதம் கரப்பான்வாதாதிதொந்தம் காசம் அக்கினிமாந்தம் இவைகளைநீக்கும் சடராக்கினியையும்வனப்பையும் உண்டாகும், (கூகூ௰)

வெள்ளறுகின்குணம்-வெண்பா,

குன்மமொடுவாயுகுடல் வாதஞ்சூலையிடை
சென்மம்விடுத்தோடிச் சிதையுங்காண்-வன்மூலையா
யுள்ளூறுகிரந்திசொறி யொட்டியசிரங்குமறும்
வெள்ளறுகு தன்னை விரும்பு,

(இ-ள்) சொக்கட்டான் காயநிகர்த்தனங்களையுடைய பெண்ணேவெள்ளறுகினால் குன்மம்வாதப்பிணி வாதக்குடல் விருத்திகில் பிடிப்பு நரம்புகளைப்பற்றிய கிரந்தி தினவுசிறுசிரங்கு இவைபோம், (௩௩௨)

ஓரிலைத்தாமரையின் குணம்,

ஓரிலைத்தாமரையி னுற்றகுணத்தைக்கேளாய்
மார்பிற்பாலில்லாத மங்கையர்க்கு-மோரிற்
குடிக்கப்பாலுண்டாகுங் கோரவன்மேகம்
படிக்குளிருக்குமோ பார்,

(இ-ள்) ஓரிலைத்தாமரையை எலுமிச்சங்காயளவு அரைத்து - அரை ஆழாக்குப்பசுமோரில் இரண்டுவேளையும்-௬௰-நாள்கொடுக்கில் தனத்திற்பாலிலலாதமாதர்கட்குப் பால்சுரக்கும் வர்தமேகம் போகுமென்க,

ஓரிதழ்த்தாமரையின் குணம்,

தாதுவையுண்டாக்குந் தனிமேகத்தைத்தொலைக்கு
ம்ாதரவாமேனிக் கழகுகருஞ்சீதம்போஞ்
சீரிதழ்த்தாமரைவாழ் செய்யமடவனமே
ஓரிதழ்த்தாமரையை யுண்,

(இ-ள்) அழகுதங்கிய யிதழ்களையுடைய தாமரைப் புட்பத்தில் வசிக்கும் அன்னம்போல்பவளேஓரிதழ்த்தாமரைசுக்கிலத்தையுமசவுந்தரியத்தையும உண்டாக்குமமேகரோகத்தையுமசிரகணியையும நீக்குமென்க,

அந்தரத்தாமரையின்குணம இதுவே ஆகாயத்தாமரையாம,

அழுகிரந்திகுஷ்ட மடர்ந்தகரப்பான்
புழுவுறுமக்கூடு முதற்போகும-அழகாகு
மிந்திரநீலக்கருங்கணேந்திழையே யெப்போழ்து
மந்தரத்தாமரையா லாய்,

(இ-ள்) அழகுபொருந்திய இந்திரநீலமணியை நிகர்த்தகரிய கண்களையுடையபெண்ணே அந்தரத்தாமரையால் அளிந்தவிரணமுமகுஷ்டமகாப்பானும மார்புக்குள்கட்டுகின்ம கிருமிக்கூடு முதலியசில நோய்களுமபோமென்க, (௩௩௫)

பற்படாகத்தின் குணம,

சீதவாச்சுரமுந் தீராத்தாகமுமபோம
போதவிருகண்குளிருமபொய்பலவே-பூதலுத்துள்
வற்பாமபயித்தியமு மாபித்தமுங்தொலையும
பற்படாகத்தையுண்ணிப் பார்,

(இ-ள்) பற்பாடகத்துக்கு சீதவாதசுரம் பித்தகாசரோகம உன்மாதம் பித்ததோஷம் இவைபோம் விழிக்குக் குளிர்ச்சியுண்டாம். (கூகஎ)

திருநீற்றுப்பச்சை உருத்திரச்சடை இவைகளின்குணம்

திருநீற்றுப்பச்சை கிலேஷ்மசர்த்திதனை
விரிநீற்றைப்போலாக்கு மெய்யேபெரிய
சுரத்திரத்தவாந்தி சுரமருசிநில்லா
வுருத்திரச்சடைக்கே யுரை.

(இ-ள்) திருநீற்றுப்பச்சை கபவாந்தியைநீக்கும் உருத்திரசடைசுரத்தாலாகிய உதிரவம்மை பித்தசுரம் அரோசகம இவைகளை நீக்கும்,

மாசிப்பத்திரியின் குணம்,

புளிப்புந்துவர்ப்பும் பொருந்தியிருந்தாலுந்
தளிர்த்தகாளைக் கனலைச்சாடு-நெளிந்த
வலிதனைவிட்டோட்டு மடமாதேநீகேளாய்
மலிமாசிப்பத்திரிதான் வாழ்த்து,

(இ-ள்) இளமைபொருந்தியபெண்ணே நீகேட்பாயாக புளிப்புந்துவர்ப்பு முள்ள மாசிப்பத்திரி வாதரோகத்தையும் உஷ்ணத்தையும் ஐவகை வலியும்போக்கும், (கூகஅ)

மருக்கொழுந்து இவைகளின் குணம்.

கண்ணிலுறுதோடங் கபஞ்சூடிவைபோக்கும்
ஒண்ணனல்கைப்புக்காரம் உள்ளமரும்-மண்ணிற்
கொழுந்தமருக்குணத்தைக் கொண்டிருந்தபோழ்துந்
தழைந்தபசிவண்மைதருஞ் சாற்று.

(இ-ள்) கைப்பும் காரமும் உஷ்ணமும் உள்ளமரு ஆனது நேத்திரபடலம்கபதோஷம் உட்சூடு இவைகளை நீக்கும் அந்தமருவின்குணத்தைப் பெற்றகொழுந்து மிகுபசியையும் பலத்தையுங் கொடுக்கும், (கூசo)

செடியின்வகை முற்றியது,

## கொடிவகை.

ஆதொண்டையின் குணம்,

மண்டைக்குடைச்சலுடம வாயுவழிப்பீநசம்போந்
தொண்டைக்கபமுந் தொலையுங்காண்-மிண்டுசெய்யும்
வாதக்கடுப்பகலு மாதேஆதொண்டைக்குப்
போதப்பலபிணிபோம் போம்,

(இ-ள்) ஆதொண்டையினால் மண்டைகுடைச்சல் வாதபீநசம் நெஞ்சிற்கபாதிக்கம் துண்பந்தருவாதக்குடைச்சல் முதலிய பலரோகங்களும் போம், (௬௪௧)

பெருங்கட்டுக்கொடி-சிறுகட்டுக்கொடி-இவைகளின் குணம்.

பெரியகட்டுக்கொடிக்குப் பேசுபெரும்பாடு
மரியுமலபேதியும்போ மப்பா-லுரிய
சிறுத்தகட்டுக்கொடிதான் சீதரத்தநீக்கு
மிறுத்தபுனலைக்கட்டு மெண்,

(இ-ள்) பெருங்கட்டுக்கொடியால் பெரும்பாடும் மலக்கழிச்சலும் போம் சிறுகட்டுக்கொடி-சீதரத்தையும் மேக நீரையும் கட்டும். ()

சிறுகுறிஞ்சாக் கொடிக்குணம்,

சிறுகுறிஞ்சாவாதமொடு சீதத்தைநீக்கும்
மறுவுதிரமில்லாத மாதர்க்-குறுமுலகி
லத்திசுரமு மகலாக்கடிவிடமுந்
தத்தியகலத்தகர்க்குந் தான்,

இதுவுமது,

வாதசுரஞ்சந்நிகர மாருக்கபச்சுரமும்
பூதலம்விட்டோடப் புரியுங்காண்-மாதேகே
ளக்கரநோய்தீர்க்குமதி சுரந்தாகம்போக்குந்
தக்கசிறுகுறிஞ்சா தான்,

(இ-ள்) சிறுகுறிஞ்சாவாதவிஷம் ஆமம்'மாதாந்த உதிரச்சிக்கல் அஸ்திகதசுரம் காணாக்கடிவிஷம் வாதசுரம் சந்நிபாதசுரம்-கபசுரம்பித்த ஜிக்வாகண்டகம் சந்ததசுரம் தாகரோகம் இவைநீங்கும், (௬௪௬)

இண்டின்குணம இதுவேபுனற்றண்டு,

பீநசத்தைப்போக்கும் பெருகியதோர்நீரேற்றந்
தானசிக்கச்செய்யுமது சத்தியங்காண்-வானசைக்கும்
மண்டைக்குடைச்சலொடு*வாய்ச்சந்நியும்விலக்கும்
பண்டையுற்றவண்டிதனைப் பார்*வாய்முகம்,

இதுவுமது,

சட்டுவாதங்களறுங்காரிகையேமேகமபோ
முட்டுவாதங்களெல்லா முன்பொழியுங்கிட்டும்
[illegible]லினறுந்தண்டிக்குப் போரினைசூலை
[illegible]லிலெழு[illegible]

(இ-ள்) இந்தக்கொடியினால் பீநசம் சகலதோஷம் கபாலக்குடைச்சல் முகசந்நி வாதக்கடிப்புபிரமேகம் சூதவாயு சுவாசம் இலைபிடிப்பு தீச்சுட்ட விரணம் ஆகிய இவைகள்போமென்க. (௩௪௪)

கர்ப்பூரவள்ளியின்குணம

காசவிருமல் கதித்தம்சூரிஐயம
பேசுபுறநீர்க்கோவை பெருங்காண்-வீசுராங்
கற்பாறைபொத்துநெஞ்சிற் கட்டுகபம்வாதமும்போங்
கர்ப்பூரவள்ளிதனைக் கண்டு

(இ-ள்) கர்ப்பூரவள்ளியினால் காசம் என்கிற பொடியிருமல் அம்மைக்கொப்பிளம்-சிலேஷ்மதோஷம் புறநீர்க்கோவை சூட்சைமார்பிற்கட்டு கபம்வாதக்கடுப்பு ஆகிய இவைகள்போகுமென்க, (௩௪௫)

முசுமல்லிகையின் குணம்,

வீக்கமறுங்காமாலை விட்டோடுஞ்சோமைவிடு
நிக்கமறவிம்முமூலே நேரிழையே-ஏய்க்கும்
விடபாகமேகமும்போம் வீரியமுமுண்டாம
படர்முசுமல்லிகைக்குப் பார்,

(இ-ள்) மார்பிலிடமில்லாமல் விம்மியதனங்களையுடைய பெண்ணே முசுமல்லிகையினால் சோமைகாமிலம ஆகந்துகவீக்கம் விஷபாகரோகம பிரமேகம இவைபோம சுக்கிலவிருத்தியாம, (௩௪௬)

ஊசிமல்லிகையின் குணம,

மாந்தகணமபொருமல் வாராதுமைந்தர்களுக்
கூர்ந்தேகயிரத்தகண மோடுங்காண்-கூந்தன்முடி
மானேசுரந்தணியும் வாய்காதவீக்கமபோங்
கானூசிமல்லிகைக்குக் காண்,

(இ-ள்) கூந்தலைமுடிக்கின்ற மான்போலுங் கண்களையுடையபெண்ணே காட்டிலுள்ள ஊசியமல்லிகைக்கு கண்மாந்தம வயிற்றுப்பிசம சிசுக்களுக்குண்டாகின்றஉதிரசமபவப்பிணிகள்சுரமசோமைஇவைபோம

மிளாரணையின்குணம,

ஐயமகற்றுமதிரணி வாதமபோக்குஞ்
செய்யபித்தசூலைதனைத் தீர்க்குங்காண்-மையவரு
மிளையிருமலிளைப்புப் பிரங்கொலைக்கு
நாளுமிளாரணை நன்று,

(இ-ள்) மிளகரணை கபவிருத்தி அசீரணவாயுபயித்திய சூலை க்ஷயம் காசம் சுவாசம் வயிற்றுப்பிசம் ஆகிய இவைகளை நீக்குமென்க, (கசஅ)

நாய்பாகலின் குணம்,

நாய்ப்பாகலின்குணத்தை நன்றாயுரைக்கக்கேள்
மெய்ப்பானபிரசத்தை மாற்றுங்காண்-தீப்பாயி
லிங்கமதைச்சுத்திசெய்யு நேரிற்பாடாணத்தைப்
பங்கமறச்சுத்திசெய்யும் பார்,

(இ-ள்) நாய்ப்பாகல் பிரசம் நீக்கும் சாதிலிங்கத்தையும் பாஷாணத்தையும் சுத்திசெய்யுமென்க, (கசக)

பிரண்டையின்குணம் இதுவேவச்சிரவல்லி

பிரண்டையைநெய்யால்வறுத்துப் பின்பரைத்துமாதே
வெருண்டிடாதேற்று விழுங்கிலரண்டுவரு
மூலத்தில்வடங்கு மூலவிரத்தமறும்
ஞாலத்தினுள்ளே நவில்,

இதுவுமது,

மந்தமவயிற்றுவலி வாயுவதிசாரமுளை
சேர்ந்தமூலங்கபமுட செம்புனற்போக் கோய்ந்தநடை
யெல்லாமகலு மெழுப்புமதிகபசி
மல்லார்பிரண்டையுண்டு வா,

(இ-ள்) பெண்ணே பிரண்டையை நெய்விட்டுவறுத்து அரைத்துக் கொட்டைப்பாக்குப் பிரமாணம் எட்டுநாள் அந்திசந்திசாப்பிட ஆசனத்தினவும் ரத்தமூலமும் ஒழியும் இதைப்பற்பல ஔஷதங்களாகப் பிரயோகிக்கில் அக்கினிமந்தம் குன்மம் வாதாதிசாரம் மூளைமூலம்கபதோஷம் ரத்தபேதி காலசந்தி இவை நிவர்த்தியாம் ஜடராக்கினிவளரும்,

களிப்பிரண்டையின் குணம்,

ஐயமறாமபித்த மணுகாமலோடிவிடுக்
கைபலார்போகமிகச் சாருங்காண் பையக்
கரப்பான்விலகும் கடிசிலந்தியுமபோ
மூரப்பாக்களிப்பிரண்டை யுண்,

(இ-ள்) களிப்பிரண்டையினால் கபவிகுணம் பித்ததோஷம் கரப்பான் காணாக்கடிசிலந்திவிஷம் இவைநீங்கும் வீரியவிருத்தியுண்டாம், ()

தீம்பிரண்டைபுளிப்பிரண்டை-இவைகளின்குணம்,

தீம்பிரண்டைதன்னாற் செரியாமந்தம் ஆமந்
தேம்பிளைப்புவிக்கலோய் தின்வாதம்-போம்பலரும்
பார்க்குமபுளிப்பிரண்டை பாண்டுரரோய்குன்மகயம்
போக்குமதுசூடாம் புகல்.

(இ-ள்) தித்திப்புப்பிரண்டையால் செரியாமந்தம்-சீதபேதி-அதிசொட்டாவி சுவாசவிக்கல் சிலேஷ்மாதிக்கம் வாதகோபம் ஆகியஇவைபோம்-உஷ்ணகுணமுள்ள புளிப்புப்பிரண்டை சரீரவெளுப்பு மார்புநோய் வயிறுவலி சயம் இவைகளைவிலக்கும்-என்க, (கூ௫௫)

நறுந்தாளியின்குணம்,

நாவுக்ஷமரும் நாபிமூலங்களிலுட்
டாவிவருமிரணஞ் சாத்தியமாம்-கூவலிடு
மெய்பழலுமோதணிபு மேகமறும்வீரியமா
மூய்யவெனினற்றளி யுண்

(இ-ள்) நறுந்தாளியினால் நாதொண்டை-மார்பு உந்திமூலம்இவற்றின் புண்கள் தேகவெப்பம்-பிரமேகம்-இவைபோம்-சுக்கிலமுண்டாம், ()

பேய்ப்பாற்சொரியின்குணம்,

பேய்ப்பாற்சொரியினாற் பேதிமுதல்வெப்பகலும்
வாய்ப்பார்கடுப்புதிர மாறுங்காண்-போய்ப்பாய்த்
துருவாமலுள்ளலேச்கு மோங்கயிற்கண்மாதே
பொருவார்பயித்தியமும் போம்,

(இ-ள்) கூரியவேல்போன்ற கண்களையுடையபெண்ணே பேய்ப்பாற்சொறியால் அதிசாரஉட்சூடு ரத்தகிரகணிபித்ததோஷம் ஆகியஇவைகள்போகுமென்க, (கூ௫எ)

குதிரைவாலியின்குணம் இதுவேமிரியார்குந்தல்,

கடுப்புசழிச்சல் கனன்றசுரதாக
மிடுப்புவலிவாத மிவற்றோ-டுப்ப
விதிரைவாவென்றழைக்கு மேகமும்போங்
குதிரைவாலிக்குக் குலைந்து

இறுவுமது

கர்சம்பருட்படுவன் கண்மயக்கமீளைபொடு
வாசக்கமற் தழலாய் மாந்தமும்போம்-பேசக்

தரியாதுவாதகபந் தானேசொறிபோம்
மிரியார்குந்தற்கு விரைந்து,

(இ-ள்) வாசம்பரிமளிக்கும் கூந்தலையுடையபெண்ணே குதிவாசியால் மூலக்கடுப்பு-அதிசாரம்-சுரவேகத்தால்வந்தநாவறட்சி- சகனுவிருகவாதம்-பிரமேகம்-இருமல்கட்டி படுவன்நேத்திரமங்கல் கோழை அக்கினிமந்தம் வாதகபதொந்தம் தினவு ஆகியஇவைகள் நீங்குமென்க,()

பவளக்குன்றிக் கொடியின்குணம்,

பவளக்குன்றிக்கொடிக்குப் பற்றிநின்றமேகங்
கவிழிரத்தபித்த கபமு-நவமாஞ்
சொறிகரப்பான்புண்கிரந்தி தோலோர்கடுவன
மறுகரப்பான்போமே மலைந்து,

(இ-ள்) செக்குன்றிக்கு வெள்ளைரத்தபித்தம்-க்ஷயம்நமைக்கரப்பான் விரணம்சிரங்கு சருமக்கடுவன் அழுக்குக்கரப்பான் இவைபோம், ()

முசுட்டையின்குணம்,

மாதேமுசுட்டையது வாதமோடையத்தைத்
தீமேபுரிநீரைத் தீர்க்குங்காண்-வேதனைசெய
வன்மலத்தைத்தள்ளும் வறட்சிசொறிசிரங்கைச்
சன்மமறப்போக்கு நிசந்தான்,

(இ-ள்) பெண்ணேமுசுட்டையானது வாதகோபம் - கபதோஷம்பிரமேகநீர்தினவுடை சிறுசிரங்கு இவைகளைநீக்கும் மலத்தையிறக்கும்,

பொன்முசுட்டையின்குணம்,

வாதமொடுபித்தத்தை மாற்றுமேமாநிலத்திற்
சீதமகற்றுநதின் வடக்கு-மாதேகே
ளுண்டிக்கும்வாசனையா மோங்கிவளரனலைக்
கண்டிக்கும்பொன்முசுட்டை காண்

(இ-ள்) மாதேகேள் பொன்முசுட்டை வாதவலிமயக்கம் ஆமம்நமைச்சல் உட்சூடுஇவைநீக்கும் இதனாலுணவில்மணமுண்டாம், (கூசஉ)

நஞ்சறுப்பான்பூண்டின்குணம்-இதுவேநஞ்சுமுறித்தான்,

தொடுநஞ்சுநாவாரத் துய்க்குநஞ்சுமற்று
ரிடுநஞ்சுத்தாவரநஞ் சேறிப்-படுநஞ்சுங்
குண்டடனேகாதோ குயின்மொழியாய்நஞ்சறுப்பான்
பூண்டிதனைத்தேயெடுக்கும் போது,

(இ-ள்) குயில்போலினியமொழியாளேநஞ்சறப்பான்பூண்டினல்கீட சர்ப்பம் தீண்டுதலாலும் தானேநுகரலாலும் இடுமருந்தாலும பாஷாணங்களாலும் வியாபித்தவிஷம்தீரும், (கூகூக)

நீர்மேல்நெருப்பின் குணம்,

வாதமகாரோகம் வாரினுங்கறையல்கி
மீதடாவன்றிமிரே மேவுகினு-மோதிரிய
சீர்மேனிலம்பரவு தெய்வமடமயிலே
நீர்மேனெருப்பை நினே,

(இ-ள்) தெய்வத்தன்மைபொருந்தியமயில்போன்றசாயலையுடையபெண்ணே நீர்மேல்நெருப்பினல் மகாவாதரோகமும் ரத்தக்குறைவினல் பிறக்கின்ற திமிர்வாதரோயும்விலகும்-என்க, (கூகூச)

முடக்கற்ருன்குணம்,

சூலைப்பிடிப்பு சொறிசிரங்குவன்கரப்பான்
காலைத்தொடுவளியுங் கனமலமுஞ்-சாலக்
கடக்கத்தானேவிடுங் காசினியைவிட்டு
முடக்கத்தான்றன்னை மொழி,

(இ-ள்) முடஅகற்ருன் மூலியால்-கீல்பிடிப்பு-சினைப்பு-கிரந்திகரப்பான் பாத்ரகவாதம்-மலக்கட்டு ஆகிய இவைபோகும்-என்க, (கூகூரு)

கொல்லங்கோவையின்குணம்,

சூலைபாண்டுதைதிரி தோஷமக்கிவெப்புகண்ட
மாலைகுடலின்வலி மாகுஷ்ட-மாலவிஷ
மூட்கரப்பான்மெய்யுரிப்பு முண்டோகொல்லங்கோவை
கைக்குளிருக்கவின்னுங் காண்,

(இ-ள்) கொல்லங்கோவையால் குலைவலிசரீரம் வெளிறல்சிலவாயுதிரிதோஷம் அக்கிப்புண்-உட்சூடு-கண்டமாலை-ஆந்திரபித்வாதம்- பாமாகுஷ்டம மகாவிஷம் கரப்பான்-சமைச்சல்ஆகிய-இவைபோம், (கூகூகூ)

கற்கோவை வரிக்கோவை அப்பைக்கோவை செங்கோவை

அருங்கோவை இவைகளின்குணம்,

வீக்கமகற்றுநஞ்சை வீட்டுநீர்ப்பேதிதரும்
போக்குமதுவைய்மூற் புண்ணொழிக்குத் தேக்குறுநற்
கோவைவரிக்கோவையப்பைக் கோவைசெங்கோவைகருங்
கோவைமுறையேயுணர் குணம்,

(இ-ள்) இனிப்புள்ளகற்கோவை சோபையையும் வரிக்கோவைவிஷத்தையும் அப்பைக்கோவை நீரடைப்பையும் செங்கோவை மதுநீரையும் கருங்கோவைமேகவிரணத்தையும்நீக்கும் தேக்குஇனிப்பு, (ஙகூஎ)

நரிப்பயிற்றங்கொடியின்குணம்,

நரிப்பயற்றங்கொடிக்கு நாடாதுபித்தந்
தரிப்புற்றஐயமெல்லாந் தாழுமிருப்பொழிக்கு
மேகவெட்டைபித்தவெட்டை மீளாக்கரப்பனிவை
யாகம்விடுத்தோடு மறி,

(இ-ள்) நரிப்பயற்றங்கொடிக்குப் பித்தகோபம் கபரோகங்கள்பிரமேகவெள்ளை அரித்திர மேகம் கரப்பான் இவைகள்போகும், (ஙகூஅ)

மூக்குரட்டையின்குணம்,

சீதமகற்றுந்தினவடக்குங் காந்திதரும்
வாதவினையை மடிக்குங்காண்-பேதி
கொக்குமதையுண்டாக்காற் கோமளமேபித்த
மடுக்குமேமூக்குறட்டை யாய்,

(இ-ள்) அழகியபெண்ணே மூக்குறட்டை ஆமம்நமைச்சல்வாதநோய் இவைகளைநீக்கும் அழகையும்விரோசனத்தையும் பித்தப்பிணியையும் உண்டாக்கும், (ஙகூகூ)

தே, வெள்ளைச்சாறணையின்குணம்,

வித்திரிதிமூலம் விழிப்படலமார்புநோய்
தத்துசுவாசந் தனிக்கருப்பை-யுற்ற
கருச்சிதறச்செய்குஇகவாதமும்போம்
விருச்சிகத்தின்பேரை விரி,

(இ-ள்) விருச்சிகம்என்கிற வெண்சாறணையால் வித்திரிதிக்கட்டி மூலவாயுகண்படலரோகம் நெஞ்சுநோவு சுவாசரோகம் கருபத்தைச்சின்னப்படுத்துகின்ற சூசிகாவாதம்ஆகியஇவைபோம்என்க, (ஙஎ0)

தே, பொன்னாங்காணியின்குணம்.

காசம்புகைச்சல் கருவிழிநோய்வாதமனற்
றேகமயிலிங்கங் குதாங்குரநோய்-பேசிவையா
லென்னாங்காணிப்படிவ மேமமாஞ்சேப்பலென்னை
பொன்னாங்காணிக்கொடியைப் போற்று,

(இ-ள்) பொன்னாங்கண்ணியினால் விழியைப்பற்றியவாதகாசம் தும்பிரரோகம் கிஷ்ணமண்டலரோகம் வாததோஷம் தேகச்சூடு பிலீகம் மூலரோகம் இவைபோம் சரீரத்தில் பொன்னிறம் உண்டாம். (கூஎரு)

தே, புனற்றண்டின்குணம்,

கபவமன*நாடிக்கமலங்காப்ப
னிபமறுகளத்தொலியு நீங்காச்-சுபமா
ரனற்றண்டைக்காட்டா வற்றசுரமுமேகும்
புனற்றண்டைச்சிந்திக்கும்போழ்து*நாடி-நாசிமகலம்சலம்,

இதுவுமது.

கட்டுவரதங்கொடிய கான்மேகங்லிலகடொறு
முட்டுவாதஞ்சூலை மூடிரணம்-விட்டுவிடுந்
சொல்லவொண்ணாவின்ப சுகமளிக்குமாரமிர்தே
நல்லபுனற்றண்டினால்,

(இ-ள்) சொல்லவொண்ணாவின்ப சுகமளிக்கும் அமுதனையாளேபுனற்றண்டுக்குச் சிலேஷ்மவாந்தி நாசியால் வீழ்கின்றசலம்கரப்பன் காரணமின்றி அடைபட்ட கண்டதொனி நாளுநன்மைவிளைக்கின்ற பசியின்வரம்பைக்காட்டாத சீதசுரம் கட்டுவாதம் வாதப்பிரமேகம் சந்திகவாதம் சூலைநோய் கிரந்தி இவைபோம். (கூஎசு)

அம்மான்பச்சரிசியின் குணம்,

காந்தல்விரணமலக்கட்டு மேகத்தடிப்பு
சேர்ந்ததினவிவைகள் தேசமவிட்டுப்-பேர்ந்தொன்று
யோடுமம்மான்பச்சரிசிக் குண்மையினத்துடனே
கூடுமம்மானொத்தகண்ணாய் கூறு,

(இ-ள்) இனத்துடன் சஞ்சரிக்குமான் விழிகளை நிகர்த்தகண்களையுடையபெண்ணே அம்மான் பச்சரிசிக்கு எரிபுண் மலபந்தம் பிரமேகக்கசிவு சரீரத்தடிப்பு நமைச்சல் ஆகிய இவைகள்போகுமென்க. (கூஎஎ)

தே, சிவப்பு அம்மான் பச்சரிசியின் குணம்,

அரத்தவம்மான்பச் சரிசியெனுமூலிக்
குரத்தவன்மேகமொழியுங் கரத்தொரு-பொடிய
விந்துவுமுண்டாகுமினும் வெண்டாதுவுமா
மிந்துவினும்வாண்முகத்தா பெண்,

(இ-ள்) சந்திரன்போன்ற வொளிபொருந்திய முகத்தையுடைய பெண்ணே சிவப்பு அம்மான் பச்சரிச்சி மூலிக்கு வாதப்பிரமேகம் போகும் சுக்கிலதாது விருத்தியாம், இதனால் வெள்ளி பற்பமாகுமென்க, ( )

தே-சிறு அம்மான்பச்சரிசியின் குணம்,

பாதுபுகல்வேனமுதா லங்கிகருமெழுகாந்
தீதுபுரிமேகவெப்பந் தீருமினு-மோதுங்காற்
றேரம்மான்கீரமொக்குந் தின்னுதையஞ்செம்மைதிறச்
சீரம்மான்பச்சரிசிச் சீர்,

(இ-ள்) பாலுள்ளசிறு அம்மான் பச்சரிசியால் அங்கிகரு என்கிறசாதிலிங்கம் மெழுகாகும் மேகவுஷ்ணம் நீங்கும் நல்லபசும்பாலுக்கொக்கும் இதனை உதயகாலந்தோறும் உண்பாயாக என்க, (௱௭௯)

பொடுதலையின்குணம்,

பொடுதலையின்பேருரைத்தாற் போராமப்போக்கு
மடுதலைச்செய்காசமு மடங்குங் கடுகிவரு
பேதியொடுசூலைநோய் பேசரியவெண்மேகம்
வாதமும்போமெய்யுரக்கும் வாழ்த்து

(இ-ள்) பொடுதலையால் சீதபேதி இருமல் அதிசாரம்சூலைநோய்சிலேஷ்மப்பிரமேகம் வாதநோய் இவைபோம்தேகம்பலக்கும், (௱௮௰)

கொத்தான் குணம்,

சித்தரறிவார் செறிகுழலாய்நீகேளாய்
கொத்தான்மிகக்குளிர்ச்சி கொண்டக்காற்-சுத்தப்
பிறமேகமுட்கிரிச்சம் பித்தமிளைப்பு
மறுமேதலரு தறி,

(இ-ள்) நெருங்கியகூந்தலையுடைய மாதே அதிககுளிர்ச்சியுள்ளகொத்தானுக்கு ஒழுக்குப் பிரமேகம் மூத்திரக்கிரிச்சம் பித்தநோய் அயர்ச்சி ஆகிய இவைநீங்குமென்க, (௱௮௧)

நல்லநெருஞ்சிலின் குணம்,

நல்லநெருஞ்சிலது நாளுங்கிரிச்சரத்தை
வல்லசிரமணலைமாற்றுங்காண் மெல்லியலே
மாநிலத்திற்கல்லடைப்பும் வாங்காதநீர்க்கட்டுங்
கூனுமெய்வாதமும் போக்கும்,

இதுவுமது,

மேகவெட்டைநீர்ச்சுருக்கு வீறுதிரிதோஷம்புண்
வேகசுரதாகவெப்பை விட்டோட்டும் போகந்
தருஞ்சின்முதலேமொழித் தையலேநல்ல
நெருஞ்சிலதனை நினை,

(இ-ள்) இன்பத்தைத்தருங் குதலைமொழியாளேநல்லநெருஞ்சில்சொட்டுமூத்திரம் சுரவெப்பம் அஸ்மரிரோகம் நீரடைப்புமூடவாதம்புரமேகவெள்ளை மூத்திரகிரிச்சரம் திரிதோஷகோப விரணம் சுரதாகம உஷ்ணம் இவைகளை நீக்கும, (௧௮௨)

யானைநெருஞ்சிலின் குணம்,

மேகத்தைப்போக்கிவிடும் வெண்குஷ்டந்தானொழிக்குந்
தேகத்திற்கல்லடைப்பைத் தீர்க்குங்காண்-மேனிதனி
தேனையரும்பாகைத் திருத்துங்கிளிமொழியே
யானைநெருஞ்சிலது.

இதுவுமது,

யானைநெருஞ்சிலதுசீதளமாகும்
மானேயெலும்புருக்கி மாற்றுங்காண்-மேனிதனி
லுள்ளவெரிச்ச லுழலையுட்டாகமொடு
தள்ளுபித்தமும்போகுந் தான்,

(இ-ள்) தேனையும் பாகையும் திருத்துமொழியாளே குளிர்ச்சியுடைய யானை நெருஞ்சில் வெள்ளைவிழல் வெண்குஷ்டரோகம் அஸ்மரி அஸ்திசிராவரோகம் தேகயெரிவு உழலைதாகம பித்தமயக்கம் ஆகிய இவைகளைப்போக்குமென்க, (௧௮௩)

செப்புநெருஞ்சில் குணம்,

செப்புநெரிஞ்சில் திரிதோஷம்போக்கிவிடும
வெப்புமுதலனைத்தும் வீட்டுங்காண்-செப்பரிய
சுக்கிலமேகம்போக்குந் தொல்லையனல்மாற்றும்
மிக்குமருந்தாம் விரி,

(இ-ள்) செப்புநெருஞ்சில் திரிதோஷம் சுரமுதலியநோய்கள் சுக்கில மேகம் நீடித்த உட்சூடு ஆகிய இவைநீங்கும் நல்லமருந்தாம். (௧௮௪)

தே, பேய்ப்புடலின்குணம்,

பித்தசுரஞ்சீதசுரம் பிரிக்குங்காமாலை
யுற்றமகுரியமுற்றுாக நித்தியமுந்

காய்புடலையன்னக் கவிழ்க்கின்றபித்தமுமபோம
பேய்ப்புடலையுண்பாரைப் பேணு

(இ-ள்) பேய்ப்புடலால் பித்தகபசுரங்கள் - காமாலைம்சூரிகை தாகம் தேகங்காய்ப்பேறும்படி தள்ளுகின்ற மயக்கம் இவைகள்போம், ()

தே, வல்லாரையின்குணம்,

அக்கரநோய்மாறு மகலும்வயற்றிழிவு
தக்கவிரத்தக்கடுப்புத் தானேகும்-பக்கத்தி
லெல்லாரையும்மருந்தென் றேயுரைத்துநன்மனையுள்
வல்லாரையைவளர்த்து வை

(இ-ள்) வல்லாரையினால் பித்தஜிகவண்டகரோகமும் மலக்கழிச்சலும் ரத்தகிரணியால்பிறக்கின்றகடுப்பும-நீங்குமென்க (கூஅசா)

பிரமியவழுக்கையின்குணம்,

கீலின்பசையற் கினைத்தவலிவீக்கங்
காலின்பிடிப்பொடுகை காலெருவு-மேலிலெழு
வாதத்தாநோவு மலக்கட்டுஞ்சோபையும்போஞ்
சீதத்தாஞ்சப்தலைக்குத் தேர்,

(இ-ள்) சப்தலை என்கிற பிரமியவழுக்கைக்குக் கீல்களின் கபம்விருத்தியடைவதாற்பிறந்த வலிவீக்கம் கால்பிடிப்பு கைகால்எரிவு வாதக்கடுப்பு மலபந்தம்சோபை ஆகிய இவைகள்போகுமென்க. (கூஅஎ)

தே, கையாந்தகரையின்குணம்-இதுவே கரசனாங்கண்ணிகரியசாலை,

குறக்கம்மற்காமாலை குட்டமொடுசோபை
யுறப்பாண்டுபன்றோ யொழியு-நிறச்சொன்ன
மெய்யாந்தகரையொத்த மீளியண்ணுமற்புலத்துக்
கையாந்தகரையொத்தக் கால்,

(இ-ள்) கையாந்தகரையால் சுரசாந்தரோகம்-காமிலம்-புண்டரீக்குஷ்டம்-வீக்கம்-பாண்டுதந்தரோகம் ஆகியஇவைபோம தேகத்திற்பொற்சாயலும் யாளிக்குச்சமதையானபலமும உண்டாகுமென்க, (கூஅஅ)

பொற்றலைக்கையாந்தகரையின்குணம,

பொற்றலைக்கையாந்தகரை பொன்னிடமாக்குமுடலை
சுத்தமுறக்கட்குச் சுகங்கொடுக்குஞ்-சிற்றிடையாய்
சிந்தூரங்கட்காகுஞ் சிந்தைதனைத்துலக்கு
முந்திவளர்குன்ம மொழிக்கும,

(இ-ள்) பொற்றலைக்கையாந்தகரை தேகத்திற்பொற்சாயலையும் விழிக்குள்ஒளியையும் புத்திக்குத்தெளிவையும்உண்டாக்கும் குன்மக்கட்டியைப்போக்கும் இதுபலவிதசிந்தூரஞ்செய்ய-ஆமெனக, (௩-அ௬)

விஷ்ணுகிராந்தியின்குணம்,

செய்ய※மாலின்கிராந்தி சீராதவல்லசுரத்
தையமறுக்கு மனற்றணிக்கும்-டையவரு
காசமிருமலையுங் கட்டறுக்கும்வாதத்தா
லூசலாடும்பிணி போக்கும்.

(இ-ள்) விஷ்ணுகிராந்தி சத்ததசுரத்தாற் பிறந்தகபம் உட்சூடு கோழை இருமல் வாதசம்பவப்பிணி இவைநீக்கும் ※ மால்-விஷ்ணு, ()

தொட்டாற்சுருங்கியின்குணம்,

மேகநீரைத்தடுக்கு மேதினியிற்பெண்வசிய
மாகவுன்னிநல்கு மதுவுமன்றித்-தேகமிடைக்
கட்டாகக்காட்டுகின்ற காலைத்துரத்திவிடுந்
தொட்டாற்சுருங்கியது சொல்,

(இ-ள்) தொட்டாற்சுருங்கி மேகமூத்திரத்தைநீக்கும் பெண்வசியஞ்செய்யும் உடலில்ஒடிக்கட்டுகின்ற வாதத்தடிப்பைக்கரைக்கும். (௩-௯௧)

கொட்டைப்பாசியின்குணம்,

மேகமறுந்தீபனமாம் வெஞ்சுரமுமேகிவிடுந்
தேகமதிற்றேமலினஞ் சேருமோ-பாருமொழி
மின்னேவெகுகுணஞ்செய் மென்கொட்டைப்பாசியினாற்
றுன்னுகரப்பானும்போஞ் சொல்.

இதுவுமது,

மிக்குகக்குவானகலும் வெய்யகிரந்தியறுந்
தக்கனுபவாதந் தணியுங்காண்-மிக்ககிலின்
மட்டைப்பாய்ச்சுங்கூந்தன் மாதேயுலகத்திற்
கொட்டைப்பாசிப்பெயரைக் கூறு,

(இ-ள்) அகிலின்வாசனையைவீசும் கூந்தலையும்பாகனைய சொல்லையுமுடையபெண்ணே கொட்டைப்பாசியால் பிரமேகம்- பித்தசுரம்-தேமல்கரப்பான்-ககிருமல் கிரந்திகபவாதம் இவைபோம்பசியுண்டாம். ()

காணும்வாழையின்குணம்.

காணும்வாழைக்குழலைக் கண்குழிப்புண் ணுறிவிடும்
மாணுலும்போகமதிகரிக்கு மானேகேள்

ஐயம்விளையு மனற்றணியு நீங்காத
வையுதிரமாறுமுன்னிப் பார்,

(இ-ள்) காஞ்சிவாழைக்கு ஸ்தனவித்திரிதி சுரம் ரத்தபேதி-உவைநீ க்கும் சுக்கிலவிருத்தியும் கபப்பெருக்கமும்உண்டாமென்க, (ருகரு)

சிறுபுள்ளடியின்குணம்.

மாந்தகணம்போராமம் வன்மந்தநீக்கிவிடு
மேய்ந்தமுலைப்பாலு மொழுகுங்காண்-மோங்கே
சிறுபுள்ளடிதழைகையாக் கேமலர்ப்பூங்கோதாய்
சிறுபுள்ளடியைதிகழ்ந் சேர்,

(இ-ள்) வாசனைபொருந்திய மலர்மாலையைத்தரித்த கூந்தலையுடைய பெண்ணே சிறுபுள்ளடியால்-எண்வகைமாந்தம்-சீதக்கட்டு-வாதசலம் ஆகிய இவைநீங்கும் வற்றியமுலைப்பாலும் பெருகும், (ருகச)

உப்பிலாங்கொடியின்குணம்,

பிள்ளைமந்தபேதி பேராதருட்கையும்போம்
வெள்ளைசெய்புந்தக்கத்தை மென்மலராற்-றெள்ளைபுரி
வேளுநடுங்குவடி வேலேநிகர் கூர்விழியாய்
நாளுமுப்பிலாங்கொடியி னால்,

(இ-ள்) மலர்பாணத்தால் போர்புரியுங்காமனும் அஞ்சும்படியான கூரியவேல்போன்றகண்ணுளை உப்பிலாங்கொடியினால் குழந்தைகள்மாந்தமும் ட்சீரதிசாரமும் நீங்காத்சுரமும்நீங்கும் இதுதங்கத்தைப்பற்பமாக்கும், (ருகரு)

பம்பந்தராவின்குணம்.

பாலிராக்கொங்கைகளிற் பாலாங்கருப்பைப்பை
மூலியுறையழுக்கு முன்பிழியும்-மேலிலெழுத்
தம்பமெனத்தங்குஞ்சி கலமைரோசகம்போம்
பம்பந்தராயருந்திப் பார்,

(இ-ள்) பம்பந்தராயினல் பிரசவஅழுக்கும் எஃகுஸ்தம்பம்போற்றடிக்கின்ற வாதக்கடிப்பும் அருசியும்போம் பால்வற்றியஸ்திரீகளுக்குப்பால்விருத்தியாகும் ※ சலனம்-வாயு, (ருகசா)

கொடிவகை-முற்றிற்று.

## புல்வகை.

சதுரக்கள்ளியின்குணம்.

கரப்பான்சொறியுங் கடியுங்கபமு
மூரப்பாங்குன்பத்தையு மொழிக்கும்-சினப்பானு

பேதிதருஞ்சீதமென்ற பேச்சகற்றும்பூவுலகிற்
சாதுசதுரக்கள்ளி தான்.

(இ-ள்) சதுரக்கள்ளி-கரப்பான்-நமைச்சல்-காணாக்கடி- கபநோய்வா தகுன்மம் இவைகளைநீக்கும் விரேசனத்தைத்தருமென்க, (௫௯௭)

நாகதாளிக்கள்ளியின்குணம்,

செந்துவிஷங்கள் செடிவிஷங்களைத்தொலைக்கு
நொந்திடச்செய்வாதத்தை நூறுங்காண்-முந்தவெகு
வேகமாலிக்கும்வடி வேல்விழிமாதேபணைதல்
நாகதாளிக்குணத்தை நாடு,

(இ-ள்) வேல்போலுங்கண்களையுடையமாதே நாகதாளிக்கள்ளி சங்கமவிஷம் தாவரவிஷம்மகாவாதரோகம் இவைகளைப்போக்கும், (௫௯௮)

பேய்க்கற்றாழை செங்கற்றாழை இவைகளின்குணம்,

பேய்க்கற்றாழைக்குப் பெருமேகமும்மெரிவு
மேய்க்கக்கூடாவழலு மேகங்காண்-காய்க்குநிக
ராஞ்சிவந்தகற்றாழை யங்கங்குளிர்விக்கும்
பாய்ஞ்சயத்தைப்பொன்னார்க்கு பார்,

(இ-ள்) பேய்க்கற்றாழைக்கு அதிநீரும்சரீரஎரிவும் சுரமும்போம்செங்கற்றாழை உட்சூடகற்றும் இருமலைத்தும்மக்கும், (௫௯௯)

தே, கற்றாழையின்குணம்,

பொல்லாரோகங்கபம் புழுச்சூலைகுஷ்டமச
மல்லார்மத்தம்பகந் தாங்குன்ம-மெல்லாம்விட்
டேகுமரிக்கு மெரிச்சற்கிரிச்சரமு
மா * குமரிக்கு மருண்டு,

(இ-ள்) நறுங்கற்றாழைக்கு வாதமேகம்-கபமேகம்-கிரிமிக்குற்றல் பெருவியாதி-மூலம்-உன்மாதம்-பகந்தரம்-வயிற்றுநோய் இளவுள்ளபித்தகிரிச்சரம் இவைகள்போகும் * குமரி-கற்றாழை (௬௱)

கள்ளிமுளையான்குணம்,

வாய்க்குப்புளித்திருக்கும் வன்பசியையுண்டாக்கு
மேய்க்குமுடல்வாதத்தை யேறுபித்தஞ்-சாய்க்குந்
தெள்ளியவின்பமொழித் தெய்வமடவனமே
கள்ளிமுளையானுந்திக் காண்,

(இ-ள்) தெள்ளியயின்பமொழியையும் அன்னநடையையுமுடையபெண்ணே புளிப்புச்சுவையுள்ள கள்ளிமுளையான் தீபனத்தையுண்டாக்கும வாதமபித்ததோஷத்தையும-மாற்றும, (௬௱௧)

மேகநாதப்பூண்டின்குணம,

இரத்தபித்தரோக மெரிசருவகாள
முரத்தவுன்மாதமிவையை யோட்டு-மிரத்தனப்பூண்
வாரணிவான்கொங்கை மடவார்தொழுந்திருவே
தாரணிவாழ்மேக நாதம

(இ-ள்) இரத்தினாபரணத்தையணிந்த கச்சினாலிறுக்கிய தனங்களையுடையமாதர்கள் தொழத்தகுந்திருவே மேகநாதப்பூண்டு இரத்தபித்தத்தையும தாவரயங்கம முதலியவிஷங்களையும உன்மாதரோகத்தையும போக்கும-யென்க, (௬௱௨)

அறுகமபுல்லின்குணம,

அறுகமபுல்வாதபித்த ஐயமோடீளை
சிறுகவறுக்குமின்னுஞ் செப்பி-லறிவுதருங்
கண்ணோயொடுதலைநோய் கண்புகையிரத்தபித்த
முண்ணோயொழிக்கு முரை,

(இ-ள்) அறுகமபுல்திரிதோஷம கோழைகண்ணோய் சிரஸ்தாபமதுமபிரநோய் ரத்தபித்தம மருந்துச்சூடு யிவைபோக்கும, அறிவுதரும,

சோதிப்புல்லின்குணம,

காசமபடலங் கருவிருத்தோஷமபில்லம
பூசாந்திரஞ்சதையொண் பூசுக்கிரன்-கூசலென
வோதியவிந்நோய்முழுது மொண்விழியைவிட்டகலுஞ்
சோதியெனுமபுல்லுக்குச் சொல்,

(இ-ள்) சோதிப்புல்லுக்கு விழிக்காசபடலம கருவிழிநோய் நீர்ப்பில்லம பூசாந்திரம ஊன்படலம பூவெண்புள்ளி கூசுதல்இவைபோம, ()

தருப்பைப்புல்லின்குணம,

தோடஞ்சிறியவிடஞ் சோராக்கப்பெருக்கஞ்
சாடுஞ்சகலசுரர் தாதாகமிவை-யோடு
மரிப்புமகலு மடல்வேள்விகட்காந்
தருப்பையெனுமபுல்லுக்குத் தான்,

(இ-ள்) தருப்பைக்கு சப்ததோஷ அற்பவீரியவிஷம கபாதிக்கம சர்வசுரம தாகம நமைச்சல் இவைபோம இதுயாகங்கட்காம, (௬௱௫)

மாந்தப்புல்-காவட்டம்புல்-இவைகளின்குணம்,

மாந்தப்புற்பேதிகெட்டு மந்தம்சிரணத்தைச்
சாந்திசெய்யும்வந்த சுரத்தைப்போக்கு-மேந்திழையே
காவட்டம்புற்குக் கணமாந்தமபேதியறு
நாவொட்டிக்காய்ச்சலுபோ நாடு,

(இ-ள்) மாந்தப் புல்மலப்பேதி அக்கினிமந்தம் அஜிரணமசிலேஷ்ம சுரம் ஆகிய இவைகளைப்போக்கும்-காவட்டம்புல்லுக்குசுணமாந்தம் அதிசாரம்நாவொட்டிக்காய்ச்சல் ஆகிய இவைகள் விலகும், (௨௱௬)

பிநசப்புல்லின்குணம்,

பிநசப்புல்லுண்டாயிற் பேர்ந்துவிடுமாந்தமெலாம்
பிநசமுந்தீரு பெருமூலங்-தானுழியும்
மையவினைசிதையு மக்கரநோயுந்தீரு
மெய்யர்யிதனை விளம்பு,

(இ-ள்) பிநசப்புல்லினால் எண் விதமாந்தம்நாசிகரரோகம்மூலநோய்சிலேஷமதோஷம் பித்தசிக்வாகண்டகம் ஆகிய இவைபோகும், (௨௱௭)

வாசனைப்புல்லின்குணம்,

வாசனைப்புல்வாதபித்த மாற்றுவதுமன்றிமிகு
சூக்ஷயாய்வந்தசுரம் போக்கும்-பேசரிய
ஐயமறுக்கும்ரோசகத்தை விண்வேண்ற்றுந்
துய்யபசியைக்கொடுக்குஞ் சொல்,

(இ-ள்) வாசனைப்புல்வாதபித்தஜொந்சம்சுரம்கோழை அருசி இவைகளை நீக்கும-பசிதீபனத்தை உண்டாக்கும்-என்க, (௨௱௮)

பேய்ப்புல்லின்குணம்,

இறுத்துரோகம்போ மெலிவிஷம்போமெய்யி
லுறுத்துகின்றகுலை யொழியுங்-கறுத்தவளி
பேய்ப்புற்றகண்ணு யெழில்வனரவாயுண்டான்
பேய்ப்புல்லைக்கண்டறிந்த பேர்க்கு,

(இ-ள்) கறுத்தவண்டைகிகர்க்குங் கண்களையுடையாளே மலையில்முளைக்கின்ற பேய்ப்புல்லுக்கு-மார்புநோய் - எலிவிஷம்வாயுவின் குத்தல் ஆகிய இவைகள்போம்-என்க, (௨௱௯)

பருங்காளான் குணம்,

கயங்கிரந்திதாகங் கரக்குமண்டம்விக்கல்
மாங்குவிக்கும்பித்த மடல்வாதம்-பயங்கரத்தைச்

செய்யவருபேதி திட்டிமந்தநோய்களுண்டாம்
வெய்யபருமாம்பியால் விள்.

(இ-ள்) பருங்காளானால்-க்ஷயமும்-விரணமும-தாகமும்- நீங்கும் குடல்விருத்தி-விக்கல்ரோகம் பித்தகோபம் மகாவாதம அதிசாரம கண்பு கைச்சல் ஆகிய இவைகள் உண்டாம ஆம்பி-காளான். (சா௰)

புற்றுக்காளான்-வலைக்காளான்-பொறிக்காளான்-வரிக்காளான்

இவைகளின்குணம்,

புற்றுக்காளான்வலையைப் போலுமபொறிவரியை
யுற்றெழுகாளானென் றுரைக்குமவை-முற்றும
பழுதின்றுநற்குணமும் பண்ணுவனமாந்தா
தொழுதின்றுமுண்பரெசை சொல்.

(இ-ள்) புற்றின்றன்மையாயும் வலைக்கண்ணுருவமாயும் பல நிறமாயும் வரிநிறைந்தகுறியுள்ளதாயும் இராநின்ற நான்குவகைக் காளான்களைப் புசிக்கிற்குற்றமில்லை நற்குணத்தைச்செய்யினுஞ் செய்யும, ()

புல்வகை முற்றியது,



## மரத்தின் சமூலவகை.

அரசமரத்தின் சமூலகுணம்,

அரசம்வேர்மேல்விரண மாற்றுமவவித்து
வெருவவருஞ்சுக்கிலநோய் வீட்டுங்-குரல்வறளுந்
தாகமொழிக்குங்கொழுந்து தாதுதருமவெப்பகற்றும்
வேகமுத்தோஷமபோக்கும் மெய்,

(இ-ள்) அரசம்வேர்ப்பட்டை சருமவிரணத்தையும விதைசுக்கிலக் கெடுதியையும் கொழுந்து தொண்டையை வறட்டுகின்ற விதாகத்தையும் மகரந்தம் தேக உஷ்ணத்தையும் திரிதோஷத்தையும் நீக்கும், ()

ஆலமரத்தின் சமூலகுணம்

சொல்லுகின்றமேகத்தைத் துஷ்டவகக்கடுப்பைக்
கொல்லுகின்றநீரிழையைக் கொல்லுங்கா-ணல்லாலின்
பாலும்விழுதும் பழமும்விதையுமபூவு
மேலுமிலையுமெனை விள்,

(இ-ள்) ஆலமரத்தின்பால்விழுது பழமவிதைபூபட்டை இலை இவைகள் மேகவயிற்றுக்கடுப்பு மேகநீர் இவைகளை நீக்கும், (சா௰௬)

இதுவுமது,

வடமரவிழ்பல்லிறுக்கு மாமேகம்போக்கு
மடர்கொழுந்திரத்தப் போக்காற்றும-படரதிலாம்
புல்லுருவிபென்றெய்திற் பொல்லாவிடபாக
வல்லுருவிலுண்மை மதி

(இ-ள்) ஆலமரத்தின்விழுது தந்தங்களையிறுகச்செய்யுபிரமேகத்தை நீக்கும் கொழுந்துரத்தாதி சாரத்தைவிலக்கும் இந்தமரத்தில்முளைத்தபுல்லுருவியால் விஷபாகரோகம் நீங்கும்என்க, (௬௰௭)

✓ தே, வில்வமரத்தின்சமூலகுணம,

பல்லவம்பூபிஞ்சின் பழதியாசம்முறைநீய
வல்லவம்மேகம மந்தமாகுன்மஞ் சொல்லுகின்ற
நோக்கமருள்விந்துநட்ட நாறுமடுத்தவர்கட்
காக்கமருள்வில்லுவத்திலாம்

(இ-ள்) வில்வமரத்தின் தளிர்சலமேகத்தையும் பூமந்தத்தையும்பிஞ்சுகுன்மத்தையும் பழம்கண்ணிருளையும்பிசினசினவிந்துவையும் நீக்கும்

✓ பூவரசமரத்தின்சமூலகுணம்,

நூறாண்டுசென்றதொரு நூண்பூவரசமவேர்
தூறாண்டகுஷ்டைத் தொலைக்குங்காண்-வீறிப்
பழுத்தவிலைவிதைமேற் பட்டையிவைகண்டாற்
புழுத்தபுண்விரேசனமும் போம்

இதுவுமது,

குட்டங்கடிசூலை கொல்லுமவிஷ்பாகந்
துட்டமகோதரமுஞ் சோபையொடு-கிட்டிமெய்யிற்
றுவுகரப்பான்கிரந்தி தண்மேகம்போக்கிவிடும
பூவாசம்காயப்பட்டைபூ,

(இ-ள்) நூறுவருடத்திய பூவாசமவேர்நாட்பட்ட குஷ்டத்தைநீக்கும பழுப்பிலைவிதை பூபட்டைகாயஇவைகள் கிருமிவிரணம பேதிபெருவியாதிகாணுக்கடி குத்தல்விடபாகம-பெருவயிறு வீக்கமகரப்பான் கிரந்தி சலப்பிரமேகம இவைகளைப்போக்கும, (௬௰௮)

இலந்தைமரத்தின் சமூலகுணம்,

வேருக்காயாசம விலகுமபசியுண்டாஞ்
சீரொத்திடுமிலைக்குச் சீழ்மூலஞ்சோரிவிழல்

மேவெரிச்சலுங்கடுப்பு மேகபித்தமும்போகுங்
காவுமவிழியா யிலக்கை,

(இ-ள்) காதுகளைத்தாவிச் செல்கண்ணேளே இலந்தைமரவேருக்குஅ யர்ச்சிநீங்கும ஜடாக்கினியுண்டாகும இலைக்குச்சீழ்மூலமுமரத்தாதிசாரம தேகஎரிச்சல் வயிற்றுக்கடுப்பு பித்தமேகம ஆகிய இவைகள்போகும-என்க, (௪௰அ)

காட்டிலந்தைமரத்தின்சமூலகுணம்,

விற்குறுமெண்ணெய்க்கனலா மெய்யெரிவுநீங்குந்
சிறியவிலைக்குக்கடுப்புத் தீரும-முறிக்கு
அழைத்திடுபித்துமபோ மதன்கனியடைக்குத்
தழைத்திடுமிக்காட்டி னிலந்தை,

(இ-ள்) காட்டிலந்தைமரம் நித்தியமுங்குடிக்கின்றகுளிர்ச்சிஎண்ணெய் காய்ச்சுதற்குவிறகாடும இலைக்குத்தேகஎரிவுமகொழுந்துக்குவயிற்றுக்கடுப்பும பழத்தின்அடைக்குப்பித்தமும நீங்கும-என்க, (௪௰௧)

நறுவிலிமரத்தின் சமூலகுணம்,

நறுவிலியிலைக்கிரத்த காசமவ்வேர்க்கு
மறுவிலெலும்புருக்கி மாறு-நறுவிலியின்
றன்பழமிரத்தபித்தஞ் சார்மேசமுந்தீர்க்கு
மின்புரயாவர்க்கு மிசை

(இ-ள்) நறுவிலியிலைக்கு மூலாத்தமுமபேருக்கு அஸ்திசிராவமுமநீங்கும்பழம ரத்தபித்தத்தையும பிரமேகத்தையுமநீக்கும, (௫௰)

நுணாமரத்தின் சமூலகுணம,

பட்டைகரப்பன்றொடு பாரச்சிலேஷ்மசுர
மொட்டிநின்றபுண்கிரந்தி யோட்டுங்காண்-மட்டலரை
யேந்துநுணாவி னிலைமாந்தந்தீர்த்துநல்ல
காந்திதருமேகமடுங் காண்,

(இ-ள்) நுணாப்பட்டை கரப்பான் கபச்சுரம் புண்கிரந்தி இவைகளையும இலைமந்தம மேகம இதுகளையுமவிலக்கும ஒளியைத்தரும, ()

முருங்கைமரத்தின் சமூலகுணம,

பிஞ்சாற்றிரிதோஷம் பேருமபூவாற்போக
முஞ்சுவிழிக்குக்குளிர்ச்சி யுஞ்சேரும-பிஞ்சிலைவெப்
பாற்றுந்தோநஞ்சறுக்கு மவ்வேர்வாதச்சிலைத்தை
பாற்றுமுருங்கை யதுபி,

(இ-ள்) முருங்கையின்சிறியபிஞ்சால் திரிதோஷம்நீங்கும் பூவால்புணர்ச்சியில் வன்மையும் கண்ணுக்குக்குளிர்ச்சியும்உண்டாம் இலைசுரத்தையும் பட்டைவிஷத்தையும் வேர்வாதகோபத்தையும் நீக்கும், ()

காட்டுமுருங்கைமரத்தின்சமூலகுணம்,

தின்றாற்கசப்பாகுந் தீயாங்கொடுவிஷத்தைக்
கொன்றுவிடுங்கட்குங் குளிர்ச்சிதரு-மென்றுமைய
மோட்டும்வேர்பூவிலைகா யுற்றபிசினும்பிஞ்சுங்
காட்டுப்புனமுருங்கை காண்

(இ-ள்) கைப்புள்ளகாட்டுமுருங்கைவேர் மகாவிஷத்தைநீக்கும் பூகண்ணுக்குக் குளிர்ச்சிதரும் இலைகாய் பிசின் பிஞ்சுஎன்னும் இவைகள் சிலேஷ்மரோகங்களை நீக்குமென்க, (௪௨௩)

பசுமுன்னைமரத்தின்சமூலகுணம்,

முன்னைவேர்வாதமுதி ரோபட்டாந்தான்போக்கு
மன்னமிறக்கு மதனிலைதான்-சொன்ன
வியல்வாதமெண்பதையு மில்லையெனைசெய்யுத்
கயல்பொருவுங்கண்ணாய் கருது,

(இ-ள்) மச்சத்தைப்பொருதுங் கண்களையுடையபெண்ணே பசுமுன்னைவேர் வாதஇத்மாரோகத்தைநீக்கும் இலைஉணவைச்செலுத்துவதுந்தவிர (அம) வாதரோகத்தையுவிலக்கும, (௪௨௪)

மாதுளைமரத்தின்சமூலகுணம்,

மாதுளைவேர்பிஞ்சுவைக்கு வாந்தியதிசாரம்போந்
தாதுவுமாமக்கனிக்குத் தாகம்போந்-ஞதைநிகர்
வன்னயாயிலைசாய் மாமலர்களுக்குமுனஞ்
சொன்னவையெலாம்போகுஞ் சொல்

(இ-ள்) வன்னமுலைகளுடையமாதே மாதுளைவேர்பிஞ்சு இவைகட்கு வமனமும் அதிசாரமுமநீங்கும் பழத்திற்குவீரியவிர்த்தி உண்டால் தாகம்போம் இலை காய்மலர் இவைகளுக்குமுற்கூறிய ரோகங்களெல்லாந்தீருமென்க, (௪௨௫)

உசிலமரத்தின்சமூலகுணம் இதைச்சீக்கிரான்என்பர்,

அள்ளுமந்தநெய்ச்சிக் கழன்மேகநீங்குநீதங்
கொள்ளுதயிலக்கறைக்கு கொள்விறதாம்-விள்ளுமதி
லோதியடைவானினமென் றென்றுகுழலேகலிகை
யாதிபடைபிசின் கட்டை கனிகை வுசிலமரம்

(இ-ள்) உசிலமரத்தின்வேர்ப்பட்டை அள்ளுமந்தத்தையும் இலையின் றால் எண்ணெய்ச்சிக்கையும் பிசின்பித்தமேகத்தையும்நீக்கும் கட்டை பிரதிதினமும குடிக்கின்றஎண்ணெய் காச்சுதற்குவிறகாகும், (௬௨௬)

தாளிப்பனையின்சமூலகுணம் இதுவேர்கூந்தற்பனை,

எழுத்திற்கிடமா யிருக்குநெடுங்காலம்
வழுத்தில்தன்மாழை மடலாற்-கழுத்திலுறுஞ்
சோறுமலமிருக்குந் தூறுபாளைப்பிழியா
மூறும்விடக்கித்தாளிக் கோர்,

(இ-ள்) தாளிப்பனையின்மழையாகிய ஓலையெழுத்திற் கிடமாகநீடித்திருக்கும் இதன்சோறுமலக்கட்டும் பிழிஎன்கிறகள்ளு மாமிசத்தைவளர்ப்பிக்குமென்க* இந்தநாளிஎன்பது தாளிப்பனை, (௬௨௭)

தாழைமரத்தின்சமூலகுணம்,

* மடிச்சோற்றான்மங்கையர்க்கு மாதாந்தப்பூப்பாம்
வெடிச்சபூநற்பசி விளைக்குந்-தடிச்சமூலை
சுக்கிலத்தைநெய்யைத் துலக்குவிக்குஞ்சோபையெனு
மக்குலத்தைநீக்கு மறி, * மடி-தாழை,

(இ-ள்) தாழைச்சோற்றினால் மாதர்க்கச்சோணிதம் விருணமின்றியுண்டாம பூ தீபாக்கினியைத்தரும் விழுதுவிந்துவையும் ரத்தத்தையும் பிரகாசப்படுத்தும் சோபாரோகக்கூட்டங்களைநீக்கும், (௬௨௮)

வாழைமரத்தின்சமூலகுணம்,

நற்கதலிக்கந்தமனு ளாரார்தண்டோகுடலிற்
சிக்கும்பிரமோனஞ்சுந் தீர்த்திடுங்காண்-தொக்குறுபூ
மேகமொழிக்கும்பிஞ்சால் வெங்கடுப்போகுங்காயாற்
றேகமுழுதுங்காலாந் தேர்,

(இ-ள்) கிழங்கிற்குள்ள நமும்வாழைத்தண்டு குடலிற்சிக்கிய ரோமம்தோல் விஷம்இவைகளைவிடுவிக்கும் பூ பிரமேகம்நீக்கும்பிஞ்சினால் மூலக்கடுப்புத்தீரும் காயினால்உடல்முழுதும் வாயுவாம், (௬௨௯)

நாட்டுவாழை கருவாழை இவைகளின்சமூலகுணம்,

நாட்டுக்கதலியது நாளுந்துவர்ப்பதனாற்
றீட்டுபித்தமையஞ் செருக்குங்காண்
வாழைதிரிதோஷ மாற்றுமதன்கிழங்கா
லமுஞ்சூரங்குருத்து வம்,

(இ-ள்) துவர்ப்புள்ள நாட்டுவாழைமூலினால் பயித்தியகபதோஷங்கள் அதிகரிக்கும் பருவாழைவாத்தி மூன்றுதோஷங்களையுமீக்கும் இதன் கிழங்கினால் அடங்கியசுரமும் விருத்தியாகுமென்க, (சஙூ)

மரத்தின்சமூலவகை-முற்றியது.

---

# செடியின்சமூலவகை.

ஆவாரைப் பஞ்சாங்கத்தின் குணம்.

மேகத்தினாலே விளைந்தசலந்வெட்டையை
லாகத்தின்புண்ணை இருங்கிணி-போகத்தா
னாவாரைப்பஞ்சகங்கொ ளஸ்திசுரந்தாகமும்போ
மேவாரைக்கண்மட மாதே,

(இ-ள்) ஐயரிபடர்ந்தகண்களையுடையபெண்ணே ஆவாரைச்செடியின்வேர் இலைபூகாயென்னும் ஐவகை அங்கங்களால் பிரமேசமூத்திரமவெள்ளை உட்சூடுவிரணம் வாதகிரகணி அஸ்திதாது கதசுரம்தாகம் இவைபோகுமென்க, (சஙக)

சங்கஞ்செடியின்சமூலகுணம்,

வீக்கங்கரப்பான்வி தாகக்கிரந்திகுணம்
மூச்குமிகுசூலைவாய் வோடுபித்தங்-தாக்குவிஷம்
வீறுமோகண்டிலக்கும் வீசுபசிரத்தமுண்டாங்
கூறுசங்குவேரிலை கட்கு,

(இ-ள்) முட்சங்கின்வேருக்கும் இலைக்கும் சோபை கரப்பான் விதாகம் விரணம குன்மம கீல்வீக்கம் வாதகோபம பித்தநோய் பலநஞ்சு இவைவிலகும் கண்துலக்கமும மிகுபசியும் ரத்தவிருத்தியும்ஆகும். ()

கறுப்புப்பூலாஞ்செடியின்சமூலகுணம்,

காட்டமதில்வீரியமாங் கரணவிலைமூலரத்த
வோட்டமறிக்கு முதிருமுனைக்-கூட்டமெழச்
சித்தமவைக்கிலவ்வண்ணஞ் செய்யுங்கருங்கனிதா
※தைத்தமுற்றபூலாவி லாம்,

(இ-ள்) காட்டிலுள்ளகறுப்புப் பூலாங்குச்சியினாற் பற்றுலக்கில்வீரியவிருத்தியுண்டாம் இலைமூலரத்தப்பெருக்கைத் தடுக்கும்பழம்ரோமங்களை யுதிரவொட்டாமற் செய்யுமென்க※அத்தம்காடு, (சஙஙூ)

கண்டங்கத்திரியின்சமூலகுணம்,

வேரிலைபூகாய்பழமவ் வித்துமேற்பட்டையுமிவ்
வூரிலிருக்கவுடற் கைப்பும்-நீராய்

வரும்பிரசகய்ஞ்சு வாசமுந்தங்காவே
யருங்கண்டங் கத்திரியுளரா,

(இ-ள்) கண்டங்கத்தரியின்வேர் இலை பூ காய்பழம் விதைபட்டை இவைகளால் நீரேற்றம் சலப்பிரசம் ஈளைசுவாசம்இவையோம், (௩௯௪)

மணத்தக்காளியின்சமூலகுணம்,

காய்க்குக்கபந்தீருங் காரிகையேயவ்விலைக்கு
வாய்க்கிரந்திவேகக்காடு மாறுங்காண்-தீக்கு
ளுணக்கடுவற்றலூறு பிணியோர்க்காகும்
மணத்தக்காளிக்குள்ள வாறு,

(இ-ள்) மணத்தக்காளிக்காய்க்கு சிலேஷ்மரோகமும் இலைக்குநாப்புண்ணும் வேக்காடுநீங்கும் வற்றல்நோயாளிகளுக்காகும், (௩௯௫)

தே, நாயுருவியின்சமூலகுணம்-இதுவேஅபமார்க்கிவிம்,

மலிகாரங்கைப்புள்ள அபமார்க்கியினவேரால்வசியமுண்டா
மிலைமூலவுதிரமந்தம் பேதிகபம்-வியர்வுதந்தியிறங்குமேகம்
மலையேறும்படிபுரியுமுள்ளரிசி பசிமாற்றுமவன்சமூலம்
பலமாதர்க்குள்ளமுக்கைநீக்கும் வங்கசிந்தூரம்பண்ணுமாதோ,

(இ-ள்) கார்ப்புங்கைப்புமுள்ள நாயுருவியின்வேரால் முகவசீகரமாம் இலைரத்தமூலம் அதிசாரம் கபநோய் வியர்வைதந்துப் பிரமேகம் இவைகளைவிலக்கும் அரிசிஎன்கிறவிதை பசியைநீக்கும் சமூலசாம்பல்பிரசவித்தமாதர்க்கு உதிரச்சிக்கலை ஒழிக்குமெனக, (௩௯௬)

செந்நாயுருவியின்சமூலகுணம்-வெண்பா,

ஓதமுறுசோபையுயர் பாண்டுவைப்போக்குந்
தீதுறுகாமாலைநோய் தீர்க்குமினு-சூதகநீர்
பொய்ப்புறுகாலத்ததனைப் பொங்குவிக்குங்காரமொடு
கைப்புறுசெந்நாயுருவி காண்,

(இ-ள்) கார்ப்புங்கைப்புமுள்ள செந்நாயுருவியின்சமூலம ஏறுவீக்கம் பாண்டுகாமிலம் இவைகளைநீக்கும மாதர்களின்ருதுகாலசோணிதத்தை வழங்கப்படியுண்டாக்கும, (௩௯௭)

செடியின்சமூலவகை-முற்றியது,



## கொடியின்சமூலவகை.

தே, தூதுளையின் சமூலகுணம-விருத்தம,

தூதுபத்திரியூண் சுவையாக்குமபூ
தாதுவைத்தழைப் பித்திடுங்-காயது

வாதபித்த கபத்தையுமாற்றும்வே
ரோதும்வல்லிபன் னேயுமொழிக்குமே,

(இ-ள்) துதுளசியிலை உண்டிக்குச் சுவையைத்தரும் பூசுக்கிலதாது வை விருத்திசெய்யும் காய்திரிதோஷங்களை நீக்கும்வேருங் கொடியும் சுவாசமுதலியசிலேஷ்மரோகங்களைப்போக்கும் என்க. (சஙஅ)

சுரையின்சமூலகுணம்-வெண்பா,

சுரையிலையோசோபையொடு தோன்றுநீர்கட்டைத்
தரையிலையோவைக்காமற் சண்ணுஞ்-சுரையினது
தண்டோபித்தத்தைத் தரிக்கவொட்டாதடிக்கும்
கண்டோருரைப்பரிதைக் காண்,

(இ-ள்) சுரையிலையானது வீக்கத்தையும் மூத்திரச்சிக்கலையும் விலக்கும் கொடிபயித்தியரோகங்களைப்போக்கும் என்க, (சஙக)

நாளையின் சமூலகுணம்,

நாளையிலை தன்குணங்கே ளரியர்வயிற்றி
லுருளிரத்தக்குன்ம மொழிக்கும்-நாளைக்
கிழங்குக்குமேகமொடு கிறுகரப்பான்
புழுங்குபுண்மூலமிவை போம.

(இ-ள்) நாளையிலைமாதர்களின் ரத்தகுன்மக்கட்டியைப் போக்கும் கிழங்குக்கு பிரமேகம்கரப்பான் அளிவிரணம் மூலம் இவைபோம், ()

வெண்குன்றியின் சமூலகுணம்,

வீரியத்தையுண்டாக்கும் வெண்குன்றிவித்ததன்வேர்
பாரியதாகத்தைப் பறக்கடிக்குஞ்-சீரியவோர்
சிற்றிலையினுற்சுளுக்குத் தீருங்கொடிகாயாற்
சுற்றிலைப்பேய்க்கூட்டமெனச் சொல்,

(இ-ள்) வெண்குன்றிவிதை சுக்கிலத்தைவிருத்திக்குமவேர்தாகத்தையும் இலைசுளுக்கையும் காய் கொடி பைசாசங்களையும் நீக்கும், (சசக)

கொடியின் சமூலவகை முற்றியது,

## மரத்தின் கிழங்குவகை

பனங்கிழங்கு ஓடிகிழங்கு இவைகளின் குணம்,

பனங்கிழங்காலத்திவெப்பும் பன்மேகமும்போ
மினுக்குளிர்ச்சியோடழகு மெய்தந்தினநன்மையும்
புண்ணுங்கரப்பானும் பூரிக்குமெய்புலா
நண்ணும்ஓடிங்கிழங்கி னல்,

(இ-ள்) பனங்கிழங்கால் அஸ்திச்சூடும் பித்தமேகமுதலியமேகங்களு ம்போம் குளிர்ச்சியும் வனப்பும உண்டாம ஒடிகிழங்குக்கு நமைச்சலு ம விரணமும் கரப்பானும் வன்மையும உண்டாம் என்க, (௪௪௨)

நிலப்பனங்கிழங்கின் குணம,

மேகவனற்றணியும் வெண்குஷ்டந்தான்விலகும்
போகமிகவுமுறும் பொற்கொடியே-போகாத
சூலைமேகங்களோடுதுன்னு கரும்புள்ளியும்போஞ்
சாலநிலப்பனைக்குத் தான்,

(இ-ள்) நிலப்பனங்கிழங்கினால் மேகமூத்திரவெப்பமும் வெள்ளைக்கு ஷ்டமும் விலாக்குத்தலும் ஒழுக்குப்பிரமேகமும் நீலாஞ்சனரோகமு மபோம் புணர்ச்சியில் இச்சை உண்டாகும என்க, (௪௪௩)

மரவெள்ளிக் கிழங்கின்குணம்,

பித்தங்கலந்த பெருவாயுவைக்கூவு
மெத்த அனல்மந்தத்தை மேலெழுப்புஞ்-சுத்த
இரவள்ளிக்கொண்டகுழ லேந்திழையேயிந்த
மரவள்ளிக்கந்தமெனவை,

(இ-ள்) இருண்ட கூந்தலையுடையாளே மரவள்ளிக்கிழங்கு பயித்தி யவாததொந்தத்தையும் அக்கினிமாந்தத்தையும உண்டாக்கும மரத்தி ன்கிழங்குவகை முற்றியது, (௪௪௪)

## செடியின் கிழங்குவகை.

மெருகன்கிழங்கின் குணம்,

மெருகன்கிழங்கதுதான் மேகத்தைப்போக்குந்
துருவுகுன்மமூலந் துடைக்கும-பெருமீளை
யஸ்திசுரமஐயமுக்கு மங்கங்குளிர்விக்கு
மத்திமுலைமாதே யறி,

(இ-ள்) மெருகன்கிழங்கு கட்டிப்பிரமேகம வயிற்றுநோய் அரசம க பரோகம் அஸ்திதாதுகதசுரமசிலேஷ்மாதிக்கம ஆகிய இவைகளைப்போ க்கும உடலுக்குக் குளிர்ச்சியையுண்டாக்கும என்க, (௪௪௫)

அமுக்கிராக்கிழங்கின்குணம இதுவே அசுவகந்தி,

கொஞ்சந்துவர்ப்பாங் கொடியகயஞ்சூலையரி
மிஞ்சுகரப்பான்பாண்டு வெப்பதப்பு-விஞ்சி

மூசிவுருதோஷமும்போ மோகமனலுண்டா
மசுவகந்திக் கென்றறி,

(இ-ள்) கொஞ்சந்துவர்ப்புள்ள அமுக்கிராக்கிழங்கினால்-க்ஷயம்-வாத சூலை-வாதக்கரப்பான் பாண்டு-சுரம-வீக்கம-சலதோஷம இவைகள்போகும-மாதர்மேலிச்சையும-பசியும-உண்டாகும-என்க, (௪௪௬)

பேதிக்கிழங்கின் குணம-இதுவேரேவல்சின்னி,

பேதிதனையுண்டாக்கும் பித்தந்தனையெழுப்புந்
தோதக்குடல்தனைச் சுத்திசெய்யு-மோதியகால்
பேதிக்குந்தாதுவைப் பெருக்கிவிடுமெப்போதும
பேதிக்கிழங்கதனைப் பேசு,

(இ-ள்) பேதிக்கிழங்கு விரேசனம பித்தாதிக்கம குடற்சுத்தி வீரியவிருத்தி இவைகளையுண்டாக்கும-வாதகோபத்தையடக்கும, (௪௪௭)

சேவகனார்கிழங்கின்குணம,

கபரோகந்தன்னைக்கடலில் விழச்செய்யு
மபமிருத்துவாம விஷத்தையாற்று-மிபமூலவும்
காவகனாடாக்கருங்குயிலே கண்டுரைத்த
சேவகனார் கிழங்கதே,

(இ-ள்) சோலையிற்சஞ்சரிக் காதகுயிலனையாய் சேவகனார்கிழங்கு சிலேஷ்ம தோஷத்தையும காலமில்லாமற்கொல்லுகின்ற விஷத்தையும போக்கு-என்க, (௪௪௮)

பூமிச்சருக்கரைக் கிழங்கின் குணம்,

மேகமுறுமுள்ளுருக்கு வெட்டையாற்றணியும
போகுமேமூலம் புகலக்கேள்-பாகுமொழிப்
பொன்னனையாய் பூமிச்சருக்கரைக்கிழங்குக்கு
வுன்னவுடல்பருக்கும வாழ்த்து,

(இ-ள்) பாகொத்தமொழியையும் திருமாதனைய அழகையுமுடைய பெண்ணே பூமிச்சருக்கரைக்கிழங்குக்கு பிரமேகம் அதிசுஷகம் வெள்ளை வீழல் சுரம் மூல ஆகிய இவைபோம தேகம பூரிக்கும என்க, ()

முள்ளங்கிக் கிழங்கின்குணம,

வாதங்கரப்பான் வயிற்றெறிவுசூலைகுடல்
வாதங்காசம்ஐயம் வன்தலைநோய்-மோதுநீர்க்
கோவைபன்னோய்பல்சிலந்தி குன்மமிளைப்புக்கடுப்புஞ்
சாவுமுள்ளங்கிக்கந்தத்தால்,

(இ-ள்) முள்ளங்கிக்கிழங்கால்-வாதப்பிணிகரப்பான் வயிற்றிலெரிச்சல் குத்தல் குடல்விருத்திநோய் இருமல் கபம்தலைவலி நீரேற்றம்பல்நோய் பலசிந்தி குன்மம்சுவாசம மூலக்கடுப்பு இவைபோகும், (சருய)

மஞ்சளின்குணம்,

பொன்னிறமாம்மேனி புலானாற்றமும்போகும
மன்னுபுருன் வசியமாம்-பின்னியெழும்
வாந்திபித்ததோஷமையம வாதம்போந்திபனமாங்
கூர்ந்தநறுமஞ்ச டனக்கு,

இதுவுமது.

தலைவலிநீரேற்றஞ் சனையாதமேக
முளைவுதருபீநசத்தி னூடே-வலிசுரப்பு
விஞ்சுகடிவிஷமும வீறுவிரணங்களும்போ
மஞ்சட்கிழங்குக்கு மாசு,

(இ-ள்) உடலைப்பொற்சாயலாக்கிப் புலால் நாற்றத்தை நீக்குகின்ற மஞ்சளினால் புருஷவசியமும பசியும் உண்டாம்வம்மைபித்தகபவாதகோபங்கள் தலைவலிசலதோஷம் பிரமேகம் நாசிகாரோகம் ஐவகைவலிவீக்கம் வண்டுகடி விஷம பெருவிரணம் இவைபோம், (சருக)

மரமஞ்சளின் குணம்,

அழன்றகண மூலமருசியுடனே
யழன்றகணச்சுரமு மோடுஞ்-சுழன்றுள்ளே
வீறுசுரமுந்தணியும் வீசுமரமஞ்சளுக்குத்
தேறுமொழியனமே செப்பு,

(இ-ள்) தெள்ளியவசனத்தையுடைய பெண்ணே மரமஞ்சளுக்கு முற்குகணம மூலரோய் அரோசிகம கணச்சுரம் உட்சுரம் ஆகிய இவைகள் விலகும என்க. (சருஉ)

கஸ்தூரிமஞ்சளின் குணம்.

புண்ணுங்கரப்பானும் போகாக்கிருமிகளும்
நண்ணுமந்தாக்கினியு நாசமாம்-வண்மலர்த்த
தொத்தேறளகமின்னே சுக்கிலமும்புந்தியுமாங்
கஸ்த்தூரிமஞ்சளுக்குக் காண்,

(இ-ள்) பூங்கொத்தை யணிந்தமின்போல் பவளே கஸ்தூரி மஞ்சளுக்கு பெருவிரணம் கரப்பான் கிருமிரோகம் அக்கினிமந்தம் இவைபோம்-வீரியமும் அறிவும் விருத்தியாம், (சருச)

இஞ்சியின் குணம்,

இஞ்சியதனுக் கிருமலையமோக்காளம்
வஞ்சிக்குஞ்சந்நிசுரம் வன்பேதி-விஞ்சுகின்ற
சூலையறும்வாதம்போந் துண்டாததீபனமாம்
வேலையுறுங்கண்ணாய் விளம்பு,

இ-ள்) கடலைநிகர்த்த கண்களையுடையமாதே இஞ்சிக்கு- காசம்கபம் வெள்ளோக்காளம்-சந்நிபாதசுரம வாத்திசாரம வாதசூலை வாதகோபம் இவைபோம் பசியுண்டாம, (௫௫)

காறுகருணைக் கிழங்கின்குணம்,

கரப்பான்சிரங்குசொறி காணுக்கிரந்தி
யுரப்பாக்கு மூலநோயோட்டும்-நிரைப்பான
மந்தமொடுகோழைகரு மாறுத்தினவளிக்கு
மந்தமிகுங்காறு கருணை,

இ-ள்) காறுகின்ற கருணைக்கிழங்கு கரப்பான்பொடிச்சிரங்கு சொறி உட்கிரந்தி மந்தாக்கினி கபக்கோழை-நமைச்சல் ஆகிய இவைகளை உண்டாக்கும்-மூலரோகத்தை நீக்கும்-என்க. (௫௬)

காறுக்கருணைக் கிழங்கின்குணம்,

ஞாலயநிற்கபநோய் நாடாதுவாதமறு
மூலமூளையிரத்தமுன் பொழியு-மோலமிட்டு
மாறுக்கனல்மந்தமாறுமதி தீபனமாங்
காறுக்கருணைதனைக் காண்,

இ-ள்) காறுக்கருணைக்கிழங்கினால் சிலேஷ்மரோகம் வாதநோய் ரத்தமூலமூளை அக்கினிமந்தம் இவை நீங்கும-பசியுண்டாம், (௫௭)

காட்டுக்கருணைக் கிழங்கின்குணம்,

மேகமணுகாது வெகுதீனைமாகுந்
தேகமதில் மூலமூளைசேராவே-போகாச்
சுரதோஷமபோங்கரப்பான் றோன்றுமவனத்தித்
புருவுகருணைக்கிழங்காற் பார்,

(இ-ள்) காட்டுக்கருணைக்கிழங்குக்கு வாதம்பிரமேகம் குமூளை மூலமும சுரதோஷமும போம்மிகுபசியும் கரப்பானும் உண்டாம்.(௫௮)

சேம்புக்கிழங்கின் குணம்,

வாதகபத்தையுள்ளே வைத்திருக்குந்தின்றக்கால்
சோதிலாத்தொண்டைதனிற் கோழை-மாதரசே

யுண்மருந்திணற்குணமதோடுஞ் சேம்புக்கிழங்கைத்
தணமேகசாந்தியென்பர் தாம்.

(இ-ள்) மாதர்கள்நாயகமே வாதகபதோஷத்தையுடைய சேம்புக்கிழங்கைத்தின்றால் தொண்டையில் கோழைக்கட்டும்-நன்மருந்தின்குணமுங்கெடும்-இதுசுபத்திரவியமாகையால் மேகசாந்தி என்பர் என்க, ()

பிரப்பங் கிழங்கின்குணம்,

தந்தரோகத்தைத் தணியாதவாதத்தை
யுந்துசூலைப்பிடியை யொட்டுங்காண்-வந்து
கரப்புந்திறப்பு மெனகாட்டுநகைமாதே
பிரப்பங்கிழங்கதனைப் பேண்

(இ-ள்) கரப்புந்திறப்பு மெனகாண் பிறக்கும்பற்கள்வுடைய மாதே பிரப்பங்கிழங்கு தந்தமூலரோகம வாதகோபம் கீல்பிடிப்பு சிலேஷ்மதோஷம் ஆகிய இவைகளைநீக்கும் என்க. (௪௬௰)

சாறணைக் கிழங்கின்குணம்,

சீதஞ்சலதோஷந்தேமல் தழும்புகுன்மம்
வாதஞ்சிறுசிரங்கு வன்மேக-மோதரிய
காசமுநஞ்ஞொயெல்லாய் கான்சாறணைக்கிழங்கால்
நாசமுறுமென்றே நவில்,

(இ-ள்) காட்டிச்சாறணைக்கிழங்கால் சீதளம் நீரோற்றம் தேமல்தடிப்பு குன்மம் வாதவலிசிறுசிரங்கு பிரமேகம் இருமல் இவைபோம், ()

கோவைக் கிழங்கின்குணம்,

முத்தோஷஞ்சூலைபித்த முஷ்டகுஞ்சிக்குவைநோ
யெத்துசுவாசங் கபமிணிப்புநீ-ரித்தனையுங்
கூட்டோடகற்றுங் குளிர்ச்சியொடுதாரத்தைக்
காட்டியகோவைக்கிழங்கு காண்,

(இ-ள்) சீதளத்தையும் உறைப்பையும் உடையகோவைக்கிழங்குதிரிதோஷம சந்திகளின் குத்தல்பித்தகோபம் சருமதலகுஷ்டம்ஜிக்வாரோகம் இரைப்பு கோழை மதுப்பிரமேகம இவைகளை நீக்கும், (௪௬௨)

கொல்லன்கோவைக் கிழங்கின்குணம்,

துட்டவிஷம்பாண்டுவெப்ப சூலைவாதங்கிரந்தி
குட்டமரிப்பக் கோண்டகுணேப்-கெட்டகண்ட
மாலைபோங்கொல்லன் கோவைக்கிழங்கால்முத்தோஷ
மேலைபோய்பாரில் விளம்பு,

(இ-ள்) சொல்லன்கோவைக்கிழங்கால் மகாவிஷம தேக வெளுப்பு சுரம்வாதசூலை சிரங்குபெருவியாதி நமைச்சல் வக்கிரநேத்திரம் குடல் வலிகண்டமாலை திரிதோஷம் ஆகிய இவைகள் நீங்கும் என்க, (௪௬௩)

சீந்திற்கிழங்கின் குணம் இதுவே அமிர்தக்கொடி,

சீந்திற்கிழங்கருந்த தீயனமாமேகவகை
போந்தவுதிரபித்தம் பொங்குசுர-மாந்த
மதிசாரம்வெய்யகண மாம்பலநோயோடே
கதிவிஷமுங்கெட்டுவிடுங்-காண்,

(இ-ள்) சீந்திற்கிழங்கினால் சாவமேகம்ரத்தபித்தரோகம் ரூட்சைமாந்தசுரம் பேதிபித்தகணம் ஆம்மிலபித்தரோகம் சர்ப்பவிஷம் ஆகிய இவைகள் போகும்-ஜடராக்கினியுண்டாகும் என்க, (௪௬௪)

பொற்சீந்திற்கிழங்கின் குணம்,

பொற்சீந்திலின் கிழங்குபொங்குமதுமேக
மெச்சுக்ஷயரோக மிளைப்புவிஷம-பச்சையா
யோடிரத்தபித்தமுயர் சுரந்தனைக்களையுந்
தேடரியமேனிதருஞ் சேர்,

(இ-ள்) பொற்சீந்திற்கிழங்கானது மதுநீர் க்ஷயம் அதிசூக்ஷம சர்ப்பவிஷம் ரத்தபித்தம் இவைநீக்கும் காயசித்திபண்ணும், (௪௬௫)

கருடன் கிழங்கின்குணம இதுவே பேய்ச்சீந்தில்,

அரையாப்புவெள்ளை யகலாக்கொறுக்கை
கரையாதகட்டியிவை கரட்டிரூர்-வரையிற்
றிருடனெச்சொல்லும்விஷஞ் சேர்ப்பாம்புமஞ்சுங்
கருடன்கிழங்கதனைக் கண்டு.

(இ-ள்) கருடன்கிழங்குக்கு அரைப்புக்கட்டி வெள்ளை கொறுக்கு மூர்ந்தை அற்புதவிரணம் ஆகிய இவை நீக்கும் - சர்ப்பங்கள் நடுங்கும், ()

கூகைகிழங்கின் குணம்,

மேனியிடும்வாய்க்கு மிருதுவாமாக்கிபுண்ணத்
தாணிருமல்வெப்பதிக தாகமிவை-யேனிருக்கு
மம்பேறிளங்கிழங்கி தியாவர்க்குமாமணப்பூங்
கொம்பேகூகைக்கிழங்கைக் கூறு,

(இ-ள்) வாசனைப்பொருந்திய பூங்கொம்பனையாளே நீர் நிறைந்துள்ள இளங்கூகைக்கிழங்கைச் சமைத்துண்ணில் தேகபுஷ்டியுண்டாகும் இருமலும்சுரமும் தாகமும் நீங்கும், (௪௬௭)

புளிநாளைக்கிழங்கின் குணம்,

புளிநரளையின்கிழங்கோ பொன்போலச்செம்பைத்
தெளிவாகச்சுத்தியது செய்யும்-வெளியான்
மூலமுளையறுக்குமுந்து சுவைக்கேதுவுமாங்
கோலம்டமயிலே கூறு,

(இ-ள்) அழகியமயில்போலுஞ் சாயலையுடையாளே புளிநரளைக்கிழங்கு செம்பத்தங்கம்போற் புனிதமாக்கும வெளி முளைமூலத்தைப்போக்கும்-உணவிற்சுவையைத்தரும், (சகூஅ)

மாகாளிக்கிழங்கின்குணம் இதனைமாவலிபருநன்னாரி என்பர்,

அன்னலையதிபித்தத்தை யாற்றும்பசியா
மனலையெழுப்புங் கபமறுக்கு-மானிலத்தாம்
வேகாளத்தைத்தணிக்குமென் கோடியேகாட்டிலுறை
மாகாளிக்கந்தமிது வாம்,

(இ-ள்) வஞ்சிக்கொடிபோன்ற இடையாளே மாகாளிக்கிழங்கு உட்சூடு பித்தகோபம் சிலேஷ்மநோய் வாதகேதாடம் இவைகளைநீக்கும் ஜடராக்கினியை வளர்ப்பிக்கும் (சகூகூ)

தண்ணீர்விட்டான் கிழங்கின்குணம்,

நீரிழிவைப்போக்கு நெடுநாட்சுரத்தையெலா
முறைவிடுத்தோட வுறுக்குங்காண்-நாரியரே
வெண்ணீர்பெயசோமனோய் வெட்டையனற்றணிக்குந்
தண்ணீர்விட்டான்கிழங்கு தான்.

(இ-ள்) மாதே தண்ணீர்விட்டான்கிழங்கு வெகுமூத்திரம் புராணசுரம் சோமரோகம் வெள்ளைஉட்சூடு ஆகிய இவைகளைநீக்கும்-என்க.

தாமரைக்கிழங்கின் குணம்,

கண்ணுக்கொளிகொடுக்குங் காசபித்தம்போக்கு
மெண்ணுங்குளிர்ச்சிதரு மேந்திளையே-மண்ணுலகிற்
*றா*மரைப்புண்ணுமபோக்குந் தொந்திக்கடுப்பகற்றுந்
தாமரைக்கந்தமது தான்,

(இ-ள்) ஏந்திழையாளே தாமரைக்கிழங்குநேத்திர ஒளியையுங்குளிர்ச்சியையுந்தரும்-பித்த காசம்காமிசதாதுவைப்பற்றியதவளைச்சொறிவுயிற்றுக்கடுப்பு ஆகியஇவைகளைநீக்கும-என்க, *துா-தசை, *மரை-தவளை

செவ்வல்லிக் கிழங்கின் குணம்,

செம்பைக்களிம்பகற்றிச் சிந்தூரமாக்கிவிடும்
வெம்புபித்தமேகம் விலக்குங்கா-ணம்புவியி
லல்லிற்கறுத்தழகு லாரணங்கேநற்சிவப்பா
மல்லிக்கிழங் கென்பது.

(இ-ள்) இருளினுங்கரிய அளகபாரத்தையுடைய ஆரணங்கே சிவந்த அல்லிக்கிழங்குசெம்பின்களிம்பை நீக்குவதுந்தவிர அதைச்சிந்தூரமாக்கும் பித்தப்பிரமேகத்தை விலக்கும்-என்க, (௬௭௨)

நெய்தற்கிழங்கின் குணம்.

கண்ணுங்குளிருமக்கி காணுதுகாந்துபித்த
மெண்ணுந்தோஷம் மேகமேகுங்காண்-பெண்ணே
வயிற்றுக்கடுப்புரத்த மாறுநெய்தலுக்கும
பயித்தியம்போம்விந்தூறும் பார்,

(இ-ள்) மாதே நெய்தற்கிழங்குக்கு அக்கிப்புண் பித்தயெரிச்சல் திரிதோஷம் பிரமேகம் ரத்தகிராணி பித்தநோய் ஆகிய இவைபோம் விழிக்குக்குளிர்ச்சியும் சுக்கிலவிருத்தியும் உண்டாகும் என்க, (௬௭௩)

செங்கழுநீர்க்கிழங்கின் குணம்.

கண்ணுங்குளிர்ந்திருக்குங் காசம்போம்பித்தமறு
மெண்ணரியமேகமிடையுங்காண்-பெண்ணேகேள்
பொங்கமொடுமாதைப் புணர்ந்தவழலுந்தணியுஞ்
செங்கழுநீர்க்கிழங்காற் றோர்,

(இ-ள்) மாதேநீகேட்பாயாகசெங்கழுநீர்க்கிழங்கால்இருமல்பித்தநேய்சர்வமேகம்புணர்ச்சியின்வெப்பம்இவைநீங்கும்விழிக்குளிர்ச்சியாம்,

கொட்டிக்கிழங்கின் குணம்,

கொட்டிக்கிழங்கு குளிர்ச்சியென்பார்தேமலுடன்
ஒட்டிநிறைமேக மொழிக்குங்காண்-வட்டமுலை
மானேயகக்கடுப்பும் வந்தவழலுந்தணிக்குந்
தானேயிகையறிந்து சாற்று,

(இ-ள்) வட்டமாயடிபரந்த தனங்களையுடைய பெண்ணேகொட்டிக்கிழங்கு தேமல் பிரமேகம் தேகக்கடுப்பு உட்சூடு ஆகிய இவைகளைநீக்கும் இதனைக்குளிர்ச்சி என்பார் என்க, (௬௭௫)

நிலப்பூசினிக்கிழங்கின் குணம்,

மெய்பிறுகுந்தாதுகளும் வீறுமதிதேசசுமாம்
நொய்யவுடலம்பருக்கு நுண்ணறிவாம்-பைய
மலப்பூசலேகு மலர்த்திருவேநல்ல
நிலப்பூசினிக்கிழங்கு னீ,

(இ-ள்) மலரில்வசிக்குந் திருவனையாளே நிலப்பூசினிக்கிழங்கினால் த ளர்ந்ததேகம் இறுகப்படுவதுமன்றி இளைத்தசப்ததாதுக்களுக்குச் செழுமையுஞ் சருமதாதுவிற்கு ஒளிவும் நுட்ப அறிவும் உண்டாகும் மலபந்தம்நீங்கும்என்க, (௪எ௬)

பருங்கிழங்கின் குணம்,

பருக்கிழங்கொன்றெய்திற் பறையறயும்வாத
மருங்-கணையாதெவ்விடமு மாறுங்-கருங்கலேன்
வீக்குமடல்வீக்கமொடு மேகப்பிணியுமறு
மாங்குயிலேநாளும் வழுத்து,

(இ-ள்) மாங்குயிலனையமாதே பருங்கிழங்கினால் வயிற்றில் இரைச்சலைச் செய்கின்றவாதரோகம் சர்வவிஷம்கபச்சோபைபிரமேகம் இவை நீங்கும் என்க; (௪எஎ)

சின்னிக்கிழங்கின் குணம்,

சின்னிக்கிழங்குசிறு சிரங்குபுண்வளர்க்கு
முன்னிலதுவூறற்பன்றிக் கொவ்வுங்கா-னன்னமே
மூலமறுக்குமினு மோதிரத்தஞ்சீழ்மாற்றுந்
தாலமறியுணிசந் தான்,

(இ-ள்) அன்னம்போல்பவளே ஊர்ப்பன்றிமாமிசத்துக்கு ஒப்பாகிய சின்னிக்கிழங்கு பொடிக்கிரந்தியையும் புண்ணையும்விளைக்கும் மூலரோகத்தையும் ரத்தமயகிரகணியையும் நிவர்த்திசெய்யும, (௪எஅ)

பெருவெள்ளிக்கிழங்கின்குணம்-இதுவே ஆள்வள்ளி,

வாதகபம்பித்தமொடுமோமூலம்வாதகுன்ம
மோதுபலநோய்மந்த முண்டாகும்போதின்
மருவள்ளிக்கொண்டழகின் மாதேயுலகிற்
பெருவள்ளியின்கிழங்காற் பேசு,

(இ-ள்) வாசனையையுடைய அளகபாரத்தாளே பெருவள்ளிக்கிழங்கால் திரிதோஷதொந்தம் வாதமூலம் வாதகுன்மம் முதலியசிலநோய்கள் அக்கினிமந்தம் இவை உண்டாம், (௪எ௯)

சிறுவள்ளிக்கிழங்கின் குணம்,

மந்தமிகுந்தீபனம்போ மாருக்கரப்பானுஞ்
சிந்தமிகு கபமுஞ் சேருங்காண் -தொந்தமா
மூலமுளைவரு முட்டைச்சிறுகிழங்கா
லேலவுளகமின்னே யெண்,

(இ-ள்) மயிர்ச்சாந்தணிந்த குழலாளே சிறுவள்ளிக்கிழங்கால் மந்தம் கரப்பான் சிலேஷ்மவிருத்தி முளைமூலம் ஆகிய இவையுண்டாம் உதராக்கினிகெடும் என்க, (௪௮0)

காய்வள்ளிக்கிழங்கின்குணம் இதுவேவெற்றிலைவள்ளி

அக்கினிவெப்பையடக்கு மென்பார்வாதமொடு
தொக்கிலதிபுண்சிரங்கைத் தூண்டிவிடும்-மிக்குபசும்
வேயையுடைத்தோளணங்கே வெற்றிலையாம்வள்ளியெனுங்
காயையுடைவள்ளியது காண்,

(இ-ள்) பசியமூங்கிலனைய தோட்களையுடையாளே காய்வள்ளிக்கிழங்கு வாதரோகத்தையும் சருமத்தின்மீது பெரியசிறிய விரணங்களையும் விளைக்கும் உஷ்ணசாந்தியென்பர், (௪௮௧)

சருக்கரைக்கிழங்கின் குணம்,

உள்ளிற்கொண்ணன்மருந்தையும் முறிக்குஞ்சர்க்கரையாம்
வள்ளிக்கிழங்கதிக மந்தந்தா-னுள்ளில்முளை
மூலம்விளையுதே மோடினாச்சண்டாகுங்
கோலவிழிறுங்கடுக்கும் கூறு,

(இ-ள்) அதிமந்தமுள்ள சருக்கரைவள்ளிக்கிழங்கு திவ்ய ஔஷதகுணத்தைக் கெடுப்பதுமன்றி மூலமுளையையும்குடவிரச்சலையும்கிரகணியையும் விளைவிக்கும், (௪௮௨)

கொடியின்கிழங்குவகை முற்றியது,

---

# புல்லின் கிழங்குவகை.

ஆறுகக்கிழங்கின்குணம்,

ஆறுவழிலெல்லா மாறுமுந்தோஷமது
வீறுதிருக்குநல்ல மேனிதரும்-மாறுக்
கடியமாலங்கலணி காரளகமின்னே
கொடியறுகம் புற்கிழங்கைக்கூறு,

(இ-ள்) வாசனைபொருந்திய மலரையணிந்த கரிய கூந்தலாளே அறு கின்கிழங்கால் தணியாத பற்பலவெப்பமும் திரிதோஷரோகங்களும் நீக்கும் சரீரவனப்புண்டாகும் என்க, (௪௯௩)

கோரைக்கிழங்கின் குணம் இதுவே முத்தக்காசு
சீதசுரந்தீர்க்குஞ் செம்புனற்பித்தம்போக்கும்
வாதசுரந்தணிக்கும் வையகத்தில்-வேதசெய்ய
வந்தபிணியையெல்லாம் வாட்டும்முத்தக்காசு
கொந்துலவும்வார்குழலே கூறு,

இதுவுமது,

அதிசாரம்பித்தமன்ற ரூகமையங்
குதிவாதஞ்சோபக் கொடிய-முதிர்வாதத்தி
யாரைத்தொடர்ந்தாலு மவ்வவர்க்கெலாங்குளத்துக்
கோரைக்கிழங்கைக் கொடு,

(இ-ள்) வாசனைவீசும் நீண்டகூந்தலாளே முத்தக்காசு என்கிறகோரைக்கிழங்கு களிர்ச்சுரம் ரத்தபித்தம் வாதசுரம் பேதி பயித்திய தோஷம்பித்ததாகம் கபரோகம் குதிகாலைப்பற்றியவாயு மூர்ச்சை திரிதோஷசாந்தி ஆகிய இவைகளையும் துன்பத்தைத் தருகின்ற சிற்சிலரோகங்களையும் போக்கும். (௪௯௫)

மருட்கிழங்கின்-குணம்,

தொண்டைக்கட்டையுந் தொலையுமகோதரமும்
பண்டைப்பல்வீக்கம்-பறக்குங்காண்-கெண்டைவிழி
மானேமருட்கிழங்கால் மாறுமூலங்களெல்லாந்
தானேபசியெழும்புந் தான்,

(இ-ள்) மகரநோக்கியே மருட்கிழங்கால் நெஞ்சைப்பற்றிய கபக்கட்டு பெருவயிறு பலவிதசோபைமூலம்இவைபோம்தீபாக்கினிஉண்டாகும்

வெங்காயத்தின் குணம்,

வெப்பமூலங்கிரந்தி வீறிரத்தபித்தமுடன்
செப்புநா அக்கரந் தீராததாகம்-வெப்புக்
கடுப்பறுமந்தஞ்சந்நி காசம்வயிற்றுப்பல்
தடிப்பேறும்வெங்காயத் தால்

(இ-ள்) வெங்காயத்தால் தேகஉஷ்ணம் மூலம்சிரங்கு ரத்தநோய்பித்தம் கண்டகம் தாகம் உஷ்ணபேதி இவைநீங்கும் அக்கினிமாந்தம் சந்நிபாதம் இருமல் வயிற்றுப்பிரம் இவைவிருத்தியாம், (௪௯௭)

மாமரத்தின்வேர்க்குணம்

சீதரக்தப்போக்கைச் சிங்கெனவேதான்பிடிக்கும்
போதவயிற்றுக்கடுப்பை போக்குங்கா-ணோதுகின்ற
வாந்தியையுந்தீர்க்கும்வெளி மாமரத்தின்வேர்ப்பட்டை
பூதுகின்மாதே புகல்,

(இ-ள்) அழகியமேகலாபரணத்தை யணிபவளே மாமரத்தின்வேர்ப்பட்டையானது சீதரத்தபேதி வயிற்றுக்கடுப்பு வாந்திஎன்னும் இவைகளைப்போக்கும் என்க, (௪௬௫)

இலுப்பைமரத்தின்வேர்க்குணம்

புண்ணும்புரையுமறும் போதத்துவர்ப்பாகு
மெண்ணுமகக்கடுப் பிருக்குமோ-பெண்ணேகேள்
நீரிழிவுமேகும் நெடு*மோமைமூலத்தாற்
வோடர்கடுப்பிரத்தம் போம் * ஓமை என்பது இலுப்பை,

இதுவுமது

மந்தமரோசி மகாசூலைசர்வசுரம்
விந்துநஷ்டந்தாகமொடு மெய்யிளைப்பும்-முந்த
அலுப்பைப்பெற்றேகு மளகத்திற்காகா
விலுப்பைக்குச்சூடதிக மெண்,

(இ-ள்) பெண்ணே நீகேட்பாயாக-துவர்ப்பாகிய- இலுப்பைவேரினால்-விரணம் புரை-வயிற்றுக்கடுப்பு அதிமூத்திரம்-ரத்தகிரணி-அக்கினிமாந்தம்-அருசிவாதசூலை-சகலசுரம்-சீண சுக்கிலம்-தாகம்-சரீர அயர்வு ஆகிய இவைநீங்கும-தலைரோமங்களுக்கு ஆகாது- உஷ்ணகாரியாம் என்க,

மருதோன்றிமரத்தின்வேர்க்குணம்

சோணித்தோஷமெலாஞ் சொல்லாமலேகிவிடும்
பேணுவார்க்கிரத்தமொடு பித்தம்போம்-காணு
ஒருதோன்றலென்னுமத னேதுமெழின்மாதே
மருதோன்றிவேரால் மறைந்து,

(இ-ள்) ஒப்பற்றபுருஷனாகிய மன்மதன்புகழும் அழகுடையாளே மருதோன்றிவேரால் மாதர்கள் ருதுகாலசோணிததோஷங்கள் அசிர்க்காரோகம் பித்தநோய்ஆகிய இவைகள்நீங்கும்-என்க, (௪௬௭)

வெண்காலிமரத்தின்வேர்க்குணம்.

விம்முமகோதரமு மேனேக்குபித்தமொடு
சிம்மகிருஷ்ண தோஷமுமுட் சேருமோ-கம்முகின்ற
கள்ளேப்பொருநீருங் காணுதுகைப்பையுமும்
வெள்ளேக்கருங்காலி வேர்க்கு

(இ-ள்) கசப்புள்ளவெள்ளேக் கருங்காலிவேருக்குப் பெருவயிறு ஏறு பித்தம் கிருஷ்ணசிம்மகதோஷம் சுரமேகம்இவைநீங்கும், (௱

கருங்காலிமரத்தின்வேர்க்குணம்

கைப்புற்றிருக்குங் கருங்காலிவேருக்கு
மைப்புழுவும்பாகம் மதுநீரு-மெய்க்குளெழு
குஷ்டமுதிரப்போக்குங் கூவியமுதகலும
மட்டுறுபூங்கோதாய் வழுத்து,

(இ-ள்) தேன்பொருந்திய பூங்கொத்துக்களேயணிந்தகூந்தலாளேகைப்புள்ள கருங்காலிவேருக்கு மலாசயக்கருங்கிருமி பாகுபடு மதுநீர் ருசியசிம்மக் குஷ்டம் ரத்தபேதி இவைவிலகும், (௱க)

எட்டிமரத்தின்வேர்க்குணம்,

ஆலவிஷமொக்கு மருந்தக்கடிதீரும்
ஞாலமதிற்பித்தகுண நாசமா-மாலேக்கோ
லட்டியபாகமொழியே யானவிஷமுட்டியெனு
மெட்டிமரவே ரிது,

(இ-ள்) ஆலேயிலாடுபாகனேயமொழியாளே விஷமுஷ்டி என்கிறஎட்டிமரம் ஆலவிஷம்போன்றது இதன்வேரால் மகாசாபவிஷங்களும் பயித்தியகுணங்களும் நீங்கும், (௱உ)

புங்கமரத்தின்வேர்க்குணம்

வாதக்கடுப்பு மகாமூர்ச்சைகாபசுரம்
வாதகுன்மமரத்தத்தால் வந்திடுநோ-யோதுகின்ற
புண்புரையுமவில்விஷமும போகுந்திரண்டுருண்டே
பண்புறுபுங்கம்வேர்க்குப் பார்,

(இ-ள்) புங்கமரவேரினல் வாதக்குடைச்சல் திரிதோஷமூர்ச்சை-தாபசுரம-வாயுகுன்மம்-ரத்ததாதுவிஞற்பிறக்கின்றரோசங்கள் விரணமபுரையோடல் சர்ப்பவிஷம ஆகியஇவைகள்போம என்க, (௱௩)

நாவல்மரத்தின் வேர்வகை,

வாதமறுங்கரப்பான் மாறும்விரணமோ
டோதமுறுநீரிழிவு முந்துரத்த-சீதமுங்காய்
மாவன்சுரமும்வளர் மேகமும்போகும்
நாவன்மரவேரி னால்,

(இ-ள்) நாவல்மரவேரால் வாதவிகாரம் கரப்பான்புண்வெகுமூத்திரம் ரத்தசீதபேதி வாதசுரம் மச்சாமேகம் இவை விலகும, (௲௪)

கருவேல்மரத்தின் வேர்க்குணம,

கருவேலின்வேர்க்குக் கடுப்பிரத்தம்மாந்தம
பருவாதமூறு கரப்பானும-பெருகு
பெருமபேதியும்போக்கும பேசவினிக்குங்
கருமபேயிதனைக் கருத்து.

(இ-ள்) பேசவினிக்குங் கருமபனையாளே கருவேல்வேரினால் ரத்தக் கடுப்பு அக்கினிமந்தம மகாவாதம கரப்பான் வதிசாரம ஆகிய இவைகள்போகுமென்க (௲௫)

உருதிவாக்கின் வேர்க்குணம்-இது-ஒதி-எனமருவியது,

புண்புரைகிராணிரத்தப் போக்கதிசாரங்கடுப்புந்
திண்பெறுதாகஞ்சோபஞ் சீதளமும்-நண்பி
லதிவிரைவாய்த்தாண்டு மணங்கேபருத்த
வுதிமரத்தின்※றூரினலே.ர்தூர் என்பதுவே,

(இ-ள்) தெய்வமகளீரனையபெண்ணேஉருதிமரவேரினால் வீரணம்புரைகிரகணி ரத்தபேதி பேதி சீதக்கடுப்பு தாகம் மூர்ச்சை பித்தசீதளம் இவைவிலகும் என்க, (௲௬)

அத்திமரத்தின் வேர்க்குணம்,

நல்லகத்திவேரதனை நாடுங்கால்மேகமெனுஞ்
சொல்லகலுந்தாகமறுஞ் சொல்லவெனின்-மெல்லமெல்ல
மெய்யெரிவுகையெரிவு மேகத்தினுள்ளெரிவு
மையெரிவும்போமென் றறி,

(இ-ள்) நல்ல அகத்திவேருல்வெள்ளைவிதாகம் உடல் உள்ளங்கை ஆண்குறி நாளம்பஞ்சேந்திரியமினவிடங்களின் யெரிச்சல் இவை நீங்கும்

நெல்லிமரத்தின் வேர்க்குணம்,

வமனமரோசியறும் வாதமுதன்மூன்றுஞ்
சமனமுறுமலமுஞ் சாரும்-மமனசுரம்

புல்லிவருதோஷசந்நிப் பொல்லாச்செயலும்போம்
நெல்லிமரவேரை நினே,

(இ-ள்) நெல்லிவேரால் வாந்தி அருசி திரிதோஷகோபம் தருணசுரத்தில் அபத்தியத்தாற்பிறந்த பீத ஜிம்மகதோஷம் அதிற்கிளைத்தசந்நி இவைநீங்கும் திரிதோஷசமனமும் மலப்போக்கும் உண்டாம்என்க

அருநெல்லிமரத்தின் வேர்க்குணம்

சுத்தசுரமரிசி தோலாப்பெருவாந்தி
பித்தசந்நிபாதமிவை பேருங்காண்-மெத்தமன
நாறுமலர்க்கூந்தன்மின்னே நாவுக்கினிமையெனக்
கூறுமருநெல்லியின் வேர்க்கு,

(இ-ள்) மிகுபரிமளம்பொருந்திய மலர்க்கூந்தலையுடையாளே அருநெல்லிமரவேரால் தனிச்சுரம் அரோசிகம் திரிதோஷவாந்தி இரத்தபுஷ்டி விசந்நிபாதம் ஆகிய இவைகள்போகும் என்க, (௫௱௬)

மரத்தின்வேர்வகை முற்றியது,

## செடியின் குணம்,

ஆடாதொடை வேர்குணம்,

காசமொடுமந்தங் கதித்தபித்தங்கொடுஞ்சு
வாசங்கழுத்துவலி முதனோய்-கூசி
யோடாதிராதிங்கொருநாளு மொண்டொடியே
யடாதொடைத்துருக் கஞ்சி,

(இ-ள்) ஆடாதொடைவேரினால் இருமல் அக்கினிமந்தம் சுவேதபித்தம் மகசுவாசம் களரோகமுதலிய நோய்கள் இவைபோம், (௫௱௰)

சங்கம் வேர்க்குணம்,

சங்கம்வேர்ப்பட்டை சளியிருமலேச்சுரத்தை
யங்கவாதக்கடுப்பையாடத்தைப்பைப்-பங்கே
செய்யுங்கிராந்தியையுட் டுகால்கிருமியையில்
வையந்தனிலொழுக்கு மால்,

(இ-ள்) சங்கம்வேர்ப்பட்டை கோழை காசம் கபச்சுரம் வாதக்கடுப்பு சிலேத்மசோபை பங்கவிசர்ப்பி உட்சுரம்தனிவாதகோபம்கிருமிரோகம் ஆகிய இவைகளைப்போக்குமென்க, (௫௱௰௧)

தே, பேராமுட்டி வேர்குணம்,

வாதசுரந்தாகம் மதலேக்கணமாந்தஞ்
சீதசுரம்பித்தமெனச் செப்பணங்கு-மோதுநம்மாற்
சேராமுட்டிக்கேகுஞ் செய்யமடமயிலே
பேராமுட்டித்தூளைப் பேசு,

(இ-ள்) அழகுபொருந்திய மயில்போலுஞ் சாயலையுடையாளே பேராமுட்டிவேரினால் வாதசுரம் தாகரோகம் மாந்தகணம் நணிர்ச்சும்பித்த ரோகம் ஆகிய இவைகள்போகும்-என்க, (௫௪௨)

சித்தாமுட்டிவேர்குணம் இதுவேகுறுந்தொட்டி,

அஸ்திசுரமுதலனந்த சுரம்பித்தமும்போ
மெத்தவிழிக்கொளியாம வீறுதயி-லத்திற்காம்
நற்றாமரைதருவு நாடுமொழிற்றிவே
சித்தாமுட்டித்துரைச் செப்பு,

(இ-ள்) நல்லதாமரையில் வசிக்குமிலக்குமியை யொத்தஅழகுடையாளே சித்தாமுட்டிவேரினால் அஸ்திசுரமுதலிய சுரகங்ளும்பித்தநோயும் நீங்கும் கண்ணுக்கொளியாம் இதுதயிலத்துக்குதவும், (௫௪௩)

செந்தொட்டி வேர்கருணம்,

சந்துவலிவாதந் தாகஞ்சுரங்கரப்பா
னுந்துநவாசங் கபமோடுங்கா-ணந்தயிரு
மிந்தொட்டியவதன வின்பமடமயிலே
செந்தொட்டிவேருற் றெளி,

(இ-ள்) சந்திரன்போன்ற முகத்தினையுடைய யின்பந்தரு மடமயிலே செந்தொட்டிவேரினால் சகணவிருநவாதரோகம் விதாகம் ருட்சைகடுவன் இளைப்பு கோழை ஆகிய இவைபோம் என்க, (௫௪௪)

தே, முட்காவேளைவேர்குணம் இதுமுக்காவேளையென மருவியது,

தாகாதிமந்தமதி சாரவறட்சி
போகாச்சுரந்தாபம் போக்கமருந்-தோகையிற்
கிக்காவேளைப்பதத்தைத் தின்னச்செய்விக்கவென்றான்
முக்காவேளைப்※பதத்தைமுன்※சோமுஜேர்

(இ-ள்) முக்காவேளைவேரினால் வாததாகம்மந்தாக்கினி அதிசாரம்நாவறட்சிசந்தசுரம் வெப்பும் அன்னத்திவேஷம் இவைபோம், (௫௪௫)

132



செங்கத்தாரிவேர்க்குணம்,

செங்கத்தாரிச்*சடைக்குத் தீராதமன்மேகம்
பொங்கிவருகிரந்திப் புண்புரைகள்-தங்குகின்ற
சந்திகசிலேஷ்மங் தனித்தமகாவாத
முத்திகைவிட்டோடுமொழி*சடைவேர்,

(இ-ள்) செங்கத்தாரிவேருக்குப் பிரமேகநீர் ஒட்டுப்புண் புரைகள்நீ ங்களை வீங்கச்செய்கின்ற கபம்மகாவாதம் இவைபோம், (௫௰௬)

மரக்காரை வேர்க்குணம்,

சீதங்கடுப்பு திரிதோஷமாந்தபுத்த
வாதங்கரணைய மாந்தகணமியாதிங்
கிரிக்காவன்மருந் தென்பாருலகில்
மரக்காரைவேரால் மதி,

(இ-ள்) மரக்காரைவேரால் சீதக்கடுப்பு திரிதோஷம் உதிரபித்தவா தநோய் கரப்பான்கபம் கணமாந்தம் இவைபோம் இதுவாந்திமருந்து

குத்துக்காற் சம்மட்டி வேர்க்குணம்,

சாரமுறுகுத்துக்காற் சம்மட்டிவேரெனச்சொற்
கோரமுள்ளமாவாதக் கூட்டமெங்கே-வீரமுறு
மேகத்தகுபபெங்கே வீறுதிமிர்வாதம்மெங்கே
சோகத்தளர்ச்சியெங்கே சொல்,

(இ-ள்)பசையுள்ளகுத்துக்காற் சம்மட்டிவேரினால்மகாவாதம் உசு-ம் மேகக்கட்டிகளும் திமிர்வாதமும் மூர்ச்சையின் அயர்வுபோம், (௫௰அ)

அவுரிவேர்க்குணம்-இதுவேநீலி,

எல்லாவிஷங்களுக்கு மேற்றமுறிப்பாகும்
பொல்லாச்சுரமூர்ச்சை பொங்குவெட்டை-நில்லாப்
பவுரிதருங்குன்மமுதற் பன்னோயொழிவு
மவுரிதருவேருக் கறி,

(இ-ள்) அவுரிவேரினால் சர்வவிஷம்சுரட்சை மூர்ச்சைவெள்ளை வயி ற்றுநோய் முதலியபலநோய்கள் ஆகிய இவைபோம், (௫௰௯)

களாவேர்க்குணம் இதுகிளா எனமருவியது,

விடத்துறுநோய்பித்தமைய வேர்வையதிதாகம்
இடத்தகவுதிரத்தினது சிக்கற்கடத்துளெழு

மக்கினிமாந்தமிவை யண்டாதொருநாளுஞ்
சிக்கெனக்களாவேரைச் சேர்,

(இ-ள்) களாவேரினால் விஷம்பவரோகம் பயித்தியம் கபாதிக்கம் கப வியர்வை விதாகம் பிரசவஅழுக்கு மந்தாக்கினி இவைநீக்கும், (௫௨௰)

தே, வெட்டிவேர்க்குணம் இதுவேகுருவேர்,

பித்தவிதாகஞ் சசிகாமிலங்கறைபபித்தமனம்
றத்திடுகுட்டஞ்சிரநோய் களமடிதாதுநட்ட
மத்தமனற்புண்டடைப்புண் வண்மூர்ச்சைவரிவிழிநோய்
வித்திரமேகத்தின்கட்டியுமபோம வெட்டிவேரினுக்கே.

(இ-ள்) வெட்டிவேருக்குப் பித்தத்தால் அகாலத்தி லுண்டாகிறதாக ம் சோமரோககாமாலை சத்தபித்தம சுரம்பரவுகின்ற குஷ்டமதலைநோய் கழுத்துநோய் சுக்கிலநஷ்டம் உன்மத்தம தீயால்வந்தபுண் மூலைச்சிலந் தி திரிதோஷமூர்ச்சை நேத்திரரோகம வித்திருக்கட்டி மேகக்கட்டி ஆகிய இவைநீங்கும். (௫௨௧)

செடியின்வேர்வகை-முற்றியது.

## கொடியின்வேர்வகை,

நாகமல்லிகைவேர்க்குணம-வெண்பா-இதுவே-நாகமுட்டி,

சீராருநாகல்கைச்※சிவைவைக் கண்டக்காற்
றீராநமைச்சற் சேறிடுபுடைக்-ணீராருஞ்
சன்னப்புழுச்சங்கந் தாங்காவாஞ்சாமபுவாத
வன்னக்குயிலனையாய் வாழ்த்து ※ சிவை வோ,

(இ-ள்) வன்னக்குயிலனையமாதே நாகமல்லிகைவேரால் ஒழியாத்தி னவும் நெருங்கியபுடைகளும் ரசதாதுவைப்பற்றிய கிருமிக்கூட்டமும் நீங்கும் என்க, (௫௨௨)

காட்டுமல்லிகைவேர்க்குணம்,

சுரங்களொடுநாவறட்சி தொந்திடந்தம்பேதி
யுரங்கதித்ததாகமிவை யோட்டும்-வருஞ்சோரார்
தாமல்லிலோடும் தாகமைபோலோடிவிடுங்
கரமல்லிகைவேரார்க் காண்,

(இ-ள்) காட்டுமல்லிகைவேரினால் சர்வசுரம் நாவறளல் அக்கினிமந் தம் அதிசாரம் விதாகம் ஆகிய இவைகள்போகும் என்க, (௫௨௩)

சிறுகுறிஞ்சாவேர்க்குணம்,

சிறுகுறிஞ்சாவே விஷத்தைத்தீர்க்குமானிலத்
துறுசுரங்கள்வாத மொழிக்குந் தெறிபாணக்
கண்ணாயிருமன்முதற் காசந்தணிக்கும்
விண்ணாடுருக்குமிதை விள்,

(இ-ள்) ஏவுகின்ற பாணமனைய கண்களையுடையாளே சிறுகுறிஞ்சா வேரானது அற்பசெந்துக்களின் நஞ்சுவாதசுரம் வாததோஷம் காசம் சுவாசகாசம் இவைகளைப்போக்குமென்க, (௫௨௪)

பேய்ச்சுரைவேரின்குணம்,

கடுவேறுபேய்ச்சுரைவேர் கண்டலரவின்
கடுவேறு துண்மை முக்காலுங்-கொடுவிட்மு
மீளையிருமலும்விட்டேகு முண்டால்வாந்தியுண்டாம்
வாளையுறுங்கண்ணாய் வழுத்து,

(இ-ள்) வாள்போலுங்கண்ணையுடையமாதே கசப்புள்ள பேய்ச்சுரை வேரினால் சர்ப்பசப்தவேகம் மகாவிஷம் கோழை காசம் இவைநீங்கும் இதில் வமனம்உண்டாம் என்க, (௫௨௫)

தே,முசுமுசுக்கை வேர்க்குணம்

கந்தமபரவு களிச்சளியும புன்விடமு
மந்தம்பெறுவிடமு வராந்திகளு மந்தம
பெருகுரங்குக்கிச்சூரும பித்தமுமிருக்கா
திரு*குரங்குக் கைவேருக்கே

(இ-ள்) முசுமுசுக்கை வேரினால் துர்க்கந்தத்துடன் இறுகியகோழை அற்பவீரியவிஷம்விஷாலசகரோகமவமனம மார்புநோய்குன்மம்பித்தா திக்கமஇவைபோம குரங்குக்குமுசுஎன்றொருபெயர், (௫௨௬)

வெண்காக்கட்டான் வேர்க்குணம,

மதரால்வந்தவெட்டைவன்மேகஞ்சென்னிவலி
யோதுசுரமவிழிநோய் யோடுங்காண் பேதியொடு
மாக்கட்டாஞ்சீதமறு மாமுலியாம்வெள்ளைக்
காக்கட்டான்வேரைக் கருது

(இ-ள்) மாமுலியென்னும காக்கட்டான்வேருக்கு வெள்ளை பிரமேக ம்தலைநோய்சுரம் கண்ணோய் ஆமம் இவைநீக்கும் பேதியுண்டாம,()

கருங்காக்கட்டான் வேர்க்குணம,

மாந்தங்கிருமியடல் ஷாதங்கபமினமுஞ்
சேர்ந்தழலக்கட்டுஞ் சிதையுங்காண் சூழ்ந்த

அருங்காகுவடுகளி லண்டாமயிலே
கருங்காக்கட்டான்வேரைக் கண்டு

(இ-ள்) தருக்களையுடைய மலைகளிலே சஞ்சரிக்காதமயிலே கருங்காக்கட்டான் வேருக்கு மாந்தம் மலக்கிருமி வாதாதிக்கம் சிலேஷ்மரோகம் மலக்கட்டு ஆகிய இவைநீங்கும்என்க, (௫௨௮)

கொடிவேலிவேர்க்குணம்-இதுவேசித்திரமூலம்

கட்டிவிரணங்கிரந்தி கால்களறையாப்புக்
கட்டிசூலைவீக்கங் காழ்மூல முட்டிரத்தக்
கட்டுநீரேற்றங் கனைத்தபெருவயிறு
கட்டுங்கொடிவேலி யாம்,

(இ-ள்) கொடிவேலிவேரானது வித்திரிதி-புண்-சொறி-சிரங்கு-வாதரோகம் குதஸ்தானவித்திரி-குத்தல்-சோபை-மூலரோகம்-உதிரிக்கட்டு ஜலஸ்வாரம் மகோதரம் ஆகியஇவைகளைக்கெடுக்கும், (௫௨௯)

பெருமருந்தின்வேர்க்குணம்,

பெருமருந்தின்வேர்ப்பித்தம் பீறியைப்புகாசம்
வருதிரமுரும்பு வலிவாத-முருவுவிட
மொன்றியமாகடிக ளோட்டுமுலகிலிது
வன்றியதுகோச்சிகிச்சைக் காம்,

(இ-ள்) பெருமருந்துவேர் பித்தகோபம்-சுவாசம்-இருமல்-சுரரோகம் சரீரக்குத்தல் வாததோஷம் அற்பவிஷக்கடிகள் ஆகிய இவைகளைநீக்குவதுமன்றி கோச்சிகிச்சைக்கும் உதவும் என்க, (௫௩௦)

பேருங்காஞ்சொறிவேர்க்குணம்,

காசஞ்சுவாசங் கபச்சுரங்களோடிவனை
வாசஞ்செய்யும்முர்க்குள் வாராமல்-வாசம்
பெருக்குமுலையாய் பெருங்காஞ்சொறிவே
ரிருக்குமெனமனத்து ளெண்ணி,

(இ-ள்) வாசமிகுதனங்களையுடையபெண்ணே பெருகாஞ்சொறி வேரினால் இருமல் இரைப்பு சீதசுரம்போம், (௫௩௧)

சிறுகாஞ்செடிவேர்க்குணம்,

சிறுகாஞ்சொறிவேர் சிலேஷ்மவாசத்தைக்
குறியாதமுச்சுரக் குழாத்தைச்-சொரியுங்

கரப்பான்சிறுசிரங்கைக் காலைத்தாகத்தே
யுரப்பாகச்சாடுமென வோது,

(இ-ள்) சிறுகாஞ்சொறிவேரானது தமக்கவாசம் திரிதோஷசுரங்கள் கரப்பான் புண்வாதப்பெருக்கம் தாகரோகம் இவைகளைநீக்கும், ()

கருங்காஞ்சொறிவேர்க்குணம்.

குற்றிருமல்நீரேற்றங் கோரகபருட்சை
நித்தியவரோசகமு நீக்குங் காணரத்ன
அருங்காஞ்சிவாய்ந்தவிடை யன்னமேசுத்தக்
கருங்காஞ்சொறிவேரைக் கண்டு,

(இ-ள்) அருங்காஞ்சிவாய்ந்தவிடை யையுடையஅன்னம்போல்பவளே கருங்காஞ்சொறிவேருக்கு பொடியிருமல்ஜலஸ்ராவம் சிலேஷ்மருட்சை அன்றோசகம் ஆகிய இவைநீங்கும் என்க, (௫௩௩)

பச்சைதிப்பிலிவேர்க்குணம்,

தாகமுடன்சோபந் தணிக்குங்காணெவ்வகையின்
மேகமுடன்பித்தம் விலக்குமே-போகமிகும்
நவ்வியரன்னநயங்கொடுக்கும்பச்சையாஞ்
செவ்வியம்முலச் செயல்,

(இ-ள்) சிவந்தநீற்பச்சையுள்ள திப்பிலிவேர் விதாகம் ஆயாசபலமேகம் பித்தாதிக்கம் இவைநீங்கும் சுக்கிலத்தையும் அழகையும் விருத்திக்கும், (௫௩௪)

இன்புருவேர்க்குணம்,

இன்புருவேரை யிதமாயருந்தினர்க்கும்
பின்புருதையமொடு பித்தமுமேதுன்பா
மருமல்சுவாச மெரிசுரம்வயிற்றுப்
பொருமலுப்பிசம்பறந்து போம்,

(இ-ள்) இன்புருவேருக்கு கபாதிக்கம் பித்தகோபம் காசம்ஈளை பித்தசுரம் வயிறிரைதல்விக்குதல் இவைகள்நீங்கும-என்க, (௫௩௫)

தே, நன்னாரிவேர்க்குணம் இதுவேநீறுண்டி,

நன்னாரிவேரை நருக்கியரைத்துமதன்
வின்னாரிபூணல் வெதுப்பியே-தின்னவெறி
தேனூதுங்கற்குழைச் சோற்றில்கலந்துண்ணக்
மாணூதுவண்டு நடி.

இதுவுமது.

சலதோஷம்பித்தமதி தாகமுழலை
சலமேறுசீதமின்னார் தஞ்சூ-டுலகமதிற்
சொன்மதுமேகம்புண் சுர மிவையெலாமொழிக்கு
மென்மதுரநன்னாரி வேர்,

(இ-ள்) நன்னாரிவேரை யரைத்துத் தேனிற் பாகஞ்செய்துண்ணில் அதிபித்தந்தீரும் அதைக்கற்றாழை சோற்றோடுண்ணவண்டுகடிபோம் இன்னுங்கிரமப்படி உபயோகிக்க நீரேற்றம் பித்தநோய் தாகம் வாய் நீர்ச்சுரப்பு புணர்ச்சியின்சூடும் மதுநீர்க்கிராந்தி சுரவேகம்போம். ()

கொடியின்வேர்வகை முற்றியது.

## புல்லின் வேர்வகை.

பச்சைவிலாமிச்சுவேர்க்குணம் இதனைவெட்டிவேர் என்பர்,

திரிதோஷந்தாகஞ் செறிகுஷ்டமீளை
பெரிதான சூலைமந்தம் பேராச்-சுரவெப்ப
மச்சையுண்ணுங்கீடமுதன் மாறுமெய்க்குங்காந்தியுண்டாம்
பச்சைவிலாமிச்சுக்குப் பார்,

(இ-ள்) பச்சைவிலாமிச்சுவேருக்கு வாதபித்தசபாதிக்கம் தாகரோகம் பெருவியாதி சுவாசம் சரீரக்கடுப்பு அக்கினிமந்தம் உஷ்ணசுரம் மச்சைதாதுக்கிருமி ஆகிய இவைகள் நீங்கும் அழகுண்டாம். (௫௩௮)

பஞ்சமூலத்தின் குணம்,

செவ்வியம்போரத்தை சித்திரமூலஞ்சுக்கோ
டொவ்வுகண்டுபரங்கி யோரைந்தும்-வெவ்வினையைச்
சண்ணுபஞ்சமூலமெனத் தாரணியெலாமறிய
வண்ணம்யிலே வழுத்து,

(இ-ள்) வண்ணமயிலனைய மங்கையரே திப்பிலிமூலம்போரத்தை கொடிவேலிவேர் சுக்கு கண்டுபரங்கி இவ் (௫-ம்) பஞ்சமூலமாம் இது கொடிய ரோகங்களையும்நீக்கும் என்க, (௫௩௯)

சிறுபஞ்சமூலத்தின் குணம்,

சிறியவழுதுணைவேர் சின்னெரிஞ்சின்மூலஞ்
சிறுமலிகண்டங் கத்திரிவேர்-நறிய

பெரியமலியோரைந்தும் பேசுபன்னேய்தீர்க்கு
மரியசிறுபஞ்ச மூலம்,

(இ-ள்) சிறுவழுதுணம் சிறுநெருஞ்சில் சிறுமல்லிகை கண்டங்கத்திரி பெருமல்லிகை ஆகிய இவைகளின் வேர்கள் (ரு-ம்) சிறுபஞ்ச மூலமாம் இதுபற்பலரோகங்களைப்போக்கும் என்க, (ருசல)

பெரும்பஞ்ச மூலத்தின்குணம்,

பாதிரிவேர்வாகை பருங்குமிழமரலூர
மாதேதழுதாழையிவ்வே போரைந்தும்போதிலம்
ருஞ்சிலைநுதற்றிருவே யுன்னுபெரும்பஞ்சமூ
லஞ்சிலநோயேகு மிதிலாய்,

(இ-ள்) மலராசனத்தில்வசிக்கும் சிலைநுதற்றிருவணையபெண்ணேபாதிரிவாகை பெருங்குமிழம் வில்வம் தழுதாழை இவ் ஐவகைவேரும் பெரும்பஞ்சமூலமாம் இதனாற் சிலநோய்கள்போம், (ருசக)

அஷ்டமூலத்தின் குணம்,

கோரையரிகரந்தை*கூலங்கலுசிகஞ்சாங்
கோரையாடாதோடை கோத்துளசிவீரியபற
பாடகமிவ்வெட்டும் பலவிஷக்குழாமிரியச்
சாடுமஷ்டமூலமெனன்பதாம்*கூலம் பேய்ப்புடல்

(இ-ள்) முத்தக்காசு விஷ்ணுகரந்தை பேய்ப்புடல்வேர் சீந்தில்வேர் கஞ்சாங்கோரை ஆடாதோடைவேர் கருந்துளசி பற்பாடகம் இவ்வெட்டும் அஷ்டமூலமாம் இதுபற்பலவிடங்களைத்தீர்க்கும் என்க, (ருசஉ)

தசமூலத்தின்குணம்,

வில்வம்பெரியகுமிழ் மேனெரிஞ்சில்முன்னையிரு
மல்லிகைசிறிய வழுதுணேவேர்-நல்லகண்டங்
கத்திரிபுன்காலிபெருவாகை யிவைவன்னேயைக்
குத்துந்தசமூலங் கூறு,

(இ-ள்) வில்வம்பெருங்குமிழ் யானை நெருஞ்சில்முன்னைசிறு மல்லிகைபெருமல்லிகை சிருவழுதுணம் கத்திரிபாதிரி பெருவாகை இப்பத்தும் தசமூலமாம் இதுகடினமான ரோகங்களைத் தீர்க்கும் என்க, ()

புல்லின்வேர்வகை முற்றியது,

## மரத்தின்பட்டைவகை,

### அத்திமரப் பட்டையின்குணம்,

வீறுகடுப்பிரத்தம் வெண்சீதரத்தமொடு
நாறுவிரணங்களெலா நாடாவாய்-கூறுங்கா
லத்திதருமேகம்போ மாயிழையேயெஞ்ஞான்று
மத்திப்பாற் பட்டைக்கறி,

(இ-ள்) ஆயிழையே அத்திமரப்பட்டைக்கு ஆசனக்கடுப்பு உதிரப்போக்குசீதரத்தபேதி புண்-தத்துப்பிரமேகம் ஆகிய இவைபோகும் என்க,

### நாவல்மரப்பட்டையின்,

ஆசியநோய்காச மசிர்க்கரஞ்சுவாசவினை
கேசமுழுபாச கிரகநோய்-பேசரிய
மாவியங்கலாஞ்சனமிவ் வன்பிணியெலாமேகு
நாவலுறுபட்டை யதனால்,

(இ-ள்) நாவல்மரப்பட்டையினால் வாயிற்பிறக்கும்நோய்கள் இருமல் பெரும்பாடு ஈளைபிள்ளைகளின் கிரகதோஷங்கள்-வியங்கம் லாஞ்சனம் என்னும் மச்சுபேதங்கள்ஆகிய இவைகள்தீரும் என்க, (௫௪௪)

### முருங்கைமரப்பட்டையின் குணம்,

முருங்கைவேர்ப்பட்டைக்கு மூடிகபத்தோ
டொருங்குறூச் சந்நிசுரமோடு-மருங்கனக
வட்டைப்பொருமுலையாய் வாய்வொடுவிஷங்களுமேற்
பட்டைக்குப்போமே பறந்து,

(இ-ள்) சூதாடுகருவியை நிகர்த்தமுலைகளையுடையமாதே முருங்கைவேர்ப்பட்டைக்கு கபதோஷமும் சந்நிபாதசுரமும் மரப்பட்டைக்குவாததோஷமும் சிலவிஷங்களும் நீங்கும், (௫௪௫)

### புளியமரப்பட்டையின் குணம்,

புளியமரத்தின் புரணிதனைக்கண்டா
லுளமாந்தைகுன்மவஷி யோடும்வளியார்ந்த
பேதிகட்டுஞ்சுரம்போம் பித்தமுறுந்தீபனமா
மோதவசீரணமே துன்,

(இ-ள்) புளியமரப்பட்டையினால் உளமாந்தைகுன்மநோய்வாதாதிசாரம் சுரம் அசீரணம் இவைநீங்கும் பித்தமும்பசியும் விருத்தியாம்,

பெருமரப் பட்டையின் குணம்,

பெருமரப்பட்டையது பேதிகிராணி
ம்ருவிரத்தநோயினத்தை மாத்துந்திருவே
நடலைபுரிவாதத்தை நாடாதகற்று
முடலையிரட்சிக்குமென வோர்

(இ-ள்) இலக்குமியனையாளே-பெருமறப்பட்டையானது அதிசாரம் கிரகணி உதிரநோய்வாதாதிக்கம்இவைகளை நீக்கும்சரீரத்தைப்போஷிக்கும், (கூள)

கருவேல மரப்பட்டையின் குணம்,

தந்தமிறுகுந்தனிச் சூதம்புண் ணூறு
மந்தசுரம்பித்தம் மடியுங்காண்-பந்த
மருவேயகலா மலரளகம்மாதே
கருவேலம்பட்டைக்குக் காண்,

(இ-ள்) வாசனைநீங்காத புட்பங்களைச்சூடிய அள்கபாரத்தையுடையாளே கருவேலம்பட்டைக்கு ரசவேகத்தின்வேக்காடு முதலியவிரணங்களும் சுரமும்பித்தநோயும் ஒழியும்-பல்லிறுகும்-என்க, (கூசஅ)

கருங்காலிமரப்பட்டையின் குணம்,

மேகநீராக்கெடுக்கு மீறுதந்தமூலத்து
ளாகியவேதனையை யாத்துங்காண்-சேரகந்
தருங்காசமீளையிவை சாராதகற்றுங்
கருங்காலிப்பட்டையது காண்,

(இ-ள்) கருங்காலிமரப்பட்டையானது பிரமேகமூத்திரம் தந்தமூல ரோகம் இருமல் சுவாசம் ஆகிய இவைகளைநீக்கும் என்க; (கூசகூ)

மாவிலிங்குயெருக்கருவேல் இதுகளின் பட்டைக்குணம்,

மாவிலிங்கப்பட்டையினால் வாதமொடுசந்திகளும்
பரவுகின்றகல்லடைப்பும் பாறுமே-மாவெருக்கம்
சட்டைசந்நிவாதம் பலவிஷம்போக்குங்கருவேற்
பட்டைநாநோய்தீர்க்கும் பார்!

(இ-ள்) மாவிலிங்கப்பட்டையால்வாதநோயும்சந்திகளும் அஸ்மரிரோகமும் நீங்கும் யெருக்கம் பட்டைசந்நிபாதம் வாதநோய் பலவிஷம இவைபோக்கும கருவேல்பட்டை நாப்புண்ணை நீக்கும், (கூஙய)

கள்ளிநொச்சில் இதுகளின்பட்டைக்குணம,

நரம்புச்சிலந்தி களிர்வாதசந்நி
யுரமபெரியவாதமிவை யோடுமே-பெருமபுவியிற்

கள்ளிமறப்பட்டையினால் காரநொச்சிற்பட்டையது
துள்ளுசன்னிவாத மகற்றும்

(இ-ள்) கள்ளிமரப்பட்டையினால் நரம்புசிலந்தியம் கபவாததொந்த சந்நிபாதமும் வாதப்பிரகோபமும்நீங்கும் நொச்சில் மரப்பட்டையான து சந்நிபாதத்தாற் பிறந்தவாதத்தைப்போக்கும்-என்க, (ருரு௲)

கிளியூரார்ப்பட்டையின்குணம்.

மணவருந்கமாகும் வருசுரத்தைப்போக்குந்
தணலாய்வெப்பைத் தணிக்கும்-குணமாதர்
கிளியூரற்பட்டை யது கிதம்பயிலு
மளியூருங்கூந்தன்மின்னே பாய்

(இ-ள்) கிதம்பயிலும் வண்டுகள்பொருந்திய கூந்தல்மின்னே பரிமளச்சேர்க்கையி லொன்கிய கிளியூரற்பட்டையானது சுரரோகத்தையும் தேகக்கொதிப்பையும்தணிக்கும் நீயறிக, (ருரு௲)

அக்காரப்பட்டையின்குணம்.

அக்காரப்பட்டைக் கறணுவறட்சிகளு
மெக்குசந்நிபாதசுர மென்பவையும்-பக்கச்
சகலதலைநோய்வாய்வுந் தாழ்தேயொழியும்
புகலிரத்தகந்தமது போம்.

(இ-ள்) அக்காரப்பட்டைச் கவோதிருக்கம் நாவறட்சி சந்நிபாதம் சுரம் பற்பலதலைநோய் வாதகோபம் உதிரநாற்றம் இவைநீங்கும், (ருரு௭)

கோங்குமரப்பட்டையின்குணம்

கோங்கினறும்பட்டையார் கூறறியமேகமபோந்
தாங்கியபற்பிணியுஞ் சாந்தமாம்-வாங்குவெண்மைக்
கன்னூரதுவெள்ளிக் காசெனவேபஸ்மிக்கும்
மின்னார்ச்சிகாமணியே விள்.

(இ-ள்) பெண்கள்சிகாமணியே கோங்கின்பட்டையால் பிரமேகமூத்திரமும்தாளக்கூடாததந்தரோகமும்நீங்கும் கல்நார்பஸ்பமாகும் என்க,

கொஞ்சிப்பட்டையின்குணம்

மாந்தமகற்றும் வயிற்றுப்பிசந்தவிர்க்கு
மாந்தகணச்சுரத்தை யாற்றிவிடுஞ்சேர்ந்தசிறு
வாதரோயோட்டும் வகைகொஞ்சிப்பட்டையது
மாதரசேகீபுமனா் வாய்

(இ-ள்) மாதரசே காட்டுக் கொஞ்சிப்படை பாலர்மாந்தம் வயிற்றுப் பொருமல் கணச்சூடு ஆவிருதவாதரோகம் இவைகளைப்போக்கும் நீய றிவாயாக, (௫௫௬)

பஞ்சவர்க்கத்தின்குணம் ✓

ஆலரசுசம்புடனே யத்திகுருவேலற்றின்
தோலைந்தும்பஞ்சவர்க்கந் தொல்லுலகி லேலுமதாற்
காசஞ்சுவாசங் கபங்கொங்கைவித்திரிதி
நாசமுறுமென்றே நவில்

(இ-ள்) ஆல் அரசு நாவல் அத்தி இத்தி என்னும் ஐவகைமரங்களின்ப ட்டைகளே பஞ்சவர்க்கமாம் இதனால் இருமல் இரைப்பு சிலேஷ்மதோ ஷம் ஸ்தனவித்திரிதிக்கட்டி ஆகிய இவைகள் போம்-என்க, (௫௫௭)

மரத்தின்பட்டவகை-முற்றியது,

## மரத்தின்பிசின்வகை,

தே, மாம்பிசின்குணம்

பெரும்பாடெங்கேயிரத்த பேதியெங்கேமுக்க
ரம்பாழும்வெள்ளையெங்கே சாற்றும்-கரும்பாம்பின்
நாதகிரியாசஞ்செய் நங்காய்வனத்திலுறை
சூத ※ கிரியாசமெனச்சொல் கிரியாசம் பிசின்,

(இ-ள்) கரும்பாம்பின் நாதகிரியாசஞ்செய் நங்கையரே மாம்பிசினால் பெரும்பாடென்கிற அசிர்க்கரநோயும் ரத்தாதிசாரமும் வாதப்பிரமேக வெள்ளையும் நீங்கும்என்க, (௫௫௭)

புரமதருவின்பிசின்குணம் இதுவேபலாசுமுருக்கு

சத்திகட்குநாடிகட்குந் தங்குசுக்கிலந்தனக்கும்
புந்திபுரங்கட்குரமும் பூட்டுங்கா-ணுந்து
சரமதனுக்காகமநூல் சாற்றுமலர்மாதே
பிரமதருவிற் ※ சம்பிசின் ※ சம் பிறப்பு,

(இ-ள்) உந்துசரமதனுக் காசமநூலைப்புகட்டும் மலர்மாதனே யானே பிரமதருவின் பிசினானது இல்கள்நரம்புகள் சுக்கிலம் அறிவுமார்புஆகி ய இவைகளுக்குப் பலத்தையுண்டாக்கும்-என்க, (௫௫௮)

மலைவேப்பன்பிசின்குணம்,

மலைவேம்புதன்பிசின்றன் வாதக்கரப்பன்
வலுமிழுக்கட்டியிவை மாற்று நலமீ...

தாதுவுமுண்டாக்கும் சலப்பேதியைக்கட்டு
மாதேயிதனை வழுத்து

(இ-ள்) மாதேமலேவேப்பம் பிசின் கருங்கரப்பன் மேகக்கட்டி சலமந் தம்பேதி ஆகிய இவைகளைநீக்கும்சுக்கிலத்தை விருத்தியாக்கும்என்க,

கருங்காலிப்பிசின்குணம்

கருங்காலியின்பிசின்றான் காரார்கரப்பான்
வருமேகநீரிழிவை மாத்தும்-விரைவாய்ப்
பெரும்பாட்டைநீக்கும் பெருந்தாதுவிர்த்தி
யரும்புமெனக்கண் டறி

(இ-ள்) கருங்காலிப்பிசின் கருங்கரப்பான் மேகமூத்திரம் அசிர்க்கரம் ஆகிய இவைகளைநீக்கும் விந்துவைவளர்ப்பிக்கும்-என்க, (௬௬௨)

வாகைப்பிசின்குணம்

வாகைப்பிசின்மேகம் வன்கிரந்திகட்டியையு
மேகத்துரத்துமிது நிசமே-மாகனக
மேனிகொடுக்கு மிகுத்தபலமுண்டாக்குந்
தேனினியமென்மொழியே தேர்

(இ-ள்) தேனினுமினிய மொழியையுடையபெண்ணேவாகைப்பிசின் பிரமேகம்வாதகிரந்தி மேகக்கட்டிஆகிய இவைகளைவிலக்கும்அழகையும் வன்மையையும் உண்டாக்கும். (௬௬௩)

இலவம்பிசின்குணம்

மேகவெட்டைநீர்ச்சுருக்கு மெய்யனற்கிருச்சரத்தின்
வேகமதிகாரமென விள்ளுநோ யேகவென்றால்
வாரணிபுங்கும்பமுலே மாதேம்றைப்பின்றிப்
பூரணிரசத்தைப் புகல் ※ பூரணி இலவமரம் ரசம் பிசின்

(இ-ள்) வாரணியுங் கும்பஸ்தனங்களையுடையாளே இலவம்பிசினிறைல் பிரமேகவெள்ளை மூத்திரக்கடுப்பு உட்சுரம் கிரிச்சரவேகம் பேதிஆகிய இவைகள்நீங்கும்-என்க, (௬௬௪)

விளாம்பிசின்குணம்

நல்லவிளாம்பிசினே நற்பாதஞ்செய்தருந்தத்
தொல்லையதிசாரந் தொலேவதென்றே மெல்லியரால்
வந்தவெள்ளைத்தன்னுடனே மாதர்பெரும்பாடு
முந்துநீர்ப்போக்கும்போ முன்

(இ-ள்) சுத்திசெய்தவிளாம்பிசினை சூரணம் மாத்திரை முதலிய அவுஷதரூபமாகச்செய்து உண்டால் நீடித்த அதிசாரம்புணர்ச்சியால்வந்தவெள்ளை ஆசிர்க்குரோகம் வெகுமூத்திரம் ஆகிய இவைநீங்கும், (௫சரு)

முருங்கைப்பிசின்குணம்

முந்துநீரைத்தடுக்கு மோரைப்போலேயொழுகும்
விந்துவைத்தடிப்பித்து மேனிதரும்-தொந்தக்
க்ரியநீறவாயுதனைக் காதிவிடுநாளும்
பெரியமுருங்கைப் பிசின்

(இ-ள்) முருங்கைப்பிசின் அதிமூத்திரம் குஷ்டமேகம் தொந்தவாதம இவைகளைநீக்கும சுக்கிலத்தை இருக்கி அழகையுண்டாக்கும, ()

விடத்தேரின்பிசின்குணம

விடத்தேயுன்றன்பிசின்றான் வெண்மேகமபோக்கு
மடுத்தபிரமேகத்தை யாற்றுந் தொடுத்த
மேகக்கரப்பானை விட்டோட்டுமென்றுலகி
ஞகரிகமாதே நவில்

(இ-ள்) நாகரீகமாதே விடத்தேரின்பிசன் வெண்மேகம சீழ்ப்பிரமேகம் மேகவெப்பத்தால் வந்தகரப்பான் ஆகிய இவைகளைவிலக்குமஎன்க,

அடப்பமரத்தின்பிசின்குணம் இதுவேவாதுமையாம

நெஞ்சமுரக்குநீகழு விந்துவுங்கட்டும
நஞ்சுமருந்துகளு நல்லமிர்தாமவிஞ்சுகயக்
கோழையடக்குக் குலவாதுமையெனவே
வாழையுடமபின் சளிக்குமாற் ※ சளிபிசின்

(இ-ள்) அடப்பமரத்தின்பிசினுல் சுக்கிலத்திற்குத்தடிப்புண்டாவதுமன்றி விஷமானமருந்துகளும அமிர்தமாம்சயத்தினுல் அதிகரித்தகபக்கோழையானது தந்நிலையைவிட்டுப் பெயராதடங்குமஎன்க, (௫சஅ)

கருவேலமபிசின்குணம

நீத்தொழுகுமவிந்துதை நிலைக்கப்புரியுமெரி
பூத்தொழுகுமவெள்ளைதனைப் போக்குமிம-மாத்திரமோ
தேசுதருமழகுஞ் செய்யும்பெரியோராற்
பேசுகருவேலம பிசின்

(இ-ள்) கருவேலம பிசினுனது நீத்துப்போன சுக்கிலத்தை இறுகச்செய்வதுமன்றி எரிச்சலோடு விழுகின்ற சீழ்ப்பிரமேகத்தையுமநீக்கும அழகையும உண்டாக்கும என்க, (௫சஅ)

ரே, ஆவாரைப்பிசின் குணம்,

பெருநீர்மறிக்கும் பிரமேகம்போக்கும்
வருநீர்ச்சுருக்குதனை மாற்றுங்-கருநீர்மை
பூணுமேனிக்கமலப் பொன்னேபிடகரெலாம்
பேணு*மேகாரிப்பிசின். *மேகாரி-ஆவாரை.

(இ-ள்) அழகுபொருந்திய கமலமின்னனையகாரிகையே ஆவாரைச் செடியின் பிசினானது வெகுமூத்திரத்தையும் பிரமேகரோகத்தையும் வாதகிரிச்சரத்தையும் போக்கும் என்க. (௫௬௬)

புற்பிசின் குணம்,

நெஞ்சிற்குரஞ்சலம்போ னீத்தவிந்துவிற்குறுதி
வஞ்சியர்தம்போகத்தில் வன்மையுமா-நஞ்சைத்
தடவியகூர்வாளெனச் சாற்றும்விழியா
யடவிவருபுற்பிசினென் றால்.

(இ-ள்) நஞ்சைத்தடவிய கூர்வாளனையவிழியாளே காட்டிலுள்ள புற்பிசினால் மார்புக்கும் நீரான சுக்கிலத்திற்கும் சையோகத்திற்கும் அதிக பலமுண்டாம், (௫௬௭)

பிசின்வகைமுற்றியது,

## மாத்திரை இலைவகை.

மரியங்கொழுந்தின் குணம்,

வாயிவுநீர்ச்சுரப்பு வாந்திகடிதேகும்
யேயிரத்தசீதமென்ற பேதியறும்பாயு
மரியங்கமொத்தவிடை யாராவமிர்தே
மரியங்கொழுந்தை வழுந்து.

(இ-ள்) அரியங்கமொத்த இடையையும் அமிர்தத்தைநிகர்த்தமொழியையுடைய பெண்ணே மரியங்கொழுந்தினால் அரோசகம் வாயில்சலமூறல்வமனம் ரத்தாதிசாரம் சீதபேதி ஆகிய இவைகள்போம். (௫௭௧)

கருவேல்கொழுந்தின் குணம்,

*கண்டாலுவின்றளிரைக் கல்லிலரைத்துத்தயிரி
லுண்டாற்பாஷாண வெப்ப மோடுங்காண்-கண்டாவி
வந்தசிவப்பேகுமதை மாதர்பாலாலரைத்து
வெந்தவடைகண்ணிலே; த்தவே. *கண்டாலு-கருவேல்

(இ-ள்) கருவேலங்கொழுந்தைத்தயிரில் அரைத்துக்குடிக்கில் பாஷாணவேகம் நீங்கும் முலைப்பாலில் அரைத்து அடைதட்டிக்காய்ந்தசட்டியிலிட்டு வெதுப்பி அற்பச்சூடாக ஒத்தடமிடில் கண்சிவப்புமாறும், ()

புளியிலையின் குணம்,

அழுபுண்ணைநீக்கு மடற்சோபைமாற்று
மெழுபாண்டுவைப்போக்கு மிப்பா னழுது
மளியச்சிவந்தகண்ணோ யாற்றுங்கனலாம்
புளியிலையைநன்ருய்ப் புகல்,

(இ-ள்) வெப்பமுள்ள புளியிலை அளிந்தவிரணம் சோபரோகம் பாண்டுரோகம் சிவந்தகண்ணோவு இவைகளைநீக்கும் என்க, (௫எ௩)

தே, வேப்பிலையின் குணம், இதுவே. நிம்பம்.

கிருமிகுட்டமாந்தங் கெடுவிடஞ்சுரங்கள்
பொருமியவகுரிகையின் புண்களொருமிக்க
நிம்பத்திலையிருக்க நீடுலகிநீங்காமற்
கம்பத்திலையிருக்கக் காண்.

(இ-ள்) வேம்பிலையினுல் புழுக்கள் பெருவியாதி மாந்தம் மகாவிஷம் சுரரோகங்கள் அம்மைக்கொப்புளவிரணம், இவைகள் ஒழியும. ()

முருங்கையிலையின் குணம்,

செறிமந்தமவெப்பந் தெறிக்குந்தலைநோய்
வெறிமூர்ச்சைகண்ணோய் விலகு-மறமே
நெருங்கயிலையொத்தவிழி நேரிழையேநல்ல
முருங்கையிலையை மொழி.

(இ-ள்) வேலையொத்தகண்களையுடையாளே முருங்கையிலையால் அக்கினிமந்தம உட்சூடுசிரஸ்தாபரோகம பித்தமூர்ச்சை கண்ணோவு ஆகிய இவைநீங்கும என்க. (௫எ௫)

அகத்தியிலையின் குணம,

மருந்திடுதல்போகுங்காண் வண்கிரந்திவாய்வாந்
திருந்தவசனஞ் செரிக்குமவருந்தச்
சகத்திலெழுபித்தமது சாந்தியாநாளு
மகத்தியிலைதின்னு மவர்க்கு.

(இ-ள்) அகத்தியிலையைஉண்ணில் இடுமருந்தும் பயித்தியதோஷமும நீங்கும கடுவனுமவாய்வும உண்டாம் போஜனசிரணமாம. (௫எ௬)

செவ்வகத்தி யிலையின்குணம,

செவ்வகத்திப்பன்னுஞ் சிலேஷ்மமதையுண்டாக்கும்
வவ்வுபலசிந்தூரம் வைப்பதற்காங்-கவ்வு

நவநீதபஸ்மமதை நாளுமுடிப்பிக்குஞ்
சிவமாக்குந்தாளகத்தைத் தேர்,

(இ-ள்) செவ்வகத்தியிலை கபதோஷத்தை உண்டாக்கும்பற்பலசிந்தூரம நவநீதபஸ்பம தாளகசுத்தி இவைகளைச்செய்வதற் குதவும, ()

தே, பசுமின்னையிலையின்குணம, இதுவே-நறுமுன்னை

வாயருசிசோபையைய மாருக்கரப்பனொழும
வாயமந்தாக்கினி மயக்கமென்ற-நோய்க்
ளறுமுன்னையுண்ணுவா கட்காழியுலகி
நறுமுன்னை தன்னிலையை நாடு

(இ-ள்) பசுமின்னிலையால் அரோசகம் வீக்கம கபமகரப்பான் இவையுண்டாம வாததோஷமும அக்கினிமந்தமுமமயக்கமும்போம், ()

கருவேப்பிலையின்குணம்

வாயினருசிவயிற் றளைச்சனீடுசுரம்
பாயுகின்றபித்தமுமென் பண்ணுந்தான் தூய
மருவேறுகாந்தளங்கை மாதேயுலகிற்
கருவேப்பிலையருந்திக் காண்.

(இ-ள்) வாசனைபொருந்திய காந்தள்பலானையகைகளையுடைய மாதே கருவேப்பிலையால் அரோசகம சீதபேதியால்வருமவயிருளைவு புராண சுரம பயித்தியதோஷம ஆகியஇவைகள்போகும-என்க (௫எக)

சிற்றுழா, பேருழா, இவ்விலைகளின்குணம

சிற்றுழாமூல்ரத்தஞ் சீழ்மூலமபோக்கிவிடு
மற்றதொருபேருழா வாய்த்திடிலோ-உற்றகுத
மூன்றுமவலைய முளையாசனக்கடுப்பைத்
தோன்றுதகற்றிவிடுஞ் சொல்.

(இ-ள்) சிற்றுழாமரத்தின் இலையானது ரத்தமூலத்தையுஞ் சீழ்மூலத்தையும்போக்கும், பேருழாமரத்தின் இலையானது ஆசனவளையம் மூன்றிற்குள் உள்வளையமுளையையும குதக்கடுப்பும ஒழியும், (௫அ௰)

தெங்குபனை இவைகளின் குருத்துக்குணம்

தென்னங்குருத்தாற் சிலேஷ்பவலிநீங்கு
மன்னுதிரமூலமது மாறுங்கா-ணுன்னும்
பனங்குருத்தைத்தின்றாற் பகருதிரமூலங்
காம்பெருகுமபேதியுமாங் காண்

(இ-ள்) தென்னங்குருத்தால் கபவுபத்திரவமும் ரத்தமூலமும் நீங்கும் பனங்குருத்தால் ரத்தமூலமுமதிசாரமுமஉண்டாம. (ருஅ௩)

பேரீச்சுசிற்றீச்சு இவைகளின்குருத்துக்குணம

பேரீச்சுத்தன்குருத்தைப் பேணியேதின்பவருக்
கீரீச்சகுன்மவலி யேகுங்கா ணூரிற்
சிறியயீச்சுக்குருத்தைத் தின்றால்வயிற்றின்
மறியுதிரவாயுவறும வாழ்த்து,

(இ-ள்) பேரீச்சுக்குருத்தால் சிலேஷ்மகுன்மமபோம, சிற்றீச்சுக்குருத்தால் வயிற்றில்கட்டுப்பட்டரத்தவாத குன்மமபோம, (ருஅ௨)

தே, மூங்கில்யிலேயின்குணம

குடற்கட்டிச்சூலேயுடன் குன்மமுதிர
முடற்கெட்டாதோடி யொழியு மடற்றங்கு
வேல்விழிமாதேகேளாய் வேயினிலேதனக்குக்
கால்வழியுஞ்சோணிதமபோங் காண்

(இ-ள்) வேல்விழிமாதேகேளாய் மூங்கிலிலேக்கு குடற்சூலேயும வயிற்றுநோவும ரத்தத்தடிப்பும பிரசவகாலத்திற்றங்கிய அழுக்குமநீங்கும என்க, (ருஅ௩)

மரத்தின் இலேவகை முற்றியது.

## செடியின் இலேவகை.

ஆடாதோடையிலேயின்குணம

ஆடாதோடைப்பன்ன மையறுக்குமவாதமுதற்
கோடாகோடிச்சுரத்தின் கோதொழிக்கு-நாடின்
மிகுத்தெழுந்தசந்நிபதின் மூன்றுமவிலக்கு
மகத்துநோய்போக்கு மறி

(இ-ள்) ஆடாதோடையிலே கபாதிக்கம வாததோஷம் பற்பலசுரமசந்நிபாதம-௰௩-வயிற்றுநோய் ஆகியயிவைகளேநீக்குமஎன்க, (ருஅச)

தே, வெண்நொச்சில்யிலேயின்குணம

நாசந்தருவாத நாசிப்பிணியழல்கு
வாசந்தசனவுரு வன்றோடங்-காசமற
லுச்சியடையை யுறைநேபுமென்படுமோ
நொச்சியடையை நுவல்

(இ-ள்-) வெண்நொச்சிஇலையால்மகாவாதம் பீநசம்சுரம் இளைப்புதந்தவலிதிரிதோஷம் இருமல்நீரேற்றம்கபசிரஸ்தாபம் இவைபோம்என்க,

கருநொச்சில்இலையின்குணம்

வாதக்கடுப்பகலு மாருதபீநசம்போ
மோதப்பேயோடி யொளிக்குங்காண்-வேதைசெய்பு
மண்டைக்குடைச்சலறும் மாசில்கருநொச்சிலுக்குப்
மண்டைத்தலைவலிபோம் பார்

(இ-ள்) கருநொச்சில் இலையால் வாதவலி நாசிகாரோகம் கபநோய்மண்டைக்குடைச்சல் சிரஸ்தாபரோகம் ஆகியஇவைநீங்கும், (௫அசு)

வெள்ளாமணக்குஇலையின்குணம்

மந்தங்கதித்தெழுந்த வாதமருமவலி
பந்தமலமியாவும் பறக்குங்காண்-சுந்ததமும்
பூமணக்குநெய்த்த புரிகுழன்மாதேவெள்ளை
யாமணக்குப்பத்திரியா லாய்

(இ-ள்) புட்பங்கள் பரிமளிக்கும் நெய்த்தபுரிகுழன்மாதே வெள்ளாமணக்குஇலையால் அக்கினிமந்தம் வாதவலிமார்புநோய் மலக்கட்டு ஆகிய இவைகள்போம்-என்க, (௫அஎ)

செவ்வாமணக்குஇலையின்குணம்

குன்மமொ[illegible]டுமந்தங் கொடுவாதமெய்வலியுஞ்
சன்மமட்[illegible]டும்வாராமற் றண்டுங்கா-ணன்மைதரு
மெய்வாமணக்குசுட்கு மேற்றமென்பார்காந்தியுள்ள
செவ்வாமணக்கிலையைச் சேர்

(இ-ள்) செவ்வாமணக்குஇலையால் வயிற்றுநோவு செரியாமந்தம் வாதகோபம் தேகக்கடுப்பு ஆகியஇவைகள்விலகும்என்க, (௫அஅ)

தே, செம்பைஇலையின்குணம்

கட்டியொடுவீக்கங் காய்துணிரேற்ற
மொட்டிவருவாதகப மோட்டுவது-தொட்டுவிடு
மம்பஇலைவேலைவென்ற வங்கண்மடமாதே
செம்புயிலைவேலையெனத் தேர்

(இ-ள்) அம்பயிலைவேலைவென்ற அழகியகண்களையுடையாளே செம்பயிலையால் வாயுவின்கட்டிகள் சோபை சரீரநீரேற்றம் வாதசிலேஷ்மதொந்தம் ஆகிய இவைகள்ஒழியும்என்க, (௫அகு

கருஞ்செம்பை இலையின்குணம்

விப்புருதிப்புண்ணு நம் வீறுகரப்பானும்போந்
தப்பாமன்மேகந் தனியுங்காண்-வெப்பார்
கபரோகமேகுங் கருஞ்செம்பை யொன்றுக்
கிபமாமுலைமாதே யெண்

(இ-ள்) யானைமத்தகம்போன்ற தனத்தாளே கருஞ்செம்பை இலையால் விப்புருதிக்கட்டி கரப்பான்பிரமேகம் பித்தசிலேஷ்மதோஷம் ஆகிய இவைகள்போகும் என்க. (௫௯௰)

வறட்பூலா இலையின் குணம்,

சீதரத்தஞ்சேர்ந்தேனுஞ் சேர்க்கையின்றி யேனும்வரு
பேதிகள்வயிற்றின் பிடுங்கலினு பாதிகளும்
பூதலத்திராநல்வறட் பூலாவிலையரைத்து
மேதித்தயிரிலுண்ண வே.

(இ-ள்) வறட்பூலா இலையை யரைத்து எருமைத்தயிரிற் கரைத்துக்குடிக்கில் சீதமும்ரத்தமும் கலந்தாவது தனித்தாவது காணுகின்றபேதிகளும் இதுகளால் உண்டாகின்ற வயிற்றுநோயும் ஆயாசமும்விலகும்,

பாவட்டையிலையின்குணம்

தீதவாதங்களறுந் தீபனமோவுண்டாகும்
வாதங்கபமொழியும் வார்குழலே-போதவே
ஆவட்டைத்தாகசுர மற்றுவிடுந்தோஷம்போந்
பாவட்டைப்பத்திரிக்குப் பார்

(இ-ள்) நீண்டகுழலாளே பாவட்டைஇலையால் சிலேஷ்மவாதம் வாதகபதோஷம் ஆயாசம் தாபசுரம் திரிதோஷம் ஆகியஇவைபோமபசியுண்டாம, (௫௯௨)

பெருஞ்சின்னியிலையின்குணம

காணக்கடியுமெதிர் கண்டவிஷக்கடியு
நாணதிரந்திடவு ஞாயமுண்டோ-தோணு
வருஞ்சின்மதனிமொழி மாதரசேகேளாய்
பெருஞ்சின்னிமூலியுண்ட பேர்க்கு

(இ-ள்) மதனிமொழி மாதரசேகேளாய் பெருஞ்சின்னி இலைக்குக்காணக்கடிவிஷமும பார்க்கும்படிக்குக்கடித்தபற்பல செந்துவிஷங்களும நீங்கும-என்க, (௫௯௩)

சிறுசின்னியிலையின்குணம

கடிவிஷமுங்காணக் கடிவிஷமுமாத
ரிடிவிஷமுமோழி மிதுவன்றி-நெடிவிழிக்

கன்னிகையேமேகங் கணக்காச்சல்மாந்தமும்போஞ்
சின்னியிலைக்குத் தெறித்து

(இ-ள்) காதளவோடி நீண்டகண்ணுளே சிறுசின்னியிலைக்கு வண்டு முதலிய கடிவிஷங்கள் இன்னதெனத்தெரியக்கூடாத செந்துக்களின் விஷங்கள் இடிமருந்து பிரமேகம் கணச்சுரம் அக்கினிமந்தம் ஆகியஇவைகள்போம்-என்க, (௫௬௪)

தே, தழுதாழையிலையின்குணம்

வாதம்பிடிப்பென்ற வற்காலியைப்புலிபோற்
போதப்புவிக்கும் புகல்வற்றே-காத
அழிதாழைப்பீனசத்தை யண்டாதகற்றுந்
தழுதாழைப்பன்னமது தான்

இதுவுமது

சேர்ந்தசொரிசிரங்கைத் திண்வாதக்கூட்டத்தை
யாய்ந்தொழிக்கும்பித்தை யழைக்குமந்த-மோய்ந்திடா
ஐயின்சாந்தணிக்கு மானதழுதாழையது
மெய்யின்கடுப்பகற்றும் விள்

(இ-ள்) தழுதாழையிலை பக்கவாதமுதலிய (அம) வாதரோகங்கள் சிலேஷ்மபீனசம் புடைகிரந்தி ஆவிருதவாதங்கள் மந்தகபசுரம் தேகக்குடைச்சல் இவைகளைநீக்கும் பித்தத்தையுண்டாக்கும், (௫௬௬)

தே, விராலியிலையின்குணம்

ஆன்றதுரிசெநீருகமனைத் துன்னினமே
ஊன்றுகுறைகட்டிபோட்டைப்புத்-தோன்றிற்
சுராலிக்குதலையிளந் தோகாய்விரைவாய்
விராலிக்குழையோடு விள், குழை-தளிர்

(இ-ள்) குதலைச்சொற்களையுடைய மயிலனையாளே விராலியிலை பெருமைதங்கிய துரிசை வெளுப்பாக்குவதுந்தவிர அடிகனத்தகட்டிகளையும் வீக்கத்தையும்போக்கும்-என்க, (௫௬௭)

எருக்கிலையின்குணம்

எலிவிஷங்குஷ்டமைய மேறுகிருமி
வலிசூலைவாயு விஷமந்தம்-மலபந்த
மெல்லாமகலு மெருக்கிலையைக்கண்டக்கால்
வில்லாருநன்னுதலே விள்

(இ-ள்) வில்போன்ற நன்னுதலாளே எருக்கிலையினால் எலிவிஷம்பெருவியாதி சிலேட்டுமநோய் கிருமிரோகம் ஐவகைவலிசில்வீக்கம் தனிவா

தகோபம் சர்ப்பவிஷம் அக்கினிமந்தம் மலக்கட்டு ஆகிய இவைகளை நீக்கும்-என்க, (ருகஅ)

காட்டாமணக்கிலையின்குணம்

கட்டிவிரணங் கரப்பான்பிலீகமதி
கெட்டியுறுகுன்மங் கிளைத்தசிரங்-கொட்டுமோ
கூட்டோமொழியுங் குவடனையகொங்கையின்னே
காட்டாமணக்கிலையைக் கண்டு

இதுவுமது

காட்டாமணக்காற் கபவாதசூலையுடன்
வீட்டுதலைநோய் விரிகிரந்தி-வாட்டுகின்ற
உண்மூலம்போகு முடம்புலர்தல்வெட்டையறுந்
திண்மூலதாதுவுமாஞ் செப்பு

(இ-ள்) மலைகளைநிகர்த்த கொங்கைகளையுடையாளே காட்டாமணக்கு இலையினால் மேகக்கட்டி புண்கரப்பான் பிலீகம் குன்மக்கட்டி ஜனிக்கின்ற விரணங்கள் சிலேட்மவாதக்குத்தல் சிரஸ்தாபரோகம் பெருவிரணம் வருத்தாநின்றஉள்மூலம் உள்ளுருக்கி வெள்ளை இவைபோம் சுக்கிலவிருத்தி யுண்டாம், (சுரு)

தவசுமுருங்கையிலையின்குணம்

தவசுமுருங்கைத் தயைதற்குக்கேளா
யவசியம்பீநச முண்ணுக்கு-மூவசர்க்கி
யையஞ்சுவாசகப மண்டாதுகுத்திருமல்
வையம்விடுத்தேகும் வழுத்து*உலசர்க்கி-தொந்தநோய்

(இ-ள்) தவசுமுருங்கையிலைக்கு வாதபீனசம் உபஜிக்வாதரோகம் தொந்தநோய் கபம் சுவாசகாசம் பொடியிருமல் யிவைநீங்கும், (சுாக)

வெதுப்படக்கியிலையின்குணம்

வெள்ளெடுப்புசீதம வெதும்பல்சுரத்துடனே
யள்ளெடுக்குமாந்த மதிவாதத்-தெள்ளுமொழி
மாதேவெதுப்படக்கி வன்றழையுட்காய்ச்சலொடு
கோதேறிரத்தமும் போக்கும்

(இ-ள்) தெள்ளுமொழிமாதே வெதுப்படக்கியின்யிலையானது வெளுப்பானபேதி சிலேட்மக்கிராணி தாபம்நேட்சை அள்ளுமாந்தம வாசாதிக்கம உட்சுரம ரத்ததாதுவிலுண்டாகின்றமலினம ஆகிய இவைகளைப்போக்கும்-என்க, (சுாஉ)

பெரியாநங்கை யிலையின் குணம்,

பெரியாநங்கைத்தழைக்குப் பித்தமென்பதெல்லாந்
தெரியாமலோடுமிது திண்ணம்-பிரியா
மலமறுக்குமபஸ்மவகை வைப்பதற்குமாகுஞ்
சிலைநுதலேநன்றாய்த் தெரி;

(இ-ள்) சிலைநுதலாளே பெரியாநங்கையிலைக்கு - பித்தரோகங்களும் மலபந்தமும்நீங்கும்- இது-பலவிதபஸ்மங்கள்செய்வதற்குமுகவுமஎன்க

சிறியா நங்கையிலையின் குணம்.

சிறியாநங்கைத்தழையைச் சேவிக்கபேணாப்
பிறியார்மடந்தையர்கள் பின்னு-மறியதிலி
டங்கணமும்நீறுந் தனியழகுமுண்டாகுந்
திங்கணமுகமாதே தெளி. ※டங்கணம்-வெண்காரம்,

(இ-ள்) திங்கண்முகமாதே சிறியாநங்கை என்னுமூலி ஸ்திரீவசிய த்தைச்செய்யும் வெங்காரத்தைப்பஸ்மமாக்கும் தேகத்தில் வனப்பைஉண்டாக்கும் நீயறிக, (௲௪)

பருத்தியிலையின் குணம்,

பருத்தியிலைமொட்டிரண்டைப் பாலிலரைத்துண்ண
வருத்துகின்றமேகமெல்லா மாறும்-பருத்த
விரத்தபித்தத்தோடு விரணவீக்கம்போ
மரத்தவிதழ்மாதே யறை,

(இ-ள்) சிவந்த அதரத்தாளே பருத்தியினது இலையையாவது மொக்கையாவது-பலம்-அரைத்து-அரை-ஆழாக்குப்பசும் பாலில் கரைத்துண்ணில் சிழ்மேகமுதலிய மேகங்களும்-ரத்தபித்தரோகமும் விரணச்சோபையும்-நீங்கும்-என்க. (௲௫)

கூத்தங்குதம்பையிலையின் குணம்,

குத்துகின்றநோய்போக்குங் கோரபித்தமுண்டாக்கு
மத்திசெய்யுஞ்சக்கி யகற்றுங்காண்-சத்திக்கு
மாத்தங்குவாய்மொழிக்கு மண்டூரத்திற்குதவுங்
கூத்தங்குதம்பைக் குழை,

(இ-ள்) கூத்தன்குதம்பையிலை-சூலரோகம்-சந்நிபாதம்-மகாவாதரோகம்-ஆகிய இவைகளை ஒழிக்கும்,-பித்தகோபத்தை விருத்திசெய்யும்-மண்டூரத்தைச் சிந்தூரஞ்செய்வதற்கும் உதவும்-என்க, (௯௱௬)

தே, அரிவாள்மூக்குப் பச்சிலையின்குணம்,

வெட்டுக்காயத்தைவிரைவிற் புலர்த்திவிடுந்
துட்டக்கடுவேட்டுந்* தோன்றிமிகக்-கெட்ட
பிரிவாற்றலையைப் பிளக்கும்வலிநீக்கு
மரிவாள்மூக்குப்பச்சிலை*தோன்றி-என்பது-உதிரம்,

(இ-ள்) அரிவாள்மூக்குப்பச்சிலையானது ஆயுதங்களாலுண்டாகிறகாயத்தைச் சிக்கிரத்தில் ஆற்றுவதுந்தவிர மகாவிஷத்தையும்-உதிரக்கெடுதியாற்பிறந்த சிரஸ்தாயரோகத்தையும்-விலக்கும்-என்க, (௯௱௮)

துத்தியிலையின் குணம்,

மூலநோய்கட்டிமுளை புழுப்புண்ணும்போகுஞ்
சாலவதக்கிக்கட்டத் தையலே-மேலுமதை
எப்படியேனும்புசிக்கி லெப்பிணியுஞ்சாந்தமுறு
மிப்படியிற்றுத்தி யிலையை,

(இ-ள்) மாதே துத்தியிலையை ஆமணக்குநெய்யால் வதக்கிக்கட்டமூலரோகமும்-கட்டி-விரணமுளைகளும்-கிருமிவிரணமும்-போம்-அதைஎவ்விதமாவது பாகஞ்செய்துண்ணில்-சகலரோகங்களுஞ்-சாந்தமாம், ()

விழுதி யிலையின்குணம்,

விழுதித்தழைகரப்பான் வெண்மேகம்நீக்கு
பழுபடுவன் சூலைபதிக்கு-மெழுபேதி
யாக்கும்திமந்த மகக்கிருமிதன்மலமும்
போக்குமதுவே புகல்,

(இ-ள்) விழுதியிலை-கரப்பான்-சுவேதப்பிரமேகம்-வித்திரிதிக்கட்டிசரீரக்குத்தல்- அக்கினிமந்தம்-மலாசயக்கிருமி-விரோதமலம்-ஆகிய இவைகளைப்போக்கும்-விரோசனத்தைஉண்டாக்கும்-என்க, (௯௱௧)

கணப்பூண்டினது இலையின் குணம்,

கணப்பூண்டிலைமேகக் கட்டியைக்கரைக்கு
மணக்குமிகவாய்க்கு மதுரஞ்-சிணுக்கான
வாதகணம்பித்தகண மாற்றுங்கபச்சுரத்தின்
பேதமறப்போக்குமெனப் பேசு,

(இ-ள்) பரிமளமும்வாய்க்கும் தாமூமுள்ள-கணப்பூண்டின் இலையான து சரீரத்திறந்த கட்டிகளைக்கரைக்கும்,-தோைக்கணம்- ஆமக்கண ம் சிலேஷ்மசுரங்கள்-ஆகிய இவைகளை விலக்கும்-என்க, (௬௱௰)

காரை-சேம்பு-இலைகளின் குணம்,

காரைத்தழைக்குக்கடுப்பித்தம் போம்புளியைச்
சேரப்பெய்தாக்கிச் சுவைத்தறிநீ-பாரிலுள்ள
சேம்பிலைக்குநற்புளியைச் சேர்த்துசமைத்துண்டாற்
கூம்பிட்டமூலமறுங் கூறு,

(இ-ள்) புளியிட்டுக்கடைந்த காரையிலைக்கு-ரத்தக்கடுப்பு-விலகும் அ வ்வாறுசமைத்த ஊர்ச்சேம்பிலைக்குச் சுஷ்கமூலம் நீங்கும்,

பிடங்குநாறி யிலையின் குணம்,

பிடங்குநாறிப்பன்னப் பேச்சைமெடுக்கி
லடங்குமலசமிஃதன்றித்-தொடங்குகின்ற
நீர்ச்சுரப்பும்வாங்கிவிடு நீடுசடராக்கினியாந்
தேர்ச்சியுறும்புத்திக்குத் தேர்,

(இ-ள்) பிடங்குநாறியிலையால்-செறியாமந்தமும்-ஆரம்பசலக்கோவை யும்-போகும்சடராக்கினியும்புத்திக்குத்தெளிவும்உண்டாம்நீயறிவாயாக

அவுரி யிலையின்குணம,

உரியவவுரித்தழைதா னேதுபதினெண்
ணரியகஞ்சைத்தின்றவர்க்கு மாகுந்-தெரிவரிய
வாதவெப்புகாமாலை மைந்தர்க்குமாங்கஞ்
சேகமகற்றுந் தெரி,

இதுவுமது,

சந்நிபதின்மூன்றுஞ் சந்தொடுத்கவாதமூத
லுன்னுவிஷக்கடியு மோடுங்காண்-மின்னுங்
கவுரிநிறமுண்டாகுங் காசினியுளோநல்
லவுரியிலையா லறி,

(இ-ள்) அவுரியிலை-தாவரகந்தமூலவிஷங்கள், கஅ-யும்வாதசுரம்காமி லம் மாந்தம்-சீதளம்-சந்நிபாதங்கள்-நீல்வாதம்-சர்ப்பவிஷம்-இவைகளை யும்-நீக்கும்-உடற்குப் பொன்னிறந்தரும், (௬௱௰௩)

தே, குப்பைமேனியிலையின்குணம-இதுவே-மேனி,

தந்தமூலப்பிணிதீத் தந்திபுண் சர்வவிஷ
மூந்துகுன்மம்வாத மூதிர-மூலந்தினவு

சூலஞ்சுவாசந்தொடர் பீநசங்கபம்போம்
ஞாலங்கொண்மேனியத னால்.

(இ-ள்) குப்பைமேனியிலையால்-தந்தமூலநோய்-தீச்சுட்டபுண்-தாவர சங்கமவிஷங்கள்-வயிற்றுவலி-வாதரோகம ரத்தமூலம்-நமைச்சல்-குத்த ல்இளைப்பு-பீநசம்-கபாதிக்கம்-ஆகிய இவைநீங்கும், (௬௰௪)

மிளகுத்தக்காளியிலையின் குணம்

மந்தாக்கினிசோபை வாந்திகழல்வாயுவெப்ப
மிந்துநோய்பாண்டோ டெதிர்விக்கல்-முந்த
வளருமுக்தோஷநோய் மாற்றுங்கைப்பான
மிளகுத்தக்காளியிலை மெய்,

இதுவுமது.

மிளகுத்தக்காளியிலை வெண்ணைகங்கட்டு
மிளகுபற்சிந்தூரத்திற் கேகுங்-கொளுவுகின்ற
மேகச்சொறியகற்றும் வெட்டையனற்றணிக்கு
மாகச்சணிமுலையாய் வாழ்த்து,

(இ-ள்) கச்சணிந்தமுலைகளையுடையாளே கசப்புள்ள மிளகுத் தக்காளியிலை அக்கினிமந்தம்-வீக்கம்-சர்த்தி-பாதாக்ஷேபகபவாதம்-சுரம்-சேமரோகம்-பாண்டு-விக்கல்-திரிதோஷநோய்கள்-மேகச்சொறிவெள்ளைஉட்சூடு-இவைகளைநீக்கும், -வெள்ளீயத்தைக்கட்டும் பலவிதசிந்தூரங்களுக்குதவும், (௬௰௫)

தும்பையிலையின் குணம்,

ஏறுகின்றபாம்போடு சிலவிஷங்கால்சென்னிவலி
யேறுகபமாந்த மிருக்குமோ-காறுமலர்க்
கொம்பனையமாதே குளிர்சீதசந்நிவிடுந்
தும்பையிலேயென்றொருகாற் சொல்,

இதுவுமது

தும்பையிலையையுண்ணுஞ் சோற்றுக்கெலாங்கறியா
யம்புவியோர்மிக்கவருந் துங்கால்-வெம்பிவரு
மேகமொடுகண்புகைச்சல் வீறுகைகாலசதி
தாகமுறிசோம்பலுறுந் தான்,

(இ-ள்) மலர்க்கொம்பனையமாதே தும்பையிலையால் சர்ப்பகீடவிஷங் கள் வாதநோய்-தலைவலி-கபதோஷம்-அக்கினிமந்தம்-சிலேஷ்மசந்நி- இவைநீங்கும்-இதைப்புளியிட்டுக்கடைந்து-உணவோடருந்தில்- பிரமேகம்-நேத்திரப்புகை-கால்களின் அசதி-தாகம்-சோம்பல்-இவைஉண்டாம்

முள்ளங்கியிலையின்குணம்

வாயிமிகும்பித்த வளருங்கிருமியுமா
மோய்வருநெஞ்செரிவு முண்டாங்காண்-வேயிற
முள்ளாங்கியிலையை முற்றுமுண்டாற்குன்மவலி
யுள்ளாங்கிளம்பா துரை

(இ-ள்) முள்ளங்கியிலையால் வாதகோபம்-பித்தநோய்- கிருமிரோகம் மார்பெரிச் ஆகியஇவையுண்டாகும் வயிற்றுநோயடக்கும்,(௬௩௭)

சுவற்றுமுள்ளங்கியிலையின்குணம்

நீரையிறக்கிவிடு நெஞ்சுவலியைததொலைக்குங்
கோரவதைப்பைக் குடிகெடுக்கு-நேரே
தவத்திலுயர்ந்தோர்மயக்குஞ் சாயகக்கண்மாதே
சுவற்றுமுள்ளாங்கியது சொல்

(இ-ள்) தவத்திலுயர்ந்தோர் மயங்குகின்ற சாயகத்தைநிகர்த்த கண்களையுடையமாதே சுவற்றுமுள்ளாங்கியிலையானது நீர்க்கட்டையும் மார்புநோயையும் வாதசோபரோகத்தையும்போக்கும்என்க. தே, கறுப்பு வழுதுணையிலை பருவழுதுணைவேர் சிறுவழுதுணைவேர்.

இவைகளின்குணம்

வழுதுணையின்பேதம் வழுத்தின்மிகுநோய்க்காம்
வழுதுணைகட்டம்மைநவில் வா-மை-வழுதுணைப்பன்
னஞ்சலம்போக்குங்கா லடக்கும்பருதுசன்னம்
பஞ்சமூலத்திலொன்றும் பார்*மை-கறுப்பு

(இ-ள்) கத்திரிச்செடிவகைகளைக்கூறில் மிகவும்பெருகும் இவற்றுள் பிணிக்குதவுகின்றவைகளை மாத்திரம்சொல்வாம் கருங்கத்திரிஇலை நீர்க்கட்டையும்பருவழுதுணைவேர்-வாதநோயையும்நீக்கும்சிறுவழுதுணை வேர் பஞ்சமூலத்தில் ஒன்றாயிருந்து பலபிணிகளையும் விலக்கும், ( )

புகையிலையின்குணம்

மருந்தைமுறித்துவிடும் வாய்வறளச்செய்யுந்
திருந்துபலவீனஞ் சேர்க்கும்-பொருந்துபித்த

முண்டாக்கும்விந்தழிக்கு மோதுபுகையிலையைக்
காண்டார்க்குமாகாது காண்

(இ-ள்) புகையிலை-வாய்வறட்சி-துர்ப்பலம்-பித்தாதிக்கம்-சுக்கிலக்ஷ
ணம்-இவைகளை விளைக்கும்-நல்லமருந்தையும் முறிக்கும், (௬௨௩)

செடியின் இலைவகை-முற்றியது.

## கொடியின் இலைவகை,

தே. தூதுளையின்குணம்

காதுமந்தங்காதெழுச்சி காசந்தினவுமத
மோதுமந்தமுத்தோஷ முட்சூலை-தாதுநட்ட
மீதுளைப்பத்திரியை மேவச்செய்வாராய்ந்தோர்
தூதுளைப்பத்திரியைத் துய்த்து

(இ-ள்) தூதுளையிலையால் காதுமந்தம்-காதெழுச்சி-காசம்-நமைச்சல்
மதரோகம் அக்னிமாந்தம்-திரிதோஷம-உட்குத்தல் விந்துநஷ்டம் மே
லிளைப்பு-ஆகியஇவைகள்விலகும-என்க, (௬௨௪)

பறங்கிஇலையின்குணம்-இதுவே-பூசினி

பித்தமொடுவாதம் பெருந்தாகமும்பெருகும
சத்தமொடுபேதி தலைப்படுங்காண்-சுற்றுங்
கறங்காகுமேனியுள்ளே கவ்வுபுழுச்சேரும
பறங்கியிலைக்குப் பகர்,

(இ-ள்) பறங்கியிலைக்குப்பித்தகோபம் வாதாதிக்கம அதிதாகம் இரை
கின்றபேதி-சரீரப்படபடப்பு-கிருமி-இவைகளுண்டாகும-என்க, ()

சுரையிலையின்குணம

நீரிழியுமவீக்கமபோ நேரோமலமிறங்கும
பாரமுறுசோபை பறக்குங்காண்-தீராத்
திரிதோஷமபோகுஞ் செறிந்தசுரையி
னுரியகொழுந்திலையை யுண்

(இ-ள்) நீரையிறக்காநின்ற சுரையிலையால் சோபாரோகம தேகவீக்க
ம நீங்காமுத்தோஷங்கள்-இவைபோம மலமிளகியிறங்கும, (௬௨௬)

பேய்ச்சுரையிலையின்குணம

மூலரோகத்தின் முளைபைக்களைந்துவிடு
ஞாலவிஷத்தைபு மாற்றுங்காண்-ஞாலமதில்

வச்சிவிடங்கிட்டுவது மாவருத்தம்வெற்பிலுறும்
பேய்ச்சுரையின்பத்திரத்தைப் பேண்

(இ-ள்) மலையில்முளைத்த பேய்ச்சுரையிலையானது முளைமூலரோகத்தையும் கொடியசர்ப்பவிஷத்தையும் கொடுக்கும்-என்க, (௬௨௭)

பாகல்இலையின்குணம்

பிரியாக்கிருமியறும் பேதியுண்டாந்தோஷ
முறியுமிரத முறியுங்-குறியாத
மாகற்புடைய மடமயிலேயெப்போதும்
பாகற்றழைக்குப் பயந்து

(இ-ள்) மாகற்பினையுடையமாதே பாகல்இலைக்கு கிருமிரோகமும்திரிதோஷகோபமும்நீங்கும் விரோசனமுண்டாகும்இதனால்பாதரசவேகம் முறியும், (௬௨௮)

அவரையிலையின்குணம்

அவரை இலைக்குருத்தலைநோ யாழ்ந்தகிராணி
யிவருவிஷ சிமுதலேகந்-தவருமற்
கொண்டவர்க்குத்தீபனமாங் கோதாய்விரணமறுங்
கண்டவர்க்குத்தோற்றுமிது காண்

(இ-ள்) மாலைசூடியகூந்தலாளே அவரை இலைக்குச் சிரஸ்தாபநோய் கிரகணிவிஷ-சிரோகம்-சிரங்கு ஆகிய இவைவிலகும் உதிராக்கினியுண்டாகும் என்க, (௬௨௯)

காராமணியிலையின்குணம்

காராமணியிலையைக் காய்ச்சியுண்டாலுரிசை
வாராதவாயுமிக வந்துறுங்கா ணேரேகேண்
மூலம்விளையு முசியாக்கழிச்சலுண்டாந்
தாலமதிலனைத் தள்

(இ-ள்) உரிசையுள்ள காராமணியிலையைப்பாகஞ்செய்துண்டால்வாதநோயும் வாதமூலமும் நீங்காதபேதியும்உண்டாகும் பூமியிலதனை விலக்கு என்க, (௬௩௰)

கொடிக்குறிஞ்சாயிலையின்குணம்

கரப்பான்கிரந்தி கடியவிரும்
லுரப்பாம்விஷபாக மோட்டு-நிரைப்பான
ஆக்கரத்தைமாற்றிவிடு மாயிழையேபித்தமுமாந்
தக்ககுறிஞ்சாவினிலை தான்

(இ-ள்) ஆயிழையே பித்தகுணமுள்ள கொடிகுறிஞ்சாயிலை அரைக்கடுவன் சிரங்கு காசம் வலியவிஷபாகம் நாப்புண் இவைகளைநீக்கும்,)

கறிப்பாலையிலையின்குணம்

மேகமௌனல்வட்டைசுரம் வீறுபித்தமுந்தொலையும்
போகமுறுமெய்மருந்தும் பொய்மருந்தாம்-பாகுமொழி
மானேகறிப்பாலை மன்னுமிலையைத்தினமுந்
தானேயருந்தவர்க்குத் தான்

(இ-ள்) பாகனையசொல்லை யுடையபெண்ணே கறிப்பாலையிலையைத் தின்பவருக்கு பிரமேகவெப்பம சிறுமேகசுரம் பித்தகோபம் இவைநீங்கும் சுக்கிலவிருத்தியும் ஔஷதக்கெடுதியும் உண்டாம், (கூ௨)

ரே, ஊசிப்பாலையிலையின்குணம்

மேகமகலும் விழிகுளிருநாளத்தின்
வேகமகலுமங்க மேனியிடும்-மோகமண
வாசிப்பாலைப்பருவ மாந்தளைவீக்குங்கொடியே
ஊசிப்பாலைப்பன்ன முண்

(இ-ள்) மோகமணவாசிப்பால் பருவமாந்தளைக்கட்டும் கொடிபோல் பவளே ஊசிப்பாலையிலையால் பிரமேகமும் ஆண்குறியினதுதுவாரவெப்பமுந்நீங்கும் கண்குளிர்ச்சியும் தேகபுஷ்டியும்உண்டாம், (கூ௩)

கோவையிலையின்குணம்

கண்ணுங்குளிர்ச்சிபெருங் காசமொடுவாயுவறும்
புண்ணுஞ்சிரங்கும் புரண்டேகும்-நண்ணுடல
மீதிலார்வெப்பகலும் வீழாநீர்க்கட்டேகும்
கோதிலாக்கோவை யிலைக்கு

(இ-ள்) கோவையிலைக்கு இருமல் வாதகோபம் பெருவிரணம்சிறுசிரங்கு தேகச்சூடு நீரடைப்பு இவைபோம் கண்குளிர்ச்சியுண்டாம், ()

முசுமுசுக்கையிலையின்குணம்

இருமலுடனீளை யிளைப்புபுகைச்சன்
மருவுகின்றநீர்த்தோஷ மாறும்-திருவுடைய
மானேமுசுமுசுக்கை மாமூலியவ்விலையைத்
தானேயருந்துவர்க்குத் தான்

(இ-ள்) அழகையுடையபெண்ணே மாமூலியாகியமுசுமுசுக்கையிலைக்குகாசம் கோழை-சுவாசம் நெஞ்சிற்புகைக்கம்மல் சலதோஷம் ஆகிய இவைநீங்கும், (கூ௫)

கோழியவரையிலையின்குணம்

ஆழிசுற்றும்வையத் தடர்ந்தபேராமையொரு
நாழியினிற்கெட்டு நலியுங்காண்-தோழிசேள்

கோழியவரைத்தழைக்குக் குன்மங்குடல்வாத
மூழிவரைக்கும் வாராதோர்.

(இ-ள்) தோழியே கடல்சூழ்ந்தவுலகில் கோழியவரையிலைக்கு வயிற்றிற் காணுகின்றபருத்த ஆமக்கட்டியும்-வயிற்றுநோயும்-ஆந்திரபித்த வாதமும் போகும் நீகேட்பாயாக, (௬௬௫)

முசற்காதிலையின் குணம், ✔

பீசத்தெழுந்தபெரு வீக்கங்கைகாலில்
வீசிப்புடைத்த வெறுவீக்கம்-பேசாம
லேகுமுயத்காதிலை யிருக்குமூரைவிட்டுப்
பாகுமொழிமாதே பகர்,

(இ-ள்) பாகுமொழிமாதே- முசற்காதிலையால்-குடலண்ட வீக்கமும் கைகால்களின் தோல்களைப்பற்றி வீங்கிய வீக்கமும்-விலகும்-என்க. ()

கழற்சியிலையின் குணம்-இதுவே-வச்சிரம்,

விரைவாதஞ்சூலையறும் வெட்டையனலேகு
நிரைசேர்ந்தகுன்ம நிலையா-துரைசே
ரழற்சிவிலகுமருந்திற் கசப்பாங்
கழற்சியிலையென்றுரைக்குங் கால்,

(இ-ள்) கசப்புள்ளகழற்சியிலையால்-பீசவாதம்- சூலைக்கட்டு-பிரமேகம் சுரம் பலவிதகுன்மம்-உள்ளழலை-ஆகிய இவைஒழியும்-என்க, ()

வெண்கழற்சி யிலையின்குணம்,

ஏறண்டத்தோடே யிறங்கண்டமெத்தவுமே
வீறண்டமெல்லாம் விலகுங்காண்-தூரண்ட
வள்ளைக்குழையடிபோம் வாள்விழிமாதேநல்ல
வெள்ளைக்கழற்சியிலை யிள்,

(இ-ள்) வள்ளைக்குழையடிபோம் வாள்விழிமாதே வெள்ளைக்கழற்சியிலை-ஏறண்டரோகத்தையும்-இறங்கண்ட நோயையும்- தசையண்டப்பிணியையும்-கெடுக்கும்-என்க, (௬௬௬)

தே வரிக்குமட்டி யிலையின்குணம்,

பற்றுதிரணச்சிகளைப் பற்பலவாமந்தத்தைச்
சுற்றுதிரப்பித்தத்தைத் தூவிடத்தை-முற்று
மரிக்குமட்டியாயிலைமா தங்கருணையன்றே
வரிக்குமட்டி யாயிலைமாதே,

(இ-ள்) பெண்ணை வரிக்குமட்டியிலை-ரத்தக்கிருமிகள்-பலவிதமந்தம்-ரத்தபித்தம்-நசையைப்பற்றிய சர்ப்பவிஷம்-இவைகளை விரைவிற்கெடுக்கும்-என்க. (௯௪௰)

சிறுபூனைக்காலி யிலையின்குணம்,

சிறுபூனைக்காலியிலை சில்விஷத்தைப்போக்கு
முறுகாந்தத்தைச் சிந்தூரிக்குஞ்-சிறுமாந்த
மையங்கபந்தீர்க்கு மாந்தசயநோய்விலக்கும்
வையந்தனிலிதனை வாழ்த்து,

(இ-ள்) சிறுபூனைக்காலியிலையானது-வண்டுகடிமுதலியசிலவிஷம்-அற்பமந்தம்-சிலேஷ்மகோபம்-கோழைக்கட்டு-க்ஷயரோகம் ஆகிய இவைகளை ஒழிக்கும், காந்தத்தைச்சிந்தூரஞ்செய்யும்-என்க, (௯௪௧)

வேலிப்பருத்தியிலையின் குணம்-இதுவே-உத்தாமணி.

ஆலித்தெழுந்தநோ யத்தனையுந்தீருமே
வேலிப்பருத்தியதன் மெல்லிலையால்-வேலொத்துக்
கண்டிக்கும்வாதஞ் சந்நிதோஷமும்போ
மூண்டிக்கும்வாசனையா மோது.

இதுவுமது,

உத்தாமணியிலையா லுள்வயிற்றுக்குன்மமொடு
குத்தாம்வலியுங் குளிரும்போ-பற்றி
யிசிக்கும்வலியினொப்பு மெத்தடிப்புமேகும்
பசிக்குமதிமாந்தமும்போம் பார்,

(இ-ள்) உணவில்மணத்தைத்தருகின்ற உத்தாமணியிலையால்- பலவிதநோய்களின்கோபம்-வாதநோய்-விஷம-சந்நி-திரிதோஷம்வாதகுன்மம் சரீரக்குடைச்சல்-குத்தல்-கடுக்கல்-தநுர்வாதம்- சுவாசம்-பலவிதத்தடிப்புகள் அக்கினிமாந்தம்-இவைகள்-நீங்கும்-தீபனமுண்டாம். (௯௪௨)

தாரியிலையின் குணம்-இது-துரா-என மருவியது,

புண்கிரந்திகட்டி பொருசந்நிநீடும்போங்
கண புகைச்சல்காசங் கடிக்குமென்பார்-பெண்களுக்குப்
பாலும்பெருகுமுள்ளோ பற்றுகிரச்சிக்கல்விடு
மேலுந்தாரிலைக் கே.

(இ-ள்) தாரயிலைக்கு-விரணம்-கிரந்தி-வித்திரிதிக்கட்டி - சந்நிபாதம் சரிகிருமி-நேத்திரப் புகை-கண்காசம்-மூலைப்பால்விருத்தி-ஆகியஇவை கள் உண்டாகும்-மாதாந்த உதிரச்சிக்கலவிடும் என்க. (௬௪௪)

செந்தரா இலையின்குணம்,

அனிலமுளையு மரோசகமுநீக்குந்
தனியானதோஷமறு தாழுங்-கனிமொழியே
வெந்தாரைச்சூடும் விடாயும்போந்தீபனமாஞ்
செந்தாரவினறமைக்குச் செப்பு

(இ-ள்) கனிமொழியாளே செந்தரா இலைக்கு வாதமுளை மூலம்-அரு சி-வாதமுதலிய தனித்தோஷங்கள்-நீர்த்தாரைச்சூடு-ஆயாசம்- இவைநீ க்கும். தீபனமுண்டாம், (௬௪௫)

விஷமூங்கில் இலையின்குணம்,

பிளவையுகிர்ச்சுற்று பெரும்படுவன்வீக்க
மளவிஞேய்காதெழுச்சி யாற்று-மளவையுறு
தோங்கிவளர்ந்தமுலை யோவியமேநீண்டவிஷ
மூங்கிலிலைநன்மூலி முன்,

(இ-ள்) அளவையுறு தோங்கிவளர்ந்தமுலைகளையுடைய வோவியம் போல்பவளே-விஷமூங்கிலிலை-ராசப்பிளவை-நகச்சுற்று-பெரும்படுவன் சோபை சிலேஷ்ம கர்ணசூலைமுதலிய நோய்களையும்-போக்கும். ( )

சதாபலையின் குணம்,

கணமாந்தருட்சை கணக்கழிச்சல்வாந்தி
குணமாம்பசியுங் குலவும்-வண்மயிலே
கூடுகிறைகருப்பக் கோதையர்க்காம்வேதகனு
நாடுசதாபலையி னல்.

(இ-ள்) வண்ணமயில்போலுஞ் சாயலையுடையாளே சதாபலையினல் பால்மாந்தமுதலியவற்றால்விளைகின்றசுரம்-கணப்பேதி-சபவமனம் பிர சவமாதர்களின் வேதனை-இதைநீக்கும், தீபனமுண்டாம், கொடியின்இ லைவகை முற்றியது, (௬௪௭)

## கீரைவகை.

கருணைக்கிழங்குத்தண்டின்குணம்-இதுவே-சூரணத்தண்டு.

சுத்தகுதாங்குரத்தைத் துட்டகபமேதையதி
கத்தகவிலக்குங் கறியமைக்கிற் பத்தியமாஞ்

சீரணத்தையும்மிகுத்த தீபனத்தையுங்கொடுக்குஞ்
சூரத்தின்றண்டெனவே சொல்.

(இ-ள்) சூரணத்தண்டென்னும் பத்தியத்திற்கானகருணைத்தண்டால், மூலரோகமும்-கபகோபமும்-மேதோதாதுவிருத்தியும்-நீங்கும் - சீரணமும்-பசியுமாம். (௬௪௮)

கீரைத்தண்டின் குணம்.

தண்டுமெத்தவாயு தணியாதசீதளமாம்
விண்டுரைக்கிற்சின்னேய்போம் வின்னவோ-கொண்டக்கா
ணீர்க்கடுப்புவெட்டையா னில்லாதுநேரிழையே
போர்க்கடுப்பிரத்தமும்போம போம்,

(இ-ள்) நேரிழையாளே அதிவாத சீதளமுள்ள கீரைத்தண்டால்பித்தகிரிச்சரம்-பிரமேகச்சூடு-வயிற்றுக்கடுப்பு-ரத்தபேதிமுதலிய நோய்களும்-போம், (௬௪௯)

வெண்கீரைத்தண்டின்குணம்.

வெண்கீரைத்தண்டு வியாதியற்றநற்கறியாங்
கண்காணுதோடிவிடுங் காந்தலெலாங்-கண்காணு
மூலமதற்கேற்கு முசியாவெரிவகற்றுந்
தாலமதிலக்குணத்தைச் சாற்று.

(இ-ள்) நோயற்ற நல்லபதார்த்தமாகிய வெண்கீரைத்தண்டினுல் வெப்பமும-வெளிமூலரோகமும- பித்த எரிச்சலும-நீங்கும-என்க, ()

புதியன்மூலிக்குணம-இதுவே புதியனு,

அருசியொடுவாந்தி யக்கினிமந்தங்
குருதியழுக்குமலக் கொட்ட-விரியுந்
துதியதன்றுசோறிரங்குந் தொல்லுலகினாளும
புதியனல்மூலி புகல்,

(இ-ள்) புதியன் மூலியால்-அருசி-சர்த்தி-மந்தாக்கினி - ரத்ததாதுவினழுக்கு-மலப்போக்கு-இவை நீங்கும்-போஜன்முஞ்செல்லுமஎன்க, ()

வெள்ளைக்கீரை-பருப்புக்கீரை-இவைகளின்குணம.

வெள்ளைக்கீரைக்தனில் மாறும்பாலுண்டாகும
பிள்ளைப்பருப்பிலைக்கும பித்தமறுங்-கொள்ளத்
தெரியுங்கடல்சூழித் தேசதோருக்குக்
கரியகுழலணங்கே காண்,

(இ-ள்) கறுத்தகுழலாளே-வள்ளைக்கீரைக்கு-வாதகோபம்நீங்கும்-மூலைப்பால்பெருகும்-இளம்பருப்புக்கீரைக்குப்- பித்தாதிக்கமபோம் நீதெரிவீராக, வங்காரவள்ளைக்கீரையின்குணம் (௬௫௨)

மாரிக்காலத்தாய வங்காரவள்ளையினாற்
பூரித்தவாதம பொருமலோடு-காரித்
திரங்காமலசல மிறங்குமின்புண்டா
முறங்காவிழியணங்கே யுன்

(இ-ள்) மதர்த்தவிழிகளையுடையமாதே-மழைக்காலத்துவங்கார- வள்ளைக்கீரையினால்-வாதநோயும்-வயிற்றுப்பிசமும்நீங்கும்- கறுத்துச்சிக்கியமலமும்-மூத்திரமும்-சாரியாயிறங்கும் - குடலுக்குச்சுகமுண்டாகும் என்க, (௬௫௩)

கொடியலைக்கீரையின்குணம்-இது-வசலை-பசலை-என-மருவியது

நீர்க்கடுப்புநீரடைப்பு நீங்காதமேகமுமிவ்
வூர்க்கடுத்துவாராம லோடுங்காண் -பார்க்கவொண்ணா
வற்பவிடைமாதே யரோசிசர்த்தியுந்தொலையு
நற்பசலைக்கீரையதனால்

(இ-ள்) நுட்பமானயிடையையுடையாளே நல்லவசலைக்கீரையால்-மூத்திரக்கடுப்பு-மூத்திரகிரிச்சரம்-ஒழுக்குவெள்ளை - அருசிவாந்தி ஆகிய இவைகள்போகும், (௬௫௪)

சிறுபசலைக்கீரையின்குணம்-இதுவேபசளை

போகமிகக்கொடுக்கும் போர்செய்கபத்தைப்பெருக்கு
மாகமதிற்றாகமன லைத்தணிக்கு-மாகுடரின்
மன்னுமலமிளக்கு மாறாவிரிசைதருந்
தின்னுஞ்சிறுபசலைத் தேர்

(இ-ள்) அதிசுவையுள்ள சிறுபசலைபுணர்ச்சியி லிச்சையையும்-கபத்தையும்பெருக்கும் தாகத்தையும்-சூட்டையும்-தணிக்கும் - மலத்தையிளக்கும், பாற்சொரிக்கீரையின்குணம் (௬௫௫)

வயிற்றுக்கடுப்பு மலஞ்சீதப்பேதி
நியத்தாத்தம்போக்கிவை நிறுத்துங்-குயத்தையொரு
பாற்சரியுக்காட்டும பருவவணங்கரசே
பாற்சொரியக்கீரையது பார்

(இ-ள்) மங்கைப்பருவமுள்ள பெண்கள்நாயகமேபாற்சொரிக்கீரையானது-வயிற்றுக்கடுப்பையும-மலங்-சீதங்-ரத்தம்- இவ்வகைப்பேதிகளையும-நீக்கும-என்க, சாணாக்கிக் கீரையின்குணம் (௬௫௬)

கோழையொடுமாந்தங் குழந்தைச்சுழிக்கணமும்
பேழையெனச்சொல்லும் பெருவயிறுங்-கீழொருவர்
காணுக்கிக்கிருமிகளைக் கக்குமலிபுண்ணுஞ்
சாணக்கிக்கீரையிற்போந் தான்

(இ-ள்) சாணக்கிக்கீரையால்-கபம்- அக்கினிமாந்தம் - சுழிக்கணம் மகோதரம்-புழுநெளிகின்றவிரணம்-ஆகியஇவைபோம்-என்க, (௬௫௭)

துயிலிக்கீரையின்குணம்

சீதம்விளையுச் சிறுசிரங்குபுண்ணுமாங்
காதுபழமலமுங் கட்டறுங்காண்-கீதக்
குயிலனையாய்வெட்டையெனக் கூறுநோயில்லைத்
துயிலியிலைக்கறிக்குஞ் சொல்

(இ-ள்) கீதக்குயிலனையபெண்ணே துயிலிக்கீரைக்கு-ஆமமும் நமிட்டுச்சிரங்கும்-விரணமும்-உண்டாகும்- பழமலக்கட்டும்.- பிரமேகவெள்ளையும்-நீங்கும், பண்ணைக்கீரையின்குணம் (௬௫௮)

பண்ணையிளங்கீரையது பற்றுமலமிளக்கு
மெண்ணுங்குடருக் கிதங்கொடுக்கும்-பெண்ணேகேள்
சீதங்கரப்பான் சிரங்குபுண்மாற்றுவிக்குங்
கோதங்கிலையதனைக் கொள்

(இ-ள்) பெண்ணேகுடலுக்கு நன்மைத்தாகின்றபண்ணைக்கீரை ஆமம்-கரப்பன்-கிரந்தி-விரணம்-இவைகளைநீக்குமலத்தையிளக்கும்என்க,

பராட்டைக்கீரையின்குணம்

பாட்டைநறுங்கீரையது பத்தியத்திற்காகும்
வெருட்டுகின்றபித்தமிக வீறு-புரட்டுங்
கபமுடனேவாதங் காப்பானுமேகுஞ்
சுபவசனமாதே துதி

(இ-ள்) சுபவசனமாதே பத்தியவியஞ்சனமாகியபராட்டைக்கீரையால் சிலேஷ்மநோயும்-வாதப்பிணியும-கரப்பானும்போம்-பித்தம்உண்டாம்,

செங்கீரைத்தண்டின்குணம்

செங்கீரைத்தண்டது தான் சீராகபித்தத்தைச்
சங்காமலேட்டிவிடுந் தையலாய்க்குப்-பொங்கும்

பெரும்பாட்டைநீக்கும் பெரியகறியாந்
தரும்பாட்டுவெப்பகற்றுந் தான்

(இ-ள்) பெருங்கறியாகியசெங்கீரைத்தண்டு நீராதபித்தநோயையும் பெண்களுக்கும் பெரும்பாட்டையும் பிரலாபசந்நியாதசுரத்தையும் நீக்கும்-என்க, முளைக்கீரையின்குணம் (௬௬௪)

தளர்ந்தவர்க்கும்பாலருக்குந் தக்கவயதோர்க்கு
மிளங்கீரைநாவுக் கிதமாங்-கிளம்பு
சுரகாசம்போக்குந் தொடர்பசியுண்டாக்கும்
பிரகாசமாயெடுத்துப் பேசி.

(இ-ள்) விருத்தபாலயௌவனபருவத்தவர்க்கும நாவுக்கிதவுவைத் தாரநின்ற முளைக்கீரை காசசுரத்தைநீக்கும்-பசியைத்தரும்-என்க, ()

௫௪, முள்ளிக்கீரையின்குணம்-இதுவே-குப்பைக்கீரை

நீரைப்பெருக்கிவிடு நீடனலைத்தானெழுப்பும
பாரநறுந்தங்கத்தைப் பஸ்மிக்கு-நேரே
விடவிருக்குமபொற்றட்டை மேவுமல்குன்மாதே
யடவிசிற்குமுள்ளிக் கீரை

(இ-ள்) விடவிருக்குமபொற்றட்டை மேவுமல்குன்மாதே காட்டுமுள்ளிக்கீரை-நீர்ப்பேதியையும-ஜடராக்கினி-விருத்தியையுமசெய்யும தங்கத்தைப்பஸ்பமாக்கும-என்க, (௬௬௫)

அறுகீரையின்குணம இது அறைக்கீரைஎனமருவியது

காய்ச்சல்குளிர்சந்நி கபநோய்பலபிணிக்கும
வாய்ச்சகறியாய் வழங்குங்காண்-வீச்சாயக்
கறுவுமோவாயுவினங் காமமிகவண்டா
மறுகீரையைத்தின் றறி

(இ-ள்) பலபிணிக்கும நற்கறியான அறுகீரையினால்-சுரம - நடுக்கல் சந்நிபாதம-கபரோகம-வாதநோய்-இவைபோம-தாதுவிருத்தியாம, ()

புளிச்சிறுகீரையின்குணம

தேகசித்தியாகுஞ் சிறுகாசமந்தமறும
போகமுறுவிந்துவுநற் புஷ்டியுண்டாம-வாகாம
வெளிச்சிறுமாணுக்குமவிழி மென்கொடியேநாளும்
புளிச்சிறுகீரையுண்ணும போது

(இ-ள்) வெளிச்சிறுமானோக்கும விழிமென்கொடியே புளிச்சிறுகீரையினால்-சிணுக்கிருமலும-மந்தமுமநீங்கும-காயசித்தியும புணர்ச்சியில்விருப்பமும-வீரியவிருத்தியும உண்டாம, (௬௬௫)

சிறுகீரையின் குணம,

கண்புகைச்சனேத்திரநோய் காசம்படலமரசப்
புண்கிரிச்சரஞ்சோபை பொங்குபித்த-மண்பரவு
தாவரவிஷங்களுமபோந் தாழாத்திருவுமுண்டாங்
கூறுசிறுகீரைதனைக் கொள்,

(இ-ள்) சிறுகீரையால்-தூமபிரநோய்காசம-படலம-பாதரசவேகமவிரணம-மூத்திரக்கிரிச்சரம-வீக்கம்பித்தநோய்-நாவிபாஷாணம முதலிய விஷங்கள்-ஆகிய இவைபோம அழகுண்டாகும-என்க, (௬௬௬)

கலவைக்கீரையின் குணம,

வாதபித்தவையகத்தை மாற்றுமலமறுக்கு
மோதுகுடல்வாதமதை யோட்டுங்காண்-போதின்
பலகலவைக்கோதாயநற் பத்தியத்திற்கொவ்வும
பலகலவைக்கீரையுண்டு பார்,

(இ-ள்) மயிற்சாந்தணிந்த கூந்தலாளே பலவகையுங் கலந்தகீரைவாதபித்தகபதோஷங்களையும-மலச்சிக்கலையும-ஆந்திரபித்தவாதத்தையும போக்கும பத்தியத்திற்காம-என்க. (௬௬௭)

மணலிக்கீரையின்குணம

வாதமறுநெஞ்சேரி வந்தகபம்விலகுஞ்
சீதமுடனோய்பலவுந் தீருங்காண்-போதவுள்ளே
வீறுகிருமியொடு மேவாப்பத்தியமபோங்
கூறுமணலிக் கீரைக்கு

(இ-ள்) மணலிக்கீரைக்கு-வாதகோபம-மார்புச்சளி-சிலேஷ்மமுதலிய பலநோய்-கிருமிரோகம-பயித்தியதோஷம-இவைநீங்கும, (௬௬௮)

தே, நீர்ஆரைக்கீரையின்குணம-இதுவேஆரைக்கீரை

தின்றாலுரிசைதருந் தீராப்பயித்தியத்தைப்
பொன்றாதநீரிழிவைப் புண்ணை-யென்றுமிந்த
வூராரைச்சாராம லோட்டிவிடுநாவிதமூர்
நீராரைக்கீரையது நீ

(இ-ள்) நல்லசுவையும நாவிதழூருள்ள நீராரைக்கீரை-பித்தநோயையும அதிமூத்திரத்தையும-ரத்தபிரமேகத்தையும-நீக்கும-என்க, ()

புளியாரைக் கீரையின்குணம்.

பித்தமயக்கமறும் பேருலகின்மானிடர்க்கு
நித்தமருள்வாதகப நேருமோ-மெத்தனவே
மூலக்கிராணிவிடு மூலவுதிரமறுங்
கோலப்புளி யாரைக்கு,

(இ-ள்) புளியாரைக்கீரைக்கு-பித்தமயக்கம்-தீமையை விளைக்கின்ற வாதகபமிசிரம்-மூலவாயுகிரகணீ-ரத்தமூலம்-இவைபோம். (௬௭0)

கோழிக்கீரையின்குணம்-இதுவே பருப்புக்கீரையாம்.

சொறியுங்கரப்பானுந் தோற்றுமேன்மேலுஞ்
செறியுங்கிருமிமிகச் சேரு-மெறிகின்ற
வாழிக்கடானவிழி யாரணங்கேவையகத்திற்
கோழிக்கீரைக்குணத்தைக் கூறு,

(இ-ள்) சமுத்திரத்தைதிகர்த்த கண்களையுடையாளே-கோழிக்கீரையால்-புடையும்கரப்பனும்-கிருமியும்-உண்டாம், (௬௭௧)

புளிப்புக்கீரையின் குணம்,

வாதமறும்பித்தமுறு மாறுவரோசிவிடுஞ்
சீதமுடனையகலுஞ் சேயிழையே-போதப்
புளித்தவிலைக்கறிக்குப் போமிரத்தபித்தங்
களித்தகரப்பனொடு காண்,

(இ-ள்) சேயிழையாளே-புளிப்புக்கீரைக்கு-வாதகோபம்-அருசி-சீதளம்-ரத்தபித்தரோகம்-கரப்பன்-ஆகிய இவை நீங்கும்-பித்தங்கதிக்கும் என்க, (௬௭௨)

பிண்ணாக்குக் கீரையின் குணம்.

மலமிறங்கும்வாதமுடன் வன்கரப்பனுண்டாஞ்
சலமிறக்குமேகந் தணியு-மலர்விழியா
யுண்ணாக்குக்கின்பமா மோடுமனல்வெட்டையெலாம்
புண்ணாக்குக்கீரையுண்ட போக்கு,

(இ-ள்) மலர்போன்றவிழியாளே உரிசையுள்ள பிண்ணாக்குக்கீரையால் மலமும்-மூத்திரமும்-ஜாரியாயிறங்குவதுங்கவிர வாததோஷமுங்கரப்பானும் உண்டாகும் பிரமேகவெள்ளையும் அரித்திரா மேகமும்போகும்-என்க, (௬௭௩

முக்குளிக்கீரையின் குணம்,

ஐயமிகக்கொடுக்கு மாந்தபோகந்தருங்காண்
மெய்யனையெல்லாம் விலக்குமே-தையலே
பேதியளிக்கும் பெருமுக்குளிக்கீரை
சீதம்விளைக்குமெனத் தேர்.

(இ-ள்) தையலே முக்குளிக்கீரை-கபதோஷம் புணர்ச்சியிலிச்சை அதிசாரம்-ஆமம்-ஆகிய இவைகளை உண்டாக்கும், வெப்பத்தை நீக்கும்

வெந்தயக் கீரையின்குணம்,

பொருமன்மந்தம் வாயுகபம்போராடுகின்ற
விருமலருசியிவை யேகுந்-தரையிற்
றீங்கிலுயாகமனைச் சீறும்விழியணங்கே
கோதில்வெந்தயக்கீரை கொள்,

(இ-ள்) தீங்கிலுயர்ந்த காலனைச் சினக்கும்விழிகளையுடையமாதேவெந்தயக்கீரையால்-வயிற்றுப்பிசம்-அக்கினிமந்தம்-வாதகோபம் - சிலேஷ்மதோஷம் காசம்-அரோசகம்-ஆகிய இவைநீக்கும், (௬௭௫)

கொத்துமல்லிக் கீரையின்குணம்.

கொத்துமல்லிக்கீரையுண்ணிற் கோரவரோசகம்போம்
பித்தமெல்லாம்வேருடனே பேருங்காண்-சத்துவமாம்
வெச்செனவேபோகம் விளையுஞ்சுரந்தீருங்
கச்சுமுலேமாதேநீ காண்,

(இ-ள்) கச்சுமுலேமாதேகொத்துமல்லிக்கீரையால்-வாத அரோசகமும் பித்தவருக்கமும்-பித்தசுரமும்-போம், வன்மையும்-சுக்கிலமும் விருத்தியாம் நீயறிவாயாக, (௬௭௬)

கொடிக்காசனைக்கீரை-செடிக்காசனைக்கீரை,

விதை-இவைகளின் குணம்.

கொடிக்காசனையிலையாற் கூறுபித்தமேகுஞ்
செடிக்காசனைக்குச் சிலேஷ்மம்-தடிக்காவா
மிவ்விதைகளாற்கருப்ப மின்றெனவேபொய்த்துவிடுஞ்
செவ்வியமெல்லிதழாய் தேர்,

(இ-ள்) செவ்வியமெல்லிதழையுடைய பெண்ணே-கொடிக்காசனைக்கீரையால்-பயித்தியம்போம் செடிக்காசனைக்கீரையால்-கபம்-நீக்கும் இவ்விதைகளால்-கருப்பமன்றியும், (௬௭௭)

காசினிக்கீரையின்குணம்,

அத்திவெப்பநீக்கு மடர்சோகையைத்தொலைக்கு
மெத்தவுதிரத்தை விளைக்குமந்தரத்தின்
மாசினியிலெங்காத வார்த்தையெனப்பேசுவிக்குங்
காசினியிலைக்குணத்தைக் காண்,

(இ-ள்) காசினிக்கிரை-அஸ்திதாதுகதசுரத்தையும்-வீக்கத்தையும்-உதிரத்தழுக்கையும் நீக்கும், ரத்தவிருத்தியைச்செய்யும்-என்க, (௬௭௫)

போகம்விளைக்குங் கிரைகள்,

தாளிமுருங்கைத் தழைதூதுணம்பசலை
வாளிலறுகிரையுநெய் வார்த்துண்ணி-லாளியென
விஞ்சுவார்போகத்தில் வீம்புரைத்தபெண்களெலாங்
கெஞ்சுவார்பின்வாங்கிக் கேள்,

(இ-ள்) நறுந்தாளி-நன்முருங்கை-தூதுணம்-பசலை-அறுகிரை-இவற்றுள்யாதேனும் ஒன்றைப்புளிநீக்கிப் பாகஞ்செய்து-அன்னத்துடன்நெய்சேர்த்துக்காலையில்மாத்திரம்-ஒருமண்டல அளவையாக - உண்ணில்-புணர்ச்சியில்-நிர்வாகம்உண்டாம்-என்க-கிரைவகை-முற்றியது. (௬௭௬)

பச்சைக்குங்குமப்பூவின் குணம்-வி-ம்,

சங்கையின்மதுரதோடஞ் சல்தோடம்பீநசங்கட்
செங்கயற்கண்ணின்றோடஞ் செவித்தோடம்-பித்ததோடங்
கெங்கையாங்கபதோடங்கள் கெஞ்சிடும்பச்சையான
குங்குமப்பூவினாலேகோதையே யிதனைக்கொள்ளே,

(இ-ள்) கோதையே பச்சைக்குங்குமப்பூவுக்கு-இன்சுவையால் பிறந்ததுக்குணங்கள் நீரேற்றம்-நாசிநேத்திரம்செவிஇவைகளைப்பற்றியரோகங்கள் பயித்தியம் சிலேஷ்மதோஷம்-இவைகள்விலகும்-என்க.(௬௭௭)

கொன்றைப்பூவின்குணம்-இதுவே-சரக்கொன்றை-வெ-பா,

மலக்கிருமியோடு மதுநீர்குடலாங்
கலத்துநோயுங்குலைகபி சாயு-நிலத்திற்கு
ளொன்றைக்கும்வாடாத வின்பமலர்க்கொம்பே
கொன்றைப்பசுமலரைக் கொள்,

(இ-ள்) இன்பமலர்க்கொம்பனையாளே-கொன்றைப்பூவால் மலாசயக்கிருமி-மதுமேகம்-குடலைப்பற்றியரோகங்கள் - ஆகிய இவைகள்போகும்-என்க, (௬௭௮)

மைக்கொன்றைப்பூவின் குணம்- இதுவே-மயிர்க்கொன்றை,

மைக்கண் விழியனமே வைகத்திலெப்போது
மைக்கொன்றைப்பூமேக மாற்றுங்காண்-மிக்கதனைக்
கொண்டாற்சலமேகங் குகூவென்றேபதறி
யண்டாதிதுண்மை யறி,

(இ-ள்) மையணிந்தகண்களையுடைய அன்னமே மைக்கொன்றைப்பூவால் பிரமேகமும்-சலமேகமும்-நீங்கும், (௬௮௨)

கட்டாத்திப் பூவின்குணம்

உதிரக்கடுப்புபோ முதிரக்கழிச்சல்
விதிரக்கடும் பேதிமேக-மெதிர்நிற்க
மாட்டாதகலும் வனசமலர்த்திருவே
காட்டாத்திப்பூவுக்குக் காண்,

(இ-ள்) தாமரையில்வசிக்கு மிலக்குமிபோல்வாளே-காட்டாத்திப்பூவுக்கு-ரத்தக்கடுப்பு-ரத்தாதிசாரம்-வெளுத்தமலக்கழிச்சல்-பிரமேகம் ஆகிய இவைகள்போகும்-என்க, (௬௮௩)

சண்பகப்பூவின் குணம்,

வாதபித்தமஸ்திசுர மாமேகஞ்சுத்தசுரங்
காதுநஷ்டங்கண் ணழற்சி தங்காவேமாதேகேள்
திண்புறுமனக்களிப்பாந் திவ்யமணமுட்டனுஞ்சேர்
சண்பகப்பூவதற்குத் தான்,

(இ-ள்) பெண்ணேநீகேட்பாயாகநல்லமணமுமருமையுள்ளசண்பகப்பூவிற்கு-வாதபித்தமிஸ்ரம்-அஸ்திசுரம-பிரமேசம-தனித்தோஷசுரம்-சுசுக்கிலநஷ்டம்-நேத்திரஅழலை-ஆகியஇவைபோம - மனக்களிப்புண்டாம்-என்க, (௬௮௪)

பாதிரிப் பூவின்குணம,

பித்தசுரங்கணியும் பெண்வசியமுண்டாகு
முற்றியதோர்வெட்டை முடியுங்காண்-மெத்தவுமே
மாதுரியசொற்கா வசனமடவனமே
பாதிரியின்பூவையுண்டு பார்,

(இ-ள்) மாதுரியவசனியே பாதிரிப்பூவினால் பித்தசுரமும மேகமுமநீங்கும ஸ்திரீவசியமாம. (௬௮௫)

மந்தாரப் பூவின்குணம,

மந்தாரப்பூதிரிச்சி மன்னர்வசியமு மாஞ்
செந்தாமரைத்திருவே செப்பக்கேள்-சந்ததமுந்,

கண்ணுக்குமாகுளிர்ச்சி காணுக்கொதிப்பகற்று
மண்ணின்றும்பூவெனவே வை

(இ-ள்) செந்தாமரையில்வசிக்கு மிலக்குமியனைய பெண்ணே நீகேட்பாயாக குளிர்ச்சியுள்ள நல்லமந்தாரப்பூ- ராஜவசியத்தையும் விழிக்குக் குளிர்ச்சியையும்செய்யும் சரீரவெப்பத்தைநீக்கும், (௬௮௬)

புன்னைப்பூவின்குணம்

புன்னைப்பூபித்தமென்பார் போராடுவன்மேகம்
வின்னப்படாசித்த விப்பிரமம்-பின்னுங்
கரப்பானசொறிசிரங்குங் காணுதகற்று
மூரப்பாகவேமயக்கு முன்

(இ-ள்) புன்னைப்பூ-நீங்காமேகம்-சித்தவிப்பிரமசந்நி-கரப்பன்- புடைவிரணம்-இவ்வகைளைநீக்கும் - மயக்கமுண்டாக்கும்-பித்தம்-என்பார், ()

மகிழம்பூவின்குணம்-இதுவேவகுளம்பூ

வெகுவனலமாகு விரகமிகவுண்டா
முகரவரோசி மூழிபு-மிகவு
மகிழச்சுரத வகைகாட்டுமோதே
மகிழத்துருமம மலர்க்கு ※ துருமம்-மரம்

(இ-ள்) மகிழப்புணர்ச்சி விளையாட்டைக்காட்டுமோதே மகிழம்பூவுக்கு தேகவெப்பமும்-புணர்ச்சியிலிச்சையும் - உண்டாகும் இதனைமுகர அரோசகரோகம்-நீங்கும்-என்க, (௬௮௮)

பன்னீர்மரப்பூவின்குணம்

சர்த்தியரோசகமுட்டாது நட்டமேல்வறட்சி
மொத்தவழலு மொதுங்குங்கா ணத்தரத்துந்
தன்னீர்மைகுன்றுத தளிர்வண்ணமாதரசே
பன்னீர்மரப்பூவைப் பார்

(இ-ள்) தண்ணீர்மைகுன்றுத தளிர்வண்ணமாதரசே பன்னீர்மரம் பூவினுல்-வாந்தி-அருசி-சுக்கிலட்சீணம்-நாவறட்சி- பித்தகோபம்- ஆகிய இவைகள்போம்-என்க, (௬௮௯)

குருக்கத்திப்பூவின்குணம்-இதுவேமாதவி

சிரரோகந்தாகஞ் சிலேஷ்மவிரணம்
பொருபித்தமுபல்விஷமும போக்கும்-வரிசேர்
கருக்கொத்தவாள்விழியாய் கையுமதுரஞ்சார்
குருக்கத்திப்பூவின் குணம

(இ-ள்) வாள்விழியாளே கைப்பினியுள்ள குருக்கத்திப்பூ சிரஸ்தாபம் அதிதாகம்-சிலேஷ்மதுஷ்டவிரணம் பித்தகோபம்-பலவிஷம் இவைகளை நீக்கும், (௬௬௰)

செந்தாழம்பூவின்குணம்

தலைநோய்சலதோடஞ் சன்னுகபங்காச
மூலவாதமெல்லா மொடுக்கு-நிலைசேர்
திருந்துடற்குக்காந்திதருஞ் செம்மணப்பில்வெம்மை
பொருந்துகின்றசெந்தாழம் பூ

(இ-ள்) உஷ்ணமணம்பொருந்திய செந்தாழம்பூ சிரஸ்தாபரோகம் நீரேற்றம்-நெஞ்சிற்கபாதிக்கம்-இருமல்-சலிக்கின்றவாதகோபம்- இவைகளைப்போக்கும்-சரீரத்தில்- மினுமினுப்பையுண்டாக்கும், (௬௬௧)

முருங்கைப்பூவின்குணம்

விழிகுளிரும்பித்தம்போம் வீறருசியேகு
மழிவிந்துவும்புஷ்டியாகு-மெழிலா
ரொருங்கையகலாக்கற் புடைவாணகையே
முருங்கையின் பூவைமொழி

(இ-ள்) கற்பினையுடைய ஒளிபொருந்தியநகையாளே முருங்கைப்பூவினால் பித்ததோஷம் அரோசகமும்நீங்கும்-கண்குளிர்ச்சியும்- சுக்கிலவிருத்தியும் உண்டாகும், (௬௬௨)

அகத்திப்பூவின்குணம்

புகைப்பித்தமும்மழலாற் பூரிக்குமந்த
வகைபித்தமும்மனலு மாறும்-பருக்துச்
சகத்திலருந்தாத் தனியமிர்தேநாளு
மகத்திமலருக் கறி

(இ-ள்) சகத்திலருந்தாஒப்பற்ற அமுதனையபெண்ணே அகத்திப்பூவுக்கு சுருட்டுமுதலிய புகைகளாலும் வெய்யிலாதி உஷ்ணதிரவியங்களாலும்பிறந்தபித்தங்களும் தேகஅழலையும்நீங்கும், (௬௬௩)

தே, செவ்வகத்திப்பூவின்குணம்

நாடிற்பனிப்பீனு நாடிக்கறைக்கதழ்வை
யோடித்துடைத்துள் ளொளியாற்றும் பாடேத்
தவாரநத்தினுந் துணங்கைக் கணடாமயிலே
துவாரகத்திவிக்காண் டுதி,

(இ-ள்) மடமயிலனையமங்கையே-செவ்வகத்திப்பூ - பார்க்கிற்பயங்கரத்தைக்கொடுக்கின்ற நாசியால்விழுகிற ரத்தப்பெருக்கை விரைவில்திருத்துவதுந்தவிர-உள்வெப்பத்தையும்-நீக்கும்என்க, ※ அச்சம்,மிகுதி சிவப்புப்பூ, (௬௬௫)

தே, வேப்பம்பூவின்குணம்

பித்தந்தெழுந்த பெருமூர்ச்சைநாத்தோடஞ்
சத்தத்தெழுவமனந் தங்கருசி-முற்றியநா
லேப்பமலகிட மிவையேகுநாட்சென்ற
வேப்பமலருக்கு வெருண்டு

(இ-ள்) நாட்சென்ற வேப்பம்பூவுக்கு-சந்நிமூர்ச்சை ஜிம்மகதோஷம்-வாந்தி-அரோசகம் நீடித்தவாதம்-ஏப்பம்-மலக்கிருமி இவைபோம்

மாதுளம்பூவின்குணம்

வாந்திபித்ததோடமொடு மாறுக்கடுப்பனலஞ்
சேர்ந்துநின்றமூலரத்தந் தீர்க்குங்காண்-மாந்தளிர்க்கை
மாதேகறைப்புஷ்டி வல்லபலனுண்டாக்கும்
பூகலத்துண்மாதுளையின் பூ ※ கறை-உதிரம்

(இ-ள்) மாந்தளிரனைய கைகளையுடையமாதே-மாதுளம்பூ- பித்தவாந்தி வயிறளைதல்-வெப்பம்-ரத்தமூலமும்- இவைபோக்கும் ரத்தபுஷ்டியையும்-பலத்தையுந்-தரும், (௬௬௬)

புளியம்பூவின்குணம்

பித்தத்துடனே பெருத்தவரோசகம்போ
மெத்தவெழும்வாந்தி மிகத்தணிற்கு-மெத்தக்
கனத்துப்பூரித்தமுலைக் காரிகையேவெற்பார்
வனத்துப்புளியம்பூ வால்

(இ-ள்) கனத்துப்பூரித்த முலைகளையுடையாளே மலையைச்சார்ந்தகாட்டில்முளைத்த புளியம்பூவினால் பித்தகோபமும்-அருசியும்-அதிகரித்தவமனமும்-நீங்கும்-என்க, (௬௬௭)

இலுப்பைப்பூவின்குணம்

குன்றுவிலுப்பையின்பூ கூர்மதுரம்வாசனையாந்
தின்றாற்பயித்தியமுஞ் சேருங்காண்-மன்றலுலாந்
தார்குழலேபித்தசுரந் தாகந்தணிந்துவிடும்
வார்தயக்கமெய்தும் வழுத்து

(இ-ள்) வாசனையுடைய நீண்டகூந்தலாளே-ருசியும்- பித்தமணமும் உள்ள இலுப்பைப்பூவினால்-பித்தசுரமும்-தாகரோகமும்நீக்கும், அதிபித்தமும் பிரமையும் உண்டாம், (௬௬௮)

வாகைப்பூவின்குணம்

வாதசமனஞ்செய்யும் வல்விடத்தைப்போக்கிவிடுஞ்
சீதசிலேஷ்மத்தைச் சிதைக்குங்காண்-போதவுள்ளே
மாகைப்பைவைத்திருக்கும் மாநிலத்திலேபெரிய
வாகைப்பூத்தன்னை வழுத்து

(இ-ள்) கைப்புச்சுவையையுடைய வாகைப்பூ- வாததோஷத்தையும் சர்ப்பவிஷங்களையும் சிலேஷ்மகோபத்தையும்-கெடுக்கும், (௬௯௯)

தே, முள்முருக்கம்பூவின்குணம்-இதுவேகலியாணமுருக்கு

கருப்பாசயத்திற் கறுத்துத்தடித்தே
பருத்தவுதிரத்திரளைப் பஞ்சாய்த்-துரத்திவிடும்
பண்முருக்குமின்பமொழிப் பாவாயுலகறிய
முண்முருக்கம்பூவை மொழி

(இ-ள்) இசையைவெற்றிகொண்ட வின்பமொழியாளே முள்முருக்கம்பூ கருப்பப்பையிற்கட்டிய ரத்தகுன்மத்தைவிலக்கும், (௭௱)

தென்னம்பூவின்குணம்

மேகமகக்கொதிப்பு வீறுவிரத்தபித்தம்
வேகவசிர்க்கரநோய் வீழ்பிரமி-தேகத்தில்
வின்னமப்பாலிக்கும் விஷபாகமபோகவென்றாற்
றென்னம்பாளைப்பூவைத் தின்

(இ-ள்) தெங்கின் இளம்பாளைப்பூவால் பிரமேகம-உட்காய்ச்சல்- ரத்தபித்தம்-அசிர்க்கரம்-ஒழுக்குப்பிரமியம்-விஷபாகநோய்-இவைநீங்கும்,

பனம்பூவின்குணம்

பனையிலுறுபூவதுதான் பங்கமுறுகுன்ம
வினையகற்றுநீர்க்கட்டை மீட்கும்-முனையான
பன்னோயொழிக்கும் பழஞ்சுரத்தைப்போக்கிவிடு
மின்னேயிதனை விளம்பு

(இ-ள்) மின்னலனையாளே-பனம்பூவானது-வாதகுன்மம் மூத்திரச்சிக்கல்-தந்தரோகம-புராணசுரம ஆகிய இவைகளைப்போக்கும-என்க, ()

வாழைப்பூவின்குணம

வாழைப்பூமூல ரக்த மாபிரமிவெட்டைபித்தங்
கோழைவயிற்றுக்கடுப்பு கொல்காச-மாழியன்
வென்னைவெரினைகால் வெரிவுந்தொலைத்துடலின்
மன்னவர்க்குத்தாது வைவ.

(இ-ள்) வாழைப்பூ, ரத்தமூலம். பிரமேகம், வெள்ளை-பயித்தியம்-கபாதிக்கம்-உதரக்கடுப்பு-இருமல்-கைகால்எரிச்சல் இவைகளைநீக்கும்சுக்கிலவிருத்தியைத்தரும். மரத்தின்புஷ்பவகை முற்றியது, (எ௱௩)

## செடியின் புட்பவகை.

ஆவாரம்பூவின் குணம்,

தங்கமெனவே சட த்திற்குக்காந்திதரு
மங்காதநீரை வறட்சிகளை-யங்கத்தா
மாவைக்கற்றாழை மணத்தையகற்றிவிடும்
பூவைச்சேராவாரம் பூ.

(இ-ள்) ஆவாரம்பூ, பிரமேகநீர், வறட்சி, உடம்பிற்பூத்த உப்புமா, கற்றாழைநாற்றம் இவைநீக்கும். மெய்க்குப்பொற்சாயலைத்தரும், ()

கருஞ்செம்பைப் பூவின்குணம்.

தலைக்குத்தலையஞ் சலதோடம்வாத
மூலைப்பீநசமிகுந்த வூர்க்குண்-ணிலைக்கா
தருஞ்சண்பகநாசி யாயிழையேசுத்தக்
கருஞ்செம்மைப்பூவிருக்குங் கால்,

(இ-ள்) அரியசெண்பகமலரை நிகர்த்தநாசியையுடைய பெண்ணே கருஞ்செம்மைப்பூவால் கபாலச்சூலை-சிலேஷ்மகோபம், நீரேற்றம், வாததோஷம் பீநசம் ஆகிய இவ்வநீங்கும் என்க, (எ௱௫)

செம்பரத்தம பூவின்குணம,

செம்பரத்தைமேகவெட்டை தீராப்பிரமியொடு
வம்பிரத்தவெள்ளை வழுவழுப்பும்-வெம்பும்
பெரும்பாடிரத்தபித்த பேதமுமகற்றுங்
கருமபாமொருமயிலே காண்.

(இ-ள்) கன்னலையொத்தமொழியையும மயில்போலுஞ்சாயலையுமுடையபெண்ணே, செம்பரத்தம்பூ, மேகவெள்ளை, பிரமியமேகம், ரத்தப்பிரமேகம்-பெரும்பாடு-அசிர்க்காவருக்கம்இவைகளைநீக்கும் என்க.

அலரிப்பூவின் குணம்.

வெப்பரிசிகுஷ்டம் விதாகஞ்சொறிசிரங்கு
செப்பிரத்தப்புண் பித்தஞ் சென்னியெரி-விப்படியிற்

தங்குமோகும்பத் தனத்தணங்கேவாசஞ்சேர்
கொங்கலரிப்பூப்பெயரைக் கூறு.

(இ-ள்) கும்பத்தனத்தணங்கே வாசமுள்ளகொத்து அலரிப்பூவால் சுரம், அரோசகம்குஷ்டம்விதாகம், புடை, கிரந்தி, ரத்தக்கட்டி, பித்தநோய், தலைஎரிவு, இவைபோம் என்க, (எாஎ)

செம்பருத்திப் பூவின்குணம்,

செமபருத்திப்பூவழலைத் தியரத்தபித்தத்தை த
வெம்புவயிற்றுக்கடுப்பை விந்துவைநீத்-தம்பெனச்செய்
மேகத்தைவெட்டையை விழுசிமுதற்பேதியையுட்
டாகத்தையோட்டிவிடுந் தான்,

(இ-ள்) செம்பருத்திப்பூ தேகஅழற்சி-ரத்தபித்தரோகம்-உதரக்கடுப்பு-சலம்-மேகம்-வெள்ளை-விழுசிமுதலியபேதிகள்தாகம் இவைநீங்கும்

நந்தியாவட்டப் பூவின்குணம்,

காசமபடலங் கரும்பாவைத்தோஷமெனப்
பேசுவிழிநோய்கடமைப் பேர்ப்பதன்றி-மோசைதரு
தந்திபோலேசெறித்துச் சாருமண்டைநோயகற்று
நந்தியாவட்டப்பூ நன்று.

(இ-ள்) நந்தியாவட்டப்பூவானது நேத்திரகாசம், படலம், லிங்காநாத தோஷங்கள், சிரஸ்தாபரோகம் ஆகிய இவைகளைவிலக்கும-என்க, ( )

துத்திப் பூவின்குணம்,

துத்திமலரைமிதந் துயக்கின்றபேர்களுக்கு
மெத்தவிந்துவும்பெருகு மெய்குளிருஞ்சத்தியமே
வாயால்விழுமிரத்த மாறுமிருமலறுந்
தேயாமதிமுகத்தாய் செப்பு,

(இ-ள்) கலைகுறையாதசந்திரனையமுகத்தையுடையபெண்ணே துத்திப்பூவால் ரத்தவாந்தியும-காசரோகமும்நீங்கும் - சுக்கிலவிருத்தியும் தேகக்குளிர்ச்சியும் உண்டாம்-என்க, (எாஅ)

செவ்வந்திப் பூவின்குணம்,

அலைமயக்கஞ்சுற்றலறு மட்சிக்கொளியாங்
கலைமயிருண்டாமனலஞ் சாருமநிலைமணமா
மொவ்வந்திவான்புறையை யொத்ததுதற்றிருவே
செவ்வந்திப்பூவதனைச் செப்பு,

(இ-ள்) அந்திவான்புறையையொத்த நுதல்களையுடைய பெண்ணே வாசனையுள்ளசெவ்வந்திபூவால், மூர்ச்சையும் தலைச்சுழலும் நீங்கும், கண்ணுக்கொளியும், ரோமச்செழிப்புப் உண்டாம், (எ௰௧)

தே, துமபைப் பூவின்குணம்,

தாகங்கடிதொழியுஞ் சந்நிபாதங்களறு
மாகந்தனில்வருநோ யண்டுமோ-மாகந்த
வம்பைப்பிறங்குயத்து மாதேநின்செங்கரத்தாற்
றுமபைப்பூத்தன்னைத் தொடு,

(இ-ள்) கச்சைப்பிறந்தனங்களையுடையபெண்ணே-துமபைப்பூவினால் தாகரோகமும சந்நிபாதசுரங்களுமம, நேத்திரத்தைப்பற்றிய தோஷங்களுமநீங்கும எனக, (எ௰௨)

வேளைப்பூவின் குணம,

கணமாந்தமவாதங் கபக்கோவைகோழை
யணுமாந்தவெப்பு மகலுமணமாதும
பாளைக்குழலே பசிமெத்தவுண்டாகும
வேளைப்பூவென்றுருக்கால் விள்.

(இ-ள்) மணமார்ந்தகூந்தலாளே, வேளைப்பூவினால், மாந்தகணம,வாதகோபம, சலதோஷம-மார்ப்புச்சளி, மாந்தசுரம, இவைநீங்கும, தீபனமுண்டாகும, (எ௰௩)

சிற்றாமரைப்பூவின்குணம-இதுவேபன்னீர்ப்பூ-ரோசு,

சிற்றாமரைப்பூவாற் சேர்ந்தமலக்கட்டுவிடு
முற்றவெப்பு தாகமறு யோக்காளஞ்-சற்றுமவிடா
மூலவெரிவிரத்த மூத்திரமவயிற்றிசிவு
ஞாலமவிடுத்தேகு நவில்,

(இ-ள்) சிற்றாமரைப்பூவால், மலபந்தம, சுரம, தாகம, ஓக்காளம, ஆசனஎரிச்சல்-ரத்தபிரமேகம-வயிற்றிசிவு இவைபோம எனக, (எ௰௪)

களாப்பூவின் குணம்,

கண்ணிற்படருங் கருமபடலமவெண்படலம
வண்ணவுதிரப்படலம வஞ்சகைக-ளெண்ணாக்
களவினைப்போக்கு மணங்கேசிரிய
களவினதுபூவென்றுங் காண்,

(இ-ள்) தேவமகளிரனையபெண்ணே. கனாப்பூ, நேத்திரத்திலுண்டான கரும்படலம், ஸ்வேதபடலம், ரத்தபடலம், சதைப்படலம், முதலிய நோய்களைவிலக்கும், (௭௰௫)

செடியின்புட்பவகை முற்றியது,

## கொடியின் புட்பவகை.

தாமரைப்பூவின் குணம்,

பருத்தநற்றாமரைப்பூ பல்வாந்திநோயைத்
துரத்திவிடுமின்னுஞ் சொலவோ-கரத்தி
லெடுத்தணைக்கக்கண்குளிரு மேகுஞ்சுரமு
மெடுத்தவிதாகமும்போ மெண்,

(இ-ள்) தாமரைப்பு பலவிதமனரோகம். வெப்பத்தாற்பிறந்தவிழிஎரிச்சல், சுரம், விதாகம், ஆகிய இவைகளைப்போக்கும்-என்க, (௭௰௬)

வெள்ளத்தாமரைப் புவின்குணம்,

ஈறலைப்பற்றிமிக வெறுகின்றவெப்பமும்போங்
கோரமருந்தின் கொடுமையறும்-பாருலகிற்
றண்டாமணத்தையுள்ள தாழ்குழலேகால்கல்விடும்
வெண்டாமரைப்புவால் விள்,

(இ-ள்) நீங்காதவாசனையுள்ள கூந்தலாளே, வெள்ளத்தாமரைப் புவால் ஈரலிலதிகரிக்கிறை உஷ்ணமும், வெப்பமுள்ளஔஷதவேகமும், உட்சூடும் நீங்கும் என்க. (௭௰௭)

அல்லிப்புவின் குணம்,

மேகமறும்புண்ணுறும விட்டேகுநீரிழிவு
தாகந்தணியுந்தழலகலும்-வாகான
மெல்லியலேயாயுண் மறை வேதியமொலாமுனைக்
மல்லிமலரா லறி,

(இ-ள்) மெல்லியலாளே ஆருண்மறைவேதியராலுரைக்கும் அல்லிப்புவால் ரத்தப்பிரமேகம், ஆண்குறித்துவாரவிரணம், வெகுமூத்திரம், தாகம், உட்சூடு ஆகிய இவைநீங்கும் என்க, (௭௰௮)

செவ்வல்லிப் புவின்குணம்,

செவ்வல்லிப்புவுக்குச் சேர்ந்திறங்குநீர்பிணியோ
டொவ்வுமேகப்பிணியு மோய்வதன்றி-யிவ்வுலகிற்
கண்ணினோய்தீருங் கனத்தபித்தரத்தமொடு
புண்ணினோய்பன்னோயும் போம்,

(இ-ள்) செவ்வல்லிப்பூவுக்கு மூத்திரோதசங்கவாதம் மேகமூத்திரம் வெய்யிலாதியாற் பிறந்தநேத்திரரோகங்கள் ரத்தபித்தம்-விரணம்-தாதுநஷ்டமுதலியசிலநோய்கள்-ஆகிய இவைநீங்கும்-என்க, (௭௰௯)

கழுநீர்ப்பூவின்குணம்

உடற்குக்குளிர்ச்சியதா முள்ளழலைமாற்று
மடற்கபவரோசகத்தை யாற்றுங்-கடற்கு
ளெழுநீர்க்குமிழி யிகழுமுலையாய்
கழுநீர்மலரெனவே காண்

(இ-ள்) கடற்குளெழும் நீர்க்குமிழியனையகொங்கைகளையுடையாளே கழுநீர்ப்பூவானது தாகரோகத்தையும்-சிலேஷ்மஅரோசகரோகத்தையும்நீக்கும் சரீரத்திற்குக் குளிர்ச்சியைத்தரும், (௭௰)

கருநெய்தற்பூவின்குணம்-இதுவேநீலோற்பலம்

பிரசவித்தாரைத்தேற்றும் பேரிச்சைமாற்றும்
வருசிலேஷ்மப்பிணியை மாட்டுங்-துருசாம்
விடபாகரோகம் விலக்கும்புவியிற்
றடமார்க்குநெய்தற் றான்

(இ-ள்) கருநெய்தல்-பிரசவித்தமாதர்களைத் தேற்றுவதுமன்றி-பெரும்பாட்டையும்-கபநோயையும்-விஷபாகத்தையும் போக்கும், (௭௰௧)

சாதிப்பூவின்குணம்-இதுவேபிச்சிப்பூ

முத்தோஷஞ்சென்னிவலி மூடுஞ்சரீரவெப்ப
மொத்தவிழிநோ யோடுங்கா-ணித்தம்
விலகாதகாந்தியுண்டா மேனிதனில்வாசங்
குலவுசாதிப் பூவுக்கு

(இ-ள்) சாதிப்பூவுக்கு-திரிதோஷம்-தலைநோய்-தேகஉஷ்ணம்- கண்படலம்-இவைநீக்கும்-நீங்காதஒளியும்-மணமும்உண்டாம், (௭௰௨)

மல்லிகைப்பூவின்குணம்

போகமிகவுண்டாகு பொங்குகபங்கட்பிரமை
யாகவனற்குளியமு மண்டுமோ-பாகனையாய்
மன்னுதிருவசியம் வாய்க்குஞ்சூடென்றவரும்
பன்னுமல்லிகைப்பூவாற் பார்

(இ-ள்) பாகனையமொழியாளே புணர்ச்சியிலதிவிருப்ப முண்டாக்குகின்ற மல்லிகைப்பூவால்-கோழை-கண்மயக்கம்-தேகஉஷ்ணம்- குளியம்

ஆகியஇவைநீங்கும், லட்சுமிகடாட்சம் - உண்டாகும் இதனைஉஷ்ணம் என்பர், (எ௨௩)

முல்லைப்பூவின்குணம்

முல்லையெனுமூசிமல்லி மொய்த்தமலரொவர்க்கு
மொல்லைமனநோயை யொழிக்குங்காண்-மெல்ல
வழலைத்தணிக்கு யரோசகத்தைப்போக்கு
மழலைமொழியாமறிந்து வை

(இ-ள்) மழலைச்சொல்லாளே முல்லைஎன்கிறஊசிமல்லிகைப்பூமனோ வியாதியையும் உள்வெப்பத்தையும் அரோசகத்தையும் நீக்கும்என்க,

வெட்சிப்பூவின்குணம்

வெட்சிப்பூமேகமழல் விட்டோடும்வாசனையா
மட்சிவழியாயுயர்கொள் ளாரணங்கே-யெற்சுஞ்
சுரமுடனேதாகந் தொலைக்குமுலகில்
விரைவாயிளைப்பகற்றும் விள்

(இ-ள்) கண்களின்வழியா யுயிர்பருகும்பெண்ணே பரிமளத்தையு டைய வெட்சிப்பூ-மேகச்சூடு-சுரரோகம்-தாகம்-சரீரஆயாசம் ஆகியஇ வைகளைக்கெடுக்கும்-என்க, (எ௨௪)

தேதூதுளம்பூவின்குணம்

புட்டியுண்டாந்தாதுவுமாம் பொங்கழகோடாற்றன்மிகு
முட்டநரைத்து முதிர்ந்தமனைக்-கட்டழகு
மாதுளத்திநீங்காது வைத்திடவுமெண்ணமுற்றூற்
றூதுளத்தின்பூவுண்ணச் சொல்

(இ-ள்) தூதுளம்பூவால்-தேகபுஷ்டி-சுக்கிலதாதுவிருத்தி-வனப்புசரீ ரபலம்-ஸ்ரீவசியம்ஆகிய-இவைகள்உண்டாகும்-என்க, (எ௨௫)

வெங்காயப்பூவின்குணம்

வயிற்றுச்சிறுநோயை வாதவலியை
யுயித்தியஞ்செய்யாம லோட்டுங்-குயிற்றுத
சிங்காரக்கொங்கைச் செழுந்திருவேநாட்டிலுறை
வெங்காயப்பூவெனவே விள்

(இ-ள்) சிங்காரக்கொங்கைகளையுடையபெண்ணே நாட்டுவெங்காயப் பூவானது-சாமானியவாதமுதலிய மூன்றுகுன்மரோகங்களையும்-குடலை ப்புற்றிய வாதநோயையும்-போக்கும், (எ௨௭)

புட்பவகை-முற்றியது.

## மரத்தின்பிஞ்சுவகை.

வாழைப்பிஞ்சின்குணம்

உதிரம்விழுகடுப்போ டுண்மூலரத்த
மெதிரில்விழுநீரிழிவு மேகு-மதிநுதலே
பேழைவயிற்றுப்புண் பேருந்துவரார்ந்த
வாழைக்கச்சற்கு மருண்டு

(இ-ள்) பிறையனையநுதலாளே-துவர்க்கின்றவாழைப்பிஞ்சுக்கு-ரத்தக்கடுப்பு-உள்வலயரத்தமூலம்அதிமூத்திரம்வயிற்றுவிரணமிவைபோம

பலாப்பிஞ்சின்குணம்,

தாகம்போம்வந்தபித்தஞ் சாந்தமாமாடவர்க்குப்
போகமிகப்பொழியும் பொய்யன்றே-மூக
வலஜமந்தங்குன்மமிவை யண்டிவருஞ்சொன்னேங்
கலசப்பலாப்பிசாற் காண், ※ கலசம்பாவ்

(இ-ள்) பாலுள்ளபலாப்பிஞ்சால்தாகமும்-பித்தநோயும்-நீங்கும்-சுக்கிலவிருத்தி அடங்கியசலம்-மந்தாக்கினி-குன்மம்இவையுண்டாம், ()

அத்திப்பிஞ்சின்குணம்

மூலக்கிராணியறு மூலவிரத்தநீருஞ்
சாலக்கடுப்புந் தரிக்குமோ-மாலரவத்
துத்திப்படவல்குற் றூகாய்துவர்ப்பையுறு
மத்திச்சிறுபிஞ் சருந்து

(இ-ள்) புள்ளிகளையுடையபாம்பின்படம்போன்ற வல்குளாளே-துவர்ப்புச்சுவையையுடைய அத்திப்பிஞ்சால் மூலவாயுகிரகணியும்ரத்தமூலமும்-வயிற்றுக்கடுப்பும்-விலகும்என்க, (௱௩௰)

தே, முருங்கைப்பிஞ்சின்குணம்

சிக்குருக்குயப்பிஞ்சத் திச்சுரத்திற்குஞ்சுகிச்சு
மக்குருக்குருப்ப மரோசிகட்குஞ்-சுக்கிலத்தின்
கொச்சையுறவருந்திக் கூறுவற்குமாமதனைப்
பச்சையுறவருந்திப் பார் ※ சிக்குரு-முருங்கை

(இ-ள்) முருங்கையினது பூப்பிஞ்சைப்பாகஞ்செய்து தோலுடன் உண்ணில்- அஸ்திசுரம் எலும்பையுருக்கிறவெப்பம்-அரோசகம் விந்துநஷ்டம் இவைகள்நீங்கும் ※ இளமைஎலும்பு இளைத்தல் தோல், ()

மாம்பிஞ்சின்குணம்-இதுவேகூதப்பிஞ்சு

கவைவாதபித்த கபமருசிவாந்தி
கவைமறுத்தமந்தமெனுந் தோஷ-மிவையெல்லாங்
காதத்துக்கப்புறம்போங் கானமடமயிலே
சூதத்தின்புன்வடுவைத் துய்

(இ-ள்) காட்டிற்சஞ்சரிக்கு மயிலனையாளே-மாம்பிஞ்சை நீதின்னக்கடவை - தின்றால்-கிளைத்தவாதாதிமுத்தோஷங்கள்-அரோசகம் சர்த்தி - அக்கினிமந்தம்-இவைபோம். (எ௬உ)

நாரத்தங்கச்சலின்குணம்-இதுவேபோஜனகஸ்தூரி

அன்னமிடுஞ்சீத மருசியுப்பிசங்கிருமி
மன்னுமோவிந்துவுடன் வன்பசியாம்-வன்னமலர்
வாசனையேறுங்குழலீர் மாகோய்தனிலுண்ணும்
போசனகஸ்தூரிக்குப் பூ,

(இ-ள்) வன்னமலர்வாசனையேறுங்கூந்தலாளே-உலகில்சுரரோகிகளும் உண்ணுகின்ற நாரத்தங்கச்சலால்-சீதளம் - அரோசகம்- வயிற்றுப்பொருமல்-எரிகிருமி-இவைகிலைக்கலாம் - சுக்கிலதாதுவும்- தீபாக்கினியும்-உண்டாம் - உணவைமிகுதியாக உட்செலுத்தும, (எ௬௩)

மாதுளமபிஞ்சின்குணம

மலக்கழிச்சல்சீதத்தால் வந்தகழிச்சல்
சலக்கழிச்சல்சோரியாற் சாரும்-பலகழிச்சல்
மாளுமபுளிப்பான மாதுளம்பிஞ்சாலயிலே
யாளுங்கணமாதே யறி

(இ-ள்) வேல்போலுங்கண்ணாளே - புளிமாதுளம்பிஞ்சால் - மலம சீதம - ஜலம - ரத்தம - இவைகளினிறமாக ஆகின்றபற்பல அதிசாரரோகங்கள்தீரும - என்க, (எ௬௪)

முகிழ்விரியாக் கத்திரிப்பிஞ்சின்குணம

அனலுடனேபித்த மகலுமலம்போந்
தொனியுண்டாமையந் தொலையுஞ்-சனியாக
முத்திருக்குமவெண்ணகையீர் மூடுமுகிழ்விரியாக்
கத்திரிப்பிஞ்சுண்பவர்க்குக் காண்

(இ-ள்) முத்தனையவெண்டங் கங்களையுடையாளே, முகிழ்விரியாதக் கதரிப்பிஞ்சுக்கு, சுரமும், பித்ததோஷமும், கபமும் நீங்கும், மலம் இளகியிறங்கும்; குரற்ளெனிபலக்கும். (எ௩௫)

தே, அவரைப்பிஞ்சின் குணம்,

கங்குலுணவிற்குங் கறிக்கு※முறைகளுக்கும்
பொங்குதிரிதோடத்தோர் புண்சுரத்தோர்-தங்களுக்குங்
கண்முதிரைப்பில்லநோய்க் காரருக்குங்※காழுறையா
வெண்()முதிரைப்பிஞ்சாம் விதி,

(இ-ள்) விதைமுதிராத வெள்ளையவரைப்பிஞ்சு, இராப்போசனத்திற்கும், மருந்துண்பவர்க்கும். வாதாதிமுத்தோஷம், விரணம், சுரம், விழிக்குள் முதிர்ந்தசிலேஷ்மபில்லம் முதலியரோகிகட்கும் ஆகுமென்க, ※உறை-மருந்து, ※காழ்-விதை-முதிரை-அவரை. மரத்தின்பிஞ்சுவகை முற்றியது. (எ௩௬)

## மரத்தின் காய்வகை.

வாழைக்காயின் குணம்.

வாந்திபித்தம்பேதி வாய்நீர்வயிறளைத
லார்ந்தவனலங்காத மண்டாவாஞ்-சூழ்ந்தேறு
※செம்புனலுந்தென்புமுண்டாந் திண்டிமிகப்பெருகு
மம்புவியுள்வாழைக்காய்க் காய். செம்புனல்-உதிரம்,

(இ-ள்) வாழைக்காயினுல் பித்தவாந்தி, பயித்தியம், பித்தாதிசுரம்உமிழ்நீர்ச்சுரப்பு, வயிறளைதல், உஷ்ணம், இருமல் இவைபோம், ரத்தவிருத்தியும், பலனும்உண்டாம், போசனம் அதிகரிக்கும் என்க,(எ௩௬)

பலாக்காயின் குணம்,

உண்ணின்மிகுமந்த முறுதியாம்வாதநோ
யண்ணிமிளைப்பிரைப்பு மண்டுங்காண்-வண்ணப்
பலாக்காய்க்குவிந்துவுமாம் பாரிலுவமை
சொல்லாக்காமவாரிதியே சொல்,

(இ-ள்) பாரிலுவமைசொல்லாக் காமவாரிதியளேயாளே,பலாக்காய்க்கு அக்கினிமந்தம், வாதகோபம், ஆயாசம், சுவாசம், சுக்கிலவிருத்தி ஆகிய இவைகள் உண்டாகும் என்க, (எ௩அ)

அத்திக்காயின் குணம்,

அத்திக்காய்தன்னை யருந்திளுலாரணங்கே
யெத்திக்குமேக மிருக்குமோ-சத்திக்கும்

வாதமகலு மங்கழியுஞ்சூலையொடு
மீதனலும்புண்ணும்போம் வின்,

(இ-ள்) பொருந்திய அமுதனையாளே அத்திக்காயால்பிரமேகம், வாதரோய், சூலை, சரீரவெப்பம், விரணம் ஆகிய இவைகள்போம், மலங்கழியும், என்க, (௭௬௯)

முருங்கக் காயின்குணம்,

சொல்லுநோய்கட்கெல்லாந் தோஷமில்லையையமறும்
※பல்லுயிர்க்குந் தாதுமிகும-வில்லார்
பெருங்கைக்காமன்றுதிக்கும் பெண்ணேநறிய
முருங்கைக்காய்தன்னைமொழி, முத்தேகமக்கள்-உயிர்,

(இ-ள்) வில்லேந்தியகாமன்றுதிக்கும்பெண்ணே நிதனநூலிற்கூறும் பலபிணிக்கும் ஔஷியதாயும, மத்தியக்கறியாயும் இராநின்றமுருங்கைக்காயால் கபம்நீங்கும், விந்துவூறும, (௭௭0)

அருநெல்லிக் காயின்குணம்,

அருநெல்லிக்காய்குளிர்ச்சி யாம்பித்தம்போக்கு
மருவுதுவாப்பாற்றுரிசை மாற்றும்-விரியுலகிற்
ருகத்துயர்நீக்குஞ் சாரிரிமலைத்தொலைக்கு
மாகக்கொதிப்பகற்று மாங்கு,

(இ-ள்) துவர்ப்புச்சுவையையுடைய அருநெல்லிக்காய் சீதபித்தம்தாகம், காசம, உட்சூடு ஆகிய இவைகளைப்போக்கும் என்க, (௭௭௧)

தே, நெல்லிக்காயின்குணம்,

பித்தமனலையம் பிரசம்வாய்நீர்வாந்தி
மத்தமலக்கட்டு மயக்கமுமி-லொத்தவுரு
வில்லிக்காயம்மருங்கா மென்னுட்காலந்தோர்ந்தே
நெல்லிக்காயம்※மருந்துணீ,

இதுவுமது,

நெல்லிக்காய்க்குப்பித்த நீங்குமதன்புளிம்பாற்
செல்லுமேவாதமதிற் சேர்துவப்பாற்-சொல்லுமையு
மோடுமினிதச்சித்தத்தி லுன்னவனலுடலே
கூடுபிரமேகமும்போங் கூறு, ※மருந்து-அமிர்தம்

(இ-ள்) கடல் அமிர்தம் ஒத்தநெல்லிக்காயைப் பகற்போதுண்ணில் பயித்தியம், கபரோய் பிரசம், வாய்நீர்ச்சுரப்பு, வாந்தி, உன்பலமாதம்

மலபந்தம், தலைச்சுழல், பிரமேகம் இவைபோம்காமன் அழகுண்டாம் அதன்புளிப்பால்வாயுவும், துவரால கபமும் நீக்கும், (எசகூ)

புளியங்காயின் குணம்,

சோபமொடுபித்தந் தொலைக்குமுரிசைதருங்
கோபமுறவாயுவையே கொண்டாடுங்-காயக்
கருப்பமடவார்க்குக் கனவிருப்பமுள்ளே
யருப்பைஞெருப்பையும் புளியங்காய்,

(இ-ள்) ருசியைக்கொடுக்கின்ற கொட்டைமுதிராத புளியம்பிஞ்சு சோருகலையும், பித்தக்கோபத்தையும் நீங்குவதுந்தவிர வாததோஷத்தையுண்டாக்கும இதுகருப்பஸ்திரீகளுக்கு விருப்பமாம் என்க, ()

மாங்காயின் குணம்,

தாதுநஷ்டம்வாதந் தணிக்கிரந்தியாம்பசிபோங்
காதுமுட்டப்பக்குவிடுங் காயமதி-லோதுகின்ற
பாங்காருப்புண் வளருமபற்கூசுஞ்சொற்குளறு
மாங்காயுண்பாரை மது,

(இ-ள்) மாங்காயால் சுக்கிலநாசம், மிகுவாயு, சிரங்கு, தேகம்வெடிக்தலோடு ஆறுவிரணம், தந்தங்கூசுதல், சொற்றவறல் இவையுண்டாம் பசிபோம், (எசஞ)

மரியங்காயின் குணம்-இதுவேபுளிமாங்காய்,

வாயின்கசப்பகலு மாறுமரோசகமு
மோயுஞ்சுரத்தோர்க் குவப்பாகுந்-தூயவரித்
தேனமருங்வார்கூந்தற் றெய்வப்பெடையனமே
கானமரியங்காயைக் கண்டு,

(இ-ள்) தேனமரும்வார்கூந்தற் றெய்வமடவனமே காட்டிலுள்ளமரியங்காயினால் வாய்க்கசப்பும் அரோசகமும்நீங்கும் இதுசுரரோகிகளுக்குதவும் என்க,

பச்சைக்கடுக்காயின்குணம-இதுவேபரிதகிக்காய்,

பச்சையரிதகிக்கால் பண்ணும்வகைகேளா
யிச்சையுறக்துவைத்துப் பிட்டமூத்தி வைச்செடுத்துத்
தின்னவரோசியறுந் தீபனமாமுன்மலன்போ
மன்னநடைமாதே யறி,

(இ-ள்) அன்னநடையாளே பச்சைக்கடுக்காயைக் கொட்டைநீக்கி பிடித்து அதற்கு (கு)ல் ஒருபங்கு உப்பிட்டு மூ-நாள் சென்றபின்பிதை

ந்து அதை அசனத்திற் சேர்த்தாவது தனித்தாவது புசிக்கில் அரோசக
ந்தீருந் பசியுண்டாம்மலங்கழியும் நீயறிவாயாக, (எசஎ)

இத்திக்காய்பிஞ்சு இவைகளின்குணம்,

வாயுமலக்கட்டு மலக்கழிச்சல்சால்வழியே
சாயுமசிர்க்குள்ளே தங்குவெப்பி-னோயினங்க
ளத்திக்காதாரமுற் றிருப்பன்விசாவேகல்
லித்திக்காய்பிஞ்சுகளை யென்,

(இ-ள்) இத்திக்காய்க்கு வாதமலபெந்தமபோம், பிஞ்சுக்கு அதிசார
மும், பொமபாமெ, உட்குடினுற்பிறக்கின்ற பிணியினமும நீங்கும, ()

கொடியெலுமிச்சங் காயின்குணம,



வாந்திமயக்கம வயிற்றுக்கழிச்சலனற்
சேர்ந்தவரோசகமுந் தீருங்காண்-தீர்ந்த
கொடியமருந்கைகயிளந் தோகாயடவிக்
கொடியெலுமிச்சங்காயைக் கூறு,

(இ-ள்) காட்டிலுள்ள கொடிஎலுமிச்சங்காய்க்கு வாந்தி, பித்தமயக்க
ம, மலபேதி, பித்த அருசிரோகம ஆகிய இவைகள் போகும், (எசஅ)

எலுமிச்சங்காயின்குணம,

திரிலெலுமிச்சங்காய் சேர்முத்தோஷத்தையுமுன்
வாதகபஞ்சூலையையு மாகொடிய-சாதியெனுஞ்
சர்த்திகுன்மத்தையுமிட் டங்கமருந்திட்டதையும
பித்தவெப்பையுந்தணிக்கும பேசு,

(இ-ள்) குற்றமற்ற எலுமிச்சங்காய், திரிதோஷம, வாதசிலேஷ்மம
சூலை, சர்த்திகுன்மம, இடுமருந்து பித்தஉஷ்ணமஇவர்களைப்போக்கும
கலுமிச்சங்காயின்குணம,

தந்துவிழப்பண்ணுஞ் சலவைதனைக்கொடுக்கும்
வெந்துமிகவித்துவை விழச்செய்யு-மந்த
வெலுமிச்சங்காயபோன் றிருக்குங்கொடிய
கலுமிச்சங்காய்க்குணத்தைக் காண்,

(இ-ள்) எலுமிச்சங்காய்போற் றோற்றுகின்ற கலுமிச்சங்காய் பற்க
ளைவிழச்செய்வதுந்தவிரச் சீதளத்தையும, வீரியநஷ்டத்தையும உண்
டாக்கும, (எஙக)

நாரத்தங்காயின்குணம்

நன்றியுறவுலகி ஞரத்தங்காயருந்த
வென்றிதரும்புளிப்பான் மெய்ச்சும்-மன்றியுமோ
வாதமொடுகுன்மமறும் வாற்கிருமியும்போகுங்
காதலுறுதீபனமாங் காண்,

(இ-ள்) நாரத்தங்காயால்வாதரோயும்-வாலுள்ளமலக்கிருமியும்-நீங்கும்-பசியுண்டாம்-இதன்புளிப்பினல் தேகஞ்சுத்தியாம், (எருஉ)

கடாரநாரத்தங்காயின்குணம்

பித்தமொடுவாயிற் பெருகறலரோசகம்போம்
பத்தியமாநோயிற் பருகலாங்-குத்துங்
கடாரியனையவிழிக் கன்னிமடமாதே
கடாரநாரத்தங்காயைக் கண்டு

(இ-ள்) குத்துங்கடாரியனைய விழிகளையுடைய சன்னிகையே கடாரநாரத்தங்காயால்-பித்தநோயும்-வாய்நீரூறலும்-அருசியும்போம், இதுபத்தியவஸ்துவாம்-நோயாளர்க்கும் உதவும், (எருங)

கொளுஞ்சிநாரத்தங்காயின்குணம்

சொல்லுங்கொளுஞ்சிக்காய் தோன்றுகின்றகாசத்தை
வல்லவட்சீதத்தை மாருதத்தைப்-பொல்லாத
வையத்தைத்தாகத்தை யப்பொழுதேநீக்கிவிடும்
வையத்துட்பெண்ணரசே வாழ்த்து

(இ-ள்) பெண்கள்நாயகமே பண்டிதர்கூறுகின்ற கொளுஞ்சிநாரத்தங்காய்-இருமல்-ஆமதோஷம்-வாதவிகுணம்-கபாதிக்கம்-தாகம்- இவைகளைநீக்கும்-இதனை-கொடிநாரத்தை முலையெலுமிச்சை- துரிஞ்சிஎனவுஞ்சொல்வர், (எருச)

தே, பனைநுங்கின்குணம்

நீர்வராவியக்குருவை நீக்குமனலாக்குந்தோற்
சார்வாமயஞ்சீதஞ் தாஞெழிக்குஞ்-சேர்வார்
விழிக்கனையாந்துஞ்சளிக்கு மென்சுரதமாதே
கழிக்கனையாக்தாளியிளங் காய் ※ ஆமயம்-நுங்கு

(இ-ள்) மென்சுரதமாதே நெய்தனிலப்பனையினது இளங்காயிலுள்ள நுங்கின்சலமானது-வியர்க்குருவைநீக்கும்- பசியைத்தரும் - தோலுடனேயிருக்கும்-நுங்கு-சீதபேதியைவிலக்கும், (எருரு)

மரத்தின்காய்வகை-முற்றியது

## செடியின்காய்வகை.

தே, கத்திரிக்காயின்குணம்-வி-ம்,

பண்மோண்ட கிரந்தியைப்பாலிக்கு
மூண்டனைக்குந் தினவையுண்டாக்கிடு
நண்டுகட்டுங் குரங்கெனநாளுமாம்
கண்டுவிட்டது கத்திரிக்காயதே

(இ-ள்) கத்திரிக்காய்-ஆறியசிரங்கையும்-நமையையு முண்டாக்கும்,

கத்திரிக்காய்-அதன்பிஞ்சு-இவைகளின்குணம்-வெண்பா

கத்திரிக்காய்பித்தங் கனன்றகபந்தீர்த்துவிடும்
தொத்துசொறிசிரங்கைத் தூண்டிவிடு-மெத்தவுந்தான்
பிஞ்சானகத்திரிக்காய் பேசுமுத்தோஷம்போக்கு
மஞ்சார்குழலே வழுத்து

(இ-ள்) மேகம்போன்ற கூந்தலாளே கத்திரிக்காய்-பித்தத்தால் வந்த கபத்தைநீக்கும் புடையையும்-கிரந்தியையும்-அதிகப்படுத்தும்- பிஞ்சு திரிதோஷத்தை விலக்கும், (எஙஎ)

கண்டங்கத்திரிக்காயின்குணம்

ஐயுமறுந்தீபனமா மாமமலக்கட்டும்
பையவெளியாகிவிடும் பார்மீதிற்-செய்யமலர்த்
தொத்திரிக்கும்வார்குழலே தூமணலாருங்கண்டங்
கத்திரிக்காயைப்புசிக்குங் கால்

(இ-ள்) அழகியமலர்மாலையணிந்த நீண்டகூந்தலாளே வெண்மணலிலுண்டாகின்ற கண்டங்கத்திரிக்காயால்-சிலேஷ்மநோய்நீரும் சீதங்கலந்தமலமும்-பசியும்உண்டாம்-என்க, (எஙஅ)

கறிமுள்ளிக்காயின்குணம்

வாதபித்தவையத்தை மாற்றுமன்றபோக்கு
மோதுசுவாசத்தை யோட்டுங்காண்-பூதலத்துட்
டுள்ளிப்பாய்கெண்டைவிழித் தோகாயறிநீகறி
முள்ளிக்காய்செய்யு முறை

(இ-ள்)மகரநோக்கியேகறிக்குதவாநின்றமுள்ளிக்காயானது வாதபித்த கபதோஷங்கள் சுரம்- சுவாசரோகம்- ஆகியஇவைகளைப்போக்கும்என்க,

கொத்தவரைக் காயின்குணம்

கொத்தவரைக்காய்பித்தங் கூடாதுபத்தியத்தின்
மெத்தெனவுமையம் விளைக்குங்காண்-பித்தத்தார்
சீதமகற்றிவிடுந் தின்மருந்தைப்பாழாக்கும்
வாதக்குடைச்சறகு மால்

(இ-ள்) அபத்தியமான கொத்தவரைக்காய்-பயித்தியம்-கபம்-வாதக்க டுப்பு இவையுண்டாக்கும்-பித்தத்தால்-நளிரையும்-மருந்தையும்-முற்றி க்கும் (௭௬௰)

வெண்டுக்காயின்குணம்-இதுவேவெண்டைக்காய்

கண்டகிராணி கடியவதிசாரம்
விண்டவெண்சீதரத்த மேவுங்கா-ணெண்டொடியே
வண்டற்காய்வெய்யகப வாதமிகும்வாய்க்குணவாம்
வெண்டுக்காயுண்பார்க்கு விள்

(இ-ள்) வறலுக்குநவியான வெண்டுக்காய்க்கு- கரகணி-பேதி-சீதர த்தாதிசாரம்-சிலேஷ்மவாதம் நாவுக்குருசை-ஆகிய இவைஉண்டாம்,

நறுமணத்தக் காளிக்காயின் குணம்,

மலமிளகுந்தானே மகாகபமும்போகும்
பலமிகுந்தவாதம்போ பார்க்குண்மலைபோற்
பனைத்துப்பூரித்தமுலைப் பாவாய்கேணல்ல
மணத்தக்காளிக்காயை வாழ்த்து

(இ-ள்) மலைபோற்பணைத்துப் பூரித்தமுலைகளையுடையபெண்ணே ந றுமணத்தக்காளிக்காயால்-மலம்-இளகிச்சுபாவமாக இறங்குவதுமன்றி சிலேஷ்மநோயும்-வாதாதிக்கமும்-நீங்கும்என்க, (௭௬௨)

மணத்தக்காளிவற்றலின்குணம்

நீர்ப்பேதியாகு நீலைவமனம்போம்வாயிற்
கூர்ப்பவிலைப்புமறுங் கூறுவதோ-பார்க்கிலினு
மிக்கினநோயோர் விரும்புகின்றநல்லமணத்
தக்காளிவற்றலுக்குத் தான்

(இ-ள்) நோயுற்றூர்க்காகின்ற நல்லமணத்தக்காளி வற்றலுக்கு- நீர்ப் பேதியுண்டாவதுந்தவிர-வாந்தியும்-வாயிலைப்பும்-நீங்கும்என்க, ()

சுண்டைக்காயின்குணம்

நெஞ்சின்கமம்போ நீறைகிருமிநோயும்போம்
விஞ்சுவாதத்தின் விளைவும்போம்-வஞ்சியரே

வாயைக்கசப்பிக்கு மாமலையிலுள்ளசுண்டைக்
காயைச்சுவைப்பவர்க்குக் காண்

(இ-ள்) கசப்புச்சுவையையுடைய மலைச்சுண்டைக்காயால்- மார்புச்சளி-கிருமிரோகம்-வாதாதிக்கம்-ஆகிய இவைபோம்-என்க, (எசுச)

சுண்டைக்காய்வற்றலின்குணம்

பித்தவரோசகம்போம் பேராப்புழுச்சாகு
முற்றகிராணியறு முட்பசியாஞ்-சத்தியமாய்ப்
பண்டைக்குதவாமம் பற்றுமிக்கியாவையுந்தான்
சுண்டைக்காய்வற்றலுண்ணச் சொல்

(இ-ள்) சுண்டைக்காய்வற்றலால்-பத்தஅரோசகம்-மலக்கிருமி-கிரகணி-ஆசனத்துவாரச் சிதக்கட்டு-இவைபோம்-உள்ளிற்பசியுண்டாம், ()

விதுசங்காயின்குணம்

விதுசங்காய்பத்திய வியஞ்சனமாமத்தாற்
புதுமெய்விந்தெழிற்பலமும் பூணு-முதுபித்த
வேகமொழியு மிகுதுர்ப்பலமகலும்
பாகனையவின்மொழியே பார்

(இ-ள்) பாகையொத்த யினியமொழியாளே பத்தியகரியாகிய விதுசங்காயினல்-புதியஉதிரம்-சுக்கிலம்-அழகுபலம்-இவைவிருத்தியாம்—நீடித்தபித்தமும் அதிதுர்ப்பலமும்-நீங்கும், (எசுசு)

பாவட்டங்காயின்குணம்

வாதசுரந்தணியும் வாயருசியேகிவிடுஞ்
சீதக்கடுப்பகலுந் தேமொழியே-வாதுபுரி
பித்தவதிசாரமொடு பேராக்கபமுமறு
முற்றபாவட்டங் காய்க்கு

(இ-ள்) தேன்போலும் வசனிப்பவளே பாவட்டங்காய்க்கு- வாதசுரம் அரோசகம்-சீதக்கடுப்பு- பித்தாதிசாரம் - சிலேஷ்மதோஷம்-ஆகியஇவைநீங்கும்-என்க, (எசுஎ)

ஊசிமுளகாயின்குணம்

சீதக்கழிச்சற் சிறுநீர்ச்சுருக்காசங்
காதக்குதவெரிச்சி காட்டுங்கா-ணுதித்தன்
வீறுகிரணம்பருகி மேனோக்கிக்காய்த்தபங்காக்
கா[illegible]முறு மூசிமுளகாய்

(இ-ள்) ஆகாயாமமாய்க் காய்ந்து சூரியனது அக்கினி கிரணத்தைப்பு சித்து மிருகார்ப்புச் சுவையைப்பெற்ற ஊசிமுளகாய்-சீதபேதி-மூத்திர க்கிரிச்சரம்-மூலம்-சூதகெகிழ்ச்சிரோகம்-இவையுண்டாக்கும்,(எசுஅ)

வெண்டுமுளகாய்-கருங்குண்டுமுளகாய்-பச்சைமுளகாய்.

இவைகளின்குணம்,

வெண்டுமுளகாய்க்கனில் மேவுமிடம்பார்க்குமணிக்
குண்டுமுளகாய்க்கனலங்-கூடுங்கா-முண்டுபயிர்ப்
பச்சைமுளகாய்க்குப் பதமிறங்குஞ்சோலைபுரிந்
திச்சையுறவுண்ணின்மறு வில்,

(இ-ள்) உன்னிற்போலாயிருக்கிற வெண்டுமுளகாய்க்கு-வாதகோப ம் நீங்கும் - ஆகாயத்தைநோக்கிக் கருமைநிறத்துடன் காய்க்கின்றகுண் டுமுளகாய்க்கு-உஷ்ணமாம், பயிரிடுகிறவிதையாடாந்தபச்சைமுளகாய்க் குச் சம்பாரஞ் சேர்த்துண்ணில்-அன்னமிறங்கும்-குற்றமில்லை,(எசுகூ)

களாக்காயின்குணம்-இதனைக்கிளாக்காய் என்பர்,

கா துவிடாய்தாகங் கடியபித்தம்வாந்தியும்போம்
மாதேயரோசகமு மாறுங்காண்-டீதா
மிரத்தபித்தம்போகு மினியகளாக்காய்க்
குரத்தபசியுமுண்டா மோர்,

(இ-ள்) மாதேயறிவாயாக இன்புளிப்புள்ளகளாக்காய்க்கு- காதடைப் ப-தாகம்-பித்ததோஷம்-வாந்தி-அருசி-ரத்தபித்தம்-இவைபோம்-மிகுப சியுண்டாம், (எஎ0)

ஊமத்தங் காயின்குணம்,

வாதமறும்பித்த மயக்கமுமாமிலக்திற்
றீதுகரப்பன் சிரங்ககலும்-கோதாய்கேண்
மாமத்தமாகும் வறட்சியெல்லாம்போகு
மூமத்தங்காய்க்கென் றுரை.

(இ-ள்) பெண்ணேநீகேட்பாயாக ஊமத்தங்காய்க்கு-வாதநோய்-கரப் பான்-கிரந்தி-சொறி-இவைநீக்கும், பித்தமயக்கமும்-உன்மாதரோகமு ம்-உண்டாகும், (எஎக)

செடியின்காய்வகை-முற்றியது.

## கொடியின்காய்வகை.

கலியாணப்பூசினிக்காயின்குணம்-இதுவே-பெரும்பூசினி,

பெரும்பூசினிக்காய்க்குப் பித்தமொடுகாய்ச்ச
லருஞ்சார நீர்க்கட்டருகன்-மருந்திடுதற்

பித்தசுரமஸ்திசுரம் பேய்வறட்சிமேகமும்போ
மெத்தவனிலமுறும் வின்,

(இ-ள்) கலியாணப்பூசினிக்காய்க்கு-பித்தியரோகம்-உட்சாச்சல்-காரரோகமூத்திரகிரிச்சரம்-இடுமருந்து-பித்தசுரம்-அஸ்திதாதுசததசுரம-பேய்ச்சொறி-பிரமேகம் ஆகிய இவைபோம்-வாதாதிக்கமாம், (எஎ௨)

பறங்கிக்காயின்குணம-இதுவே-பூசினிக்காய்,

அனலழலைநீக்கு மதிபித்தம்போக்குங்
கனலெனவேவன் பசியைக்காட்டும்-புனலாரு
மிக்கவையமுண்டாக்கு மென்கொடியேயெப்போதுஞ்
சர்க்கரைப்பறங்கிக்காய் தான்,

(இ-ள்) மிருதுவானபூங்கொம்பனையாளே இனிப்புள்ள பறங்கிக்காய் அனலால்வரும்-அழற்சியையும்- மிகுபித்தத்தையும்-நீக்கும் - நல்லபசியையும் கபகோபத்தையும்-விளைக்கும், (எஎ௩)

குழிப்பறங்கிக்காயின்குணம்-இதுவே-கோடைப்பூசினி,

வாதக்குடைச்சலுறு மாறுதலையமுமாம்
போதவளிச்சூலையுண்டாம் பொற்கொடியேயோதுங்
குழிப்பறங்கிக்காய்க்குக் குளிர்ச்சிநிறையும்
பழிக்கடுத்தமாந்தமிகும் பார்.

(இ-ள்) பொற்கொம்புபோல்பவளேகுழிப்பறங்கிக்காய்க்கு-வாதக்கடுப்பேவிருத்தி-வாதசூலை-அக்கினிமாந்தம்-இவை உண்டாகும்-இதனைக் குளிர்ச்சி என்பர், (எஎச)

குமட்டிக்காயின்குணம்-இதனை-மூலாங்காய்-என்பர்,

தந்தம்விழுந்திடுமே தாதுமெலிந்திடுமே
விந்தைமிகுங்காந்தி விலகிடுமே-சந்ததமும்
வாதமிகுந்திடுமே வந்துகபஞ்சேர்ந்திடுமே
யோதுகுமட்டிக்காயா லுன்,

(இ-ள்) குமட்டிக்காயினால்-பல்விழுதல்- சுக்கிலட்சீணம் - தேகவொளிகெடல் வாதகோபம்-சிலேட்சமாதிக்கம்-ஆகிய- இவைஉண்டாம், ()

சுரைக்காயின் குணம்,

வாதபித்தம்வாயருசி வன்பிணிகஞ்சீத
மோதிருத்திரோயுமுண்டா முள்ளனற்போ-மோதத்

திருப்பாற்கடற்றிருவே தீக்குணத்தைமேவுஞ்
சுரைக்காயைத் தின்பவர்க்குச் சொல்.

(இ-ள்) திருப்பாற்கடலிலுற்பவித்தவிலக்குமியனையாளே உஷ்ணமுள்ள சுரைக்காயினால் வாதபித்தம்-அரோசகம்-பீலிகரோகம்-ஆமம்-மார்புநோய் இவையுண்டாகும், உட்சூடுநீங்கும், (௭௭௬)

வெள்ளரிக்காயின் குணம்.

உண்டருந்தத்தீயெழுப்பு முண்மருந்தைத்தான்முடிக்குங்
கண்டகரப்பனைக் கடுக்குங்காண்-பண்டிதரோ
யுள்ளரிப்பைநீர்க்கடுப்பை யூறைவிடுத்தோட்டிவிடும்
வெள்ளரிக்காயின்குணத்தை விள்,

(இ-ள்) பண்டிதரே வெள்ளரிக்காய் கரப்பன்-நீர்த்துவாரத்தினவு-நீர்ச்சுருக்கு-இவைநீங்கும். இதைப்புசித்தபின் யுண்ணப்பசியாம், மருந்தைமுறிக்கும். (௭௭௭)

வெள்ளரிப்பிஞ்சு-காய் பழம்-விதை இவைகளின்குணம்,

பிஞ்சுவெள்ளரிக்காய்க்குப் பேசுதிரிதோஷம்போம்
வஞ்சியரோமுற்றியகாய் வாதமாம்-நைஞ்சகனி
யுண்டாற்சயித்தியமா முள்ளிருக்குமவ்விதையைக்
கண்டாலுநீரிறங்குங் காண்.

(இ-ள்) வெள்ளரிப்பிஞ்சுக்கு முத்தோஷங்களும் நீங்கும். காயால்வாதமும், நைந்தபழத்தால் கபமும், விளையும் வித்தால் நீர்ப்பேதியாகும்,

கக்கரிக்காயின்குணம்- இதுவே-முள்வெள்ளரிக்காய்,

கக்கரிக்காய்பித்தங் கடியுங்கபமுயர்த்து
மெய்க்குக்குளிர்ச்சிதரு மெல்லியலே-மிக்குநின்ற
மூலவழறணிக்கு மூடிரத்தபித்தத்தைச்
சாலவகற்றிவிடுஞ் சாற்று.

(இ-ள்) மெல்லியலேகக்கரிக்காய் பித்ததோஷம்-மூலச்சூடு- ரத்தபித்தம்-இவைகளைநீக்கும்-கோழையையும், குளிர்ச்சியையும்உண்டாக்கும்

ஆகாயகக்கரிக்காயின் குணம்,

ஐயம்விளையு மழல்கரப்பான்பித்தமும்போ
மெய்புளகிபோகம் விளையுங்காண் - செய்மருந்தின்
காந்தியும்போமாகாயக் கக்கரிக்காய்தின்றவர்க்கு
மாந்தியும்போமாதே வழுத்து.

(இ-ள்) மாதே பந்தலில்காய்க்கின்ற ஆகாயக்கக்கரிக்காய்க்கு- தேகச் சூடு-நரப்பான்-பயித்தியதோஷம்-மருந்தின்வீரியம் பித்தவாந்தி ஆகிய இவைபோம். கபாதிக்கமும், புணர்ச்சியி லிச்சையும்உண்டாமென்க.

கொட்டைஅவரைக்காயின் குணம்.

கொட்டையவரைக்காயாற் கோரவரோசகநோய்
கிட்டாதென்பார்மருந்தின் கீர்த்திகெடுந்-துட்டமந்தம்
பையவுண்டாம்பேதியுண்டாம் பாரிப்பனிலமுண்டா
மையமுண்டாஞ்சூலையு முண்டாம்,

(இ-ள்) வித்துமுதிர்ந்த அவரைக்காயினால் அருசியும், ஔஷதகன்மையும் நீக்கும் அக்கினிமாந்தம் - அதிசாரம்-சரீரபளுவு-வாததோஷம்-சிலேஷ்மகோபம்-குத்தல் ஆகிய இவையுண்டாம் என்க, (௭௮௧)

வாள் அவரைக்காயின் குணம்,

அதிபித்தம்வாந்தி யரோசகமுமுண்டாங்
குதிவாதம்வாய்ச்சுரப்புங் கூடுந்-துதிசக்ர
வாளவரையொத்த வனமுலைமாதேபசிய
வாளவரைக்காயான் மதி.

(இ-ள்) சகரவாளகிரியனைய வனமுலைமாதேபசுமையுள்ள வாளவரைக்காயால் பித்தாதிக்கம்-வாந்தி-அருசி-குவர்தரோகம்-வாய்நீரூறல் ஆகிய இவையுண்டாம்-என்க, (௭௮௨)

மொச்சைக்காயின்குணம்,

அனிலபித்தவையங் களைக்கடிதுண்டாக்குந்
தொனிபடுக்குமவா தனைத்துண்டு-மனுதினமுங்
கொச்சைமலத்தைப்பெருக்குங் கோரவுட்டிணந்தணிக்கு
மொச்சைக்காய்செய்யு முறை,

(இ-ள்) மொச்சைக்காயானது திரிதோஷங்கள்-தொனிக்கதக்கவாதம் க்ஷீணமலம்-இவைகளை விருத்திசெய்யும்-மிகுசூட்டைத்தணிக்கும், ()

பீர்க்கங்காயின் குணம,

தின்றவுடன்பீர்க்கங்காய் சீதமுறுங்காண்பித்த
மொன்றுமூன்றாக வுயருமே-மன்றலணிக்
காரளகக்கச்சுமுலைக் காரிகையேவாதகப
நேரளவைத்தாண்டு நினை,

(இ-ள்) கறுத்த அளகத்தையும வாரிறுக்கிய தனங்களையுடைய மாதே பீர்க்கங்காயையுண்ணில் சீதளமும் - பித்தம்-தன்மாத்திரைக்கு மேல்மூன்றுபங்கு அதிகமாம், வாதகபங்கள் தத்தம் நிலை பிசகும், ()

புடலங்காயின்குணம்.

போகம்விளையும் பொருந்திவளருமைய
மாகமதிற்பித்த மனுகுங்காண்-மேக
படலங்கவியளகப் பாவாய்கேணுளும்
புடலங்காய்க்குள்ள புகழ்.

(இ-ள்) மேகம்போன்ற கூந்தலாளே நீகேள் புடலங்காய்க்கு சுக்கிலமும் கபமும் பயித்தியமும் அதிகரிக்கும், (௭௮௫)

பன்றிப்புடலங்காயின்குணம்

கரப்பான்சொறிசிரங்கு காணுச்சிலந்தி
யுரப்பாம்விஷக்கடியு முண்டா-முரைத்தவகை
யன்றிச்சயித்தியமு மாம்பன்றிதன்னையொத்த
பன்றிப்புடலுக்குப் பார்.

(இ-ள்) பன்றிமாமிசத்தையொத்த பன்றிப்புடலங்காய்க்கு கரப்பான் புடை-கிரந்தி-சீதளம்-இவையுண்டாவதுமன்றிக் காணுக்கடி-சிலந்தி-சாப்பம்-முதலியவிஷங்கள்-இறக்கியதாயினும் உடனேயேறும், ()

கொம்புப்பாகல்காயின்குணம்.

மருந்துகளினற்குணத்தை மாற்றுமஃதொன்று
திருந்துவலிவாதத்தைச் சேர்க்கும்-பொருந்துபித்தங்
கூட்டுமவபத்தியத்தைக் கொண்டிருக்கும்வன்கரப்பான்
காட்டுங்கொம்புப்பாகற் காய்.

(இ-ள்) அபத்தியபதார்த்தமாகிய கொம்புப்பாகற்காய் நல்லஔஷதங்களை முறிப்பதுமன்றி வாதபித்தகோபங்களையும் உண்டாக்கும், ()

மிதிபாகல்காயின்குணம்.

பித்தமொடுவாதம் பெருக்கைமிகவுண்டாக்குந்
தத்துகரப்பானைத் தருவிக்கும்-பற்றிரத
தாரபாஷாணந் தம்மைமுறிக்குந்தப்பாது
காரவல்லியாம்பாகற் காய்.

(இ-ள்) காரவல்லியென்கிற மிதிபாகற்காய் பித்தவாதகோபங்களையும் கரப்பனையும் உண்டாக்கும் பாதரசம்-அரிதாரம்-பாஷாணம் முதலிய வேகங்களை முறிக்கும் இதுகேரளதேசத்துப் பத்தியக்கறியாம், ()

காட்டுப்பழுபாகல்காயின்குணம்

போஜனமுட்செல்லும் பொருந்துபசியுண்டாகுங்
காசபித்தவாதமிவை காணுவா-நேசமுற

# ௱௬௮ பதார்த்தகுணசிந்தாமணி

வாட்டுப்படாக்கொங்கை மாதேகுறிஞ்சிதிலங்
காட்டுப்பழுபாகற் காய்க்கு

(இ-ள்) சாயாத்தனங்களையுடையமாதே மலையடுத்தகாட்டுப்பாகற்காய்க்கு அன்னமிறங்கலும் நல்லபசியுமுண்டாம் இருமலாற்பிறந்த பித்த வாதகோபங்கள்நீங்கும், (௭௬௯)

அதளக்காயின்குணம்,

அதளக்காய்வாய்க்கருசி யாயிருக்குந்தின்றாற்
கதளவொட்டாப்பித்தங் கதிக்கும்-பதலத்தின்
மந்தமுண்டாம்வாயுமிக வந்தடருந்தப்பாதே
கந்தமலர்க்குழலாய் காண்,

(இ-ள்) கந்தமலர்க்குழலாளே வாய்க்கு உணவைத்தருகின்ற அதளக்காயையுண்ணில் பயித்தியமும் அடிவயிற்றில் மந்தமும் வாதநோயும் உண்டாம் என்க, (௭௭௰)

தூதுளங்காயின்குணம்.

ஐயமுடன்பித்த மகலுமரோசகம்போங்
கையமேலவாதந் தணியுங்காண்-வையமிசை
யோதுங்குடல்வாத மோடுமலமொழியுந்
தூதுளங்காயுண்ணச் சொல்,

(இ-ள்) தூதுளங்காயால் கபரோகங்கள் பயித்தியதோஷம் அருசிரத்தாசயவாயு ஆந்திரபித்தவாதம் மலபந்தம் இவைவிலகும், (௭௭௧)

கொடிவழுதணைக்காயின்குணம் இது
வழுதலங்காயென மருவியது.

எல்லார்க்குமேநல்லிதமாஞ்சிலேஷ்மந்தைத்
புல்லார்க்கும்பத்தியம் புசிக்கலாம்-முல்லைக்
கடிகமழும்வார்குழலே காசினியிற்சொன்னேங்
கொடிவழுதுணைக்காய்க் குணம்.

(இ-ள்) முல்லைமலர்வாசனை பரிமளிக்காநின்றகூந்தலாளேகொடிவழு துணைக்காய் வாதமுதலியமூன்று தேகாக்கும் பொருந்துவதுமன்றிக் கபத்தைக்கரைக்கும் பத்தியத்திற்கும் ஆகும், (௭௭௨)

பயற்றங்காயின்குணம்.

ஐயமகலு மரோசிகெடுந்தீபனமாம்
பையுதிரவாய்வும் பறக்குமென்பார்-செய்யு

நயத்தவவுஷ்தமு காசமடையும்
பயற்றங்காய்தன்னையுண்டு பார்,

(இ-ள்) மருந்தைமுறிக்கின்ற பயிற்றங்காயினால் கபாதிக்கம் அருதிரத்தவாதி குன்மம் இவைகளை யும் விளைதலும் உண்டென்பர், ()

கோவைக்காய்-இதன்வற்றல்-இவைகளின்குணம்

வாயினரோசகம்போம் மாறும்...
நோயின்கபமகலு நுண்ணிடையே தூயவதன்
வற்றக்கருசி மருவுகரப்பான்போகுஞ்
சுத்தக்கோவைக்காயைச் சொல்.

(இ-ள்) சிற்றிடைப்பெண்ணுளே நல்லகோவைக்காயால் அருசிநீங்காத வெப்பம்-சுரகபதோஷம்-இவைபோம்-வற்றலால் அரோசகமும் கரப்பானும் நீங்கும், (எ௬௪)

சுக்கான்காய்-இதன்வற்றல்-இவைகளின்குணம்.

மைக்குழலேநீகேளாய் வாதமறும்பித்தமென்பார்
சுக்கான்காய்வற்றலது சொல்லுலகிற்-கைக்கின்ற
வாயுவைநீக்கும் வருமருசிபோக்கிவிடு
நீயுமறிவாய் நிசம்,

(இ-ள்) கறுத்தகூந்தலாளே நீகேட்பாயாக சுக்கான்காயினால் வாததோஷம்நீங்கும் இதுபித்தம்என்பர் அதன்வற்றல் வாதத்தையும்அரோசகத்தையும்-நீக்கும், (எ௬௫)

மிளகுக்காயின்குணம்.

அளவையறுக்கார மடைந்திருக்கும்வாத
விளைதையெல்லாமறுக்கு மெய்யே-மிளகின்காய்
கண்டவர்க்குமின்பமாங் காரிகையேசிழ்மூலங்
கொண்டவர்க்குநன்மருந்தாங் கூறு

(இ-ள்) காரிகையே மிகுகார்ப்புச் சுவையையுடைய மிளகுக்காய் வர்தரோகங்களையும்-சீழ்மூலத்தையும்நீக்கும் அதைப்பார்க்கில்விருப்பமுண்டாம்-என்க, (எ௬௬)

தே, ஆற்றுத்தும்மட்டிக்காயின்குணம்-இதுவேகலிங்கம்,

கிடையெங்கேசோம்பலெங்கே கேடுறச்செய்வாதக்
கடையெங்கேயாற்றுக்கலிங்க-மடைதிறக்கி
னன்னடையடைச்சலெங்கேயாயிழையார்கூதகத்தி
னுண்ணடையுடைச்சலெங்கே யோது.

(இ-ள்) ஆற்றுத்தும்மட்டிக்காயால்-இற்பிடிப்பால்- நடையின்றிக்கிடத்தல் சோர்தல் மலாவிருதமுதலிய வாதரோசங்கள் கருப்பையைப்பற்றி அடைகின்றஆமம்-சத்தகுன்மக்கட்டி அகாலருது-இவைபோம், ()

சிகைக்காயின்குணம்-இதனைச்சீய்க்காய் என்பர்

மூக்கின்சிகிச்சைகட்கு முக்கியமாம்பேதியையுண்
டாக்குவமனத்தையு மழைப்பிக்குந்-தேய்க்கும்
வகைநெய்ச்சிக்கைப்போக்கு மாதரசேநாளுஞ்
சிகைக்காயதனைத் தெரி.

(இ-ள்) பெண்களுயகமே சிகைக்காயானது நாசியுட்புரிகின்ற ஆக்கிராண சிகிச்சைகளுக்கு முக்கியமருந்தாயிருக்கும் அன்றியும் பேதியையும் வாந்தியையும் உண்டாக்கும் பலவிதநெய்ச்சிக்குகளை நீக்கும்,

கொடியின்காய்வகை-முற்றியது.

---

மரத்தின்பழவகை,

விளாம்பழத்தின்குணம்,

எப்போதுமெய்க்கிதமா மீளையிருமல்கபமும்
வெப்பாகுந்தாகமுமபோ மெய்ப்பசியா-மிப்புவியி
லென்றாகிலுங்கனிமே லிச்சைவைத்துத்தில்லைவெண்ணித்
தின்றால்விளாங்கனியைத் தின்,

(இ-ள்) விளாம்பழத்தினால் சுவாசம் காசம் கபாதிக்கம் பித்ததாகம் இவைவிலகும் உடலுக்குச்சுகமும்-நல்லபசியும்-உண்டாம், (எ௬௬)

இலந்தைப்பழத்தின்குணம்.

பித்தமயக்கருசி பேராம்பெருவாந்தி
மொத்தனிலமெல்லா முடிந்திடுங்காண்-மெத்த
வுலர்ந்தவெறுவயிற்றி லுண்டா-லெரிவா
மிலந்தைநறுங்கனியை யெண்,

(இ-ள்) இலந்தைப்பழத்தால் பித்தமூர்ச்சை அரோசிகம்-திரிதோசம்-வாந்திவலிவாதம் இவைபோமஇதைப்பசியிலுண்டால்எரிவுண்டாம்

தே, வாழைப்பழத்தின்பொதுக்குணம்,

சுத்தவறுச்சுனஞ்செய் சோமநோயென்பதுவும்
பித்தநோயென்னப் பிறந்தவையு-முத்தி
வரம்பைக்கடந்த மதமூர்ச்சையும்போ
மரம்பைக்கனியுண் டறி,

(இ-ள்) வாழைப்பழத்தால்-உடம்பைவெளுக்கச்செய்கிற-சோமரோகம் - பித்தப்பிணிகள்-மதநோய் - மூர்ச்சை-ஆகிய-இவைபோம், ( )

எண்வகைவாழைப்பழத்தின்குணம்

செவ்வாழைவெள்வாழை சேர்ந்தரசதாளிமொந்
றெவ்வுமவைநோர்க் குலத்திற்-கவ்வடுக்கு
வாழைமலைவாழைபசு வாழைகருவாழைகளி
லூழிகருவாழைநன்று மோர்.

இதுவுமது.

ஒத்தூற்றவாழை யெட்டி லூற்றகனிகளெல்லாம்
வாதநோய்க்காகாது வையகத்தோர்-போதவுண்ண
வெண்ணமுண் டாயி னிதற்கியைந்தசத்துருவோ
டுண்ணவிடரின் றுறை.

(இ-ள்) செவ்வாழை-வெள்ளவாழை-ரசதாளி-மொந்தன்-அடுக்குவாழை-மலைவாழை-பச்சைவாழை-கருவாழைஎன்கிற-௮-வகைவாழைப்பழங்களுள் முதலிற்கூறிய-௭-ம்-நோயாளர்க்கு ஆகும்-மற்ற-௭-ல், கருவாழை நன்மையைத்தரும்-இவ்-௮-வகைப்பழங்களும் வாதரோகிகட்குகவாது ஆனால் அசனத்துடன்உண்ணில் குற்றமில்லை, (௮௰௩)

பேயன்வாழைப்பழத்தின்குணம்

பேயன்பழமருந்திற் பித்தரோகம்போகும்
வாயுவுண்டாகு மலங்கழியுந்-தீயே
தகத்திலதிரு [illegible] ாகுமணங்கே
ச [illegible] த்திலிதையறியச் [illegible] ன்று.

(இ-ள்) தேவமகளீரனையமாதே பேயன்பழத்தினால் பயித்தியமும் உட்சூடும்நீங்கும் வாதாதிக்கமும்-மிகுளிர்ச்சியும்-ஜாரியாக மலமிறங்கலும்-உண்டாகும். மொந்தன்வாழைப்பழத்தின்குணம். (௮௰௪)

மந்தமுடனேப்பசனத்தல் வாதவலிசீதந்
தொந்தமுறுதாகமிவை தோன்றுங்காண்-புந்திவலி
யோட்டுபித்தங்காமாலை யுள்வறட்சியுந்தொலையு
நாட்டுமொந்தன்பழத்தி னால்

(இ-ள்) மொந்தன்பழத்தினால்-அக்கினிமந்தம்-உடல்வலியுடன்பாரீப் இசிவு-சீதளம்-திரிதோஷதாகம்-இவையுண்டாம்-மனவுறுதியைவிலக்கிற பித்தம்-காமாலைமேதோதாதுவைப்பற்றியவறட்சிஇவைவிலக்கும்.

மலத்தைக்கடிதுதள்ளும் வன்னிகபத்தொந்தம்
பலத்ததசையத்திப் பழம்

(இ-ள்) உஷ்ணசீதம்வுள்ள தசையத்திப்பழம் ரத்தவிருத்தியையும் தேகபோஷணையையுந்தரும்-சுரவெப்பையும்-சீரணமலத்தையுநீக்கும்

விதையத்திப்பழத்தின்குணம்,

தினமுமலக்கட்டொழிக்குந் தேகவெப்பநீக்கும்
வனமுறுபித்தக்கோப மாற்று-மின்னுமயிலுந்
துன்னுவிழுதையுடைச் சொன்னமேனியகத்தோர்
பன்னுவிதையத்திப் பழம்,

(இ-ள்) துண்ணியகண்களுடைய பொன்னிறம்போல்பவளே விதையத்திப்பழமானது நித்தியமலபந்தத்தையும்-சரீரஉஷ்ணத்தையும்-பித்தவேகத்தையும்-போக்கும்-என்க, (அ௨௧)

புளியம்பழத்தின்குணம்-வி-ம்,

புத்தியுமந்தமாகும் பெருமியேயுடலழுதும்
பத்தியங்கவறுஞ்சந்தி பாதமாஞ்சுரங்கள்வீறுந்
சாத்தியும்பித்தந்திருந் தனுவெலாம்வாதமேறு
மத்தியந்தாதுபுட்டி வருந்திரைநரைபுளிக்கே

(இ-ள்) அபத்தியமானபுளியம்பழத்தினால் மந்தபுத்தி- தேகந்தாவித்தல் சந்நிபாதசுரங்கள்-அங்கசலனவாதம்-சுக்கிலதாதுமந்திமம்- திரைநரை-இவையுண்டாம், வாந்தியும் பித்தரோகமும நிவர்த்தியாம், ()

பழம்புளியின்குணம-வெண்பா,

திதிர்ப்பழம்புளியைச் சேர்க்கத்திரிதோஷம
வாதமொடுசூலைகப மாறுங்காண்-ஓதுநாதாந்த
சர்த்தியென்றதோஷமிவை சாந்தமாங்கண்ணோய்போம
பித்தமென்றபேரொழியும பேசு

(இ-ள்) குற்றமற்ற பழம்புளியால்-திரிதோஷம-வாதநோய்- சூலை சிலேஷ்மகோபம-ருட்சை-வாந்தி-விழிநோய்-பயித்தியம- இவைநீக்கும,

தே, சரக்கொன்றைப்புளியின்குணம,

வன்பனிமேக மலக்கட்டோடுகுடரின்
றுன்பமினமவெப்பு தோன்றாக -வின்பந்
தருசமாலப்பரி மளத்தனத்தாயிந்தக்
கிருதமாலப்புளியைக் கேள். ※ கிருதமாலம்-சரக்கொன்றை

(இ-ள்) பரிமளமணிந்ததனத்தாளே சரக்கொன்றைப்புளியால்- வாதப்பிரமேகம்-மலபந்தம்-குடல்வலி-அக்குடலைப்பற்றியவழுக்கு- உஷ்ணம்-இவைபோம்-என்க, (௮௨௪)

பனம்பழத்தின்குணம்

நாளும்பனம்பழத்தை நல்லமுதாயுண்ணுங்கா
லாளுக்கரப்பா னழுகிரந்தி-நீளுமலஞ்
சிக்கும்பித்தத்தில்வளி சேருதலேநோய்க்கணமு
திக்கும்பலர்க்குமெனச் செப்பு

(இ-ள்) தினமும்பனம்பழத்தையே உணவாகஉண்டால் கரப்பான் அழுகியசிரங்கு-மலபந்தம்-பித்தவாயுவாற் பிறந்தநோயினங்கள் இவையுண்டாம் இது-யாழ்பாணதேசத்து ஊணும்-இதனைப்பனாட்டு-என்பர், ()

தேற்றான்பழத்தின்குணம்,

தேற்றான்கனிதனுக்குச் சேயிழையேவன்காசந்
தேற்றுதொழியுஞ் சுவாசமும்போஞ்-சாற்றின்மி
வாந்திபெருகு மலம்போமுத்தோஷத்தைச்
சேர்ந்தபிணிகளும்போஞ் செப்பு,

(இ-ள்) ஆபரணமணிந்த பெண்ணே தேற்றான்பழத்தால்வாதஇருமல் இளைப்பு-மலக்கட்டு-திரிதோஷரோகங்கள் ஆகிய-இவைகள்போம், வாந்தியுண்டாம்-என்க, (௮௨௬)

நாவற்பழத்தின்குணம்-இதனை-நாகப்பழம்-என்பர்

மாந்தம்விளையும் வலிகரப்பானுண்டாகுஞ்
சேர்ந்ததொருநீரிழிவுஞ் சேருமோ-நாந்தலொடு
வாய்வுங்கடுப்பும் வருங்கொதிப்புந்தாகமும்போந்
தூயநாவற்பழத்தாற் சொல்

(இ-ள்) நாவற்பழத்தினால் அக்கினிமந்தம் சரீரநோவு-கடுவன்-சீதவாதம்-கடுத்தல்இவையுண்டாம்-அதிநீரும்-வெப்பமும்-தாகமும்-நீங்கும்,

வெள்ளைநாவற்பழத்தின்குணம்

உதிரமொடுவிந்துவையு முண்டாக்குமுள்ளே
யதிரழலைதன்னை யகற்றும்-பதியதனிற்
கண்ணுவலியார்க்குங் கதிக்கநோக்குந்திருவே
வெண்ணாவலின்கனியை விள்,

(இ-ள்) மிகுதகபோர்வையையுடைய விலக்குமிபோல்பவளே வெள்ளைநாவற்பழம் இரத்ததாதுவையும் சுக்கிலதாதுவையும்-உண்டாக்கும் உள்வெப்பத்தை-நீக்கும் என்க, (௮௨௮)

சம்புநாவற்பழத்தின்குணம்.

அனிலவழலு மரும்பித்தவெப்புந்
தனியலவுதாகமுந் தயங்குந்-தனிவேட
னம்புநாணுங்கண் ணணியிழையேகானிலுறுஞ்
சம்புநாவற்கனிக்குத் தான்.

(இ-ள்) காட்டிலுள்ளசம்புநாவற்பழத்தால் வாதவுஷ்ணம் பித்தவுஷ்ணம் ஒருதோஷத்தாற்பிறந்த தாகரோகம் இவைநீங்கும், (அஉகூ)

பாலைப்பழத்தின்குணம்-இதுவே-தீம்பாலை,

வாதகரப்பனதும் வல்லசிலேஷ்மமுமபோம
வேதுகிரந்தியுஞ்சா மென்பசிய-மோதுமதன்
கோலைப்பழித்தவிழிக் கோதாயினிமையுள்ள
பாலைப்பழத்தானீ பார்,

(இ-ள்) தீம்பாலைப்பழத்தால் கருங்கரப்பன்-சிலேஷ்மதோஷம்-வெப்பத்தைச்செய்கின்ற-கிரந்தி-இவைபோம்-மிகுபசியுண்டாம், (அகூ0)

கொட்டைமுந்திரிப்பழத்தின்குணம்

தாகந்தணியுஞ் சகிக்காக்கரப்பனு
டாகத்திற்சேர்ந்த வழலுமறும்-வேகின்ற
துட்டவன்சிரங்கொடு புண்டோற்றுங்-கரகரப்பாங்
கொட்டைமுந்திரிப்பழத்தாற் கூறு.

(இ-ள்) கொட்டைமுந்திரிப்பழத்தால்-தாகமும்- சரீரவெப்பமும்நீங்கும் கரப்பன்-துஷ்டவிரணம்-கிரந்திநெஞ்சிற்கரகரப்புஇவையுண்டாம்

தமரத்தம்பழத்தின்குணம்-தந்தசடம்.

வாதபித்தம்வாதகபம் வாந்திகுராற்கம்மல்கண்ணோய்
தாதுநஷ்டம்பித்தந் தலைநோயோ-டோதசித்தத்
துற்றபிரமையும்போ மொண்டொடியேமாபுளிப்பா
னற்றமரத்தம்பழத்தை நாடு

(இ-ள்) புளிப்புள்ள தமரத்தம்பழத்தால் வாதபித்தகொந்தம் வாதசிலேஷ்மகொந்தம் வாந்திகுராற்கமமல் நேத்திரரோகம சுக்கிலநஷ்டம பித்தகோபம் சிரஸ்தாபரோகம சித்தப்பிரமை இவை நீங்கும், (அகூஉ)

கொய்யாப்பழத்தின்குணம,

திரிதோஷஞ்சென்னித் திருப்பமரோசி
பொருமாந்தமவாந்தி பொருநல்கரப்பானும்

மெய்ப்பப்பரவுமல மெத்தவிடும்போகமுண்டாங்
கொய்யாப்பழத்தினாற் கூறு

(இ-ள்) கொய்யாப்பழத்தினால் முத்தோஷம-தலைமயக்கம-அரோசக மந்தமவாந்திவயிறுப்பல்கரப்பன்வீரியம இவையுண்டாமமலங்கழியும

## எலுமிச்சம்பழத்தின்குணம

தாகங்குநகநோய் தாழாச்சிலிபதநோய்
வேகங்களுன்மாதம வீறுபித்தம-மார்கண்ணோய்
கன்னநோய்வாந்தியுமபோங் கட்டுவாதித்தொழிலின்
மன்னெலுமிச்சங்கனியை வாழ்த்து

(இ-ள்) மலபந்தமுள்ளஎலுமிச்சம்பழத்தால்-தாசம-நகச்சுற்றுயானைக் கால்-உன்மாதம்-பித்தம-கண்ணோய்- காதுவலி-வாந்தி இவைநீங்கும,

## நாரத்தம்பழத்தின்குணம

பித்தவழிக்குன்றுமறும போராதீபனமாம்
வித்தானதாதுவுமவிளைத்திடுங்காண் -முத்திணைத்த
வாரணத்தைத்தாங்குமுலை யாயிழையேயெக்காலு
நாரத்தையின்கனியினால்

(இ-ள்) முக்தாரத்தைத்தாங்குந் தனங்களையுடையாளே நாரத்தம்பழத்தினால் பித்தகுணம-ரோகமநீங்கும-நீங்காதஜடாக்கினியும-சுக்கிலவிருத்தியும உண்டாகும-என்க, (அ௲ரு)

## சாதிநாரத்தை-கொளிஞ்சிநாரத்தைப்பழங்களின்குணம,

சாதிநாரத்தம்பழந்தான் ருசுத்தனையகற்று
மோதருசிவாய்க்கசப்பை-யோட்டுங்காண்-வேதா
லளிஞ்சமேகத்தேகர்க் காமவறட்சிபோக்குங்
கொளுஞ்சிநாரத்தம்பழந்தான் கூறு

(இ-ள்) சாதிநாரத்தம்பழம-தாகம-அரோசகம-வாய்கசப்பு- இவைகளைநீக்கும கொளுஞ்சிநாரத்தம்பழம- பிரமேகதேகிகளது - நாவறட்சியையுமிலக்கும-என்க, (அ௲௬).

## சீத்தாப்பழத்தின்குணம,

பித்தகபமெத்தப் பெருகுமந்தமேலோடுஞ்
சித்தமதிற்றயக்கஞ் சேருங்கா-ணத்துலவும

பூக்காணத்தாரும் பொலன்கொடியேபூவுலகிற்
சித்தாக்கனியாற் றெளி.

(இ-ள்) சீத்தாப்பழத்தால் பித்தசிலேஷ்மதொந்தமும் அக்கினிமாந்தமும் சித்தப்பிரமையும் உண்டாகும்-என்க, (அ௰எ)

தே, மாதுளம்பழத்தின்குணம்-இதுவே-தாடிமக்கனி.

சங்கையறச்சொற்றவிர்க்குஞ் சந்நியாசஞ்சர்த்தி
யங்கையதிதாகமமைச் சாருமோ-கங்கை
விருந்தாடிமக்கட் கிரத்தனோச்செய்நோய்போ
மிருந்தாடிமக்கனிகட் கெண்,

இதுவுமது,

வாய்நீருறல்கசப்பு வாந்திவிக்கன்மந்தமிகக்
காய்ச்செப்பநெஞ்செரிவு காதடைப்பு-வோயா
மயக்கமுந்தீர்ந்துவிடு மாதுளம்பழத்தாற்
றயக்கமனத்தேமொழியே சாற்று

இதுவுமது விருத்தம்.

வெடித்துவீழ்பழத்தைவாங்கி மெல்லியசீலைகட்டிக்
கடுக்கெனப்பிழிந்துகொண்டு கண்டத்திணங்கக்கூட்டிக்
குடித்திடவெப்புமாறுங் குளிர்ந்திடுமங்கமெல்லாம்
வடித்தகன்மொழியினாளே மாதுளம்பழத்தின்சாறே,

(இ-ள்) பெருமையாகிய மாதுளங்கனிகளுக்கு-சந்தேகமநீங்க-நினைப்பையும்-பேச்சையும்-ஒழிக்கின்றசந்நியாசரோகம்-வாந்திகம்-மிகுதாகம்-பித்தநோய் இவை அங்குசேரமாட்டாது- புத்ரரம்மித்தம்-சங்காஸ்நானஞ்செய்து யாசிக்கச்செய்யும் மலட்டுவியாதிபோகும்-மேலும்-அப்பழத்தைத்தின்பதனால்-வாய்நீர்ச்சுரப்பும்-வாந்தியும்-விக்கலும்-மாந்தமும் அதிசாரமும்-நெஞ்செரிவும்-காதடைப்பும்-நீங்காதமயக்கமும்-ஒழியும்-வெடித்த அந்தப்பழத்தைச்-சீக்கிரமாகப்பிழிந்து மெல்லியசீலையால் வடிக்கட்டி தகுந்தகற்கண்டுசேர்த்து ரசத்தைச்சாப்பிட உட்டிணமொழியும் சரீரமுழுதுங் குளிர்ச்சியையடையும், (அ௰அ)

கொமட்டிமாதுளம்பழத்தின்குணம்-வெண்பா,

அருசிகெடும்பித்த மகலுமையந்தீரு
முரிசையுருங்கபமு மோடுஞ் சரசமுறக்
காதளவும்பாயும்விழிக் காரிகையேநற்கொமட்டி
மாதுளையின்பொற்கனியை வாழ்த்து

208



(இ-ள்) காதளவோடும் விழிகளையுடையபெண்ணே கொமட்டிமாதுளம்பழத்தினால் அரோசகம்பித்தகோபமசிலேஷ்மதோஷம்சுவாசரோகம இவைநீக்குமஉரிசையுண்டாம (அகூக)

பேரீச்சமபழத்தின்குணமஇதுவேசற்சூரம,

பேரீச்தெனுங்கனிக்குப் பித்தமதமூர்ச்சைசுர
நீரார்ந்தவைய நெடுங்காகம.பேரா
விரத்தபித்தநீரிழி விலேப்புமரோசி
யுரத்தமலக்கட்டுமறு மோர்

(இ-ள்) பேரீச்சமபழத்தால் நீரைச்சுரப்பிக்கின்ற பித்தரோகம-மதரோகம மூர்ச்சைசுரம சிலேஷ்மநீர்க்கோவைதாகமரத்தபித்தம்நீரிழிவு வாயிலேப்பு அருசி மலபந்தமஇவைநீக்கும (அகூஉ)

மரத்தின்பழவகை-முற்றியது

செடியின்பழவகை

சிற்றீச்சம பழத்தின்குணம்

சிற்றீசதெனுங்கனிக்கு சீதமுழலேயாசி
வற்றசிரங்குகளு முண்டாகுஞ்-சுற்றிச்
செறியுமபலபிணியுந்தேமொழியேநாளு
மறிவுமழுங்கு மறி

(இ-ள்) தேன்போல்வசனிப்பவளே சிற்றீச்சமபழத்திற்கு சீதபேதி உழலேநோய் விரணமஇவைமுதலிய பற்பலரோகங்களும புத்திக்குக்குறைவும உண்டாகும (அகூங)

பூந்தாழம்பழத்தின்குண- இதுவேஅன்னாசிபழம

மேகவெட்டைவாந்திபித்த மிருவாவேவனியிடுந்
தாகமுமட்டாகுந் தலைவலிபோம-டாசமுறு
பூந்தாழையின்பழத்தைப்பூரிப்புடன்புசிக்க
வாந்தாழ்வுமில்லை யறி

(இ-ள்) பூந்தாழம்பழத்தினால்பிரமேகவெள்ளைவாந்திபித்தநோய்தாகமசிரஸ்தாபரோகமஇவைபோகும-அழகுண்டாகும (அகூச)

கத்திரிப்பழத்தின் குணம

பித்தங்கரப்பான்பெருங்கிரந்திகுஷ்டமிவை
மெத்தவுமாமெய்பிலழல் வீறுங்காண்-சத்தான
தாதுநட்டமாங்கபக்காற்சார்ந்தசுவாசமுமபோ
மோதுகத்திரிப்பழத்தாலுன்

(இ-ள்) கத்திரிப்பழத்தினால்பித்தரோகமசரப்பன்பெருவிரணம்குஷ்டம் தேகவெப்பமசுக்கிலக்குறைவு ஆகியஇவைகள் உண்டாகுமகோழையம்வாதத்தோஷமஇளைப்பும நீக்குமஎன்க (அகூரு)

கண்டங்கத்திரிப்பழத்தின் குணம்.

காசஞ்சுவாசங் கயஞ்சீதம்பல்லரணை
வீசுசொறிதினவை விட்டோட்டும்-பேசுடலை
யுத்தரிக்குந்தீபனத்தை யுண்டாக்கிடுங்கண்டங்
கத்திரிப்பழக்குணத்தைக் காண்,

(இ-ள்) கண்டங்கத்திரிப்பழம் இருமல் இரைப்பு க்ஷயம் கபம் பல்லரணை புடை நமை இவைகளை நீக்கும் பலத்தையும் பசியையும் தரும்,

களாப்பழத்தின் குணம்,

நல்லபசியிலுண்டா னண்ணுமேசீதரத்தம்
வல்லமந்தத்திலுண்டால் மாபசியா-மெல்லப்
புரையார்கள்நோய்போம் போற்றுசிரநீர்போந்
தரையார்களாப்பழத்தைத் தான்,

(இ-ள்) நிலக்களாப்பழத்தை மிகுபசியில்தின்றால் சீதரத்தமும் அதிமந்தத்தில்தின்றால் நற்பசியுமுண்டாம், தொண்டைவலியும் தலைக்கனப்பும் நீங்கும், (அ௬எ)

காரைப்பழத்தின் குணம்,

சீதக்கடுப்புஞ் செறியிரத்தக்கடுப்பு
மோதுமதிசாரமும்போ முண்மையே-மோதுகட
னீரைப்பருகுமுகி னேரளகமின்கொடியே
காரைப்பழத்திற்குக் காண்,

(இ-ள்) கடல்நீரையுண்டு சூல்முதிர்ந்தமேகம்போலக் கறுத்த கூந்தலாளே காரைப்பழத்தால் சீதரத்தக்கடுப்பும் அதிசாரமும்-நீங்கும், ()

மரக்காரைப் பழத்தின்குணம்,

சுரமும்பொருமலும்போந் தொன்மயக்குமில்லு
தாலூகதப்போமறிவுந் தங்கும்-பருகு
மரக்காரைமெல்லிதழ்வா யஞ்சுகமேநாளு
மரக்காரையின்கனியை வாழ்த்து,

(இ-ள்) சிவப்புநிறம்பொருந்திய மெல்லிதழையும் அழகியவாயையுமுடையாளே மரக்காரைப்பழத்தினால் சுரம் வயிற்றுப்பிசம் மூர்ச்சை மகோதரம் இவைகள்நீங்கும் புத்திக்குத்தெளிவு உண்டாம் என்க, ()

சூரைப் பழத்தின்குணம்,

மந்தமதிகரிக்கும் வன்சீதளஞ்சேரு
மூந்துகுடல்வலியு முண்டாங்காண்-முந்துகவில்

காரைப்பழத்திற் கதித்தவொருபேதமுமாங்
கூரைப்பழத்திற்குச் சொல்,

(இ-ள்) முற்கூறியகாரைப்பழத்தில் ஒருபிரிவாகிய கூரைப்பழத்திற்கு அதிமந்தமும் கபதோஷமுங் குடல்நோயும உண்டாம என்க, ( )

முளகாய்ப்பழத்தின் குணம்,

மூலவிரத்தமுமீளகடுப்பு முண்டாகும்
காலமதிற்றாதுவுந் தழைக்குமே-ஆலமெனு
மந்தமரோசிகுன்மம் வாய்வும்பொருமலும்போ
முந்துமுளகாய்ப்பழத்தா லோர்.

(இ-ள்) முளகாய்ப்பழத்தினால், ரத்தமூலமுளையும ஆசனக்கடுப்பும் வீரியவிருத்தியும்உண்டாம். விஷாலசகம் அருசி வயிற்றுநோய்விகுண வாதம் வயிற்றுப்பிசம் இவைநீங்கும், (அசக)

செடியின் பழவகை முற்றியது,

(*)

## கொடியின்பழவகை.

சிறியகொடி முந்திரிப்பழத்தின்குணம்-இதுவேதிராட்சி,

வெப்பருசிதாகம் விரணஞ்சிவாசகய
மெய்ப்புடையபித்த மிரத்தபித்தஞ் செப்பு
மடிமந்தமேக மதமும்போஞ்சின்னக்
கொடிமுந்திரிக்கனிக்குக் கூறு,

(இ-ள்) சிறியகொடிமுந்திரிப்பழத்திற்கு, சுரம்-அரோசகம்-தாகம் புண்-இரைப்பு-க்ஷிணபித்தம்-ரத்தபித்தம்-விஷாலசகரோகம்- பிரமேகம் மதரோகம் ஆகிய இவைகள்போகும் என்க. (அசஉ)

பெருங்கொடி முந்திரிப்பழத்தின்குணம்,

சோமநோய்தாவரத்தாற் றோன்றுவிஷமுன்மாத
நாமமூறுமூத்திரநோய் நாடுமோ-சாமசுரம்
விண்ணெழியுமெய்குளிரும் வீறுகொடிமுந்திரிக்குக்
கண்ணொளியுந்தாதுவுமாங் காண்.

(இ-ள்) பெருங்கொடிமுந்திரிப்பழத்தால் சோமநோய்-தாவரவிஷம் உன்மாதம்-மூத்திரதோஷம்-சாம்சுரம்-ஆகிய இவைநீங்கும்-உடல் குளிர்ச்சியும் கண்ணொலக்கமும்-சுக்கிலவிருத்தியும்-ஆகும்-என்க, (அசங)

தாதுளம் பழத்தின் குணம்,

கபக்கட்டுகோழை கத்திரிதோஷங்
குபுக்கென்றெழும்பு நீர்க்கோவை-கபுக்கென்

சலாக்கொட்டையிட்டசுகந் தானுங்கருக்கும்
பலாக்கொட்டையிட்ட பலன்.

(இ-ள்) கருக்கியபலாக்கொட்டையினால் அள்ளுமாந்தம்- குடலின்கப த்தால் மலச்சிக்கல் மட்குழியர்க்குண்டாவதுபோல் நெஞ்சிற்புளியேப்பம் கற்போல்வயிறுகெட்டிப்படல் அதில் ஓட்டைசாணளவு இருப்புச்சலாக்கை சொருகினதுபோலு பத்திரமிவையுண்டாம், (அ௯அ)

புளியங்கொட்டையின் குணம்,

சுக்கிலமேகநற் றன்னுமதிசாரமொடு
மிக்கிரணநாக்கடுப்பு வெட்டையறுந்-தொக்கொடுவ
ருற்றபுளிவித்திற் குறுகுணத்தைமேல்மேலு
நற்றாயுண் மாதே நவில்,

(இ-ள்) மாதேதோலில் துவர்ப்புள்ள புளியங்கொட்டைக்குச் சுக்கில மேகம பித்தாதிசாரம் அதிவிரணம் மூத்திரக்கடுப்பு வெள்ளை இவை நீங்கும் என்க, (அ௯௬)

தேற்றாங்கொட்டையின் குணம்.

பிரமிவெள்ளைவெப்புபசி போராக்கடுப்போ
டெரிகிரிச்சரம்புண்ணு மின்றாம்-வருமந்தந்
தேற்றாங்கொட்டைக்கஃதோ திட்டிமருந்தாகுங்
கூற்றாங்கண்மாதேநீ கொள்.

(இ-ள்) இயமனைப்போன்ற கண்களுடையபெண்ணே தேற்றாங்கொட்டைக்கு பிரமேகம் வெட்டை உட்சூடு ஜடாக்கினி - வயிற்றுக்கடுப்பு எரிகின்ற மூத்திரக்கிரிச்சம் இரணம் இவைநீங்கும் மந்தம்-உண்டாம் அதுகண்ணுக்குமருந்தாம், (அ௯௭)

எட்டிக்கொட்டையின் குணம்,

கைக்கரப்புசுரி கடிவிஷங்குஷ்டவலி
மெய்க்கவருந்தாதுநஷ்ட மெண்பவைபோ-மைக்கண்ணாய்
கட்டிகரப்பான் கனமயக்குபித்தபூமி
வெட்டிமரக்கொட்டையினா லே,

(இ-ள்) மையணிந்தக்கண்களுடையவளே எட்டிக்கொட்டையால் கருமேகம் சந்நி விஷக்கடி குஷ்டம் [illegible]வலி வீரியநஷ்டம் பிடகம் கரப்பன் மூர்ச்சை பயித்தியம் இவைபோம், (அ௯௮)

புரசங்கொட்டையின் குணம்,

வயிற்றுக்கிருமிகணம் வாதமொடுசீத
மியக்கபடர்தாமரையு நீங்கும்-வயிற்று
வலிமிகாச்சல்வன்கரப்பான் மாறும்பித்துண்டா
மலிபுரசங்கொட்டை தனை வாழ்ந்து,

(இ-ள்) புரசங்கொட்டையினால் மலப்புழுக்குலம் வாதவலி-சிதம் படர்தாமரை குன்மம்வயிற்றிரைச்சல் கரப்பான் இவைநீக்கும்பித்தமாம்,

புன்னைக்கொட்டையின்குணம்.

கன்னவிரணங் கடுஞ்சந்நிபாதமுட
னின்னலுறுவாதை யேகுங்காண்-புன்னைக்கொட்
டைக்கமட்டேயவென்னி லார்குதிகாவாய்வு
மெய்க்கமயிட்டாழ்வாய் வுமில்,

(இ-ள்) புன்னைக்கொட்டைக்கு செவிப்புண் சந்நி-தநுர்வாதம்-குதக வாயு உடம்பில்கீளைஏற்றி அதில்அழுந்திய சீதளவாயு இவைநீங்கும்,

இலுப்பைஅழிஞ்சில்-இவ்வித்துக்களின்குணம்,

இலுப்பைவிதையந்தரவாய் விற்கும்விஷத்திற்கு
மலுப்பையுண்டாக்கி யகற்று-நிலத்திற்
றெழுஞ்சகமோகக் கரப்பிற்சொல்லஞ்சனமா
மழிஞ்சில்விதையென் றறி,

(இ-ள்) இலுப்பைக்கொட்டை அந்தரவாயுவையும் விஷத்தையும்நீக்கும் அழிஞ்சில்விதை உலகவசியத்திற்கும் மறைப்புமைக்கும் ஆகும்,

புங்கு-காட்டுப்புங்கு-இவ்வித்துக்களின்குணம்,

புங்கின்விதைகாறகிரந்தி புண்கரப்பான்காதெழுச்சி
யங்கசந்நிகண்ணோய்க்கு மாம்பேதி யுங்கட்டுங்
காட்டுப்புங்கின்விதைக்கு கண்டதேமற்சொறிமேய்ப்
பூட்டுப்பங்கின்வாய்வும் போம்,

(இ-ள்) புங்கக்கொட்டை-கழல்விரணம்-கிரந்திகரப்பான்-கர்ணபரிஸ் போடகம் சந்நிகண்ணோய் இவைக்குகவும் மலத்தைகட்டும் காட்டுப்புங்கம் விதைக்குதேமலும் புடையும் கீல்களைப்பற்றிய வாய்வும்போம்,

மருந்தோன்றிவேம்பு-இவ்வித்துக்களின்குணம்,

மருதோன்றியின்விதைக்கு மாயில்லிகுளியம்
விருந்தாண்டபேய்பூதம் வீயுங்-கருதுதான்றி
வேம்பின்விதைக்கு விஷஞ்சந்நிபாதமுதற்
றேம்பிவிழுந்தோடுமெனத் தேர்,

(இ-ள்) மருந்தோன்றிவித்துக்கு பில்லிசூனியமும் பேய்பூதமும்கெ, டும் வெப்பம்பருப்புக்கு தாவரசங்கமவிஷங்களும் சந்நியும் நீங்கும், ()

கடப்பம்வித்தின்குணம்,

கடப்பம்விதைக்குக் கடிவிஷமுமுண்டோ
தொடுப்புமண்டைநீருந் தொலையு-மிடக்கான
வாதவகையொழியு மாந்தங்களேகிவிடுங்
கீதமொழிமாதே கேள்,

(இ-ள்) கீதம்போன்ற மொழியையுடையபெண்ணே கடப்பம்வித்துக்கு விஷக்கடி சிரஸ்தாபரோகம் வாதரோகங்கள் அக்கினிமாந்தபேதங்கள் ஆகியஇவைகள்நீங்கும்-என்க, (அ௫ள)

மகிழம்வித்தின்குணம்,

தாதுவைநன்மெய்யழகைச் சத்தியையுண்டாக்கிவிடுந்
சீதளமென்பார்கவிக்குஞ் செய் மருந்தாம்-வாதை
மலத்தைகழிக்கோஷத்தை வல்விஷத்தைவெப்பை
விலக்குமகிழம் விதை,

(இ-ள்) கண்கவிக்கத்துக்கான மகிழம்வித்து மலாவிருத்தவாதம் நேத்திரதோஷம் சர்ப்பவிஷம் சுரம் இவைகளைநீக்கும் சுக்கிலத்தையும் தேகவனப்பையும் பலத்தையும் விருத்திசெய்யும் இதுசீதளமென்பர், ()

தில்லம்வித்தின்குணம்,

தில்லம்விதைக்குச் சிறுவிஷம் போம்பின்விஷமுஞ்
செல்வஞ்செருக்குந் திமிர்வாய்வும்-வெல்லங்கொள்
வாரைவருத்துகின்ற வன்கபமுங்குஷ்டமுமிவ்
வூனைவிடுத்தேகுமுனா,

(இ-ள்) தில்லம்விதைக்கு சீடவிஷம் சர்ப்பவிஷம் திமிர்வாதம் இனிப்புச்சுவையாற்பிறந்த கபரோகம் குஷ்டநோய் இவ்வீங்கும், (அ௫௬)

ஆளிவிதயின்குணம்,

வீக்கமகிவாங்கி மேனிவலிவாய்வுந்
தாக்குசரம்பின்குக்க ரெல்வழலை-யோக்காள
நீளியாநுளிவிதை வாதமும்போகு
மாளிவிதைகன்று லறி,

(இ-ள்) ஆளிவிதையினால் சோபைமிகுவமனம் உடற்கடுப்பு வாதவலி நரம்புச்சூலை அஸ்கிச்சூடு ஐக்காளம் அருசிபேசவாய இவைநீங்கும்.

உருத்திராக்ஷத்தின்குணம்,

நீறும்பிதாகத்தை நீங்காமுத்தோஷத்தை
யாறும்விக்கல்பித்தத்தை யாற்றங்கா-ணூறு
மிருத்திராமற்கபத்தை விட்டுமேநல்ல
வுருத்திராக்கத்தின்வலி யுள்,

(இ-ள்) உருத்திராக்ஷமானது அதிதாகம்-திரிதோஷம்-விக்கல்ரோகம் பித்தகோபம் சிலேஷ்மாதிக்கம்-இவைகளைப்போக்கும்-என்க, ()

முருங்கைவித்து இலை-ஈர்க்குகளின்குணம்,

நீரானவிந்துவுமே நீண்டபிசிறுய்த்தடிக்கும்
சீராகமேனி செழிக்குங்காண்-பாராய
முருங்கையுறுவிதையான் மெய்த்தவிலையீர்க்கோ
வொருங்கையுறநீரிறக்கு முன்,

(இ-ள்) முருங்கைவித்தினால் சலரூபமாகக் கரைந்தவிந்துவும்-பிசினி போலாகும் சரீரம்பலக்கும்இதன் இலையும் ஈர்க்கும் நீரைப்பெருக்கும்,

மாதுளைவித்தின்குணம்,

சுக்கிலத்தைக்கட்டுமெந்தச் சுக்கிலதோஷம்போக்கு
மக்கணமேகக்கடுப்பை யாற்றுங்கா-ணெக்காலுஞ்
சேர்துளத்தெண்ணுதமலர்க் கொம்பனையாய்தித்திக்கு
மாதுளத்தின்பீச வலி, ※ பீசம்-வித்து,

(இ-ள்) புட்பகொம்பனையபெண்ணே இனிப்புள்ள மாதுளம்வித்தானது சுக்கிலத்தை இறங்குவதுந்தவிர அதிலுள்ள குற்றத்தையும் பிரமேகக்கடுக்கையும் நீக்கும், (அகஉ)

மூந்திரிப்பருப்பின்குணம்,

மெத்தவினிப்பாகு மென்கொடியே நின்றக்காற்
பித்தவனிலம் பிரக்குங்காண்-சத்தியமா
யிந்திரியப்புஷ்டி யிளைக்காதுமாந்தமுண்டா
மூந்திரியினற்பருப்பான் முன்,

(இ-ள்) மிகுந்தஉரிசியையுள்ள மூந்திரிப்பருப்பைத்தின்னில், பித்தவாதகொந்தம் தாதுவிருத்தி அக்கினிமாந்தம் ஆகியஇவையுண்டாம்,

வாதுமைப்பருப்பின்குணம்-இதுவே அடப்பம்விதை,

அடப்பம்விதையாம் வாதுமைப்பருப்பினாலே
மேற்பெரியகட்டழல மாறுஞ்-சடக்கெனவே

புண்மேற்கொழுப்பகலும் போகமுமுண்டாமென்றே
மண்மேற்றுணிபாய் வழுத்து,

(இ-ள்) அடப்பவித்தைஎன்கிற வாதுமைப்பருப்பினால் விழிப்படலமும் விரணக்கொழுமையும்நீங்கும் கலவியில்விருப்பமுண்டாம், ()

சாரப்பருப்பு-மிசரிப்பருப்பு-இவைகளின்குணம்,

சாரப்பருப்பாற் றளிமிசரியின்பருப்பா
னீரப்பருப்பு நீர்ச்சிதங்-கிரத்
தொலையுமிரதந்தங்கி துய்த்தார்க்குநன்றாங்
கலையும்விந்துவிற்கூக்கங் காண் ※இரதம்ரசம்※தங்கிகந்திகந்தகம்,

(இ-ள்) சாரப்பருப்பு மிசரிப்பருப்பு இதுகளால் சிறுநீரைப்பற்றியகடுஞ்சுருக்கும் மூத்திரக்கடுப்பும் சலப்பிரமேகமும்நீங்கும் சித்தசுக்கிலம் இறுக்கும் ரசகந்தங்களைத்தின்றவர்க்கும் நலனைத்தரும்-என்க, ()

மரத்தின்வகை-முற்றியது.

## செடியின்வித்துவகை,

துத்திவித்தின்குணம்,

கையிற்காலிற்படர்ந்த காமேகம்போயொழியு
மெய்யிலுறுகுஷ்டம்போம் வெப்பகலுந்-துய்யதிரை
யத்திதனையொத்தவிழி யாரணங்கேசுரட்டிலுறுந்
துத்திவிதையைச் சுவை,

(இ-ள்) கடல்போன்றவிழியையொத்த வாரணங்கேதுத்திவிதையை நீதின்னக்கடவைதின்றால் கைகால்களுண்டாகிய கரும்மேகமும் குஷ்டரோகமும் உட்சூடும் நீங்கும்என்க, (அகூஎ)

தகரைவித்தின்குணம்,

வண்டுகடியுடனே வன்கடுவனும்பலவாம்
பண்டுநமைபுடையும் பண்டிதர்கள்-கண்டிரையாப்
பித்தவனலும் பெருந்ததகரைவிதைச்
சித்தரையுணில்லா திசை,

(இ-ள்) தகரைவிதைக்கு வண்டுகடி-அரைக்கடுவன்-நீங்காததினவு பலவிதபுடை-பிடகருரைத்தற்கரிய பித்தவேகம் இவைபோம், (அகூஅ)

நீர்முள்ளிவித்தின்குணம்,

வித்துவுமாந்தாதுவுமா மேகரோகந்தொலையு
முந்துமதிசார மொழியுங்காண்-வந்துடலி

சேதியநீர்வீக்க மிறங்குமிளைப்புமறுங்
கூறியநீர்முள்ளி விதைக்கு.

(இ-ள்) நீர்முள்ளிவித்துக்கு பிரமேகம் அதிசாரம்-கபசோபை-ஆயாசம்-இவைநீங்கும்-சுக்கிலமும் சப்ததாதுக்களும-விருத்தியாம். (அகூகூ)

ஊமத்தம்வித்தின் குணம்,

சுரம்போம்விஷம்போந் தொலையாதசங்கி
யுரம்போமதிசார மோடு-நிரம்பவே
மாமத்தமுண்டாம் வளரிளங்கொங்கைத்திருவே
யூமத்தையின்விதையை யுண்,

(இ-ள்) கொங்கையையுடைய லிலக்குமிபோல்பவளே ஊமத்தைவிதையினால்-சுரம்-தாவரசங்கமவிஷம-சங்கியாதநோஷம்-அதிசாரம் ஆகிய இவைபோம், வெறியுண்டாம் என்க, (அளஎ)

வெங்காயம் துளசி கரிசாலை முள்ளங்கி உருத்திரச்சடை,

இவ்வித்துக்களின் குணம்,

வெங்காயவித்துகுன்மம் வீட்டுந்துளசிவித்துக்
கெங்கெமயக்கரிப்பா னின்*பழமாற்-றநகாலே
காமாலைமுள்ளங்கிக் காழால்வித்தாஞ்சடைவுக்
தோமாலையுள்ளடக்குஞ்சொல். *பழம்காய்விதை,

(இ-ள்) வெங்காயவிதை, குன்மத்தையும் துளசிவிதை, சீதத்தையும் கரிசாலவிதை, காமாலையையும்-முள்ளங்கிவிதை விந்துநஷ்டத்தையும் உருத்திரச்சடைவிதை மயங்குகின்ற கபத்தையும்போக்கும் என்க. ()

செடியின் வித்துவகை முற்றியது.

———(*)———

# கொடியின் வித்துவகை.

பூசினிவித்தின்குணம்,

பித்தம்போமேகம்போம் போரவனலும்போம்
மெத்தவுடலக்குளிரு மேனியிடு-மித்தலத்து
ளாசினியொன்றில்லா வலாந்தவனசத்தனமே
பூசினிவித்தைத்தின்னும் போது,

(இ-ள்) அலர்ந்தபுட்பத்திற்சஞ்சரிக்காநின்ற அன்னம்போல்பவளே பூசினிவித்தினால், பயித்தியமும் பிரமேகமும் சரீர அழலையும் நீங்கும் தேகத்திற்குளிர்ச்சியும் புஷ்டியும்உண்டாம் என்க, (அளஉ)

வெள்ளரிவித்தின் குணம்,

கடுப்பொடுநீர்க்கட்டுவெறுங் கல்லடைப்புதாரை
வெடிப்புசதையடைப்பு மேக-மெடுத்துரைக்கா
வுள்ளரிவியென்னு முறைகிரிச்சரம்மிவைகள்
வெள்ளரிவிதைக்கேகும் விள்,

(இ-ள்) வெள்ளரிவிதைக்கு, கடுகின்றநீரடைப்பு-கல்லடைப்பு- நீர்த்துவாரவெடிப்பு சதையடைப்பு-பிரமேகம்கிரிச்சரம் இவைநீங்கும், ()

கழற்காய் பேய்ப்பீர்க்கு இவ்வித்துக்களின்குணம்,

கழற்காய்விதைக்குக் கனவண்டவாதந்
தழற்பக்கச்சூலைகுன்மஞ் சாந்தி-கழற்காலிற்
காய்ப்பாக்குந்துஷ்டக் கடிவிஷமெலாம்போக்கும்
பேய்ப்பீர்க்கின்றன்விதையைப் பேசு,

(இ-ள்) கழற்காய்ப்புக்கு, அண்டவாதமும் குட்டிநல்பிறந்தபக்க சூலையும்-வயிற்றுநோயும்-நீங்கும், பேய்ப்பீர்க்கம்வித்து காலிற்றழும்பேருப்படிக்கும் கடித்த துஷ்டவிஷங்களையெல்லாம் நீக்கும், (௮௭௪)

பூனைக்காலிவித்தின் குணம்,

தழுகளைநாற்றத்தோடு சாரிரத்தப்போக்கும்
பழுதுபுரிகின்றகரப் பானு மழுகேகுந்
தாலமிசைவிந்துமாஞ் சாற்றும்கரும்பூனைக்
காலிவிதையினுற் கான்,

(இ-ள்) கருமைநிறப்பூனைக் காலிவிதையினல், கற்றுழைநாற்றமும் ரத்தக்கிரகணியும் கரப்பானும் நீக்கும் தாதுபுஷ்டியுண்டாகும். ()

உகாவித்தின் குணம்,

வாதமுதன்முப்பிணியால் வந்தபிணியையெலாஞ்
சோதிற்சமப்படுத்துக் கூறவொண்ணச்-சீத
மகாவனசமண்டபத்தில் வாழ்ந்திருக்குமாதே
யுகாவிதையைநன்று யுகா.

(இ-ள்) குளிர்ந்துமேன்மைதங்கிய மண்டபத்தில்வாழ்ந்திருக்குமாதே உகாவிதை, திரிதோஷங்களால்வந்த நோய்களைச் சாந்தமாக்கும்.

குன்றிவித்தின்குணம் இதுவே குன்றிமணி,

நேத்திரநோய்பித்த கிறமழுங்கல்காமாலை
வேர்த்திகாபச்சோப வெப்புடனே-கோத்திட்ட

(இ-ள்) மணக்கத்தைவாலான்-கருங்குறுவைஎன்னும்-அறுவகை அரிசி களும் விரணதுஷ்டத்தையும் அற்பவிஷத்தையும் நீக்கும் இவ்வகைச் சாதங்களாற் சிலபித்தியர் கரப்பானுண்டாமென்பர், (அஅசு)

ஈர்க்குச்சம்பா அரிசியின் குணம்,

ஈர்க்குச்சம்பாவென் றியம்புமரிசியது
நாக்குக்கதியுரிசை நல்குங்காண்-பார்க்குமிடத்
தெல்லார்க்குங்காத லியற்றுமற்பபித்தமுமாம்
வில்லாருமபூசைகட்காம் விள்,

(இ-ள்) தேவாராதனைக்கான ஈர்க்குச்சம்பா அரிசி நாவுக்குருசியையு ம்பார்க்கில் இச்சையையும்தரும் இதில்கொஞ்சம் பித்தம்உண்டு, ()

புழுகுசம்பா அரிசியின்குணம்,

புழுகுசம்பாவரிசி பூகலத்திலுண்பார்க்
கழகுமொளிவுஞ் சேர்வதன்றி யழலாம்
பசிதாகந்தீரும் பலமுமிகவுண்டா
முசிவேதுடற்சுகமா முன்,

(இ-ள்) புழுகுச்சம்பா அரிசியை யுண்பவர்களுக்கு வனப்பும்- காந்தி யும்-அதிதீபாக்கினியும் பலமும்உண்டாம், தாகம்நீங்கும், (அஅசு)

கைவரைச்சம்பா அரிசியின்குணம்,

கைவரைச்சம்பாவரிசி கண்டாலவரவர்க
மெய்வரைபோலென்று மிகுபலமா-மைய
மடையாதென்பார்க ளடாசுக்கிலமு
முடையாதகிசுகமா முன்,

(இ-ள்) கைவரைச்சம்பா அரிசியால் உடற்குமலைபோன்றவன்மையு ம் கிலஸ்தம்பனமும்-சுகமும்உண்டாம் இதில்பித்தமின்றென்பர், ()

செஞ்சம்பா அரிசியின்குணம்,

செஞ்சம்பாத்தண்டுலத்தாற் றீராச்சிறுசிரங்கும்
விஞ்சுபுண்ணும்வன்சொறியு மெய்க்கணியான்-றஞ்சா
ததிகபசியாரு மணங்கரசேயிந்தப்
பதியதனினீயுண்டு பார்,

(இ-ள்) செஞ்சம்பா அரிசியால் கிளக்கின்ற அற்பகிரந்தியும்-அதிவி ரணமும்-யானைச்சொறியும்-மிகுபசியும் உண்டாகும்-என்க, (அஅஅ)

கல்லுண்டைச்சம்பா அரிசியின்குணம்,

கல்லுண்டைச்சம்பாவைக் கண்டருந்தி நின்றவர்முன்
மல்லுண்டபேரெதிர்க்க வாய்க்குமோ-வில்லுண்டை

போலுரையாகல்ல புசபலமாமின்சுவையாம்
பாலனையமென்மொழியே பார்,

(இ-ள்) பாலனைய மிருதுவாகியபெண்ணே கல்லுண்டைச்சம்பா அரிசியை உண்பவர்க்கு மல்லயுத்தக்காரரும் எதிர்க்கக்கூடாதபுசபலமும் மிருவார்த்தையும் உண்டாம்-என்க, (அஅகூ)

குண்டுச்சம்பா அரிசியின் குணம்,

குண்டுச்சம்பாவரிசி கொண்டுண்ணும்பேர்களுக்குப்
பண்டையில்லாமந்தநோய் பாரிக்கு-மண்டுபடாத்
தாகமெல்லாமொழியுந் தையாலேவன்கரப்பான்
றேகமெல்லாம்பரவுஞ் செப்பு,

(இ-ள்) பெண்ணே குண்டுச்சம்பா அரிசிக்கு அக்கினிமந்தமும் பலமிகுந்த கரப்பான் ரோகமும்உண்டாம் தாகரோகந்தீரும்-என்க, ()

மல்லிகைச்சம்பா அரிசியின் குணம்,

மல்லிகைச்சம்பாவரிசி வாய்க்குரிசையாயிருக்கு
நல்லதுமெய்க்கு நலஞ்செய்யுஞ்-சொல்லாக்
கரப்பானைமேகத்தைக் கண்ணழலைநீக்கு
முரப்பாம்பலங்கொடுக்கு முன்.

(இ-ள்) நாவிற்குஉரிசையாயிருக்கின்ற மல்லிகைச்சம்பா அரிசி சரீரத்திற்குச் சவுக்கியத்தையும் உறுதியையுந்தரும் கரப்பான் பிரமேகம் நேத்திரவெப்பம் ஆகியஇவைகளைப்போக்கும்-என்க, (அகூக)

இலுப்பைப்பூச்சம்பா அரிசியின் குணம்,

பித்தமிகப்பெருக்கும் பேருலகிற்பூரவர்க்கு
முற்றதலைவலிநோ யுண்டாக்குந்-சத்தியமாய்த்
தாகமெடுப்பிக்குந் தழலிலுப்பைப்பூச்சம்பா
வாகமதிநேயவர்க்கு மாய்,

(இ-ள்) இலுப்பைப்பூச்சம்பா அரிசிபித்தாதிக்கத்தினால்விளைகின்றசிரிலரோகம்சிரஸ்தாபம்உபசர்க்கதாகம்உஷ்ணம்இவைகளைச்செய்யும்.

மணிச்சம்பா அரிசியின் குணம்,

நல்லமணிச்சம்பா நாடுகின்றநீரிழிவைக்
கொல்லுமிகுந்தசுகங் கொண்டளிக்கு-மெல்லப்
பசிபெருக்குமூத்தோரைப் பாலர்களை நாளு
மெசியாமலேவளர்க்கு முன்,

(இ-ள்) நல்லமணிச்சம்பா அரிசி அதிமூத்திரத்தைவிலக்கும் அதிசுக த்தால் உடலையும் விருத்தர்பாலர்களையும் வளர்க்குமென்க. (அ௯௨)

வளதடிச்சம்பா அரிசியின்குணம்,

வளைதடிச்சம்பாவிற்கு வாதபித்தமுண்டா
முளையுமடிபொருமி யுப்புங்-கொள்கொளெனத்
தானேகரப்பானுந் தாங்கொணுமந்தமுமாந்
தேனேயிதனைத் தெளி;

(இ-ள்) தேனனையமொழியாளே வளைதடிச்சம்பா அரிசிக்குவாதபித்த தோந்தம் வயிறுஊளைதலுடன் உப்பிசம் கரப்பான் மிகும்ந்தம் இவை உண்டாம், கோரைச்சம்பா அரிசியின்குணம்; (அ௯௪)

கோரைச்சம்பாநற் குளிர்ச்சியென்பார்பித்தத்தைப்
போராடிப் பிரித்தோட்டுந்-தீராத
மேகமொடுதினவை வீட்டுஞ்சுகங்கொடுக்கு
மேகமுறைகுழலாய் விள்.

(இ-ள்) மேகமுறைகின்ற கூந்தலையுடையாளே கோரைச்சம்பா அரி சி பயித்தியம் உட்சூடு பிரமேகம் நமைச்சல் இவைகளைநீக்கும் சவுக்கி யந்தரும் குளிர்ச்சியென்பர், (அ௯௫)

குறுஞ்சம்பா அரிசியின்குணம்,

குறுஞ்சம்பாபித்தங் குடியிருக்கச்செய்யும்
வெறுங்கரப்பானுண்டாக்கு மெய்யி-லுறுங்கச்செய்
வாதமருள்வாயுவினை மாற்றும்போகங்கொடுக்குஞ்
சீதவனைத்திருவே செப்பு,

(இ-ள்) குளிர்ந்ததாமரையையொத்த வனத்திருமாதே குறுஞ்சம்பா அரிசி பித்தம் கரப்பான் சுக்லதாது இவைகளைவிருத்திசெய்யும்சரீரத் தில் குத்துகின்றவாதநோயைநீக்கும், (அ௯௬)

மிளகுச்சம்பா அரிசியின்குணம்.

மிளகுச்சம்பாவரிசி மென்சுகத்தைச்செய்யு
மளவில்பலநோயை யகற்றுங்-களகொளத்
தீபனத்தைத்தூண்டிவிடு தீராவலிதொலைக்குஞ்
சோபனத்தைச்செய்கையாய் சொல்,

(இ-ள்) சோபனத்தைசெய்கின்றநகையாளே மிளகுச்சம்பா அரிசி ச வுக்கியத்தைக்கொடுத்துத் தீபாக்கினியைவளர்க்கும் மகாவாதமுதலிய பலவிதரோகங்களைப் போக்கும், (அ௯௭)

சீரகச்சம்பா அரிசியின்குணம்.

சீரகச்சம்பாவரிசி தின்னச்சுவையாகும்
பேரகத்துவாதமெல்லாம் பேருங்காண் - வாருலகி
லுண்டவுடனேபசியு முண்டாகும்பொய்யலவே
வண்டருறையும்பூங்குழலே வாழ்த்து,

(இ-ள்) வண்டுகள்மொய்க்குங்கூந்தலாளே மதுரமுள்ளசீரகச்சம்பா அரிசியை உண்டவன் மீளவும் உண்பதற்கான தீபனமுண்டாம் அற்ப வாதரோகங்கள் நீங்கும், (அ௬அ)

காளான்சம்பா அரிசியின்குணம்,

காளான்சம்பாவரிசி கல்லேயொத்தமாபலத்தைக்
கேளாமலேகொடுக்குங் கேளின்னும்-நீளு
மானிலத்தைப்போக்கிவிடு மாரோக்கியத்தை
நானிலத்திற்செய்துவிடு நாடு,

(இ-ள்) காளான்சம்பா அரிசி சரீரத்திற்கு மலைபோன்றவுறுதியையும் சவுக்கியத்தையும் தரும் சிற்சிலவாத ரோகங்களை நீக்கும் - என்க,

மைச்சம்பா அரிசியின்குணம்,

மைச்சம்பாத்தண்டுலத்தால் வாயருசிபோயொழியும்
வெச்சென்றவாதபித்த மெய்யைவிடு-நச்சுந்
தனிவாயுவுஞ்சுரக்குஞ் சர்த்தியும்போமின்பக்
கனிமொழியேநன்றாகக் காண்,

(இ-ள்) இன்பந்தருங் கனிபோன்ற மொழியையுடைய பெண்ணே மைச்சம்பா அரிசியினால் அரோசகம்-வாதபித்ததொந்தம்-தனிவாதகோபம் வாந்திநோய்ஆகிய-இவைபோகும்-என்க, (௬௭)

கோடைச்சம்பா அரிசியின்குணம்

கோடைச்சம்பாவரிசி கொண்டாற்றிரிதோஷ
வாடைக்கதிக வலியுமுண்டோ-நீடு
முறுப்பினுள்ளநோயெல்லா மோதாமலேகுக்
கறுப்பிலுயர்வார்குழலே காண்.

(இ-ள்) கச்சணிந்தகூந்தலாளே-கோடைச்சம்பா அரிசியை யுண்ணில் முத்தோஷத்தாற்பிறந்த வாதவலியும சரீரத்துள்ள சிற்சிலநோய்களு ம விலகும-என்க. (௬௭௧)

காடைச்சம்பா அரிசியின்குணம,

காடைச்சம்பாவரிசி கண்டுதரிசித்தவர்க்கு
நீடுற்றமேகவன ளிர்க்குமோ-காடைப்

பறவைபோனேயும் பறக்கும்பலத்தி
னுறவையெவர்சொல்வா ருரை.

(இ-ள்) காடைச்சம்பா அரிசிக்கு பிரமேகசுரமும் சில அற்பநோய்களும் நீங்கும் சுக்கிலதாது விருத்தியும் பலமும் உண்டாமென்க. ()

குன்றிமணிச்சம்பா அரிசியின்குணம்,

குன்றிமணிச்சம்பா கொண்டாலனிலமறும்
வென்றிதருபல மிருக்குங்காண் - துன்றியநோ
யெல்லாம்பறக்குமுறை யிந்திரியபுஷ்டியுண்டா
நல்லாரறிய நவில்,

(இ-ள்) குன்றிமணிச்சம்பா அரிசையையுண்ணில் அற்பவாதரோகமுதலிய சிற்சிலநோய்கள் நீங்கும் சரீரபலமும் சுக்கிலதாதுவும் விருத்தியாம், (கூாக)

அன்னமழகி அரிசியின்குணம்,

அன்னமழகி*யரியாரோக்கியங்கொடுக்கு
மின்னவெகுருசியர்ந் செப்பக்கேளிங்கிலத்து
நோயனைத்துந்தூளாய் நொறுங்கத்தகர்த்துவிடுந்
தீயனலைப்போக்குந் தெளி. *அரி-அரிசி. நோய்-சுரம்.

(இ-ள்), மிகுமதுரமுள்ள அன்னமழகியரிசி சகலசுரங்களையும் பித்தவெப்பத்தையும்போக்கித்தேகத்திற்குச் சவுக்கியத்தைக்கொடுக்கும்.

பச்சை அரிசியின்குணம்.

சுத்தவனிலமந்தந் தோன்றுமெரிபித்தம்போம
பத்தியத்திலெண்ணார்கள் பண்டிதர்கண் - மெத்தவுமே
வைச்சசுவைதாங்க வலியுண்டாந்தேகத்திற்
பச்சரிசியைப்புசித்துப் பார்.

(இ-ள்) பத்தியத்தில் விலக்கான பச்சரிசியினால் தனிவாதகோபமும் அலசரோகமும் மிகுந்தபலமுமுண்டாம் பித்தயெரிச்சல் நீங்கும். ()

புழுங்கல் அரிசியின் குணம்,

புழுங்கலரிசியது புத்திரர்க்குமாகு
மழுங்குகின்றவாயுவிற்குமாகு - மொழுங்காய்
நிலைத்தபத்தியத்திற்கு நீட்டலாமெய்க்குப்
பலத்தைக்கொடாததனைப் பார்,

(இ-ள்) புழுங்கலரிசி குழந்தைகள் வருந்துகின்ற வாதரோகியர் அரும்பத்தியமுள்ளவர் இவர்களுக்குதவும் ஆனால் உடலுக்குறுதியில்லை.

பழமை அரிசியின்குணம்,

பழவரிசிமூத்தோர்க்கும் பாலர்கட்குமாகு
மழன்மிகவுமாகுமருந்தி-னிழலேப்போ
லாகுமுடற்குளிர்ச்சி யையமறுநோயுற்றோர்க்
காகும்பன்னேய்போ மறி.

(இ-ள்) பழய அரிசி விருத்தர் பாலர்ரோகியர்களுக்குமாகும் இவ்வன்னத்தையுண்ணில்பசியும்குளிர்ச்சியுமாம்சிற்சிலநோயும்கபமுமநீங்கும.

சவ்வரிசியின் குணம,

மேகமத்திமேகஞ்சீழ் மேகமரத்தமேகமுமபோந்
தேகத்திற்றுதுவுஞ் சிலேஷ்மமுண்-டாகுமெழிற்
செவ்வரிபடர்ந்தவிழித் தேமொழிமாதேயுலகிற்
சவ்வரிசியின்குணத்தைச் சாற்று,

(இ-ள்) செவ்வரிபரந்த விழியையுடைய தேனனைய மொழியாளேசவ்வரிசியினல் பிரமேகம அஸ்திசிராவரோகம வெண்மேகம உதிரமேகம இவைபோம சுக்கிலமும கபமும விளையுமெனக. (கூஅ)

மூங்கில் அரிசியின் குணம.

உதிரபித்தந்தீர்க்கு மோக்குசுரத்திற்கு
ந்திரவருகண்ணோ யதற்கும-புதிதாகக்
கஞ்சிசெய்யலாகுங் கருதிற்சிற்றுண் டியுமாஞ்
செஞ்சிலம்பார்மூங்கி லரிசி,

(இ-ள்) பாயசம பலகாரமுதலியவை செய்வதற்கான மூங்கிலரிசி ரத்தபித்தரோகம விபரீதசுரம நேத்திரநோய் இவைகளைநீக்கும, ()

திப்பலி அரிசியின்குணம,

திப்பலியின்றண்டுலஞ் சிலேஷ்மத்தைப்போக்கிவிடு
முப்பிசத்தைமேகத்தை யோட்டுங்காண்-தப்பாமல்
வாதசுரந்தணிக்குமாகபரோகந்தொலைக்குந்
தாதுவைவளர்ப்பிக்குந் தான்,

(இ-ள்) திப்பிலியரிசி கபம வயிற்றுப்பிசம மேகம வாதசுரம க்ஷயரோகம இவைகளைப்போக்கும விந்துவைப்போஷிக்கும என்க. ()

கோதுமை அரிசியின் குணம,

கோதுமையினற்குணந்தான் கோதிற்பலங்கொடுக்குந்
தாதுவிர்த்தியாக்குந் தனிவாய்வைச்-சேதிக்கும்
பித்தமடக்கும் பிரமேகத்தைக்கெடுக்கு
முத்தமமாமென்றே யுணா,

(இ-ள்) கோதுமை அரிசி நல்லபலம் சுக்கிலம் பித்தம் இவைகளை விருத்திசெய்யும் தனிவாதகோபத்தையும் பிரமேகத்தையும் நீக்கும், ()

கேழ்வரகின் குணம்,

சுத்தவனிலந்தன்னைத் தோன்றுவிக்குமல்லவெனிற்
பித்தவனிலத்தைப் பிறப்பிக்குஞ்-சித்ரமலர்த்
தாழ்குழலே நீடுபஞ்சத் தாங்கியெனச்சொல்லுகின்ற
கேழ்வரகின்செய்தியிது கேள்,

(இ-ள்) அழகியமலரையணிந்த தாழ்ந்தகூந்தலையுடையபெண்ணே பஞ்சந்தாங்கியென்கிற கேழ்வரகு சுத்தவாதத்தைவருவிக்கும் அல்லது பித்தவாதத்தையாவது உண்டாக்கும்-என்க. (௩௱௨)

கம்பு அரிசியின்குணம்.

கம்புகுளிர்ச்சியெனக் காசினியிற்சொல்லுவர்காண்
பம்புசொறிசிரங்கைப் பாலிக்கும்-வெம்பு
முடலின்கொதிப்பகற்று முட்பலமுமுண்டாக்கு
மடலயிற்கண்மாதே யறி,

(இ-ள்) குலைத்தொழிலைபுரிகின்ற கூரியவேல்போலுங் கண்ணையுடைய மாதே கம்பு அரிசி நெருங்கியதமைச்சலையுமசிரங்குகளையும் வீரியத்தையும் செய்யும் சரீரவெப்பத்தை நீக்கும் குளிர்ச்சியென்பர். (௩௱௩)

சாமை அரிசியின் குணம்,

உடலிலுறுதாக சுரமோடுமேகம்போ
மடலுறுகால்வீக்க மகலுங்-கடலின்நிறை
யாமையனையபதத் தன்னமேமேனியிடுஞ்
சாமையரிசிக்குந் தான்,

(இ-ள்) சாமைஅரிசிக்கு தாகசுரம்பிரமேகம்மகத்வாதகோப் சோபாரோகம் இவைநீங்கும் தேகபுஷ்டியுண்டாகும் என்க, (௩௱௪)

தினை அரிசியின்குணம்,

சந்நிசுரமையந் தனிவாதமும்போகுந்
துன்னுபித்தத்தைமிகத் தூண்டிவிடுந்-தின்னப்
பிணையும்பசியாம் பெருவீக்கநீக்குந்
தினையரிசியின்குணத்தைத் தேர்,

(இ-ள்) தினை அரிசி சந்நிபாதசுரம்கபரோகம்சுத்தவாதம்கோபாரோகம் இவைகளைப்போக்கும் பித்தத்தையும்பசியையும்உண்டாக்கும், ()

செஞ்சோள அரிசியின்குணம

செஞ்சோளந்தின்றாற் சிறுசிரங்குபுண்ணுகளும
விஞ்சுமெழிலான மேனிகெடு-நெஞ்செரிந்து
மந்தமிகுந்தீபனமபோ மாறுக்கரப்பானுங்
கந்தமலர்ப்பூங்குழலே காண்,

(இ-ள்) செஞ்சோள அரிசியால் அற்பகிரந்தி-விரணங்கள் மந்தரோகம-கரப்பான் இவை அதிகரிக்கும சரீர அழகும பசியும விலகும, ()

கருஞ்சோள அரிசியின்குணம,

சொறியைச்சிரங்கைத் தொலையாதபுண்ணை
மறுவிலாமெய்யில் வளர்க்கும்-குறியா
வழகுகொடுக்குமசதியையுண்டாக்கும
பழகுகருஞ்சோளமது பார்.

(இ-ள்) கருஞ்சோள அரிசி நமைச்சல் கிரந்தி விரணம-அயர்வு இவைகளை உண்டாக்கும. மாறுநிறமான அழகைத்தரும என்க, (கூ௰எ)

தானியவகை முற்றியது.

## காய்த் தானியவகை.

தே, துவரையின் குணம்,

பஞ்சமுட்டிக்காகுமரும பத்தியவியஞ்சனமாம
விஞ்சுகாரஞ்சந்திகட்கு மெத்தநன்றாம-பஞ்சின்
விழுந்துவரையாது மெலிந்தாரைத்தேற்றுங்
கொழுந்துவரையாயினீ கொள்;

(இ-ள்) நறுந்துவரை லங்கனமுடிவிற்சேர்க்கிற பஞ்சமுட்டிக்காரகபத்தியத்திற்கும உப்பில்லாப்பத்தியத்திற்கும சுரத்திற்கும சந்திக்கும பஞ்சணையேகிடையாக எழுந்திருக்கச்சக்தியில்லாமல் மிகமெலிந்தவருக்கும உதவும பஞ்சமுட்டிவிவரத்தைக்கஞ்சிவகையிற் காண்க. (கூ௰அ)

உழுந்தின்குணம-இதனை உளுந்து என்பார்.

செய்யவுழுந்திற்குச் சிலேஷ்மவனிலமபிறக்கும
வெய்யபித்தமபோமந்தம வீறுங்காண்-மெய்யதனி
லென்புருக்கிநீரு மிடிப்புக்கதிபலமா
முன்புவிருத்தியுண்டா முன்,

(இ-ள்) நல்ல உழுந்திற்கு கபவாத மிஸ்ரம அலஜம இடுப்பிற்குறுதி பிரமேகம் இவை உண்டாம, பயித்தியமும எலும்புருக்கியுநீங்கு ம,

கடலையின்குணம்.

கடலைவயிறூதற் கன்றநூகஞ்செய்யுங்
குடலைவலிப்பித்து மலங்கொட்டுந்-இடமருந்தைச்
சேதமுறப்பண்ணுந் தியக்கமொடுவாயுவையும்
போதவமைக்கும் புகல்.

(இ-ள்) கடலைவயிறுப்பிசம் பித்ததாகம் குடல்நோயுடன்கூடிய கிரகணிமயக்கம் மூலவாயு இவைஉண்டாக்கும் நன்மருந்தை முறிக்கும்,

மொச்சைக்கொட்டையின்குணம்,

அனிலபித்தவைய மனைத்தையுமுண்டாக்குந்
தொனியெடுக்கவாயுவினைத் தூண்டுந்-தனிவேள்
குனிக்குஞ்சிலைப்புருவக் கோதாய்கேளாரு
மினிக்குமொச்சைக் கொட்டையே

(இ-ள்) விற்போன்றபுருவக்கோதையே இனிப்புள்ள மொச்சைக்கொட்டையானது திரிதோஷங்களையும் இரைச்சலைத்தருகின்ற ஆவிருகவாயுவை உண்டாக்குமென்க. (௬௨௧)

பெரும்பயற்றின்குணம் இதுவே-பெருங்காராமணி,

பெரும்பயற்றைமென்மேலும் பேணியுண்ணுவார்க்குப்
பெருஞ்சாடராக்கினிபோம் பின்னும்-வருமந்தம்
பேதியதிகரிக்கும் பேராக்கபங்கதிக்கும்
வாதகுடிலம்பெருகும் வாழ்த்து,

(இ-ள்) பெரும்பயற்றை அதிகமாகத்தின்பவர்க்கு தீபாக்கினிகெடுவதுமன்றி அசீரணம்அதிசாரம்கபரோகம்வாதப்பிடிப்புஇவைஉண்டாம்

சிறுபயற்றின்குணம்-இதுவே-பனிப்பயறு.

ஐயைப்பித்தத்தை யரோசகத்தைப்போக்கிவிடும்
வெய்யவாதத்தை விளைவிக்கு-மையா
மறுவொழிந்ததூய மதிவனமாதே
சிறுபயறுசெய்யுஞ் செயல்,

(இ-ள்) களங்கமற்றசந்திரனையொத்தமுகத்தாளே சிறுபயறு கபரோகத்தையும் பயித்தியத்தையும் அரோசகத்தையும்போக்கும் பித்தவாதத்தை உண்டாக்கும்-என்க, (௬௨௩)

பச்சைப்பயிற்றின்குணம்,

பச்சைப்பயறதுதான் பாரிற்பயித்தியத்தை
யச்சமறநாளு மகற்றுங்காண்-கச்சுலவு

கொங்கைமடமாதே குளிர்ச்சியென்பாரெப்போதுந்
தங்குவாதத்தைத் தரும்,

(இ-ள்) கச்சணிந்த கொங்கையையும் மடமத்தனத்தையுமுடைய மாதே பச்சைப்பயறு பித்தத்தைநீக்கும் வாயுவைத்தரும் சீதளமென்பர்,

தட்டைப்பயறு-வெண்பயறு-கரும்பயறுகளின்குணம்,

தட்டைப்பயறுமந்தஞ் சன்னிதரும்வெண்பயறு
முட்டியேமெய்யின் முதிர்வாதக்-கட்டறுக்குஞ்
சாணுப்கரும்பயறு கம்முநீர்வாதமுடன்
கோணுவாதத்தையும் போக்கும்.

(இ-ள்) தட்டைப்பயறு அக்கினிமந்தத்தையும் சந்நிபாதத்தையும்உண்டாக்கும் வெண்பயறு ஓடுவாதத்தைப்போக்கும்கரும்பயறுசிலேஷ்மவாதத்தையும் பங்குவாதரோகத்தையும் விலக்கும், (௬௨௫)

கொள்ளின்குணம்,

குடல்வாதங்குன்மமுண்டாங் கொண்மருந்தேநாச
மடலேறுபித்தமிக வாகும்-கடுகடுத்த
வாதநீரேற்றமொடு மன்னுகுளிர்காய்ச்சலும்போஞ்
சாதிநறுங்கொள்ளுக்குத் தான்.

(இ-ள்) நறியகொள்ளுக்கு பீசவாயுவும் பித்தகுன்மமும்பயித்தியமும்உண்டாம் வாதவலி நீரேற்றம் ஙளிர்ச்சுரம் மருந்தூரம இவைபோம.

எள்ளின்குணம.

எள்ளுமருந்தைக்கெடுக்கு மேறனலாந்திண்மைதரு
முள்ளிலேயைச்சேர்க்கு முதிரத்தைத்-தள்ளுமிரு
கண்ணுக்கொளிகொடுக்குங் காசமுண்டாமபித்தமுமாம
பண்ணுங்கிடர்புரியும பார்.

(இ-ள்) அபத்தியமாகியஎள்ளு உஷ்ணமபலமகபமகாசரோகம பித்தநோய் இவைகளைவருவிக்கும குரல்தொனியைக்கெடுக்குமஸ்திரிகளின் வயிற்றிற்கட்டுபட்ட உதிரத்தைவெளிப்படுத்தும விழிகட் கொளியாம,

காய்த்தானியவகை முற்றியது,

---

## இறைச்சிவகை.

வெள்ளாட்டுஇறைச்சியின்குணம,

உள்ளாடுநோயெல்லா மோடுமுடல்பருக்குந்
துள்ளாடுவாதபித்தஞ் சாந்தமாம-வெள்ளாட்டி

னற்கறியையுண்பார்க்கு-நாடுகயரோகமும்போ
மற்குரியவன்பலனும வாழ்த்து.

(இ-ள்) வெள்ளாட்டிறைச்சியை உண்பவர்க்கு உட்சுரங்களும வாதபித்திபமும க்ஷயமும்போம சரீரபுஷ்டியும வீரியமும விளையும, ()

கொடியாட்டிறைச்சியின்குணம,

கொடியாடுசற்கறியாங் கொள்ளும்வகைசேளாய்
தடியாமற்பூப்போற் சமைத்து-விடியாலே
கொண்டாலிடுப்புவலி குற்றிருமல்வெட்டையும்போங்
கண்டாலும்வாதமறுங் காண்,

(இ-ள்) கொடியாட்டிறைச்சியைப் பூப்போல்பாகஞ்செய்து காலையிலுண்ணில் சகலவிருதவாய்வு காசம சிலேஷ்மம் உஷ்ணவாயு இவைபோம, தே, வரையாட்டிறைச்சியின்குணம, (௬௨௬)

பத்தியத்திற்கொவ்வும் வளர்பாரோகோயைத்துரத்து
மெத்தமெலிந்தார் மெலிவகற்றுஞ்-சுத்தமண
மூட்டுவரையொத்தமுலை யொண்டொடியேபன்மூலிக்
காட்டுவரையாட்டுக் கறி,

(இ-ள்) மலைகளையொத்த மணம்பொருந்திய முலைகளையுமுடையபெண்ணே வனமூலிகைகளைத்தின்கிற வரையாட்டிறைச்சி கனத்தரோகங்களையும மிகுந்ததுர்ப்பலத்தையும்போக்கும் பத்தியக்கறியாம என்க,

செம்புலியாட்டிறைச்சியின்குணம,

அம்புவியிற்செக்கரப்பாணண்டுவதுமாத்திரமோ
செம்மறியாட்டுக்கறியைத் தின்றக்கால்-கொம்பி
லிருந்துமதித்தாற்போ லெப்பிணியுமுண்டா
மருந்துயர்நீக்கா தறி,

(இ-ள்) செம்மறியாட்டிறைச்சியை உண்ணில் செங்கரப்பனும முன்பு இல்லாதபலவித ரோகங்களும சகலதுன்பமும உண்டாம- என்க,

பள்ளையாட்டிறைச்சியின்குணம்,

மந்தமிகுந்தீபனம்போ மாறுவரோசகமாந்
தொந்தநோயெல்லாந் தொடருங்கா-ணிந்துநுதன்
மானேகபமுயருமவன்பள்ளையாட்டுக்குத்
தானேமிகுவாயு தான்.

(இ-ள்) மூன்றுமபிறையையொத்த நெற்றியையுடையவளே பள்ளையாட்டிறைச்சிக்கு அலஜம் மந்தாக்கினி நீங்காதஅருசி திரிதோஷ மிஸ்ரம் கபகோபம வாதாதிக்கம இவையுண்டாம, (௬௩உ)

குறுமபாட்டிறைச்சியின்குணம,

குறுமபாட்டிறைச்சிதனைக் கொண்டார்கட்கெல்லா
மெறுமபார்சொறிசிரங்கு மெய்து-மிறங்குங்
குடல்வாதஞ்சூலை கொடுமணிலக்கூட்ட
முடனேயடருமெனவோர்,

(இ-ள்) குறுமபாட்டிறைச்சியை உண்பவர்க்கு எறுமபுமொய்க்கின்ற நமைக்கிரந்தியும பிசவாயுவும வாதவருக்கமும உண்டாம, (௬௩௩)

மான் இறைச்சியின்குணம,

மான்கறியுண்டார்தமக்கு மாதொந்தநோய்க்கபநோ
யூன்பகந்தரங்கழலி னாதையொடு-தான்பரவு
வாதநமையுமவிட்டு வாங்குங்கண்ணிற்புகையா
மோதுபித்தமவீறு மொரு,

(இ-ள்) மானிறைச்சிக்கு தொந்தநோய் ஈளை மாமிசபகந்தரம கழல் வாயுவாதப்புடை இவைபோம கண்புகைச்சலும பித்தமும-ஆம, ()

கலைமான் இறைச்சியின்குணம,

மேகப்பிடிப்பகலு வெட்டையனலுமறும
போகமுறுப்பலனும் பூவையரே-தேகத்திற்
பித்தவாதங்களறும பேராவழலையுமபோந்
தத்துகலைமான்கறிக்கு தான்,

(இ-ள்) பெண்ணேகலைமானிறைச்சிக்கு மேகவாதப்பிடிப்பு வெள்ளைசுரம பயித்தியவாதம உள்அழலை இவைபோம விந்துவும சரீரபலமும விளையும, கடமான் இறைச்சியின்குணம, (௬௩௫)

உடலமவலுவாகி யோங்கிப்பருக்குங்
குடலிலதிவாதங் குதிக்கும-வடமார்
கடமாமெனுங்கொங்கைக் காரிகையேகானக்
கடமானிறைச்சியுணுங் கால்,

(இ-ள்) கொடுமைபொருந்திய அயில்போலுங்கூரிய கண்களையுடைய காரிகையே காட்டிலுள்ள கடமானிறைச்சியை யுண்ணில்சரீரமவன்மையோடு செழித்துப்பூரிக்கும குடல் விருத்திரோகமஉண்டாகும,

ஊர்ப்பன்றி இறைச்சியின்குணம்,

வாதபித்தங்கள்சேரு மருவியபுண்ணுமுண்டாந்
தாதுவும்க்ஷயமும்பொங்குந் தாங்கொணு-வசதியாகும்
வாதுறவனந்தநோய்கள் வளர்ந்தெழுந்துன்பமெய்து
மோதியுண்மருந்துநாச மூர்ப்பன்றிக்கறியுண் பார்க்கே,

(இ-ள்) ஊர்ப்பன்றியிறைச்சியை யுண்பவர்க்கு வாதபித்தசேர்ந்தம் விரணம் சுக்கிலம் சிலேஷ்மகோபம் விலவிலப்புமுதலிய பலவிதரோகங்கள் மனோதுக்கம் ஔஷதக்கெடுதி ஆகிய யிவையுண்டாகும். ()

காட்டுப்பன்றி யிறைச்சியின்குணம்.

ஏறியவாதம்போகு மெழும்பிடுங்காசநோய்கள்
வீறிடும்விழிநோய்சீதம் விஷக்கடிகிரந்தியுண்டாங்
கூறிடுமூலங்கீலங் குதங்குடல்வாதநாசம்
மாறிடுகாட்டுப்பன்றி மாங்கிசந்தனையுண்பார்க்கே,

(இ-ள்) காட்டுப்பன்றியிறைச்சியைத் தின்பவர்க்கு அதிகரித்த வாயு மூலம் சருமகீலம் குதப்பிரம்ஸரோகம் குடல்விருத்தி இவைநீங்கும் இருமல்நேத்திரநோய் கயம் விஷக்கடிவிரணம் இவையுண்டாகும், ()

முள்ளம்பன்றியிறைச்சியின் குணம்-வெ-பா.

காட்டுப்பன்றிக்குணமுங் காயமெல்லாமுள்ளை
நீட்டுப்பன்றிக்குணமு நேரொன்றாய்க்-காட்டினு
மிப்பன்றிக்கஞ்ச மிறுகுவதாலிப்பன்றிக்
கெப்பென்றியுநிகரோ வெண்,

(இ-ள்) காட்டுப்பன்றிமுட்பன்றிஇவ்விறைச்சிகள்குணத்தில் நன்றாயிருந்தாலும் முட்பன்றியால் வன்மைமிகுதலால்எந்தப்பன்றியுந்நிகரல்ல

முசல்யிறைச்சியின் குணம்,

கடுகியநடையுண்டாகுங் கனத்ததோர்பித்தமேகு
முடுகியவீளைகாச முதிர்ந்ததோர்-சுவாசம்போகுஞ்
சடுதியில்வெருண்டேயோடுந் தனிமுசற்கறியினாலே
கொடுமயிற்கண்ணாய்வாதங் குறைந்திடுமலமிறங்கும்,

(இ-ள்) கொடுமைபொருந்தி அயில்போலுங்கூரிய கண்ணையுடைய பெண்ணே முசல்கறியால் விரைவாகியநடைகள் உண்டாம்பயித்தியம் க்ஷயம் இருமல் மகாசுவாசம் வாயுவு மலச்சிக்கல் இவைநீங்கும், ()

தே-உடும்புயிறைச்சியின்குணம்-வெ-பா.

தொன்மைத்துவர்ப்பினிப்பார் துர்ப்பலம்தப்புநமை
வன்மைக்கிராணிதலை வள்ளிவைக-னின்மையுரு

மேற்றழல்புண் குட்டு பமேகம்வெட்டைமூல மண்டக்
காற்றழல்விட்டிற்றடிக்குக்காண் தடிஉடும்பு,

(இ-ள்) இயல்பாகத்துவர்ப்பும் இனிப்பும் உள்ள உடும்பு இறைச்சி யினால் தூர்ப்பலம்வீக்கம்சொறி கிரந்திதோஷம்-சிரசு காதுகளில்வருகின்ற பிணிகள் கருமச்சூடு விரணம் குஷ்டம்க்ஷயம்பிரமேகம்வெள்ளைமூலம் குடல்வாதம் வாதபித்தம் பெரியிவைவிலகும், (௬௪௧)

புலி கரடி சிறுபுலி இவ்விறைச்சிகளின் குணம்;

வருபுலிமாங்கிஸத்தால் மாறுமுன்மாதரோகங்
கரடிமாங்கிஸத்தால்வாதங் கபங்கெடும்-வலிப்புநீங்குஞ்
சிறுபுலியிறைச்சி தீர்க்கின்றசிலரோகத்தை
வரிவிழிமாதேயிந்த வகையறிந்தோதுவாயே,

(இ-ள்) செவ்வரிபரந்த கண்களையுடையபெண்ணே பெரும்புலி யிறைச்சியினால் உன்மாதரோகம் போம், கரடியிறைச்சியினால் வாயுவும் கபமும் வலிப்பாகிய மூர்ச்சாரோகமும் நீங்கும், சிறுபுலியிறைச்சி சிற்சிலரோகங்களைவிலக்கும் என்க. (௬௪௨)

மாடு முதலே இவைகளின் யிறைச்சிக்குணம்-வெ-பா.

கோமாங்கிஸத்தைக் குறித்துண்டபேருடம்பி
லாமாவியாறிக் களவுண்டோ-வாம
முதலேக்குறுகக்கு வானனிலஞ்சீத
முதலேத்தசைக்கிருக்கு மோ,

(இ-ள்) மாட்டிறைச்சியை உணவாக உண்டால் சகலநோயும் உண்டாம்முதலையிறைச்சியால்சிக்கல்கக்கிருமலும்வாயுவும்கபமும்விலகும்

பூனையிறைச்சியின் குணம்;

பூனைக்கறியைப் புசித்தாலெழிலணங்கே
மேனிக்கழகுண்டா மேல்விரணங்-கானகலுஞ்
சூடுமதிகரிக்குஞ் சோரியதுமென்மேலு
நீடுமெனநாளுநினை,

(இ-ள்) அழகிய தெய்வப்பெண்ணைப்போன்றவளே பூனைக்கறியையுண்ணில் சரீர அழகும் வெப்பமும் ரத்தவிருத்தியும் உண்டாம் சருமதாதுவைப்பற்றிய கிரந்திவிலகும். (௬௪௩)

புனுகுப்பூனை இறைச்சியின் குணம்,

இடிப்பிலுரத்தி லெழுகோபகற்றுங்
கடிப்புழுவாதத்தைக் கடிக்குந்-தொடிப்பி

லகிழ் தாதுவு கல்லரும்பசியுநல்குங்
கமழ்புனுகுப்பூனைக் கறி,

(இ-ள்) மணமுள்ள புனுகுப்பூனை யிறைச்சி சகனவாதம் இருக்வாதம் மூலக்கடுப்பு இவைகளை நீக்கும் தாதுவையும்பசியையும் விளைக்கும்

## கீரி யிறைச்சியின்குணம்.

கீரியிறைச்சிக்குக் கெம்பீரமுண்டாகு
நீரிழிவுமேகுமென்பார் நிச்சயமே-வீரியமாந்
கிலவிஷங்கிட்டேகுஞ் சிரங்குசொரியகலும்
பல்லரணைபோகும் பறந்து.

(இ-ள்) கீரியிறைச்சிக்கு தைரியமும் சுக்கிலவிருத்தியும் உண்டாம் வெகுமூத்திரம் அற்பவிஷம் சிரங்கு நமை பல்லரணை இவைபோம், ()

## மரநாய் இறைச்சியின்குணம்,

மரநாயிறைச்சிக்கு வன்சிரங்குமேக
முரமரவேயோடி யொளிக்கும்-விரைவாதஞ்
சூலைனவாதங்கீலயுஞ் சுரம்போகு
ஞாலமிசையிக்குணத்தை நாட்டு,

(இ-ள்) மரநாயிறைச்சிக்கு சிரங்குபிரமேகம் பீசவாயு சூலைநோய்ம காவாதரோகம் சுரம் ஆகிய இவைகள் ஒழியும் என்க, (கூ௭௩)

## எலியிறைச்சியின் குணம்,

எலியிறைச்சிகுன்மம் பிலீகமுமநோய்
நலிவிக்கிரப்புண்ணைமச்சன்-மெலிவோடு
மீதுமட்டிடாப்புளக மேவச்செய்யும்புணரத்
தாதுவுக்கும்புஷ்டிதருந் தான்,

(இ-ள்) எலியிறைச்சி குன்மம் பிலீகம் மார்புவலி பிளவைதினவு இவைகளை நீக்கும் பூரிப்பு வீரியம் விருத்திக்கு வீரியம் இதுகளைத்தரும்

## வெள்ளெலி யிறைச்சியின்குணம்.

சீதமையங்குன்மஞ் செரிமூலம்வித்திரிதி
பேதிதொந்தரோகம் பிலீகமும்போம்-தாதுவுமாஞ்
சேருமுதிரமது தேகமெல்லாம்பரவுஞ்
சாருமென்றவெள்ளெலிக்குத் தான்,

(இ-ள்) வெள்ளெலியிறைச்சிக்கு குளிர்ச்சிகபநோய் குன்மமும் மூலநோய் வித்திரிதிக்கட்டி அதிசாரம்-கிரகணி முதலியதொந்தநோய் பிலீகரோகம் இவைபோம் சுக்கிலதாதுவும் ரத்ததாதுவும் விளைவும் என்க,

பெருச்சாளி இறைச்சியின்குணம்,

வாதபித்தந்தாட்பிடிப் வன்பிசைசங்குஷ்ட
மோதுதிரநோயா மெமைகிடம்-பேதியிவை
சேர்ந்தகலவோடும் பெருச்சாளியின்கறியாற்
றீர்ந்தவெழிலோவியமே செப்பு,

(இ-ள்) அழகியசித்திரப்பதுமைபோன்ற பெண்ணே பெருச்சாளியிறைச்சியால்வாதபித்தஞ்தொந்தம் சம்விவுர்தரசியவாதம் பீநசம்பெரு வியாதிரத்ததாதுவைப்பற்றியநோய்கிருமி அதிசாரம் ஆகியஇவைகள்விலகும் இறைச்சிவகை—முற்றிற்று,



# பறவை இறைச்சி அல்லது கறிவகை.

கோழிக்கறியின் குணம்,

கோழிக்கறிநெருப்பாங் கொள்ளின்மருந்தறம்வந்
கூழைக்கடுப்புமந்தங் கூறரச-மாழ்கிப்போ
நீளுற்றபோகநிணக்கிரந்தி பித்தமுண்டாந்
துளித்தமெய்யினைக்குந் சொல்,

(இ-ள்) குடுள்ள கோழிக்கறியை யுண்ணில் ஔஷதவேகம்மகாவாதம சுவாசம் தேகக்கடுப்புமந்தாக்கினி மூலம் இவைபோம்சுக்கிலம்கொழுப்புள்ள விரணம் பித்தம் இவைகளையும் உடம்பு இளைக்கும்,(௬௫௧)

கருங்கோழிக் கறியின் குணம்.

குட்டங்கடிகிருமி கோரவரதக்கூட்ட
மட்டிடாச்சூலையறு மாதரசே-துட்ட
கிரந்தியொடுபுண்வலிபோங் கேளுடலூக்கு
மருந்துகருங்கோழியூன் வை,

(இ-ள்) பெண்களுயைகமே மருந்தாகிய கருங்கோழிக்கு குஷ்டம்காணக்கடி புழுமகாவாதங்கள் சூலைசிறுசிறங்குவிரணம்வலிப்புஇவைபோம் உடல்வலிக்கும். (௬௫௨)

கானங்கோழிக் கறியின்குணம்.

உத்தமமாநோயனைத்து மோடுமிறுமலறும்
பத்தியமாங்கரப்பான் பாறுமே-முத்தவொளி
தானுக்கனிமொழியே சார்ந்தமமறுவகலுங்
கானங்கோழிக்கறியைக் காண்,

(இ-ள்) மதுரம்பொருந்தியமொழியையுடையவளே- கறியகாணுங்கோழிக்கறியால், வாதகபநோயினங்கள்-காசம்-கரப்பான் வியங்கலாஞ்சனம் இவைபோம் பத்தியத்திற்குதவும். (௬௫௩)

வான்கோழிக் கறியின் குணம்,

போகமிகுமெய்யிற் புளிகிதம்வான்கோழிதனக்
காகமதிலையமதிகமுந்-தேகமெலாந்
தானேகரப்பானுஞ் சாற்றவுரிசையுமாந்
தேனேயிதனைத் தெரி,

(இ-ள்) தேனனையாளே-உரிசையையுடைய வான்கோழிக் கறிக்குவிந்துவும்-மகிழ்ச்சியும்-சிலேஷ்மபந்தமும்-கரப்பானும்-உண்டாகுமென்க,

சம்பங்கோழிக் கறியின் குணம்.

வரட்சிசொறிசிரங்கு வன்கரப்பனென்னுந்
திரட்சியொடுபலநோய் தீரும்-பொருட்சிகரி
கும்பங்கடாக்களிற்றன் கோடெனச்சொற்பூண்முலையாய்
சம்பங்கோழிக்கறிக்குத் தான்,

(இ-ள்) மதயானைக்கொம்போன்று ஆபரணமணிந்தமுலையையுடையவளே சம்பங்கோழிக்கறிக்கு சொறசொறப்பு-சொறி-சிரங்கு - கரப்பான் முதலிய பற்பலரோகங்களும் நீங்கும் என்க, (௬௫௫)

வாத்துக் கறியின் குணம்,

வாத்துக்கறியருந்த வற்றியுலர்புன்சிரங்குங்
கோத்தகபமுங் குதிக்குங்காண்-ராத்திரியிற்
போகமுறுதியுமாம் பொல்லாவரோசகநோ
யாகமதிலூருமறி,

(இ-ள்) வாத்துக்கறியையுண்ணின், கசிவு வறண்டசிவந்தாறியசிரணம் கிரந்தி-கோழை-அருசி-இவை அதிகரிக்கும் சுக்கில ஸ்தம்பனமாம்,

கோழிமுட்டையின் குணம்,

வாதபித்தஞ்சேர்ப்பிக்கும் வன்றேட்டம்புண்போக்குந்
தாதுவைமெத்தக் தழைப்பிக்கு-மோது
கபத்தையடக்குங் கரப்பனிண்டாக்கு
மிபத்தையுறுங்கோழிமுட்டை யெண்,

(இ-ள்) கோழிமுட்டை, வாதசோஷ-விரணம்-கபப்பிணி-இவைகளை நீக்கும்-வாதபயித்தியம்-சுக்கிலதாது-கரப்பான்-இவைகளை யுண்டாக்கும், (௬௫௭)

காடைக்கறியின் குணம்,

கட்டிற்கிடப்பார்க்குக் காட்டிற்படுங்காடை
மட்டவிழுங்கோதாய் மருந்தன்றே-விட்டமுறக்

சோறுபுகுஞ்சோலையமுந் தான்றெயலாமேகும்
வேறுமறுந்தேற்றுவதேன் விள்,

(இ-ள்) தேமொழுகுகின்றமாலையணிந்தகூந்தலையுடையவளே-படுக்கையாயிருப்பவர்களைத் தேற்றுகின்றகாடைக்கறிக்கு அசனஞ்செல்லும்வீக்கமும்வெலிவிறைல் கிளைத்தசகலநோய்களும்-போம், (௮௫௮)

கவுதாரிக்கறியின்குணம்-இதுவே சிவல்,

சிவலிறைச்சிபித்தஞ்சிலேஷ்மமந்தம்வாதக்
கவலைபறவோட்டியுடல்காக்கும்-குவனமதின்
மெய்க்குப்பலஞ்செய்யும் வீரியமுமுண்டாக்குஞ்
சிக்கியமலங்கழிக்குஞ்செப்பு

(இ-ள்) கவுதாரிக்கறி,பயித்தியம்,ஜலமந்தம்-வாதவலி-மலக்கட்டு-இவைகளைநீக்கி-வன்மை-வீரியம்-இவைகளைவிருத்திசெய்து-உடலைஇரட்சிக்கும் (௮௫௯)

ஊர்க்குருவிக் கறியின் குணம்-வி-ம்,

மருவியதிரிதோஷம்போ மறப்புருப்புணர்ச்சியுண்டாம்
பெருகியசுரமேகம்போம் பிறந்திடுமிளமைமெய்யிற்
கருகியவன்னநீங்கிக் கனகம்போலொளிவுசேரு
முருவமுந்திரமாநாளு மூர்க்குருவியின்றசைக்கே

(இ-ள்) ஊர்க்குருவிக்கறிக்கு, வாதபித்தம் கபப்பிரகோபம் சுரவெட்டை கருமேகம் இவைநீங்கும்,—இளமை-விடாதபோகம்-வாலிபத்தன்மை-சுவர்ணச்சாயல்-தேகப்புஷ்டி-இவை உண்டாம்-என்க, (௮௬௦)

வானம்பாடிக்கறியின் குணம்-வெ-பா,

வெட்டையனலமொழி வீறுபலநோயகலு
மட்டிலாக்காமம் வளருங்கண்-மட்டிணையிற்
காமம்பாடிக்களிக்குங் காமரசப்பைங்கிளியே
வானம்பாடிக்கறி வறு,

(இ-ள்) காமரசத்தைத் தருகின்ற பசுங்கிளிபோலும்பெண்ணேபொசித்தவானம்பாடிக்கறியால், ஆண்குறியால்விழுகிறசீழ்-வெப்புமுதலிய ரோகங்களும்-போம்,—வீரியவிருத்தி-உண்டாம், (௮௬௧)

விச்சுளிக்கறியின்குணம்,

ஜூபுடன்பித்த வரோசத்தையாற்றிவிடுஞ்
[illegible]போகபோக் கழைப்பிக்கு-மெய்யாகப்

கொசுஉள்ளான் கறியின்குணம்,

கொசுவுள்ளான்றன்கறியைக் கூட்டியுண்பார்க்குப்
பசி [illegible] ழ புமேகம [illegible] றக்கும்-பசபசத்து
[illegible] ன்ற [illegible] னவசலு நீங்காதபோகமுறி
மன்றலுறைவார்குழலே வாழ்த்து,

(இ-ள்) வாசனைபொருந்தியநீண்ட கூந்தலையுடையவளே கொசு-உள்ளான்கறியால்-மிகுதீபனமும-வைசயோகபலமும உண்டாகும—சீழ்ப்பிரமேகமும நமைச்சலும-விலகும-என்க, (௧௬௭)

கோரை உள்ளான் கறியின்குணம,

நாட்டிலுள்ளபட்சிகளி னன்கிதுவேபத்தியமாங்
கூட்டிலுள்ளதோஷங் குலையுங்காண்-தாட்டிகமா
யாரென்னசொன்னாலு மமடவியிதேயார்க்குக்
கோரையுள்ளான்கறியைக் கூட்டு,

(இ-ள்) பத்தியப்பறவைகளில் உத்தமமாகிய நற்கோரை உள்ளான்கறியால், சப்ததாதுகத்தோஷங்கள் விலகும,—இதுபிணியாளர்க்குதவும

மயில்கறியின் குணம,

சூலைப்பிடிப்புகளைச் சோரிவளியைப்பித்தை
வேலைச்சிலேட்டுமத்தை வீட்டுங்காண்-ஞாலொத்த
வற்பவிடைமாதே யனலாமயிலிறைச்சி
நற்பசியுண்டாக்கு நவில்,

(இ-ள்) நூலிழைபோலுஞ்சிறிய இடையையுடையபெண்ணே உஷ்ணமுள்ளமயில்கறி, கீல்களிற்குந்தல் வாதசோணிதம்-கபபித்தம-அதிகபம-இவைகளை நீக்கும,—தீபனத்தைத்தரும, (௧௬௯)

குயில்கறியின் குணம,

நல்லதொருபத்தியம்மா நாடாதுவாதபித்தஞ்
சொல்லரிதுவானே சொறியேகும-வல்ல
குயிலருந்தமேகமபோங் குன்மவலிதீருந்
துயிலிலதிபோகமுறுஞ் சொல்.

(இ-ள்) மான்போலுங்கண்ணையுடைய பெண்ணே பத்தியத்திற்கான குயில்கறியையுண்ணில், வாதபயித்தியம்-புடை-பிரமேகம்-வயிற்றுவலி இவைபோம் வீரியவிருத்தியாம, (௧௭0)

கொக்குக்கறியின்குணம்,

கொக்கருந்தமேகமுண்டாங் கூடுமரோசகநோய்
மைக்குழலேபுண்கரப்பான் வந்துறையு-மெய்க்கு
நியத்தமருந்துண்ணிலித னீள்கவிச்சாகாது
வயிற்றுக்கிருமிபோ மால்.

(இ-ள்) கறுத்தகூந்தலையுடையவளே கொக்குக்கறியையுண்ணில்சீழ் மேகம்-அருசி-விரணம்-கரப்பான்-இவையுண்டாம்-புழுச்சாம்-ஔஷதங்கட்கு இவ்வாடை உதவாது, (கூஎக)

கருங்கொக்குக்கறியின்குணம்,

கருங்கொக்கின்றன்கறிக்குக் காணுக்கரப்பான்
மருங்கொக்கும்புண்ணும் வளரும்-பெருங்கிரந்தி
யுண்டாஞ்சிலேஷ்ம் முலவுமுடலமெலாம்
வண்டார்குழலே வழுத்து.

(இ-ள்) வண்டுமொய்க்கின்றகூந்தலையுடையவளே கருங்கொக்குக்கறிக்கு முன்பு இல்லாத கரப்பானும்-விரணமும் பருஞ்சிரங்கும் சரீரத்தில் நீரேற்றமும் உண்டாகும்-என்க, (கூஎஉ)

தாராக்கறியின்குணம்.

தாராக்கறியருந்தத் தாதுமிகவுண்டாகும்
பேராக்கபம்வளரும் பெண்மயிலே-தீராத்
வாந்தியரோசகமும் வன்கரப்பன்புண்ணுமிகச்
சேர்ந்துவருமிப்பலனைச் செப்பு.

(இ-ள்) மயில்போலுஞ்சாயலையுடையவளே தாராக்கறியையுண்ணில் சுக்கிலம்-சிலேஷ்மம்-வாந்தி-அருசிகடுவன்-சிரங்கு ஆகியவைகள்விருத்தியாகும் என்க, (கூஎ௩)

நாரைக்கறியின்குணம்.

நாரைக்கறியருந்த நாறுகரப்பான்புண்ணு
மூரைத்தொடர்ந்துதொடர்ந் தோட்டுங்காண்-பாரித்த
மேகமொடுவாதம வினையுமேசீழிவுக்
காகுமென்பார்களறி,

(இ-ள்) நாரைக்கறியைத்தின்னில், சீழ்க்கரப்பான்-கிரந்தி கபமேகம் வாதகோபம்-இவைஉண்டாகும அதிமூத்திரம போகும்-என்பர், ()

ஆள்காட்டிபட்சிக்கறியின்குணம்,

ஆட்காட்டிப்பகூதிக் கடன்மேகம்போயொளிக்குந்
தோட்காட்டுவாதந் தொடராவே வாட்கண்

ணரிவையபத்தியத்திற் காரும்புளியிற்
றெரியாமறைப்பில்லாமற் செப்பு.

(இ-ள்) வாள்போலுங்கண்ணையுடையவளே பத்தியபதார்த்தமான ஆட்டுக்கடாட்டிப்பட்சிக்கறிக்கு வாதப்பிரமேகமும் அமசரவாதரோகமும் ஒழியும்-என்க. (சுஎரு)

கிருட்டிப்பட்சிக்கறியின்குணம்,

மருட்டுவிழியுடைய மாதேபுவிக்குட்
கிருட்டிக்கறியருந்திற் கேளாய்-மருட்டுபித்தம்
வாதங்கடுப்பு வளருமிரத்தக்கழிச்சற்
காதம்போமவாந்தியறுங் காண்.

(இ-ள்) கிருட்டிப்பட்சிக்கறியையுண்ணில், பயத்தைத்தராநின்ற பயித்தியம்-வாயுவுங்கடுப்பு-இவையுண்டாம-ரத்தபேதியும்வமனமும்நீங்கும்

சூரைப்பட்சிக்கறியின்குணம்,

குட்டங்கிருமிகுன்மங் கோரவாதஞ்சோபை
துட்டம்பகந்தரந் துடைக்கும்-ஊரிட்டமுறப்
பத்தியத்திற்காகும் பருகிலுரிசையுமாங்
கைத்திடாச்சூரைக் கறி.

(இ-ள்) ருசியுள்ள சூரைக்கறி குஷ்டம்புழு வயிற்றுவலி மகாவாதம் வீக்கம-ஆறாவிரணம-பகந்தரம் இவைகளைநீக்கும-பத்தியத்திற்காகும்,

கிளுவைக்கறியின்குணம்.

பாலிலாமாதர்கட்குப் பாலுமுண்டாம்போகமுமாந்
தாலமிசைபித்தந் தரிக்குமோ-சாலச்
சிரங்குபுண்களெல்லாமே சிறுவற்றியாறு
மருங்கிளுவைபைத்தின் றறி.

(இ-ள், கிளுவைக்கறியைத்தின்னில் மாதர்க்கு முலைப்பால்விருத்தியும் அதிகவீரியமுமஉண்டாம பயித்தியமுமசிரங்குமவிரணமும்போம

மடையான்கறியின்குணம்.

அன்னநடைபின்றுவசனை யங்கண்மடமாதேகேள்
வன்னமடையானகறியை மாந்தினர்க்குத்-தின்று
கரப்பான்சொறிசிரங்குங் கானுமையகைத
முரப்பாகநீங் முறை..

(இ-ள்) அன்னம்போலும் நடையையும் பின்னற்சடையையு முடையவளே நடையான்கறியைபுண்டவர்க்கு-கடுவனும்-நமைக்கிரந்தியுமவனுக்குசிலேஷ்ம் வாதபித்தாந்தமும்-உண்டாகும்-என்க, (௯௭௯)

கூழைக்கடாக்கறியின்குணம்,

நெடுநாளினீரிழிவை நேராகக்கட்டு
மடலானசூலை கற்று-மடிவாருங்
கூழைக்கடாக்கறிதான் கோரகரப்பான்புண்ணை
யாழ்த்தேகத்திருத்து மாய்,

(இ-ள்) மடுக்களிலுள்ளகூழைக்கடாக்கறி நீடித்தவெகுநீரையும் கபச்சூலையையுநீக்கும்-வாதகரப்பனையும்-விரணத்தையும்-தரும், ( )

நமிட்டுப்பட்சிக்கறியின்குணம்,

நமிடுகரப்பான்வாத நாட்சோபைமாற்று
மமிர்தகுணமாமுரிசை யாகு-சமமுறைக்கி
லெல்லாக்கறிக்குமிது மின்பாகுமிக்கறிக்குப்
பொல்லாக்கயரோகம் போம்,

(இ-ள்) சகலகறிகளைப்பார்க்கிலும்ருசிக்குந்தன்மையுமமிர்தகுணமுமுள்ள-நமிட்டுக்கறி கரப்பான்-வாயுவீக்கம்-க்ஷயம்-இவைகளை நீக்கும்,

சிறவிப்பட்சிக்கறியின்குணம்,

வாராய்மடமானே வாதகபமுண்டாகுந்
தேராச்சிறவிதனைத் தின்றக்காற்-போராத்
தினவுகரப்பான்கிரந்தி சேருமோகாருந்
கனவுறுமியாமபோகங்காண்,

(இ-ள்) சிறவிக்கறியையுண்ணில் வாதசிலேஷ்மபீஸ்பமும் புணர்ச்சித்திடமும்-உண்டாம்-தினவும்-கரப்பானும்-கிரந்தியும் போகும், ( )

பொன்னாந்தட்டான்கறியின்குணம்,

மேகவழலனிலு மிக்கவழகுண்டாகும்
போகமிருங்கரப்பான் போகுங்காண்-பாகான
பொன்னாந்தட்டான் கறியைப் போற்றியுண்ணின்றசுவையா
மின்னாந்தேகமபுவியில் வின்

(இ-ள்) ருசியுள்ளபொன்னாந்தட்டான்கறியால் பிரமேகவெப்பும் கரப்பானும்போம் செழிப்பும்-வீரியமும்-தேஜசும்-உண்டாம், (௯௮௩)

கடல்இறஞ்சிக்கறியின்குணம்.

பக்தியத்திற்கொள்ளுமிந்தப் பாரிற்கடலிறஞ்சி
யுத்தமமாநோயனைத்து மோட்டுங்காண்-மெத்தக்

சொறிகரப்பான்வன்சிரங்கு தொன்மேகம்போக்கும
செறிநரைநீக்குஞ்சுவையாஞ் செப்பு,

(இ-ள்) பத்தியபதார்த்தமான கட்டிறஞ்சிக்கறி நரைகரப்பான்கிரந்தி நீடித்த பிரமேகம் பலிதநோய்முதலிய நோய்களையும் போக்கும்,

வெண்புறுக்கறியின்குணம்,

வெண்புறுவாதபித்தம் வீறுசபமேகமிவை
தின்புவியைவிட்டோடச் செய்யுங்காண்-பண்பரவு
வெண்குஷ்டநீள்கரப்பான் வெய்யறட்சியும்போக்கும
பண்புற்றபத்தியமான் பார்,

(இ-ள்) பத்தியத்திற்கான வெண்புறுக்கறி வாதபித்தியம் ஜலமேகம் விரணம்வெண்குஷ்டம் கரப்பான்-சொறி-இவைகளை நீக்கும. (௧௮௫)

பச்சைப்புறுக்கறியின்குணம,

இச்சைதரும்புன்முறுவ லேந்திழையேமாந்தர்மிகப்
பச்சைப்புறுவூன்பருகினுற்-கொச்சைதரும
வாதபித்த வையமபோ மாபல்முந்தாதுவுமா
மோதுசீதங்காக்கு முன்,

(இ-ள்) புன்னகையுடையபெண்ணே பச்சைப்புறுக்கறியையுண்ணில் திரிதோஷகொந்தமும பேதியும்போம தேகபுஷ்டியும வீரிய விருத்தியும உண்டாம, (௧௮௬)

மாடப்புறுக்கறியின்குணம,

உண்டாற்பசியா முறைதாதுவும்பெருகுங்
கண்டாலுமவாதங் கலங்குங்காண்-வண்டாருங்
காரின்மிகுமைக்கூந்தற் காரிகையேபத்தியமாம்
பாரின்மாடப்புறுவைப் பார்,

(இ-ள்) வண்டுகள்மொய்க்கப்பெற்ற கறுத்தகூந்தலையுடையவளேமாடப்புறுக்கறியால் தீபாக்கினியும சுக்கிலமும-பெருகும வாதப்பிரகோபமநீங்கும்—இது பத்தியக்கறியாம-என்க. (௧௮௭)

வரிப்புறுக்கறியின்குணம,

வரிப்புறுவின்றசையோ மாவருசிதின்முற்
றரிப்புறுவாதபித்தந் தானுமரிப்பான
சோபாரோகங்க டொராவெவர்களுக்கு
நீபாரிலதற்கு நேர்

(இ-ள்) உரிசையுள்ளவரிப்புருக்கரிமையத்தின்னில் வாயுவோடுகூடிய பித்தமும் பலவித வீக்கங்களும் போகும்-என்க, (௧௮௮)

வன்னப்புருக்கரியின்குணம்,

ஈளையிளைப்போடிரத்தபித்தம்போக்கிவிடும்
வாளைவென்றகண்ணாய் மலங்கழிக்குநாளுமோ
வன்னமூட்டும்பசிமூட்டும் மருசியோட்டுநல்ல
வன்னப்புருவைநுகர் வாய்,

(இ-ள்) வன்னப்புருக்கரி கோழைசுவாசம்ரத்தபித்தம அருசிஇவை களைநீக்கும-ஆசனஞ்செலுத்தும பசியைத்தரும மலந்தள்ளும, ( )

மணிப்புருக்கரியின்குணம,

* மணிப்புருவின்பக் களஞ்சியமேமெல்லாய்
மணிப்புருப்பத்தியமாம வாதப்-பிணிப்பறுமுட்
கொண்டாற்கயந்திருங் குன்மரோகங்களறுங்
கண்டாலுமையம்போங் காண்,

(இ-ள் பத்தியத்திற்குசவியான மணிப்புருக்கரியைத்தின்னில் வாதப் பிடிப்பு க்ஷயம வயிற்றுநோயகள் கபாதிக்கம இவைபோம், (௧௯௰)

மனைப்புருக்கறியின்குணம,

பத்தியத்திற்காகாது பன்மனைப்புருக்கறிதா
ஞெத்தகரப்பான்சொறியையுண்டாக்கு-மெத்தவுமே
நாவுருசியாயிருக்கு நற்சுக்கிலம்பெருக்குந்
தாவுகயல்விழியாய் சாற்று,

(இ-ள்) பாய்கின்ற கெண்டைபோலுங் கண்ணையுடையவளே நாவுக் குரிசையுள்ள மனைப்புருக்கறி மருந்தையழிப்பதுந் தவிர கரப்பான் சருமச்சொறி தாதுவிருத்தி இவைகளை உண்டாக்கும், (௧௯௧)

தவிட்டுப்புருக்கறியின்குணம,

ஓடுகரப்பான்சோபை யுட்சொறிகாமாலைபித்த
மாடுபெருமூச்சடைப்பும் போ-கீடு
கவட்டுக்கலகவிழிக் காரிகையேகாளுந்
தவிட்டுப்புருக்கறிக்குத் தான்,

(இ-ள்) வஞ்சநிறைந்த கண்களையுடையபெண்ணே தவிட்டுப்புருக்க றிக்கு பரவுகின்றகரப்பான் வீக்கம் உப்புறநமைச்சல் காமாலைபயித்தியம் சுவாசத்தடை இவைபோம்-என்க, (௧௯௨)

நீர்க்காக்கைக்கறியின்குணம்,

பாண்டோடுசோபை பருவயிறும்போங்கரப்பான்
மீண்டுசொறியும்விளையு மெய்த்தவளை-நீண்டமத
னார்க்காக்குமாதரசே யோங்குபுலானாற்றமுறு
நீர்க்காக்கைதன்னை நினை,

(இ-ள்) புலால்மணம் உள்ள நீர்க்காக்கைக்கறியால் பாண்டு-வீக்கம் மகோதரம்-இவைபோம்-கடுவனும்-தினவு உண்டாம் என்க, (௯௯௩.)

அண்டங்காக்கைக்கறியின்குணம்.

பித்தவெட்டைசோபையறும் பேதித்தெழுந்தடவி
லொத்தபெரும்பாண்டுவகை யோடுங்கா-ணித்தியமோர்
கண்டஞ்செய்காமிலம்போங் காக்கைக்குளோர்பிரிவா
மண்டங்காக்கைக்கறியாலாய்,

(இ-ள்) காக்கையில் ஒருபேதமுள்ள அண்டங்காக்கைக்கறியால் பித்தமேகம் வீக்கம் பாண்டுரோகங்கள்-காமாலை இவைபோகும், (௯௯௪)

கோட்டான்கறியின்குணம்,

கோட்டான்கறிக்குக் கொடும்பசியாநோய்கடலை
காட்டாதடங்குமிது கைவல்யம்-காட்டானை
மர்மதம்போற்காமமுறும் வன்மருந்திற்பத்தியமாம்
பூமியிலேயாவர்க்கும் போதி,

(இ-ள்) மயிலணைபாளை பத்திபத்திற்கான கோட்டான்கறிக்கு மிகு தீபனமும் சுக்கிலமும் அதிகரிக்கும் சிற்சிலநோய்கள்நீங்கும், (௯௯௫)

பறவைக்கறிவகைமுற்றியது,

## மீன்கறிவகை.

விரால்மீன்கறியின்குணம்,

உடலைவளர்க்கு முறுபிணியைத்தீர்க்குங்
குடலுக்கதிகசுகங் கொடுக்குங்-கடலை
யழைக்கும்விராலைவிட்டிவ் வூர்க்குளத்துச்சேற்றை
யுழைக்கும்விராலதனை யுண்,

(இ-ள்) குளத்துவிரால் பிணியைநீக்கி உடலைவளர்த்துக் குடற்குச்சுகந்தரும், (௯௯௬)

குறவைக்கறியின்குணம்,

முட்டுகுடல்வலிபோ மூடிருட்லேகுமலக்
கட்டுரக்கும்வாய்ருசி காணுங்காண்-முட்டக்

துறவைப்பெற்றோருந் துதிக்குமெழின்மாதே
குறவைமீனின்குணத்தைக் கூறு,

(இ-ள்) சந்நியாசிகள் புகழ்கின்றபெண்ணே குறவைமீனால் குடலுக்குள் ஓடிக்குக்குகின்றநோயும் காசமும்போம், பலபந்தமும அரோசகமும் உண்டாகும்-என்க, (கூகள)

அயிரைக்கறியின்குணம்

உயிரைவளர்க்கு முடற்பிணியைநீக்கு
மயிரைவளர்க்குமருசி மாற்றும்-வயிரச்
செயிரையுறச்சற்குணநற் றெள்ளமிர்தேநாளு
மயிரையெனு மீனது,

(இ-ள்) அமிர்தம்போன்றவளே அயிரைமீன் உயிருக்கு ஆதாரமாகிய சரீரத்தையும் ரோமத்தையுமவளர்க்கும் தேகசாட்டியத்தையும் அருசியையும்-நீக்கும், (கூகஅ)

இறால்கறியின்குணம்;

வாதமொடுமேந்தமுறு மாறுப்பொருமன்மிகுஞ்
சீதம்விளையுந் தினவுண்டா-மாதே
யுதிரமிகப்பெருகு மோங்குமிறாலுண்டா
லெதிரிலங்காக்கினிமா மெண்.

(இ-ள்) பெண்ணே இறால்கறியையுண்ணில் வாய்வு அக்கினிமாந்தம் வயிற்றுப்பிசம்சீதளம்ந்மைச்சல்ரத்தம்மாமிசதாது இவைவிருத்தியாம்,

கெண்டைமீன்கறியின்குணம்,

அண்டையினிற்பார்களுக்கு மாரோகிகங்காணும்
பண்டையுளநோய்முதிர்ந்து பாரிக்கும்-கெண்டையுண்டால்
வாயவுமுண்டாகும் வயிற்றுவலியுஞ்சேரு
நீயுமறிவாய் நிசம்,

(இ-ள்) கெண்டைமீனைப்புசிக்கினில் மிகுந்தஅருசி பழமையாயடங்கியுள்ள ரோகங்கள் வாதப்பிணி குன்மம் இவைகள் அதிகரிக்கும் - என்க,

சன்னக்கெண்டையின்குணம்,

மின்னைநிகருமிடை மெல்லியரேமேனியது
சன்னமீனுண்டாற் றளராவா-முன்னைக்
கரப்பானும்புண்ணுங் கடியகபமும்போ
முரப்பாகநாளு முணை,

(இ-ள்) மெல்லியரே சன்னக்கெண்டைமீனையுண்ணில் தேகத்தளர்ச்சி நீங்குவதுமன்றி கரப்பானும் விரணமும் சிலேஷ்மாதிக்கமும் விலகும்

பேராரால்கறியின்குணம்.

வாராய்மடமானே வந்தபிணியனைத்தும்
பேராரான்மீனுக்குப் பின்னிடையும்-பேரா
திருந்தபழமலம்போ மெய்துமாரோக்கிய
மருந்தோடேயொக்குமென வை,

(இ-ள்) மானனையவளே மருந்துக்குச்சமமானபேராரால்மீனுக்குதேகத்திலுள்ள பலவிதரோகங்களும் பழமலக்கட்டும் நீங்கிச்சவுக்கிய முண்டாகும். (௧உ)

சிற்றுரால்கறியின்குணம்,

சிற்றுரான்மீனருந்தச் சிக்குமலசலம்போம்
முற்றகபங்கரப்பா னுண்டாகுஞ் சற்றேதான்
மந்தமுறுந்தீபனம்போம் வாயிற்சலமூறுங்
கந்தமலர்ப்பூங்குழலே காண்,

(இ-ள்) மலரணிந்த கூந்தலையுடையவளே சிற்றுரால்மீனையுண்ணில் மலசலபந்தமும் பசியும்நீங்கும் சிலேஸ்மம் கரப்பான் - அக்கினிமந்தம் வாய்நீரூறல் இவையுண்டாம, (௧௩)

கச்சற்கருவாட்டுக்கறியின்குணம்.

வாதமறும்பொழுதே வன்பித்தமுண்டாகுஞ்
சீதமகலுந்தினவும்போங்-கோதாய்கேள்
கண்டாற்பசியெழும்புங் கச்சற்கருவாடு
கொண்டாற்சுரமும்விடுங் கூறு,

(இ-ள்) பெண்ணே கச்சற்கருவாட்டை யுண்ணில், வாதப்பிணி கபநோய் நமைச்சல் சுரரோகம் இவைபோம் - கப்பித்தமும தீபனமும் உண்டாகும, (௧௪)

உழுவைக்கறியின்குணம,

முழுதுமபுசிக்கலா முள்ளுமில்லாத
வுழுவைக்குடர்பிணி யிட்டோடும்-வழுவானா
முன்மலமுஞ்சாறு முதிர்கரப்பானுண்டாகும்
வன்முலையாய்நீயறிந்து வை.

(இ-ள்) வலியமொங்கையையுடையவளே முள்ளில்லாப்பதார்த்தமாகிய உழுவைமீனுக்கு சரீரத்திலுள்ள பலவிதநோய்களும பழையமலமுமபோம் கரப்பான்-உண்டாம, (௧௫)

வாளைக்கறியின் குணம்.

ஆளைவளர்க்குமதி யாண்மைதனையுண்டாக்கும்
வாளைவென்றகண்மாதே வாயுவாம்வேளை
யறியாமலுண்டா லனுகுமேவாதங்
குறியார்கள்வாளைக் குணம்.

(இ-ள்) வாழ்விழிமாதே வாதகுணமுள்ள வாளைமீன், தேகத்தைச் செழுமையாக்கித் தாதுவிருத்தியத்தைச் செய்யும்— அக்காலத்திற்புசிக்கில் வாயுவாம். (கூ)

சேல்கெண்டைக் கறியின்குணம்,

குடல்வாதசூலை கொடுக்குஞ்சேற்கெண்டை
யுடல்வாதமேகமுண்டாக்குஞ்-சடமீது
புண்ணுஞ்சிரங்கும் பொருந்திநிற்கச்செய்துவிடு
முண்ணமிகுசுவையா மோர்.

(இ-ள்) அதியுரிசையுள்ள சேல்கெண்டைமீன், குடல்வாதக்குத்தல் வாதப்பிரமேகம்-விரணம்-கிரந்தி-இவைகளை உண்டாக்கும் என்க.

கடல்மீன்கறிவகை.

கெளிற்றுக் கறியின் குணம்,

நெய்த்திருக்குநெய்த்திருக்கு நீங்காதசுக்கிலமா
மொய்த்திருக்கும்வன்கெளிற்றை யுண்டாக்கான்-மெத்தக்
கரப்பானுமபுண்ணுங்கபமும பெருகுந்
தனைக்குளெவருக்குஞ் சாற்று,

(இ-ள்) நெய்ப்பசையும-மிருதுவும-உள்ள கெளிற்று மீனையுண்ணில் ஸ்ரீவீரியமும- அரைக்கடுவனும-விரணமும-சிலேஷ்மமும-பெருகும,

ஓலைவாளைக்கருவாட்டுக்கறியின் குணம.

ஆலைவாய்ப்பித்த மனுகாதாமமபுவியி
லோலைவாளைக்கருவா டுண்டக்காற்-சாலப்
பசியாரும்பஞ்சாய்ப் பறக்குமேவாதம
புசியார்க்கிதனைப் புகல்.

(இ-ள்) ஓலைவாளைக்கருவாடுண்ணில், விஷத்தைச் சேர்த்தப் பயித்தியமும வாதப்பிணியும-நீங்கும, விரைவில்தீபனம-உண்டாம-என்க, ()

சுறுக்கறியின் குணம.

வாதகபமறுக்கு மன்னுகிடை[illegible]க்கு
மூதுகுடல்வாத மோடுங்கா-ணூதாவா

யெல்லாப்பிணிக்கு மிதமாகுநல்லசுரு
நல்லா யறிய நவில்,

(இ-ள்) நல்லசுருமீன்கறி, வாதகபதொந்தம்-கிருமிநோய்-குடல்விரு த்தி இவைகளை நீக்கும், சகலபிணிகளையுஞ் சாந்தப்படுத்தும்-என்க,()

சுருக்கருவாட்டுக் கறியின்குணம்,

சூலைகிராணிகுன்மங் நுட்டவதிசாரமிவை
வேலையுலகை விடுத்தோடுஞ்-சால
வுருப்பசியுண்டாகு மபத்தியமல்லாத
சுருக்கருவாடுண்பார்க்குச் சொல்,

(இ-ள்) பத்தியக்கறியாகிய சுருக்கருவாட்டையுண்பவர்க்கு சூத்தல் கிரகணி-வயிற்றுநோய்-வாதாதிசாரம்-இவைநீக்கும், மிகுதீபனம்ஆம்,

கொள்ளிக்கருவாட்டுக் கறியின் குணம்,

கொள்ளிக்கருவாடு கொண்டாலுடம்பெல்லாங்
கொள்ளிகொண்டுகட்ட குறிப்பாகும்-விள்ளக்
கரப்பானும்புண்ணுங் கனசிரங்கும்பைய
வுரப்பாமழுகெடு முன்,

(இ-ள்) கொள்ளிக்கருவா டுண்ணில், உடலிற்றீப் பட்டாறிய வடுப் போற்றழும்பு-கரப்பான்-விரணம்-கிரந்திஇவைபெருகும் அழுகுநீங்கும்

சன்னக்கூனிக்கறியின் குணம்,

சன்னக்கூனிக்கறியைத் தானருந்திலக்கணமே
தின்னப்படுமன்னஞ் சீரணமாம்-பின்னும்
பசிக்குமதிநெருப்பாம் பாரிதேயெல்லா
நசிக்குமெனவே நவில்,

(இ-ள்) மிகுசூடுள்ளசன்னக் கூனியைத்தின்னில் விரைவில் அசீர ணமாவதுந்தவிர, உடனேபசியுண்டாகும்-வாதமந்தநோய்நீங்கும். ()

திருக்கைக்கறியின் குணம்,

வாதமொடுதாதுவும் வளர்ந்துள்ளேசேருமென்று
மோதுபித்தஞ்சோபமிவை யோடுமென்றுங்-கீதஞ்
செருக்கையடைவாள் திருக்குமொழிமாதே
திருக்கைதினன்பார்க்குச் செப்பு,

(இ-ள்) இனியமொழியாளே திருக்கைமீனைத்தின்பவர்க்கு, வாதநா துவும்சுக்கிலநாதுவும்-அதிகரிக்கும் பயித்தியமும்-வீக்கமும் - நீங்கும் என்க. (௧௰௪)

மடவைக்கறியின் குணம்,

மடவைமீன்வாதமொடு மந்தமுளைமூலங்
குடல்வாதந்நூலே கொடிய-வுடற்கரப்பா
னுண்டாக்குமாமிசக்க ளூறுமுலகத்தில்
வண்டார்க்கும்வார்குழலே வாழ்த்து,

(இ-ள்) நீண்டகூந்தலையுடையவளே-மடவைமீன்வாதப்பிணி - அக்கி னிமந்தம் மூலமூளை-ஆந்திரபித்தவாதம்-கடுவன்-இவைகளைத்தரும்மா மிசம் விருத்தியாம். (௧௰௫)

சுரும்பக்கறியின்குணம்,

சுரும்புமீன்பத்தியமாய்ச் சொல்லுவாருள்ளி
லுகும்பிணியையெல்லா மகற்றும்-பெரும்போகந்
தீபனமுண்டாக்குமது தின்னச்சுவைகொடுக்குந்
தோபனமின்றாரசே சொல்,

(இ-ள்) பெண்கள்நாயகமே-உரிசையுள்ள சுரும்புமீன் வயிற்றுப்பி ணிகளைநீக்கும்-வீரியத்தையும்-பசியையும்-தரும்- பத்தியத்திற்குதவும் என்பர். (௧௰௬)

உல்லமீன் கறியின்குணம்,

உல்லமெல்லாஞ்சன்னவெலும் போவியமேயிக்கறிதா
நல்லகறியாகநன்னா காணுமுன்டால்-மெல்லக்
கழிச்சல்பிளவையெர்ப காணுக்கடியும்
விழிச்சுக்கொண்டாடு மெனவிள்.

(இ-ள்) சித்திரமனையவளே மெல்லியமுட்களுள்ள நல்லபதார்த்தமா கிய உல்லமீனையுண்ணில், பேதியும்-விரணமும்-காணுக்கடிவிஷமும்-அ திகரிக்கும்-என்க, (௧௰௭)

கற்றளைமீன் கறியின்குணம்,

கற்றளைமீன்றன்னைக் கருதிநிதமுண்பாருக்
குற்றவயிற்றூ வுறுமியெழுந்-சுற்றொழியாய்
பேதியெடுக்கும் பிறகுகரப்பானெழியுஞ்
சாதிமடமயிலே சாற்று.

(இ-ள்) மயிலையொத்தவளே-தினமுங்கற்றளை மீனையுண்பவர்க்கு ரு, டலிரைச்சலும்மாருநகழிச்சலும் உண்டாகும்-கரப்பான்-விலகும்-என்க

வெள்வவ்வால் கறியின்குணம்,

வெள்ளைவவ்வாறன்னை விரும்புநிதமுண்பார்க்குத்
தள்ளுகின்றபித்தந் தரிக்குமோ-துள்ளி
வருங்கரப்பானேகு மயிலேபுவியி
லருமபத்தியமா மறி.

(இ-ள்) மயிலையொத்தவளே வெள்ளைவவ்வால்மீனைத்தினமும்விரும்பி த்தின்பவர்க்கு பித்தமயக்கமும்கடுவனும்போம் - இது பத்தியத்திற்கும் ஆகும் என்க, (தயகு)

கருவவ்வால் கறியின்குணம்,

செங்கரப்பான்மேகஞ் சிறுசிரங்குமுண்டாகும்
மெங்கொடியகீரிழிவும் விர்த்தியாங்-கொங்கைகளிற்
பாலூறுமெத்தப் பருகிற்கருவவ்வான்
மேலுறும்போகம் விறி.

(இ-ள்) கருவவ்வாலமீனைத்தின்னில், செங்கரப்பான்பிரமேகம்சிறுசி ரங்கிவெகுமூத்திரம் வீரியவிருத்திமுலைப்பால் இவையுண்டாம்-என்க,

நெய்த்தோலிக் கறியின்குணம்,

மந்தமுறுந்தீபனம்போம் வாயிலைப்புமுண்டாகுந்
தொந்தமுறுவாதபித்தந் தோன்றும்பின்-னெந்தே
வயிறும்பொருமும் வலியநெய்த்தோலிக்குத்
துயரமிகுமிதனைச்சொல்.

(இ-ள்) நெய்த்தோலின்மீன்கறிக்கு அக்கினிமந்தம் அரோசகம் வாத பயித்தியம் வயிற்றுப்பிசமுதலிய்துன்பம் உண்டாம் பசிகெடும். ()

மயறிமீன் கறியின்குணம்.

மயறிசரப்பானையும் வாதபித்தத்தோ
யெருகின்றசோபமொழிக்கு-மியமா
புதரத்தினுள்ளு முறைவாதம்போக்கும்
பதியிலதனைப் பகர்,

(இ-ள்) மயறிமீன்கறி கரப்பான் சுபம வாதபயித்தியம் மூர்ச்சைவயி ற்றில் தங்கிய விகுணவாதம்இவைகளைப்போக்கும் என்க. (தஉஉ)

விலாங்குமீன்கறியின் குணம்,

விலாங்குமீன்றன்னை விரும்பிமிகவுண்டாற்
குலாங்கிஷமாயையங் குலாவு-மிலங்குருசி
போகமொடுசொறியும் புண்கரப்பனுக்கிருக்கு
மோகனகதமொ குறி,

(இ-ள்) இலட்சுமியொத்தவளே விலாங்குமீனை அதிகமாகத்தின்றால் கபாதிக்கவும்-அரோசகம் தாதுவிருத்தி-தவளைசொறிவிரணம்-கடுவன் இவைஉண்டாம், கிழங்கான்மீன்கறியின் குணம், (தஉரு)

பத்தியத்திற்கேற்ற பருங்கிழங்கான்மீனருந்த
வுற்றபிணியனைத்து மோடுங்காண்-மெத்தப்
பசியெழும்புஞ்சேர்ந்த பழமலமுஞ்சாறு
முசியாதுடல்வளரு முன்,

(இ-ள்) பத்தியத்திற்கான கிழக்கான்மீனைத்தின்னில், சகலபிணிகளு ம் பழயமலச்சிக்கலும்-போம்-தீபாக்கினியும்-தேகச்செழுமையும்-ஆம்.

ஆற்றுமீன்-கிணற்றுமீன்-கறிகளின்குணம்,

ஆற்றுமீன்காதுவையுண்டாக்கு மையமெப்பத்தை
யூற்றுமருசியை விட்டோட்டுங்காண்-சாற்றுங்
கிணற்றுமீன்வாதகுன்மங் கீறுபித்தங்குஷ்டம்
பணைத்தபிலீகங்கொடும் பார்.

(இ-ள்) ஆற்றுமீன். வீரியவிருத்தியைச்செய்யும் சிககாரத்தையுங்கா வில் சுரக்கின்ற அரோசகநோயும்போக்கும்-கிணற்றுமீன், வாயுகுன்ம ம்-பயித்தியம்குறைநோய்பிலீகரோகம்-இவைகளை உண்டாக்கும், ()

மடு-குளம்-ஏரி-இவைகளிலுள்ள-மீன்கறியின்குணம்,

ஓடுமடுமீனாலுலவை பித்தங்களறுங்
காதுமேகங் கபமந்தங்களுண்டா-மோதுகுள
மாருமீன்றன்னா லழற்பிணிமந்தாதீரு
மேரிமீன்மேகமடுமென்,

(இ-ள்) மடுமீனால் வாயுவும்-பயித்தியமும்-போம் - சுக்கிலப்பிரமேக மும் சிலேஷ்மமும்-அக்கினிமந்தமும்-உண்டாம் - குளத்துமீனால், கா மும் அலஜரோகமும்விலகும் - ஏரிமீனால், பிரமேகம் நீங்கும், (தஉசு)

கடல்நண்டுக் கறியின்குணம்,

குன்மவலிவாதங் கொடுங்கரப்பானுண்டாக்குஞ்
சன்பச்சொறியைத் தருவிக்கும்-பின்னு
முகிரக்கழிச்சறனை யோங்குவிக்குமாதே
யகிரக்கடனண் டது,

(இ-ள்) பெண்ணேகடல்நண்டுக்கறி, வயிற்றுநோய்-வாதகோபம் கு டுவன் சருமச்சொறி ரத்தகிரகணி-இவைகளை உண்டாக்கும்-என்க. ()

வயல்நண்டுக் கறியின்குணம்

வயலிநண்டருந்த வாதக்குடைச்ச
வயலின்ஆ பிந்காதணம்கே-[illegible]

(இ-ள்) சுக்கினால், விலாக்குத்தல்-அசீரணம்-மார்பெரிச்சல்-தோஷகுணம் புளியேப்பம்,வெப்பம்-ஆசனரோய் சுவாசம்-காசம் - ஜலபீனசம் நீரேற்றம்-பேதிவாதகுன்மம்-ஜலதோஷம்-சீதகிரகணி-வாதரோய்- வயிற்றுப்பிசம் செவிக்குத்தல்-முகரோய்-சிரரோய் சூலைவலி- கபஸ்ராவம் சீதபேதி பலவித அரோசகம்- அவிமுகப்பாண்டு -வயிற்றுக்குத்தல்-கபசீதசுர-முதலியசுரரோகங்கள்-ஆகிய இவைநீங்குமென்று சொல்லுவார் ஆயினும் இதனால் உண்டாகும் ஆரோக்கியத்தைக்கருதுமிடத்தில் இந்நோய்க்குதவும்-இந்நோய்க்குதவாது என்னும் நியதியில்லாமையால், சகலரோகங்களுக்கும் உபயோகப்படத் தக்கதாம் என்க, (தஙக)

தேரையர் கூறிய இப்பாடலில், மொழிகுவர்-எனக்குணபாடங்களைக் கூறிய ஏனையோரைப்பிரித்தால்-உன்னிப்பார்க்கில்-இந்நோய்க்குதவும் இந்நோய்க்குதவாதெனும் விதியில்லையென்றும்-சொல்லியிருப்பதைநோக்கில், இச்சுக்குதிரிமூர்த்திகள் சொரூபமென்று சொல்லும் திரிகடுகத்தின் முதன்மருந்தாயும் ஆயுள்வேதியர் கையிலெடுக்கும் ஆயுதமாயும் சிருட்டிகர்த்தாவாகிப் பிரமனைத்தனக்கு அதிதேவதையாய்ப் பெற்றிருப்பதாயும்-பிரமகுலமாயும்-பாகபேதங்களினால் அனந்த ஔஷத ரூபங்களாயும்-மகௌஷதம் என்றும்-சஞ்சீவியின் பேராகியகோடதகம் என்றும்,நாமங்களைக்கொண்டிருப்பதாயும்-தேவாராதனைக்கும்உபயோகப்படுவதாயும்இருபத்தினால், சகலரோகங்களையும்-போக்கும்-எ-று-கருத்து,

தே—மிளகின் குணம்.

சீதசுரம்பாண்டு சிலேஷ்மங்கிராணிகுன்மம்
வாதமருசிபித்த மாமூல-மோதுசந்நி
யாசமபஸ்மார மடன்மேகங்காசமிவை
நாசங்கறிமிளகினால்கறி மிளகு.

தே—இதுவுமது,

சோணுகின்றபக்கவலி குய்யரோகம்வாத
கோணிதங்கழுத்திற்குட் குட்டோன்றுநோய்-காணரிய
காதுநோய்மாதர்குன்மங் காமாலைமந்தமென்றீ
ரேதுநோய்காயிருக்கி லீங்குகாய்மிளகு.

(இ-ள்) மிளகினால், குளிர்ச்சுரம்-பாண்டு-கபம்-கிரகணி-குன்மம்-வாயு அரோசகம்-பயித்தியம்-மூலம-சந்நியாசம - அபஸ்மாரம-பிரமேகம

(இ-ள்) திப்பிலியால், காசம், கபகுன்மம், சுவாசம்-க்ஷயம்கோழை பாண்டு சந்நியாசம்-அருசி-வயிறுப்பிசம்-வாயு-சிரஸ்தாபம் - மூர்ச்சை நீரேற்றம்-பிலீகநோய்-அதிசாரம்-பெருவயிறு-திரிதோஷம்-நடுக்கல் சுரம்-மேகக்கட்டி-குகரோகம்-நெஞ்சுநோய்-ஆவிருதபித்தம் பீநசம்-விழிநீர்க்கம்மல்-கர்ணநாதம்கிருமி-முகத்தில் எழும்புகின்ற கறுத்தமச்சமறும். யானைத்திப்பிலியின் குணம், (௧௩-அ)

வாதம்றுந்தீபனமா மாருக்கபங்கரப்பா
னேதுகுரற்கம்மலிவை யோடுங்காண்-பூதலத்திற்
சோனையைநேர்நாசியினீர் தோலாச்சுவாசமும்போம்
யானையினற்றிப்பலியா லாய்,

(இ-ள்) யானைத்திப்பிலியால், வாதகோபம்-சிலேஷ்மம் கரப்பான் சுரசாதரோகம-நீர்ப்பீநசம் இரைப்பு இவைநீங்கும் தீபனம் உண்டாம்,

திப்பலிமூலத்தின் குணம்,

காகபித்தஞ்சோகந் தணியர்ச்சுரமிருமன்
மேகங்குரற்கம்மன் மெய்க்கடுப்பு-மேகுங்காண்
திப்பலிமூலங்கண்டத் திப்பதியதாநறுக்குத்
திப்பலியென்றேயொருகாற் செப்பு, •

(இ-ள்) திப்பலிமூலத்திற்கும, பித்ததாகம-மூர்ச்சை-சந்தசுரம-காசம பிரமேகம சுக்கிலரோகம-சரீரநோவு இவைபோம திப்பிலிமூலமகண்டத்திப்பிலி நறுக்குத்திப்பிலி-நறுக்குமூலம-தன்மூலம எனநாமமாம,

தே,-திரிகடுவின குணம,

முக்கடுகொலாசியநோய் மூலங்கொடிறுபிணி
திக்கடுபாண்டோடு சிரத்துறுநோ-யக்கடுக்குந்
தாவரநஞ்சென்றலகிற் சாற்றுகிறநோய்முழுதுந்
தீவரநஞ்சுண்டிறக்குந தேர்,

இதுவுமது,

திரிகடுகாற்சீதபித்தஞ் சிக்குலைநோய்கீட
மெரிகடுதேளீளை யிருமன்முடுக்கு-சந்நி
யாசம்பிசி யபஸ்மாரமற்புதப்புண்
வீசுசர்க்காநோய்போம வின்,

(இ-ள்) திரிகடு-என்பது, சுக்கு-மிளகு-திப்பிலி-ஆம - இவைகளால் ஆறிய வாதங்கள்-குதாங்குரம கர்ணரோகம பாண்டு-சிரஸ்தாபம-உஸ்

தியைப்பற்றிய தாவரவிஷம-கப்பித்தமசிரவாகண்டம ஒருமிமேகா சர்ப்பவிஷம-தேள்விஷம-கோழை-காசம-சக்கியாசம-அரோசகம் - அபஸ்மாரம-அற்புதவிரணம-நாடிவிரணம-இவைவிலகும, (தசஉ)

கடுக்காயின்-சிறப்பு,

கடுக்காயுந்தாயுங் கருதிலொன்றென்றாலுங்
கடுக்காயத்தாய்க்கதிகங் காணீ-கடுக்காய்நோ
யோட்டியுடற்றேற்று முற்றவன்னையோசுவைக
ளூட்டியுடற்றேற்று முவந்து,

(இ-ள்) கடுக்காயுந்தாயும் ஒன்றென ஒருவாறு நினைந்தாலும் தாயைப்பார்க்கினும் கடுக்காயே அதிகமாம், ஏனெனில், கடுக்காயனது பிணிகளை நீக்கிச் சரீரத்தைத்தேற்றும், தாயானவள், அறுசுவை உணவை ஊட்டி யுடலைவளர்ப்பாள்-எனக, பிணிகளைநீக்கினலல்லவோ உணவு பயன்பட்டு உடல்தேறும் என்னும் வகையறியாமல் உணவைமாத்திரம் ஊட்டுந் தன்மையுடையவளாதலால் அத்தாயினும் கடுக்காய்சிறந்ததெனக் கூறினர். தே,-கடுக்காயின் பொதுக்குணம், (தசங)

தாடைசமூத்தக்கி தாலுசூறியிவிடப்
பீடைசிலிபதமுற் பேதிமூடம்மாடையெட்டாத்
தூலமிடிபுண்வாத சோணிகாமாலையிரண்
டாலமிடிபோம் * வரிக்காயால் * வரிக்காய் கடுக்காய்,

(இ-ள்) கடுக்காயினல்-கன்னம்-களம்-கண்-நா-ஆண்குறி - இவ்விடத்துநோய்கள் பாதவன்மீகம்-அதிசாரம்-பங்குவாதம்-அதிதூலம்-இடிப்புண்வாத சோணிதவாதம்-காமிலம்-தாவரசங்கம்விஷங்கள்-இவைபோம்

தே,-கடுக்காய்ப்பிஞ்சின் குணம்,

*வன்துர்க்கிச்சேய்க்கு மணித்தயிலம்பூசி
யனலிற்பொரித்தாங் கருந்தத்-தினமுமலச்
சிக்கமலக்கடுப்பகின்ற சீதமறுங்காற்றுகைத்த
முக்கலக்கடுப்பிருக்குமோ*வனதுர்க்கிகடுக்காய்மரம்,

(இ-ள்) கடுக்காய்ப்பிஞ்சுக்கு-ஆமணக்குநெய்தடவித் தீயில்வறுத்துத் தூள்செய்து அப்போதே உண்டால்-மலச்சிக்கலும்-எலும்பைப்போலவெளுத்துநின்ற சீதமும் நீங்கும்,-மூலவாயுவினல் பிறந்த முக்கலும் ஆசனக்கடுப்பும் இருக்குமோ-இராதென்பது-கருத்து, (தசஙி)

கடுக்காயின் பேதம்.

ஆதிவிசயனரோகினி யோடேபிருதிவி
திதிலமிர்தை சிவந்திமலே-மீதார்
திரிவிருத்தியபயன் செப்பிலிவையேழா
மரிதகியின்பே தாறி,

(இ-ள்) கடுக்காய், எழுவகைப்படும். அவையாவன விஜயன் அரோகிணி-பிரிதிவி அமிர்தை-சிவந்தி-திரிவிருத்தி-அபயன்-என்பனவாம். ()

க-வது-விசயன் என்னும் கடுக்காயின்குணம்.

விசயனெனுங்கடுக்காய் வீரியத்தைச்சொல்வோ
நிசமதுதான்வாதத்தை நீக்கு-மிசையுரைக்கப்
பேய்ச்சுரைக்காய்போலிருக்கும் பேரவந்தியாதேசம்
வாய்ச்சிருக்குமாக்காயை வாழ்த்து,

(இ-ள்) பேய்ச்சுரைக்காய் குறியுள்ள விஜயன் என்கிற கடுக்காய்வாதரோகத்தைப்போக்கும் இது அவந்தியாதேசத்தில் உற்பத்தியாம். ()

உ-வது-அரோகணிக் கடுக்காயின் குணம்,

ஓதுமரோகிணிக்கா யொன்றுண்டானுற்சந்நி
பாதமொடுசீதம் பறக்குங்காண்-மீதுகுறி
நான்குவரியாய்த்தோற்று நங்காயதன்றேச
மாங்குகன்னியாகி மரியாம்,

(இ-ள்) கன்னியாகுமரித்தேசத்தில் பிறக்கின்ற அரோகணிக்கடுக்காயால் சந்நிபாதமும்-சீதமும்-நீங்கும், இதன்மீது-௪-வரைபோல்றகுறியிருக்கும், ௩-வது-பிரிதிவிக்கடுக்காயின்குணம். (தசஅ)

தோற்றும்பிருதிவிதான் சூலைப்பயித்தியத்தை
மாற்றும்வயதை வளர்க்குமதன்-மேற்றோலோ
மெல்லியதாமக்காய் விளைதேசமேதென்னில்
வல்லசவுராட்டிகமாய் வாழ்த்து,

(இ-ள்) மெல்லியதோலுள்ளபிரிதிவிக்கடுக்காய், பித்தநோயைநீக்கும், ஆயுளைவிருத்திசெய்யும், சவுராஷ்டிகதேசத்தில் உற்பத்தியாம், ()

௪-வது, அமிர்தக்கடுக்காயின் குணம்,

அமிர்தமெனுங்கடுக்கா யம்புவியிலுள்ள
இமிர்தசிலேட்டுமத்தைத் தீர்க்கும்-வமிதச்
சதைப்பற்றுண்டாயிருக்குஞ் சாற்றிலதன்றேசஞ்
சுதி௫ரொத்தகாசியென்பார் காண்,

(இ-ள்) விம்மித்தசைமிகுந்துள்ள அமிர்தக்கடுக்காய், கண்டத்தில்ஒரு ஒலியைத்தருகின்ற கபத்தைஒழிக்கும்,-காசிதேசத்தில் உற்பத்தியாம்.

ரு-வது, சிவந்திக்கடுக்காயின் குணம்,

சிவந்தியெனுங்கடுக்காய் செய்குணத்தைக்கேள்வாய்
விவர்ந்தமூலத்தையெலா மேய்க்குஞ்-சிவந்ததிகப்
பொன்னிறமதாயிருக்கும் பூங்குழலேயக்கடுக்காய்
துன்னுவனந்தோறுமுண்டாஞ் சொல்,

(இ-ள்) மலரணிந்த கூந்தலேயுடையவளே மிகுசிவப்பும் தங்கச்சாயலும் உள்ள சிவந்திக்கடுக்காயானது, வாதமூலரோகங்களை விலக்கும் இது, வனங்களில் உற்பத்தியாம், (தருக)

சா-வது, திரிவருத்திக்கடுக்காயின்குணம்-இதுவே-மொந்தன்,

திரிவிருத்திக்கடுக்காய் தேகத்திறனும்
வருவிரணம்போக்குமதன் வன்ன-மொருவிதமோ
பஞ்சவன்னமூவரம்பு பற்றியிருக்குமது
விஞ்சுமலைதோறுமுண்டாம் விள்,

(இ-ள்) வெண்மை-கருமை-செம்மை-பசுமை-மஞ்சள்-என்னும்பஞ்சவன்னமும்-மூன்றுவரியும் உடைய திரிவிருத்திக்கடுக்காய், சகலவிரணங்களையும் நிவர்த்திசெய்யும்-இதுமலைகளில் உற்பத்தியாம், (தருஉ)

எ-வது-அபயன்என்னும் கடுக்காயின் குணம்,

அபயெனனுங்கடுக்கா யக்கநோயெல்லா
மபயமிட்டோட வடிக்கு-மபயக்
கதிகந்நிறக்கறுப்ப தாகும்விளைபூமி
பொதியமலையாம் புகல்,

(இ-ள்) கருமைநிறத்தையுடைய அபயன்கடுக்காய் எலும்பைப்பற்றிய ரோகங்களையெல்லாம்-நீக்கும்-இதுபொதியமலையில் உற்பத்தியாம்.

(இனி-சங்கரசாதிக்கடுக்காய்-நான்குபேதத்தையுங்கூறுவாம்)

க-வது, கருங்கடுக்காயின் குணம்,

பழமலத்தைப்போக்கும் பகரினுடலுக்
கழகுதரும் புத்தியளிக்கும்-பழகி
மருங்கடுத்தவாதபித்த வன்கபத்தைத்தீர்க்குங்
கருங்கடுக்காயென்றுளத்திற் காண்,

(இ-ள்) கருங்கடுகாயாவதுபழயமலக்கட்டையும் திரிதோஷரோகங்களையும்போக்கும்—அழுரையும அறிவையும்-கொடுக்கும் ()

உ-வது செங்கடுக்காயின் குணம்,

சுத்தியொடுபுத்திசுகமும்புகழுமுண்டா
மெத்தவொளிர்பொன்னிறமாமேனியெல்லாஞ்சுத்தகப
வங்கடுத்தவினைபலவன்காசமுமகலுமுந்
செங்கடுக்காய் ... லையெனத்தேர்

(இ-ள்) செங்கடுக்காய்க்கு,மலாசயச்சுத்தி அறிவு-இன்பம்கீர்த்திசரீரத்தில்பொற்சாயல்- ஆகியஇவைகளில்உண்டாம் - தனிச்சிலேஷ்மக்கோழைபலவிதஇருமல்-மலக்கட்டு ஆகியஇவைவிலகும்என்க ()

ந-வது வரிக்கடுக்காயின் குணம்,

மிடுக்காக்குந்தேகத்தைவிந்துவையுண்டாக்குந்
சடக்கெனவேவ்யுண்டியையுட்சாடுந்துடிக்கான
வாதபித்தவையகற்றும் வன்னியொடுநவ்விதருந்
சாதிவரிக்கடுக்காய் தான்,

(இ-ள்) வரிக்கடுக்காய், தேகபுஷ்டி-தாதுவிர்த்தி-அசனஜிறணம் சடராக்கில்-அழகு இவைகளையுண்டாக்கும் - திரிதோஷங்களை நீக்கும்,

ச-வது பால்கடுக்காயின் குணம்.

ஆமங்கெடுங்காணழகும் பொலிவுமிகுந்
சேமம்பெறுமலமுஞ்சேருமே தாமனெடும்
வேர்க்கடைக்கண்கும்பமுலை மெல்லியலேயெப்போதும்
பாற்கடுக்காயுண்பவரைப் பார்,

(இ-ள்) மெல்லியலேபால்கடுக்காயால்சீதகிரகணி-நீங்கும்-வனப்புதேஜசுவன்மைஇவை-விருத்தியாகும்-சங்கராதிக்கடுக்காய்சமம்முற்றியது

தே-நெல்லிமுளேயின்குணம்,

ஆகவனலஞ்சசியசிர்க்கென் புருக்கிகண்ணோப
தாகமுதிரபித்தந் தாதுநட்டம்-மேனகத்தி
னில்லிமுள்ளிபோலருக லெண்காமியவியங்க
நெல்லிமுள்ளியாற்போ மினே.

இதுவுமது.

நல்லநெல்லிமுள்ளியது நாவுக்குரிசைதரு
மல்லல்விரிபித்த மகற்றுமதை-மெல்லத்

தலைமுழுக்கண் குளிர்ந்தாவு பித்தவாந்தி
இலைபிழி மேகங்களும்போ மெனு,

(இ-ள்) நாவுக்குரிசை தாராநின்ற நெல்லிமுள்ளியால் உட்சூடு சோம ரோகம்-மாதர்கள்ருதுதோஷம் அஸ்திசிராவம் தூம்பிரமதகம்-ரத்த பித்தம்-விம்மிக்ஷீணப்-மூத்திர அருகல்-ஆண்குறிக்கொப்பிளம் பயித்தி யம் பித்தவாந்தி-பிரமேகம் ஆகிய இவைகள் விலகும்-இதை அரைத் மிச்சிரசுக்கிட்டுமுழுக நேத்திரம் குளிரும் யென்க, (தகசுஅ)

தே-தான்றிக்காயின்குணம் இது-தாணிக்காயெனமருவியது,

சிலந்திவிடஞ்சாமியப்புண் சீழானமேகங்
கலந்திவரும்வாதபித்தங்காலோ-டலர்ந்தடலீ
ஆன்றிக்காய்வெப்பமுதிர பித்துங்கரக்குந்
தானறிக்காய்கையிலெடுத் தால்,

இதுவுமது.

ஆணிப்பொன்மேனிக்கழகு மொளிவுமிகும்
கோணிக்கொள்வாதபித்தக் கொள்கைபோந்தாணிக்காய்
கொண்டவர்க்குமேகமறுங்கூறு வனற்றணியுங்
கண்டவர்க்குவாதம்போங்காண்,

(இ-ள்) தான்றிக்காயால் சிலந்திவிஷம்-ஆண்குறிக்கிரந்தி - சீழ்ப்பிர மேகம் திரிதோஷசுரம்-ரத்தபித்தம்-வாதபித்தகொந்தம் பித்வநீர்-உட் சூடுவாதகோபம் இவைபோம்-அழகும் ஒளியும்உண்டாம், (தகசுக)

தே-திரிபலத்தி அகுணம் இதுவே- கடுநெல்லி-தாஅறி,

வித்திரதிரசிநோய் வெண்குஷ்டபூராசனப்புண்
குற்றிருமல்பாண்டுகுஷ்டங் குன்மமிரைப்பெற்றுமத
மூர்ச்சைபிலீகம் பிரமிமோடுறுபுண் சர்வவிட
மூர்ச்சையறுமுப்பலத்தான் முன்,

(இ-ள்) திரிபலத்தால், வித்திரி-பீநசம்-வெள்ளைக்குஷ்டம்-பகந்தரம் புகையிருமல் பாண்டு-பெருவியாதி-குன்மம்-சுவாசம்-மதரோகம் மூர் ச்சைபிலீகக்கட்டி பிரமேகம்-வயிக்லுநோய்-விரணம்-சாப்பகீட விஷங் களால்வந்தகோபம்-ஆகிய இவைநீங்கும் யென்க, (தகசுஉ)

தே-பேரீச்சங்காயின்குணம்-இதுவேகர்ச்சூர்க்காய்,

வாயிலுண்டாமுற்றறலைமாற்றும் பசியில்லை
யாயிலுண்டாலுண்டாமதுமேக-நோயுங்
பெருநீர்மறுக்குமீளும் பெண்களைக்கூடுங்காற்
றருநீர்மைகர்ச்சூரக்காய் தான்,

(இ-ள்) பேரீச்சங்காய் உமிழ்நீர்ப்பெருக்கையும் மதுநீரையும்போக்கும் பசியையும் புணர்ச்சியில் திறுவாகத்தையும் உண்டாக்கும்-என்க,

தே, கண்டுபாரங்கியின்குணம்-இதுவே-சிறுதேக்கு விருத்தம்,

கண்டுபாரங்கியெனுஞ் சிறுதேக்குண்டேற்
காலெங்கேபித்தமெங்கே கபந்தானெங்கே
தொண்டுதொட்டுத்தொண்டர் சுவாசகாசமெங்கே
சுரமெங்கேவெறியெங்கே தொனிநோயெங்கே
மீண்டுபுரிபீநசநீர்க் கோவையெங்கே
வெளிநீருண்ணீரிங்கே விரற்காலெங்கே
யண்டுபடாச்சீதசுரங் கடுப்புமெங்கே
யழலையகநோயெங்கே யறைகுவீரே,

(இ-ள்) கண்டுபாரங்கியென்கிற சிறுதேக்கினால் திரிதோஷவிகுணம் சுகச்சுவாசகாசம் ரூட்சை பத்தியம் - சுரசாதம நாசிநோய் சலதோஷம மூக்நீர்க்கோவை பின்னீர்க்கோவை புச்சாவர்த்தவாதம் குளிர்சுரம் உடல்வலி உட்காந்தல் மனச்சங்கடம் இவைபோகும், (தகூச)

அரத்தையின்-பொதுக்குணம்-வெண்பா,

தொண்டையிற்கட்டுங்கபத்தைத் தூரத்துரத்திவிடும
பண்டைச்சீதத்தைப் பறக்கடிக்கும்-கெண்டைவிழி
மின்னேசுரப்பனைவேருக்கும பசிகொடுக்குஞ
சொன்னோமரத்தைச் சுகம.

தே, இதுவுமது,

மார்பையடர்பிணி சுவாசகாசமூலஞ்
சோணைநட்டச்சூர்வாத சோணிதநோய்பசச்
சுரத்தையடுபடர்யற் றாருமகேணரி
னரத்யெடுத்துகளி தாம,

(இ-ள்) கெண்டைமீனைப்போன்ற கண்களையுடையவளே அரத்தை நெஞ்சுக்கோழை-சீதளம்-கரப்பான்-இருக்ரோகம்-சுவாசரு... விக்கம தந்தநோய் வாதசோணிதம திச்சுரத்தாற் பிறந் லப்பிணி இவைகளைநீக்கும=பசியைத்தரும,

பேர் அரத்தையின்குணம்-இதுவே-தும்ர

வாதபிசிவுவலி சந்நிபித்தையந்
சீதசுரங்காவீரணநு சென்னடீ-ரோசுடல

வாங்கடுப்பூப்புப்படரு மாறுமொளியாரு
மீங்கடரும்பேராத்தையால்

(இ-ள்) பேராத்தையினல்-வாதநோய் பின்னிசுவு-வலிப்பு-சந்நிபாதம்பித்தகபம்-நடுக்கற்சுரம்-கிளைக்கின்றபுண்-சிரசிலநீரேற்றம்சலவிஷம்ஸதிரீகள்ருதுதோஷம்-இவை யொழியும்—தேஜசுஉண்டாம், ()

தே,ஏற்றரத்தையின்குணம,

வாந்திபித்தங்கரப்பான்வாதஞ்சிராரோகஞ்
சேர்ந்தகபமுத்தோஷஞ்சீதமொடுநேர்ந்தசுர
மற்றரத்தைக்காட்டிவருமிருமலுந்தீருஞ்
சிற்றரத்தைதன்மருந்தாற்றேர்

(இ-ள்) சிற்றரத்தையால்-சர்த்தி பயித்தியம்-கரப்பான்-வாயுசிரஸ்தாபம்சிலேஷ்மம்-சிரிதோஷம்-சீதளம்-பலசுரம்-காரம்-இவைபோம் ()

தே-வசம்பின் குணம்நேகறை

பாம்பாகிஞ்சற்புதப்புண்வலிவிடபாகங்குன்மஞ்
சூம்பாரிரத்தபித்தம்முகநாற்றம்வன்சூலைசந்நி
வீம்பாம்பைசாசம்பிலீகஞ்சிலிபதம்வீறிரு
முமபாக்கிருமியிவையேகுமாசிவசம்பினை

(இ-ள்) வசம்பைவிரும்புவையாகில்கர்ப்பகீடதாவரகிருத்திரமம்முகலியவிஷங்கள்- அற்புதவிரணம்-ஐவகை-வலி-விஷபாகரோகம்குமம்ரத்தபித்தம் (வால்நற்றம்-சூலை-சன்னிபாதம்-பிசாசம்பீலிகநோய்பாதவன்மீகம்-காசம்-வயுறுபோல-நீண்டமலக்கிருமிஇவைபோம் (தசுக)

✓ தே-வட்டத்திருப்பியின்குணம்-வெ-பா

ஐயகஞ்சூதைபித்தத்திக்கறைவுமாபிரமி
வெய்யசுரம்பேதிவிரணமெலாம்-வையம்விடுத்
தெட்டத்திருப்பிவிடுமென்பையூணுக்குமன்றி
வட்டத்திருப்பி விடுமா,

டத்திருப்பி சிலேஷ்மகோபம்-விஷம்-வாததோஷம பித்
ராவம்-பிரமியம்-பித்தசுரம்-அதிசாரம் சிரங்கு ஆகிய
மாமிசதாதுவை விருத்திசெய்யும், ஏ-க. (தளவ)

ந,-சோஷ்டத்தின்குணம்-வி-ம்,

ஞ் சென்னிநாவா
ரவர்த்தமூதை

முட்டியெழுமுளைவிரணஞ் சுவாசகாச
மூடிகத்தோடரவுமர விடங்கண்மேகக்
கட்டியஜகல்லிவிட பாகம்பூத
கணம்பாலகிரகமொடு காதுநட்டஞ்
சொட்டிவருபிரமிபித்த மிவையொருங்கே
தொலையும்விரணாரிக்குச் சுகப்பேராமே, விரணாரி கோஷ்டம்,

(இ-ள்) கோஷ்டத்தினால் கணகாடை வயிறு சமூக்து சிரசு நாவால் இவ்விடங்களிலேனுய்கள் தோஷசுரம்-வீக்கம்-உதாவர்த்தகம்- கம்பவாதம்-முளை-மூலசம்-சுனை-இருமல்-எலி-சர்ப்பம்- நாவிமுதலிய விஷங்கள் மேகப்பிடகம் அஜகல்விகாரோகம் விஷபாகம் ௰அ-வகைபூதகணங்கள் பாலகிரகதோஷம் வீரியநஷ்டம் வெள்ளைவீழல் பயித்தியம் ஆகிய இவைவிலகும் சுகப்பிரசவம் உண்டாம்-என்க.

தே, அதிமதுரத்தின்குணம்-இதுவே-மதூகம்-விருத்தம்.

கத்தியரிமுப்பிணியால் வருபுண்டாகங்
கண்ணோயுன்மாதம்விக்கல் வலிவெண்குட்டம்
பித்தமெலும்புருக்கிகிரிச் சரமாவாத்த
பித்தமதமூர்ச்சைவிட பாகம்வெப்பம்
தத்திவருவாதசோணி தங்காமாலை
சருவவிடங்காமியநோய் நாதுநஷ்டம்
குத்திருமலாசியங்க மிதழ்நோயிந்து
குயப்பணும்போமதூகமெனக் கூறுங்காலே, ※ அதிமதுரம்,

(இ-ள்) அதிமதுரத்தினால் ஆயுதகாயங்களாற் சனித்த சத்தியோவிரணம் வாதாதிகளாற்பிறந்த நிஜவிரணம் நாவரட்சி நேத்திரநோய் உன்மாதம் இக்மாரோகம் ௫ விதவலிகள் வெண்குஷ்டம் பயித்தியம் அஸ்திசிராவம் மூத்திரக்கிரிச்சரம் அவர்த்தபயித்தியம் மதம் மூர்ச்சை பித்தவிஷபாகம் சுரம் வாதசோணிதவாதம் காமிலம் தாவரசங்கம் விஷங்கள் குய்யரோகம் சுக்கிலநஷ்டம் புகையிருமல் முகபாகம்சிரநோய் ஓஷ்டரோகம் சோமரோகம் ஸ்தனவித்திரிதிக்கட்டி இவைகளபோம்-என்க

அதிவிடயத்தின்குணம்-வெண்பா,

அதிவிடயஞ்சர்க்கார்ப் புதநோய்வெப்பு
கொதிமருவுபேதியொடு கோழை-யெதிர்வாந்தி
யென்றுரைக்குநோய்க்கூட்ட மில்லாதகற்றிவிடுக்
கின்றைதிகர்முலையாய் கூறு.

(இ-ள்) மலைபோலுமுலைகளையுடையவளே அதிவிடையம் சருக்கரார்ப்புதவிரணம்-சுரம்-வேகமுள்ள அதிசாரமசனைமேல்நோக்கிய சர்த்தி முதலிய நோய்களைவிலக்கும், (தளச)

அக்காரகத்தின்குணம்,

அக்காரகாரமதன் பேருரைத்தக்கா
லுக்கிரகாலத்தோட மோடுங்காண்-முக்கியமாய்
கொண்டாற்சலமூருங் கொம்பனையேதாக்கசுரங்
கண்டாற்பயந்தோடுங் காண்,

(இ-ள்) கொம்பனையாளே அக்காரகாரத்தால்பயங்கரமான வாததோசமும்தாகசிரமும்நீங்கும்இதைவாயிலடக்கிக்கொள்ளில் சலம்ஊறும்,

கடுகுரோகணியின்குணம்,

மாந்தஞ்சுரமையம் வாயுகரப்பானுமஞ்
சேர்ந்தமலக்கட்டு திரிதோட்டம்-பேர்ந்தபொட்சிப்
புண்வயிறுநோயிவைபோம் பொற்கொடியேபேதியுண்டாந்
தின்கடுகுரோகணிக்குத் தேர்,

(இ-ள்) கொடியிடையாளே கடுகுரோகணிக்கு க்ஷீராலஜகம்-கணசுரம்-கபாதிக்கம்-வாதகோபம்-கரப்பான்-சீதபேதி-பழையமலபந்தம் முத்தோஷம்-கிருமிவிரணம்-வயிற்றின்வலி - இவைவிலகும் - விரோசனம் உண்டாம், (தளரு)

பீதரோகணியின்குணம்,

படர்நீலகாசம் படலமொடுபில்லந்
தொடரிமைகளிற்றோன்றுந் தோட-மடரு
மருவிழியெனச்சொல்லுகின்ற வக்கிநோயேகு
மொருபீதரோகணியை யுன்,

(இ-ள்) பீதரோகணியால் கருவிழி நீலகாசம் கிருஷ்ணமண்டலம்இமையைப்பற்றிய நீர்ப்பில்லம் கிருச்சிரோன்மீலனம் முதலியரோகங்கள் கபஸ்ராவம்ஆகிய இவைகள்நீங்கும் என்க, (தளசு)

தே, கிரந்திதகரத்தின்குணம்,

சிறுபித்தநோயுந் திமைபெரிதல்போலுமெறிந்
தேறுஞ்சுவாசநோ யென்பதுவும்-வீறிப்
பரந்தசர்க்கர்ப்புதமும் பன்னப்புகுங்காற்
கிரந்திதகரத்தாற் கெடும்,

(இ-ள்) கிரந்திதகரத்தால் பயித்தியரோகமும் சுவர்சரோகமும் சர்க்கரார்ப்புத விரணமும்ஒழியும்-என்க, (தளஎ)

செவ்வள்ளிக்கொடியின்குணம்,

செவ்வள்ளியின்கொடிக்குச் சேடித்தகுட்டமொடு
கவ்வுகுறைநோய் கரப்பயனு-மிவ்விலகின்
மானேகுடல்வாதம் வல்லபடுவனுட
னைபருமூல்மும்போ மால்,

(இ-ள்) மானனையாளே செவ்வள்ளிக்கொடிக்கு வீறுகுஷ்டம்-பெருவியாதி-கடுவன்-குடலண்டம்-நகம்-குதிக்கால்களைப்பற்றிய் கொப்பிளம் மூலம் இவைதீரும், (தஎஅ)

சவ்வியத்தின்குணம்-இது-செவ்வியம்-என-மருவியது,

சூலையருசிசன்னி தொல்லீரும்லீளைபித்த
மேலேக்குரற்கம்மல் வெங்களநோய்-மூலசுரங்
கவ்வியங்கத்தேறு கனதாவரவிஷமுஞ்
சவ்வியங்கொள்ளைவிடுந் தான்,

(இ-ள்) சவ்வியத்தால்-குத்தல்-அரோசகம்-சந்நிபாதசுரம்-நீடித்தகாசம்-கோழைபுயித்தியம்-சுரசாதம்-தொண்டைநோய்-புராணசுரம்-எலும்பைப்பற்றியேறுகின்ற தாவரவிஷம்-ஆகிய இவைகள்போம்-என்க,

சடாமாஞ்சிலின்குணம்-இதுவே-பருங்கோரை,

குட்டம்சிலந்திவிடங் கோரபுராணசுர
முட்டினங்கால்பேதிகண்ணோ யொட்டிருமல்-சொட்டிரத்த
பித்தமிரைப்பேகும் பெருங்கோரையென்றுரைக்குஞ்
சுத்தசடாமாஞ்சிறனைச் சொல்,

(இ-ள்) சடாமாஞ்சியால்-குஷ்டம்-சிலந்திவிஷம்-பழையசுரம்-உட்சூடுவாயு-பேதி-விழிநோய்-காசம்-ரத்தபித்தம்-சுவாசம்-இவை விலகும்,

விலாமிச்சுவேரின்குணம்.

மேகம்விழியெரிச்சல் வீறிரத்தபித்தமொடு
தாகமதமூர்ச்சைபித்தஞ் சார்மயக்கஞ்-சோகஞ்
சிரநோயிவையேகுஞ் செய்யவிலாமிச்சுக்
கெரிசுரமுமின்றென் றிசை,

(இ-ள்) விலாமிச்சினால்-மேகநீர்-கண்ணெரிவு-உதிரபித்தம்-தாகம்-மதம்-மூர்ச்சை-பயித்தியம்-மயக்கம்-சோபம-தலைவலிதீச்சுரம்இவைபோம்

தே, பறங்கிப்பட்டையின்குணம்,

தாகம்பலவாதந் தாதுநட்டம்புண்பிளவை
மேகங்கடிசிரந்தி வீழ்மூலந் தேகமுடன்

குட்டைபகந்தரமேற் கொள்வமனம்யோமபறங்கிப்
பட்டையினைபுச்சரித்துப் பார்,

(இ-ள்) பறங்கிப்பட்டையால்-தாபம்-பற்பலவாதநோய்-விந்துநஷ்டம் விரணம்-பிளவை-கிரிழிவு-கடிவிஷம்-சிரங்கு-மூலமுளை - முடவாதம்-குறை-நோய்-கபம்-பகந்தரப்புண்-வாந்தி-இவைகெடும்-என்க, (தஅஉ)

பிசின்பட்டையின்குணம்-இதுவே-மயிலாலக்கடி,

தசையிலுஞ்சோரி தனிலுமபறந்தே
வசிபோற்குத்திக்குடையும வாய்வை நிசமாகக்
கொல்லுமுடம்பின் கொதிப்பையொருநொடியில்
வெல்லுமபிசின்பட்டை விள்,

(இ-ள்) பிசின்பட்டை மாமிசத்தையும உதிரத்தையும பற்றியிருக்கின்ற ஆவிருதவாதத்தையும-சரீரவெப்பத்தையும போக்கும், (தஅங)

தே, வெள்ளிலோரத்தின்குணம,

தாவரநஞ்சென்றுருக்கி தாமமகோதரநோய்
கூவவொட்டாத குரற்சாதம-பூவுலகில்
வெல்லவரிதாய வியங்கமுதாவர்த்தமுமபோம
நல்லவெள்ளிலோரத்தினால்,

(இ-ள்) வெள்ளிலோரத்தினால் விஷவிருக்ஷங்களின்நஞ்சு எலும்புருக்கி பெருவயிறு குரற்கமமல் வியங்கரோகம உதாவர்த்தம இவைதீரும,

லவங்கப்பட்டையின்குணம,

தாதுநட்டமபேதி சருவவிடமாகியநோய்
பூதகிரகஞ்சிலந்திப் பூச்சிவிடஞ்-சாதிவிட
மாட்டுமிரைப்போடிருமலாதியநோய்க்கூட்டமற
வோட்டுமிலவங்கத் தூரி,

(இ-ள்) இலவங்கப்பட்டையானது-சுக்கிலநஷ்டம-அதிசாரம்- பற்பல விஷங்கள்-வாயையனுசரித்தவாதம-தேவபூதமாகியகிரகங்கள் சிலந்திவிஷம பாம்புவிஷம சுவாசகாசம முதலிய நோய்களைவிலக்கும, (தஅரு)

சன்னலவங்கப்பட்டையின்குணம.

சன்னலவங்கப்பட்டை தான்குளிர்ச்சியுண்டாக்கு
மின்னுமிரத்தக்கடுப்பை யிர்க்குங்காண்-முன்னமுறு
மூந்திக்கடுப்பகற்று முண்மூலப்புண்போக்குங்
கந்தமிகுபூங்குழலே காண்,

(இ-ள்) மலரணிந்தகூந்தலையுடையவளே சன்னலவங்கப்பட்டை ரத்தகிரகணி-வயிற்றுப்பிடுங்கல் மூன்றுமவலய மூலவிரணம் இவைகளை நீக்கும் குளிர்ச்சியைத்தரும. (௪அ௬)

லவங்கப்பத்திரியின்குணம்.

மேகசுரஞ்சீதசுரம் வெட்டைசுவாசங்காசந்
தாகபித்தம்வாந்தி சாவாசியநோய்-வேகத்தின்
கட்டியொடுதாதுநட்டங் கைப்பருசிபோக்கிவிடு
மிட்டவிலவங்கத் திலை.

(இ-ள்) இலவங்கப்பத்திரி பிரமேகசுரம்-குளிர்ச்சுரம்-வெள்ளையிளைப்பு-இருமல்-பித்ததாகம்-வமனம் விவுர்தாசியம்-சம்விவுர்தாசியமமேகப்பிடகம்-வீணசுக்கிலம்-வாய்கசப்பு-அரோசகம்-இவைகளை நீக்கும்,

லவங்கப்பூவின்குணம்,

பித்தமயக்கமறும் பேதியொடுவாந்தியும்போஞ்
சுத்தவிரத்தக்கடுப்புந் தோன்றுமோ-மெத்த
வில்வங்கங்கொண்டவருக் கேற்றசுகமாகு
மலமங்கைகட்குவெவ் வாழ்த்து,

தே, இதுவுமது.

சுக்கிலநட்டங்காணச்சூர் வியங்கலாஞ்சனந்தாட்
சிக்கல்விடாச்சர்வாசி யப்பிணியு-மக்கிக்குட்
டங்கப்பூவோடு தரிபகிருந்தோன்றிலில
வங்கப்பூவோடுரைத்து வா,

(இ-ள்) லவங்கப்பூவுக்கு பித்தசேபம்- அதிசாரம்- சர்த்தி-உதிரக்கிரகணி-ஆசனப்பிடுங்கல்-விணவிந்து-செவிநோய்-சிவந்தமச்சம்- கறுத்தமச்சம்-விவுர்தம-சம்விவுர்தம்-என்கிறவாதங்கள் கண்ணில்பூப்பட முதலியநோய்கள் இவைபோம மலக்கட்டும் சவுக்கியமும் உண்டாகும்,

தே, சாதிக்காயின்குணம,

தாதுநட்டம்பேதி சருவாசியந்திரநோ
யோதுசுவாசங்காச முட்கிரணி-வேதோ
டிலக்காய்வரும்பிணிபோ மேற்றமயல்பித்தங்
குலுக்காயருந்துவர்க்குக் கூறு,=குலம்=சாதி

(இ-ள்) சாதிக்காய்க்கு விந்துநஷ்டம்- அதிசாரம ஆகியவாதங்கள் தலைநோய் இரைப்பு இருமல் உஷ்ண வாதகிரகணிமுதலிய ரோகங்கள் விலகும் மயக்கமும் பித்தமும் அதிகரிக்கும-என்க. (௪௬௰)

சாதிப்பத்திரியின்குணம்,

சாதிதரும்பத்திரிக்குத் தாபச்சுரந்தணியு
மோதுகின்றபித்த முபருங்காண்-தாதுவிர்த்தி
யுண்டாங்கிரகணியோ டோதக்கழிச்சலறும்
பண்டாங்குறையே பகர், =சாதி சாதிக்காய்.

(இ-ள்) சாதிப்பத்திரிக்கு அழற்சுரம் கிரகணி சலமந்தபேதி-இவை நீங்கும் பயித்தியமும சுக்கிலப்பெருக்கமும் உண்டாம என்க. (தகூக)

தாளிசபத்திரியின்குணம்,

நாசிகளப்பிணிக ளுட்பட்டகாசஞ்
வாசமருசி வமனங்கால்-வீசிவரு
மேகமந்தமத்திசுரம் விட்டேகுந்தாளிச்சத்தா
லாகுஞ்சுகப்பிரச வம்,

(இ-ள்) தாளிசபத்திரியால் பீநசம் களரோகம் நட்சென்ற யிருமல் இளைப்பு அரோசகம் வாந்திவாய்வு சீழ்ப்பிரமேகம் அசீரணம் அஸ்த தாது கதசுரம் ஆகியஇவைபோம சுகப்பிரசவம் உண்டாம்-என்க, ()

முப்பத்திரியின்குணம,

பத்திரிகள்மூன்றிற் பயிலுங்குணங்கேளாய்
பித்தமலக்கட்டு நீங்கிவிடுஞ்-சுத்தசுரந்
தாகமொடுவாந்திவிக்க றங்காவெக்காலையிலுங்
கோகிலமேயிக்குணத்தைக் கூறு,

(இ-ள்) குயில்போலும் இனியமொழியையுடையவளே லவங்கம சாதி தாளிசம் என்கிற மூன்றுபத்திரிகளாலும் மலபந்தம தளிச்சுரம் அதிதாகம் வமனம் விக்கல் இவையொழியும், (தகூ௩)

கற்கடகாசிங்கியின்குணம்-இதுவே-கடுக்காய்ப்பூ.

முக்கலையங்காசகப மூடுகிராணிமுலை
கக்கிரத்தபித்தங் கறைப்பேதி யுட்குடலிற்
றங்கொவிரீப்பிண்சுரஞ்ச மீரமவிடவெப்பிவைபோஞ்
சிங்கியினாற்போகமுறுங் தேர்க்கடகசிங்கி,

(இ-ள்) கற்கடகசிங்கியினால் முக்கல் ஆமம யிருமல் க்ஷயம் கிரகணி மூலமுளை ரத்தபித்தம் பத்தபேதி குடைலிரச்சல் மேகவிரணம் சுரம விஷசுரம ஆகியஇவைபோம் வீரியம் உண்டாம்-என்க, (தகூ௪)

நாகப்பூவின்குணம்-குறு-விருத்தம்,

மதமூர்ச்சைபிரமியஞ்சு வாசகாசம்புகைச்சல்
வுதிர்குறற்கம்மல்கிட விடஞ்சருவாசியங்கே

எதிகாரங்கமலப்புண்ணே டரத்தமூலம்மேகஞ்
டதிநீர்விந்துவினட் னம்போமரிநாகமலரினுக்கே

(இ-ள்) நாகப்பூவிற்கு மதமூர்ச்சை-ரத்தப்பிரமியம்-இரைப்பு-இருமல்-கண்புகை-நடுக்கல்-சுரசாதம்-எலி-முதலியவிஷம் - வாயைப்பற்றிய வாதரோகங்கள்-தேள்-விஷம்-பேதி-புண்டரீககுஷ்டம்-உதிரமூலம்- பிரமேகம்-வெம்பு-வெகுமூத்திரம்-க்ஷீணசுக்கிலம்-ஆகிய இவை நீங்கும்,

சிறுநாகப்பூவின்குணம்-வெண்பா,

சிறுநாகப்பூவினது செய்கைதனைச்சொல்வோங்
குறியாடுமேகத்தைக் கொல்லு-நெறியைவிட்டுத்
தீதாற்செல்வாயுவையுந் தீர்க்குமிருமற்போகுங்
கோதாயிதையறிந்து கொள்,

(இ-ள்) பெண்ணே சிறுநாகப்பூவானது ஆண்குறியால்விழுகின்றவெள்ளை மார்க்கந்தப்பிய ஆவிருதவாதம் காசரோகம் இவைகளைநீக்கும்,

கண்டில்வெண்ணெயின்குணம்,

கண்டில்வெண்ணெய்மாதேகேள் காந்திப்பிரதாபமுமாந்
தொண்டையினுண்ணீர்க்கட்டு தூரிருமன்-மிண்டிவரு
நீர்க்கடுப்புமூலத் துணிர்க்குத்தலும்போக்கும்
பாருக்குளறியப் பகர்,

(இ-ள்) மாதே கண்டில்வெண்ணெய் சரீரத்தில் தேஜசைத்தரும் நெஞ்சிற்கபக்கட்டு காசம் மூத்திரகிரிச்சரம் குதச்சலே இவைநீங்கும், ()

கூகைநீற்றின்குணம்,

கூகைநீற்றுன்மாதர் குய்யநோய்வுத்திரிதி
யாகமெனுமார்பனே யண்டுமோ-போகமதில்
வீரியமுமுண்டாகும் வீழ்கிருமிநோயோடுத்
தூரிருமலிலேயும்போம சொல்.

(இ-ள்) கூகைநீற்றினுல் யோனிரோகம் வித்திரிதிக்கட்டி இருத்வாதம் கிரிப்பழுகாசம் கோஷழ இவைபோம் விந்துபுஷ்டியாம், (ரகூஅ)

நாகத்தின்குணம இதுவே-நகம்,

தலைவலிநீரேற்றந் தலையிடிப்புகுத்தற்
றொலையாமலட்டுநோய் சோகை-நிலைவிழிநோய்
பாகனைச்சொன்னமின்னே பருமுதரரோகமும்போ
நாகனைத்திலே நவில்,

(இ-ள்) பாகன்னவசனிப்பவளே நாகணத்தினால் சிரஸ்தாபமசலதோஷம தலையிற்குத்தலுடனிடிப்பு மலட்டுநோய்வீக்கம நீங்காதகண்ணோய் பெறுவயிறு இவை ஏதும, (தசகசு)

மாசிக்காயின்குணம,

அக்கரங்கள்போக்கிவிடு மாறாதவெப்பகற்று
மெய்க்குழநிமாசிக்காய் மேன்மேலுந்-தக்கதொரு
பாலர்கணநோய்போக்கும பன்மேகமுந்தொலைக்கும
வேலனையகண்ணாம விரி,

(இ-ள்) வேலனையகண்ணையுடையவளே மாசிக்காய் பித்தசிக்வாகண்டகம மாராதஉட்குடு-சிசுக்களின் கணச்சூடு பலமேகங்கள் இவைகளை நீக்கும உடற்குப் பலந்தரும, (கா)

வலமபுபுக்காயின்குணம,

பூதபைகாசம பொருக்கொணாநேத்திரச்சூர்
தீதமிகுசெவிநோய் கேவல்விக்க-லோதுகுளிர்த்
தோடமொடுமேகங்கூன் சொன்னவையெலாநடுக்கி
யோடவலம்புரியை யுன்.

(இ-ள்) வலமபுரிக்காயால் பதினெண்பூதகணங்கள் சகிக்கா விழிநோய் கர்ணநாதரோகம உருமலின்தீவரத்தாம வராகின்றகேவல விக்கல் சீதசுரத்தினது ஆயாசம மேகம் கூன்விழுதல் ஆகியஇவைநீங்கும, ()

தே, வாய்விளங்கத்தின்குணம,

பாண்டுகுட்டக்குன்மம பருந்தூலநோய்வாதந்
தீண்டுதியுவிடநஞ்சிரந்தண்ட-நீண்டமடி
நோய்விளங்கக்காட்டாத நுண்கிருமியாசனப்புண்
வாய்விளங்கக்காட்டவிடுமால்,

(இ-ள்) வாய்விளங்கத்தால் பாண்டு-குட்டம்-குன்மம-அதிதூலம் வாயு-சர்ப்பகீடதாவரவிஷங்கள்-சிரசு-நாசி-வயிறு-இவைகளில் இப்பிணியுள தென்றறிதற்கரிய சன்னக்கிருமி-பகந்தரம-இவைபோம், (காஉ)

தக்கோலத்தின்குணம-இதுவே-தக்கோலப்பொட்டு,

பாண்டுசுரமபோகும பகரிற்பலஞ்சேருந்
தீண்டுமுபயாசியமுந் தீருங்கா-ணீண்டதொரு
தாதுவிர்த்தியாகுந் தளர்ந்தமலமுங்கட்டுக்
கோதகலுந்தக்கோலங் கொள்,

(இ-ள்) தக்கோலத்தினால் பாண்டுநோய்சுரமுமம-இருவிதஆகிய வாதங்களும்போம பலமுமம-வீரியவிருத்தியும் மலக்கட்டு உண்டாம, ()

விழல் அரிசியின்குணம்.

விழலரிசியென்றான் மிகுபித்தமேகு
மழல்குடலின்வாத மகலுந் தழவு
பரிதோடமேகமிவை போராவாகீயுங்
குழியாயிழையறிந்து கொள்.

(இ-ள்) விழலரிசியால் பித்தாதிக்கம்-சுரம்-ஆந்திரபித்தவாதம்-வாத பித்தகபதோஷ-சீழ்ப்பிரமேகம்-ஆகிய இவைவிலகும்-என்க, (தாச)

கார்போக அரிசியின்குணம்.

கார்போகமாமரிசி கண்டாற்கரப்பான்புண்
பீர்சுருவகஞ்சிவைபோம் - பார்மீதில்
வாதகபகமைச்சல் வன்சொறிசிரங்குமறுந்
சீதமலர்க்குழலாய் செப்பு.

(இ-ள்) மலரணிந்த கூந்தலையுடையவளே கார்போக அரிசியால்-கடுவன்விரணம்-பயங்கரமான சர்ப்பகீடாதிவிஷங்கள்-வாதசிலேஷ்மதொந்தம்-தினவு-யானைச்சொறி-கிரந்தி ஆகியஇவைநீங்கும், பயித்தியம் அதிகரிக்கும்-என்க, (தாரு)

வாலுழுவை அரிசியின்குணம்.

வயிற்றுக்கடுப்புவலி மாறுக்கிராணி
பயித்தியங்காசமல பந்தஞ்-சயிக்கவொணாச்
சூதிகாவாதமும்போந் தொல்வாலுழுவைவிதைக்
காதிநவசித்தர்மொழி யாம்.

(இ-ள்) வாலுழுவை அரிசிக்கு வயிற்றுப்பிடுங்கல்-கடுப்பையுடையரத்தபேதி-பித்தம்-இருமல்-மலக்கட்டு-அசிர்க்கரம்-இவைபோம், ()

வெட்பாலை அரிசியின்குணம்.

வெட்பாலைதன்னரிசி வீறுபித்தவாதமொடு
கொட்பார்கரப்பான் குடல்வாத-முப்பிசத்தைக்
காணுமலைகாணுங் கண்டிக்குங்காசினியிற்
பூணார்முலையாய் புகல்.

(இ-ள்) ஆபரணமணிந்தமுலையையுடையவளே வெட்பாலை அரிசியானது-பயித்தியவாததொந்தம்-கடுவன்-குடல்விர்த்திரோகம் - வயிற்றுப்பொருமல் இவைகளைவிலக்கும், (தாஙு)

காசினிவிதை-துளசிவிதை-இவைகளின்குணம்.

காசினிவிதைக்குக் கதித்தவரோசிசர்த்தி
காசினியைவிட்டேகுங் காணனமே-பேசு
மளவிற்பம்போ மருசிநடுங்குந்
துளசினறுவிதைக்குச் சொல்

(இ-ள்) அன்னநடையாளே காசினிவிதைக்கு-அருசியும்-வாந்தியும் நீங்கும்-துளசிவிதைக்கு-சிலேஷ்மமும்-ஆரோசகமும்-விலகும்-என்க, ()

புத்திரசீவிவிதையின்குணம்.

ஆகியதோர்மூலமன லம்வெட்டைமேகமும்போம்
போகம்விளையும் பொருமலறும்-தாகம்போம்
புத்திரசீவியெனப் போற்றும்விதையதனை
வித்தகையுண்மாதே யியம்பு.

(இ-ள்) பெண்ணே புத்திரசீவிவிதையினால் அரசம்-சுரம்-வெள்ளை நீர்ப்பிரமேகம்வயிற்றுப்பிசம்-நாவறட்சி இவைபோம்சுக்கிலம்விளையும்,

சமுத்திரசோஷிவிதையின்குணம்.

ஐயமகற்று மரோசகத்தையாற்றிவிடும்
பையுதிரவாயுவையும் பற்றறுக்கு-மெய்யை
யமிழ்த்துன்றநீரா யனிலத்தைப்போக்குந்
சமுத்திரசோஷிவிதை தான்.

(இ-ள்) சமுத்திரசோஷிவிதையானது கபதோஷம்-அருசி-சோணித வாதம்-அதிமூத்திரம்-வாதாதிக்கம்-இவைகளை-யொழிக்கும், (தாம)

கசகசாவின்குணம்.

கிருமிநமைச்சல் கிராணியதிசாரஞ்
சிரநீர்த்திரைபோஞ் செப்பி-லுருவழகுங்
காந்தியுமுண் டாகுங் கசகசாவின்குணத்தை
தேர்ந்தவர்க்குவிந்துவுமாந் தோ.

(இ-ள்) கசகசாவினால் ரசதாதுகிருமி-தினவு-சீதரத்தக்கழிச்சல்-மலபேதி-சலதோஷம்-நித்திரைப்பங்கம்-இவைபோம், தேகத்தில்சவுந்தரியம்-தேஜசுசுக்கிலம்-இவைவிருத்தியாம்-என்க, (தாமக)

தே, பெரியயேலத்தின்குணம்-கட்டளைக்கலிப்பா.

தொண்டைவாய்கவுடாலுகுதங்களிற்
றோன்றுரோயதிசாரம்பன்மேகதா
லுண்டைபோலெழுங்கட்டிகிரிச்சர
முழலேவாந்திகிலந்திவிடுஞ்சுரம்

பண்டைவெக்கைவிதாகநோல்காசமும்
பாழுஞ்சோமப்பணிவந்துகட்டமுள்
ளண்டையீளவன்பித்தமிவைக்கெலா
மலாமாம்பருமேலமருந்தே

(இ-ள்) பருத்தஏலமானது-சுறக்கினம்-பித்தமுகபாகம்- தாளுபாகம் பித்தசிக்வாகண்டகம்-சருமகீலம்-பேதி-அரையாப்புக்கட்டி - கிரிச்சரம் வாயில்உழலை-சர்த்தி-சிலந்திவிஷம்-ருட்சை-உஷ்ணபேதி-விதாகம் - இருமல்-சோமரோகம்-வயிற்றில்கபநிறைவு-நெஞ்சிற்கோழை- உரக்தபித்தம்-ஆகிய இவ்விதநோய்களை-விலக்கும், (கா௰௨)

சிறுயேலத்தின்குணம்-வெண்பா.

மலவாதமோடு வயிற்றுக்கொதிப்பு
சலமூறல்வாயினிப்பு தாகஞ்-சலபேதி
வேர்க்குந்தலைநோய் மிகுருட்சையயமிவை
போக்குஞ்சிற்றேலம் புகல்.

(இ-ள்) சிறுஏலம்-மலாவிருதவாயு-துணைத்தமலம் உமிழ்நீரூறல்-வாயினிப்பு-தாகம்-சலபேதி-வியர்வைத்தலைவலி-மிகுசுரம் கபம்-இவைதீரும்

மலையேலத்தின்குணம்,

நாவறட்சிதாகசுர நாடாதகற்றிவிடுந்
தீவறட்சிசீர்க்கடுப்பைத் தீர்க்குங்காண்-மூவறட்சி
கூடுமோரசகத்தைக் கூடாமலோட்டிவிடு
நாடுமலையேல நடிவில்.

(இ-ள்) மலைஏலமானது-நாவறளல்-வரட்சுரம்-பித்தச்சொரி - நீர்சுருக்கு திரிதோஷவறட்சியால் பிறந்த-அருசி-இவைகளை யொழிக்கும்,

காட்டுயேலத்தின்குணம்.

தீராதவாந்தி சிலேஷ்மமதிசாரம்
பேராவருசிபித்தம் பேருங்காண்-சோறுமல்
காட்டேலவார்குழலே காரம்பரிமளஞ்சேர்
காட்டேலமென்றுரைக்குங் கால்.

(இ-ள்) நீண்டகூந்தலை யுடையவளே - உரைப்பும் - மணமும் உள்ளகாட்டுஏலத்தினாலே - நீங்காதசர்த்தி-கபம்-பேதி-அரோசகம்-பயித்தியம் இவைபோம்-என்க, (கா௰௫)

சீரகத்தின்குணம்.

வாந்திபருகுன்மம் வாய்நோய்பிலீகமிவைப்
பேந்திருமல்கல்லடைப்பு லாஞ்சனமுட்-சேர்ந்தகம்ம

வெள்ளைச்செவிமாதே மாபக்கநோய்விலக்கும்
வெள்ளைக்கடுகின் விதி,

(இ-ள்) பெண்ணே வெண்கடுகானது- கந்தகிரகம்முதலிய ௰உ பாவ கிரகங்கள்-தேவபூதமுதலிய-௰அ-வகைபூதங்கள் - மகாசர்ப்பவிஷம்-வண்டுமுதலியவிஷக்கடிகள்-பக்குவாதம் இவைகளை-நீக்கும்.என்க, ()

தே, சிறுகடுகின்குணம்,

கோவிரதநெய்யூன்மே தோதாதுவின்வளிக்கு
மேவிரணப்பூச்சு விடங்கபநோய்-காலிங்
கெறியகடுவிம்மலும்போ மேச்செருலார்மாதே
சிறியாடுகின்குணத்தைத் தோ.

(இ-ள்) அழகியபெண்ணே சிறியகடுகினால்-விஷம்-சிலேஷ்மநோய்மூச்செறியச்செய்கின்றவயிற்றுவிம்மல் இவைநீங்கும் இதுசரும்ம்-ரசம்-ரத்தம்-மாமிசம்-மேதை ஆகிய இத்தாதுக்களின் வாயுவினால்பிறக்கின்ற பிணிக்கு விரணம்உண்டாகும்படி பூசுகிறலேபனகிச்சைகளும்-ஆம்,

நாய்க்கடுகின்குணம்.

சூதகவாயுவொடு சோணிதத்தின்வாதமும்போம்
வாதவலிகுன்ம மடியுங்காண்-மாதுநல்லாய்
பேய்கப்புகைபோடப் போமொழிந்துவிடு
நாய்க்கடுகைநீவிரும்பி னல்.

(இ-ள்) மாதேநாய்க்கடுகினால்-வாதகசிர்க்கரம்,வாதசோணிதம்-வாதகடுப்பு-குன்மம் இவைபோம-இப்புகையால்- பூதபைசாசங்கள்விலகும்,

தே, வெந்தியத்தின்குணம்.

மேதிகணமத்திசுர மேகங்கயஞ்சீத
பேதியதிசார்கெப்ப பித்திருமலாதியநோய்
நீக்குமனறணிக்கு நித்தமுறவிந்துவையுண்
டாக்குமனமே யறி—மேதி-வெந்தியம்.

(இ-ள்) அன்னநடையாளே-வெந்தியமானது-கணமாந்தம்- அஸ்திசுரம்-பிரமேகம்-க்ஷயம்-சீதக்கழிச்சல்-பேதி-ரத்தபித்தம்-காசம்-உட்சூடு முதலியபிணிகளை-விலக்கும்-நிரந்தரமாகச் - சுக்கிலத்தைவிளைக்கும் என்க, தே, ஓமத்தின்குணம். (தாஉஅ)

சீதசுரங்காசஞ் செரியாமந்தம்பொருமல்
பேதிபிரைச்சற்கடுப்பு போமோதிருமற்

பல்லோகிபன்மூலம் பகமிவநோயென்செயுமோர்
சொல்லோடுபோமெனச் சொல்.

(இ-ள்) ஓமத்தினல் குளிர்ச்சுரம்-இருமல்-அசீரணம்-வயிற்றுபிசம் அதிசாரம்-கு-விரேச்சல்-ஆசனக்கடுப்பு-சீதபேதி-சுவாசகாசம் - தந்த ரோகம்-தந்தமூலரோகம்-குய்யரோகம்-இவைவிலகும்-என்க. (தாஉகூ)

குரோசாணிஓமத்தின்குணம்.

வெகுமூத்திரவாதம் வீரியநட்டம்புண்
ணுகுபேதியுட்கடுப்பி ளேடே-மிகுகரப்பான்
நீருக்கபமிவைபோஞ் செய்பகுரோசாணியென்றால்
வாராமயக்கமுறு மால்.

(இ-ள்) குரோசாணி ஓமத்தினல்- அதிமூத்திரம்-வாதாதிக்கம் க்ஷீண விந்து-விரணம்-வாதாதிசாரம்-உடற்கடுப்பு-கரப்பான்- நீங்காக்கப நிறைவு ஆகியஇவைநீங்கும் அதிமயக்கம்-உண்டாகும்-என்க, (தாகூ0)

சதகுப்பையின்குணம்.

வாதமொடுசூதிக வாதஞ்சிரசிநோய்
மோதுசெவிநோய்கபநோய் மூடுசுர-மோதுகின்ற
மூலக்கடுப்பு துதிர்பீநசம்போக்கு
ஞாலச்சதகுப்பை நாடு.

(இ-ள்) சதகுப்பை-வாலரோகம்-அசிர்க்கரம்-தலைவலி- கர்ணசூலை-சலதோஷம்-கபருட்சை-ஆசனக்கடுப்பு-சலபீநசம்-இவைகளை நீக்கும்,

தே, பெருங்காயத்தின்குணம்-கட்டளைக்கலிப்பா,

தந்தவேதந்த மூலத்தெழுபிணி
சருவகாளத் விருட்சிகக்கீடமா
யந்தவாத முதாவர்த்தமல்குநோய்
மார்பணங்கட்ட குன்மம்கோதர
முந்துகெர்ப்பத்தின் வித்திரஞ்சூலைச்சூ
ருதிரப்பூச்சி சிலேஷ்மத்துறுவலி
வந்தமெய்க்கடுப்போடிவை முற்றுமே
மாயுநாறுநற்காயங் கிடைக்கினே.

(இ-ள்) மணமுள்ள பெருங்காயத்தினல்-தந்தரோகம்- தந்தமூலரோகம்-சகலசர்ப்பவிஷம்-தேள்விஷம்-கிருமி-அசீரணம்-வாதாதிக்கம்உதாவர்த்தவாதம்-யோனிரோகம்-இருதவாயு-எண்வகைகுன்மம்- உதரரோகம்-கருப்பவித்திரிதி-சூலை-ரத்தகிருமி-கபநோய்குடைச்சல்இவைதீரும

வெள்ளைப்பூண்டின்குணம்-வெண்பா,

சந்நியொடுவாதந் தலைநோவு தாளின்வலி
வன்னிவருநீர்க்கோவை வன்சீத-மன்னுமோ
யுள்ளுள்ளிக்காண்பா யுளைமூலரோகமுமபோம்
வெள்ளுள்ளிதன்னால் வெருண்டு—வெள்ளைப்பூண்டு,

(இ-ள்) அன்னநடையாளே வெள்ளைப்பூண்டினால்-சந்நி-வாதரோகம் சிலேஷ்ம சிரஸ்தாபம்-வாய்ப்பூட்டுநோய்-நீரேற்றம-சீதபேதி அரசம் இவைநீங்கும், அபினியின்குணம், (௲௩௩)

நல்லவபினிக்குணத்தை நாடறியாம்பு நல்வ
தல்லல்குன்மவாத மருஞ்செவிநோய்-பல்லின்வலி
பேதிமந்தமத்திநோய் பீநசம்போம்வன்மையுண்டாஞ்
சாதிபுதிரச்சுத்தி காண்,

(இ-ள்) அபனிபால் வயற்றுநோய் வாதாதிக்கம் கர்ணசூலை தந்தநோய் அதிசாரம் அசீரணம் எலும்பிற்தடைச்சல் நாசிகாரோகம் - இவை போம-சாதிலிங்கத்தைமுள்ளா உதிரச்சுத்தியும் உண்டாம், (௲௩௪)

கஞ்சாவின்குணம்,

மூலங்கிராணியறு முன்புள்ளபேதிகட்டுஞ்
சாலவயக்கும்பசியுஞ் சாருங்காண்-தூலஞ்செய்
வாதமொடுமையமும்போங் வன்கரப்பனுந்தொலையுங்
கோதறுகஞ்சாச் சடைக்கு,

(இ-ள்) கஞ்சாவிற்கு மூலவாய்வு கிரகணி நீடித்தஅதிசாரம் அதிதூலம் கபாதிக்கம் கரப்பான்-இவைபோம் மிகுமயக்கமும் அதிதீபனமும உண்டாம், கரியபோளத்தின்குணம. (௲௩௫)

மார்புவலிவீக்கம வயற்றுவலிபக்கநோய்
வார்மேகக்கட்டியொடு மாவாதம-பாருலகி
னீளங்கைகாலி னிலைசூலியங்கறுத்த
போளந்தனைக்காணிற் போம,

(இ-ள்) கரியபோளத்தினல் இருத்வாதம சோபை- குன்மம - முடம மேகப்பிடகம் - மகாவாதரோகம - கைகால்குத்தல் - இவைபோம. ()

ஷே, ரத்தபோளத்தின்குணம,

விழுந்திறந்தக்கிரிக வீந்துமறுவீக்க
மெழுந்துசிற்கொட்டா விகமோடமுந்தி

யுரைத்தமரும்வலி யோடுமெதிர்கிற்கா
திரத்தபோளத்தை யெடு,

(இ-ள்) ரத்தபோளத்தினால் விழுந்து ரத்தங்கட்டி அதன்மேலதிகரி த்தநோவுடன் வீங்குகின்ற வீக்கமும் எழுந்துநிமிர்ந்து நிற்க ஒட்டா தபக்கநோயும் மார்பின் உபத்திரவமும் நீங்கும் என்க, (௩௱௩௭)

வாலேந்திரபோளத்தின் குணம்,

சூலைகயரோகஞ் சொறிகரப்பான்குன்மமிவை
யாலைவாயின்கோற்போலாகுங்கா-ணீலசக்ர
வாளமெனத்தோன்றுமுலை மாதரேசேவாலேந்திர
போளந்தனையெடுக்கும் போது,

(இ-ள்) பெண்கள்நாயகமே வாலேந்திர போளத்தினால் கீல்பிடிப்பு க்ஷயம் நமைச்சல்-கரப்பான், வயிற்றுநோய்-ஆகியஇவைகள் விலகும் யென்க, வெளிச்சப் பிசின்குணம், (௩௱௩௮)

முகசந்நிபாதமொடு முட்டிவருநீரு
ம்கவாதசந்நிகளுமண்டா-மகிழுங்
களிற்றைநிகருமுலைக் காரிகையேநாளும்
வெளிச்சப்பிசினை விளம்பு,

(இ-ள்) பெண்ணே வெளிச்சப்பிசினால் வாயுவாற்பிறந்த சிம்மகம்பு கன்நேத்திரம்-பிரலாபம்-அந்தகம்-என்னும் சந்நிபாதங்களும் அதிநீரு ம் போம், நாவியின்பொதுக் குணம், (௩௱௩௯)

வாதவலிமந்தமறன் மாறுக்கயப்பிணிக
ளோதுகுட்டுகுன்மந்தே ளோடுங்காண்-காதலர்தம,
புத்தியோடாருயிரும் பூவும்வணைகுழலே
சுத்திசெய்தநாவியின்பேர் சொல்,

(இ-ள்) விரும்பப்பட்ட நாயகருடைய அறிவையும் உயிரையும் கூந் தலோடு முடித்துக்கொள்ளுகின்றபெண்ணே-சுத்திசெய்த நாவியினால் வாதக்கடுப்பு-அசீரணம ஓதமுள்ள ஜலதோஷங்கள்-குஷ்டம வயிற்று வலி தேள்விஷம்-இவைநீங்கும, (௩௱௪௰)

பச்சைநாவியின் குணம,

கடியதொருகுட்டங் கனத்தவிஷசந்நி
கொடியதொருகுன்மங்குலையும்-படியிற்
றளிரத்திகெப்புடனே தாகசுரந்தீருமே
வளர்பச்சைநாவிதனை வாழ்த்து,

# உ அ௨ பதார்த்தகுணசிந்தாமணி

(இ-ள்) பச்சைநாவியால், குறைநோய்-விஷசந்நிபாதம் வயிற்றுநோய் அஸ்திச்சூடு-தாககுரம ஆகிய இவைகெடும, (தா௪க)

வெள்ளைநாவியின் குணம,

குட்டங்கடிசூலை கூடுபுரிவன்கிருமி
துட்டகுன்மவாதந் தொலையுங்காண்-வட்டமுலைப்
பெண்ணேசுரந்தணியும பேருலகத்தார்பகைக்கும
வெண்ணாவிதன்னை விரும்பு,

(இ-ள்) பெண்ணே வெண்ணாவியால்-குஷ்டம காணுக்கடி-குத்தல்மார்பைவிங்கச்செய்கின்ற கிருமிரோகம வாதகுன்மம துட்டைஇவையொழியும், (தா௪உ)

கருநாவியின்குணம,

எண்ணுச்சுரம்போ மிறங்கும்பீலிகமறும
புண்ணுறுமூருமபுழுக்கள்வுழும்-தண்ணுறும்
வல்லைகவிகையொடு வாதசுரமிவைக
ளில்லையொருகார்நாவிக் கே,

(இ-ள்) கருநாவிக்கு நாவெட்டிக்காய்ச்சல் நழுகியபீலிகம-விரணம கிருமிகள் வல்லக்கட்டி-மகோதரம வாதசுரம இவைதீரும, (தா௪௩)

சூத்திர நாவியின் குணம,

காய்ச்சல்தலைநோய் கனத்தசந்நிபாதமெரிப்
பூச்சிவிடக்கடியுட்புண்குட்டங்-கூய்ச்சமரு
காத்திரத்தேளுங்குடிபோங் காளகப்பைங்கொடியே
சூத்திரநாவிக்குத் துவண்டு,

(இ-ள்) சூத்திரநாவிக்குசுரம்-சிரஸ்தாபம் சந்நிபாதம்-எரிக்கிருமி சர்ப்பவிஷக்கடி-உள்விரணம குறைநோய் தேள்விஷம-இவைபோம,

நிலஆவரையின் குணம,

நிலாவாரையின்குணந்தா னீகேண்மயிலே
பலமூலவாயுவெப்பு பாவைச்-சிலகிரந்தி
பொல்லாதகுன்மம பொருமுமலக்கட்டுமுத
லெல்லாமகற்றுமென வெண்,

(இ-ள்) மயிலனையவளே-நில ஆவாரை-பற்பலமூலவாயுக்கள்-சுரம சிழ்ச்சிரங்குகள்-வயிற்றுவலி-வயிற்றை யுப்பச்செய்கின்ற-மலக்கட்டு இவைகளை நீக்கும, (தா௪௫)

சிவதைவேரின் பொதுக் குணம்.

உள்ளமலமு முதாவர்த்தமும்வயிற்றை
கொள்ளுபித்த வாதமும்போங்-கூறுங்காற்பிள்ளைகட்குச்
செப்புகிரகமும்போந் தேனேயுலகத்துட்
டப்பிற்சிவதைக்குத் தான்.

(இ-ள்) குற்றமற்ற சிவதைக்கு,பழையமலம்-உதாவர்த்தவர்க்கம்-பித்தவாததொந்தம்-பாலகிரகதோஷம்-ஆகிய இவைவிலகும் என்க. ()

வெண்சிவதை வேரின் குணம்.

கைப்புந்துவர்ப்புங் கலந்திருக்கும்பித்தத்தை
யிப்புவியிஞடொட்டா திவ்வளவேங்-செப்புதாத்
தொள்ளைக்கிருமி தொலைக்குமிகுபேதிதரும்
வெள்ளைச்சிவதைதனை விள்.

(இ-ள்) கசப்புந்துவர்ப்புமுள்ள வெண்சிவதை, பைத்தியகோபத்தையும்-மலாசயக்கிரிமியையும்-போக்கும்-விரோசனத்தைத்தரும். ()

கருஞ்சிவதைவேரின் குணம்.

காரமுடன்கைப்புமுண்டாங் காணுவெலிவிடத்தைப்
பாரவனற்குன்மத்தைப் பற்றறுக்கும்-பாரிற்
றெரிஞ்சுரைத்தோம்பேதிதருந் தேன்மொழியேகேளாய்
கருஞ்சிவதைக்கந்தமது காண்,

(இ-ள்) தேன்மொழியாளே காரமும் கசப்புமுள்ளகருஞ்சிவதை, அறிவதற்கரிய எலிவிஷத்தையும்-பித்தகுன்மத்தையும் நீக்கும்விரோசனத்தைச்செய்யும், (தாசகு)

நேர்வாளக்கொட்டையின் குணம்-இதுவே-நேபாளம்.

ஓதிலுதரத்துறுமலம்பன் னோய்விலகும்
பேதிமருந்திற் பெரிதாகும்-வாதமறுங்
கூர்வாளையொத்தவிழிக் கொம்பனையேபண்டிதர்சொன்
னேர்வாளக்கொட்டைதன்னை நீ,

(இ-ள்) பேதிமருந்தில் முக்கியமாகிய நேர்வாளப் பருப்பால் மலாசயப்பழையமலமும் அதைப்பற்றிய பலப்பிணிகளும்வாதநோயும்போம்

வாளப்பருப்பு-சிலநோய்க்கு ஆகும் ஆகாதெனல்-வி-ம்,

உரைத்திடுவாதநோய்க்கு முரைகெடுவிடஞ்சந்திக்கு
கிரைத்திடுசூலைகுன்மண் நீடிடுமலக்கட்டிற்குக்

கரைத்திடுவாளந்தன்னை கத்தித்திடுமேகத்திற்கு
மரைத்திடுபித்தத்தோர்க்கு மகற்றியவதனைத்தானே

(இ-ள்) வாளப்பருப்பை வாதரோகம் விஷம்சந்நிபாதம்தேகக்குடைச்சல்-வயிற்றுநோய்-மலபந்தம்-ஆகிய இந்நோய்க்குபயோகப்படுத்தலாம் அதிமேகநீரையும்-பித்தநோயையும் உடையவர்கட்குநீக்கவேண்டும்

நீரடிமுத்தின் குணம்-வெ-பா,

நீரடிமுத்திற்கு நீங்காக்கிரந்திகுட்டம
போரிடுவாதவினை போகுங்காண்-காரடுக்கு
மென்குழலாய்பித்த மிகுமனலமுண்டாகு
முன்கிளர்நமைச்சலறு முன்,

(இ-ள்) மெல்லியகூந்தலையுடையவளே நீரடிமுத்துக்கு நீராச்சிரங்கு பெருநோய்-வாதரோகம-தினவு-இவைநீக்கும,—பைத்தியமும - உஷ்ணமும-உண்டாம, (நாருக)

தே, செங்கொட்டையின் குணம,

கிருமிகயஞ்சூலை கிரந்திதிமிர்வாதம
பொருமுகுன்மமுண் மூலம புண்ணைத்தரும்
கரிமுகக்குட்டங் கடிவிடபாகம்போ
※மெரிமுகிக்குச்சகமாமெண்※எரிமுகிசெங்கொட்டை,

(இ-ள்) செங்கொட்டைக்கு புழு க்ஷயம சூலைபிடிப்பு சிரங்குசருமத்திமிர்-மகரவாதம வாதகுன்மரோகமஉள்மூலம - விரணக்கருங்குஷ்டம்காணுக்கடி-விஷபாகம-இவைவிலங்கும-வீரிய விருத்தியுண்டாம, ()

தேங்காய்ப்பிண்ணாக்கின் குணம,

சொறிசிரங்குபுண்ணுமாங் தோலாக்கரப்பான்
வறுவாகுமேனியெல்லா மாதே-சிறுக
வயிற்றிற்புழுவினங்கண் மாறாதிக்குஞ்
சுயத்தேங்காய்ப் பிண்ணாக்காற் சொல்,

(இ-ள்)பெண்ணே தேங்காய்ப்பிண்ணாக்கினால்நமைச்சல்சிரங்குவிரணம் நீங்காதகரப்பான் மாறுமலர் சயக்கிருமிகள் இவையுண்டாகும,

எள்ளுப்பிண்ணாக்கின் குணம,

உள்ளிற்புண்ணுங்கிரந்தி யூரலுமிகக்கிளைத்தே
யெள்ளின்பிண்ணாக்குக் கெழுமபுங்காண் - விள்ளுங்
கரப்பான்விரணங் கழித்தநீர்மேக
முரப்பாகுநாளு முரை,

(இ-ள்) எள்ளுப்பிண்ணாக்குக்கு மேகோ தாரவைப்பற்றிய-விரணம்-சிரங்கு நமைச்சல்-கரப்பான்-புண்-சலமேகம்-இவை விளையும், ()

வேப்பம்பிண்ணாக்கின்குணம்.

சந்நியுடன்வாதத் தலைநோய்போம்வாதமறும்
முன்னினின்றதோஷ முறியுங்காண்-பன்னுதமிழ்
வல்லவரேவேம்பின்வழி வந்தபிண்ணாக்கென்றொருநாற்
சொல்லவையம்போமோ தொலைந்து.

(இ-ள்) சொல்லுகின்ற தமிழ்வல்லவர்களே வேப்பம்பிண்ணாக்கினால் சந்நிபாதம்-வாதசிரஸ்தாபம்-வாதரோகம்-திரிதோஷம்-சலாதிக்கம் இவை போகும்-என்க, (தா௫௫)

இலுப்பைப்பிண்ணாக்கின்குணம்.

பொத்திக்கடுவனொடு புண்ணுங்கரப்பனும்போம்
வித்ததைப்புதோஷமில்லை வீறுவா-மெத்தெனவே
யெண்ணெய்க்கசிவுகளு மேகுமிலுப்பைவிதைப்
பிண்ணாக்குக்கென்றறியப் பேசு.

(இ-ள்) இலுப்பைப்பிண்ணாக்குக்கு கடுவன்-விரணம்-கரப்பான்-பீஜவீக்கம்-திரிதோஷம்-எண்ணெய்ச்சிக்கு-இவைநீங்கும்-என்க, (தா௫௬)

சாம்பிராணியின்குணம்.

வாதசீதங்கண்ணோய் மாறுதசென்னிவலி
யோதமுறுபீநசத்துன் போடடுக்காண்-பூதலத்தில்
வேம்பினுநானென்ன மிகுசப்பைத்தானளிக்கும்
சாம்பிராணிச்சரக்குத் தான்.

(இ-ள்) வேம்பைப்போற்கசப்புள்ள சாம்பிராணி - வாதகபம் - விழிநோய்-நீங்காதசிரநோய்-ஜலபீநசம் - இவைகளை விலக்கும்-என்க, ()

கருப்பூரத்தின்குணம்.

கிருமிசலதோஷங் கிளைவலிப்புசந்தி
பொருமுமந்தமங்கிபட்ட புண்ணோ-டெரிசுரங்கள்
வாந்திபித்தஞ்சீதமுறு வாதஞ்செவிமுகநோய்
சாந்திகருப்பூரமொன்றாற் சாற்று,

(இ-ள்) கருப்பூரத்தினால்-கிருமி-நீரேற்றம்-இசிவு சந்நிபாதம்-வாதாலசகம்-தீப்புண்-கோரசுரம்-சர்த்திபைத்தியம் - சிலேஷ்மவாதம்-கர்ணசூலை-சிலேஷ்மமுகபாகரோகம்-ஆகிய-இவைபோகும்-என்க,(தா௫௮)

பச்சைக்கருப்பூரத்தின்பொதுக்குணம்.

அட்டகுன்மஞ்சூலை யனுகாதுவாதமொடு
துட்டமேகப்பிணியுந் தோற்றுவே-மட்டலறுங்
கூந்தன்முடிமாதே கொடியகபம்போகுஞ்
சார்ந்தபச்சைக்கர்ப்பூரத் தால்,

(இ-ள்) தேன்பொருந்திய கூந்தலையுடையவளே- பச்சைக்கருப்பூரத்தினல்-அ-விதகுன்மங்கள்-இல்களில்குத்தல் வாதநோய்-சிழ்ப்பிரமேகம் சிலேஷ்மகோபம் இவைநீங்கும். (தா௫௯)

பச்சைக்கருப்பூரத்தின்பேதம்.

பச்சைக்கர்ப்பூரம பகருவதிற்பேதமுண்டிங்
கிச்சையொடப்பேத மிசைக்குங்கா-விச்சகத்து
ளீசனெடுவீம னேற்றபூதாச்சிறையன்
காசறுமுமமையெனக் காண்,

(இ-ள்) பச்சைக்கருப்பூரம-ஈசன்-வீமன்-பூதாற்சிறையன்-என்மூவிதப்படும், (தா௬0)

க வது-ஈசன்-என்னும பச்சைக்கருப்பூரத்தின்குணம்,

ஈசனென்னும்பூரம் வெண்மையென்றறிவாய்காரமுமாம்
பேசரியசீதமுஷ்ணம் பித்தமயல்-வீசுகின்ற
பீசமுட்டாகமிவை பேர்த்துவிடுங்காந்தி
யானைகுவரிய மாம.

(இ-ள்) வெளுப்பும்காரமும தளதளப்பும்உள்ள - ஈசன்என்னும் பச்சைக்கருப்பூரம வசியத்திற்காகும சிலேஷ்மசுரம் பைத்தியம மயக்கம் நாசிநோய் தாகரோகம ஆகிய இவைகளைப்போக்கும-என்க, (தா௬௧)

உ வது-வீமன்என்னும் பச்சைக்கருப்பூரத்தின்குணம,

வீமனென்னுங்கர்ப்பூர மேகவெண்மையாயிருக்குஞ்
சேமமுறுங்குளிர்ச்சி தின்றக்கா-ளுமருவு
நோயகலுந்தாகமறு நுண்பேதியுமாகுந்
தூயமதிமுகத்தாய சொல்,

(இ-ள்) மதிமுகமாதே அழுக்குவெண்மைகலந்த மேகநிறம்உள்ளவீமன்என்னும பச்சைகருப்பூரத்தினல் கந்தாளிநோயும தாகரோகமும பேம சரீரசவுக்கியமும குளிர்ச்சியும அற்பவிரோசனமும உண்டாம

௩. வது-பூதாச்சிறையன் என்னும பச்சைக்கருப்பூரத்தின்குணம.

பூதாச்சிறையன்என்னும் பூரமந்சன்னைகப்பாகும்
கோதையர்க்கசங்காசக் கொடிமேகம்-வாதாதி

யென்னுந்தனித்தோட மேறுமுத்தோடஞ்சொறியுந்
துன்னிரணமும்போக்குஞ் சொல்.

(இ-ள்) மஞ்சள்நிறமும் கசப்புமுள்ள பூகாச்சிறையன் என்னும் பச்சைகற்பூரம் இருமல் அரித்திராமேகம் வாதபித்தகபம் என்கிறதனித்தனித் தோஷங்கள் திரிதோஷம் நமை நெருங்கியபுண்கள் இவைகளை நீக்கும் ஸ்திரீகளுக் குபயோகிக்கின்ற ஔஷதங்களுக்கும் ஆகும், ()

புழுகுச்சட்டத்தின் குணம்-விருத்தம்.

அசுருக்காந்தியுண்டா மசிரணவாதம்போகுந்
தேசுதான்வளரும்பித்த சிலேஷ்மமும்விடமுமேகு
மாசறுமாயுளுண்டாம் வனசமாதருளுஞ்சேரும்
வாசமார்புழுகுச்சட்ட மகிமையையுறைக்குங்காலே.

(இ-ள்) மணமுள்ள புழுகுசட்டத்தினல் மந்தவாதமும் பித்தகபமும் விஷமும்போம் ஒளியும்தேஜசும் நிறையாயுளும் திருமகளருளும் உண்டாம்,

கஸ்தூரியின் பொதுக்குணம். (தா கூச)

சொல்லரும்வசியங்காந்தி சுகமுதலனுகும்பின்னு
மெல்லியார்தமக்குநாத விருத்தியாந்தலைநோயேகுந்
பல்லுருகபமுந்தீரும் பகரொணுப்பலமுமுண்டா
மல்லடர்சன்னிருட்சை மாறுங்கஸ்த்தூரிக்காயே.

(இ-ள்)கஸ்தூரிக்குத்-தலைநோய்-கபந்தமூலம்-சந்நிசுரம்போம்-வசியம்-தேஜசு-சவுக்கியம்-மாதர்க்குநாதவிருத்தி-வன்மை-இவை உண்டாம்,

கஸ்தூரியின்பேதம்-வெண்பா.

கஸ்தூரியைந்தாங் கரிகைதிலகைகுருந்தை
கைத்தபிண்டகைநா யகைமுறையே-மொய்த்தஇவ்
வெள்ளுகொளுகட்டி சிறிதுபருமங்கென
விள்ளுமிவைக்கேகும் வினை.

(இ-ள்) கஸ்தூரிகரிகை திலகை-குருந்தை-பிண்டகை-நாயகையென ஐவகைப்படும் இவைகளில் கரிகைசிவப்புநிறமும்-திலகைஎள்ளின்உருவமும் குருந்தைகொள்ளினதுவடிவமும் பிண்டகைகட்டிகட்டியாகவும் நாயகைசிறியபெறிய உருண்டைகளாகவும்இருக்கும் இவைக்குசந்நிபாதம் அசிரணப்பிரசவ-வலினம்-முதலிய நோய்கள்விலக்கும், (தா கூகூ)

சவ்வாதின்குணம்,

சுரமுந்தலைவலியுந் துண்டத்தடைப்பு
முரமுந்துநோயோ டெற்குட்-பாவிமிகக்

குத்துகின்றவாயுவும்போங் கோதிற்சவ்வா தினுக்கு
மெத்தவசியமுமாம் விளே.

(இ-ள்) குற்றமற்றசவ்வாதுக்கு-வாதகபருட்சை-சிலேஷ்மம்-சிரஸ்தாபம்-சலபீநசம்-இருத்வாதம்-அங்கசலவாதம்- இவைபோம்-வசிக்ரமாம்,

தே, குங்குமப்பூவின்குணம்.

விந்துகட்டந்தாகமண்டம் மேகசலஞ்சூலைகப
முந்துசுரம்பித்தங்கா லுச்சிவலி-மூக்துகண்ணிற்
றங்குமப்பூவோடுறுநோய் சர்த்தியிவைநீங்கவென்றூற்
குங்குமப்பூவோரிதழைக் கொள்.

இதுவுமது,

குங்குமப்பூவைக்கண்டாற் கூறுகொண்டபீநசநோய்
தங்குசெவித்தோடஞ் சலதோடம்-பொங்கு
மதுரதோடங்கொலையு மாதர்கருப்ப
வுதிரதோடங்களறு மோர்.

(இ-ள்) குங்குமப்பூவினல்-சீரணசுக்கிலம்-காவறட்சி- குடல்விருத்தி மேகநீர்-இல்பிடிப்பு-கபாதிக்கம்-அதிருட்சை-பயித்தியம்-விகுணவாதம் மண்டைவலி-கருவிழியிற் படர்கின்றபூ-கண்ணோவு-வாந்தி- சலபீநசம் கர்ணேன்மந்தம்-நீரேற்றம்-வாயினுப்பு- பிரசவமலினம் இவைதீரும்,

கோரோசனையின்குணம்.

நீரழிவுமேகசுர நீங்காக்கனல்வேகங்
கூரியவுன்மாதங் குழைந்தைகணேப்-பாரகபம்
வீறுமசூரியும்போம் வேதாந்தனிலிரண்டாய்
கூறுங்கோரோசனை கட்கு,

(இ-ள்) ஆயுள்வேதங்கூறிய இருவகை கோரோசனைகளுக்கும் மேகநீர் மேகருட்சை பித்தகோபம் உன்மாதம் சிசுக்களுக்குண்டாகின்ற கணமாந்தமுதலிய ரோகங்கள் சிலேஷ்மாதிக்கம் மசூரிகைப்புண் இவை நீங்கும்என்க, மான்வயிற்றிலும் பசுவின்வயிற்றிலும் பிறப்பதாம். ()

சந்தனத்தின் பொதுக்குணம்.

கோதில்சந்தஞ்சீதோட்ணங் கொண்டிருக்குமச்சந்தம்
வாதபித்தவையமனப் பிரமை-யோதுசுரம

மேகந்தனிதாகம் வெப்புசொறியும்போக்கு
மாகந்தனக்குறுதி யாம்,

(இ-ள்) குளிர்ச்சியும் வெப்பமும் உள்ள குற்றமற்றசந்தனம் திரிதோஷம் சித்தப்பிரமை-ரூட்சை-ஒழுக்குப்பிரமேகம் நாவறட்சி-உட்சூடு நமைச்சல்-இவைகளைப்போக்கும்-சரீரத்திற்குப்பலஞ்செய்யும்-என்க,

சந்தனத்தின் பேதம்,

மும்மையெனச்சொல்வார் முருகுசந்தப்பேதமவை
செம்மைமஞ்சள்வெண்மையெனத் தேர்முறையே-நன்மைதரு
முத்தமமுமத்திமமு மோதமும்மாகுந்
தத்தைமொழியணங்கே சாற்று,

(இ-ள்) கிளிமொழியாளே சந்தனத்தில் மூன்றுபேதம் உண்டென்பார் அவையாவன-சிவப்பு-மஞ்சள்-வெள்ளை-என்பனவாம் இவற்றுள் சிவப்புமருந்துகளுக்கு உத்தமம்-மஞ்சள்-மத்திமம்-வெள்ளை அதமம்-என்றறிக,　　பச்சிலைகிச்சிலிக்கிழங்கு இவைகளின்குணம்,　(தாஎஉ)

பச்சிலைக்குக்காந்தம் பரிமளிக்குமவ்விலையோ
வெச்சைக்கிரந்திதனை மெய்ப்புழுவைச்-சொச்சமற
வோட்டுநற்கிச்சிலியி னெண்கிழங்குக்கபமும்
பூட்டும்முடமும்புண்ணும் போம்.

(இ-ள்) பரிமளமுள்ள பச்சிலையானது-பித்தகபவிரணத்தையும்-ரத்தகபம்-மலம் இவைகளைப்பற்றிய கிருமிகளையும் போக்கும்-கிச்சிலிக்கிழங்குக்கு சிலேஷ்மநோயும் கிலிபிடிப்பும் விரணமும் நீங்கும், (தாஎ௩)

உப்பின் பொதுக்குணம்,

அளத்திலுறைநல்லுப் பனல்வாதமாற்றுங்
களத்துநோய்தன்னைக் களையுங் கிளைத்தகப
வாசுடையவல்லைநோ யட்டகுன்மமும்போக்குங்
காசினியுண்மாதே கழறு,

(இ-ள்) பெண்ணே அளத்திலுள்ள நல்லஉப்பு-உஷ்ணவாதம்-கண்டவாதரோகிணி-ஆமந்திரண்டவல்லைக்கட்டி-அ-விதகுன்மம் - இவைகளை விலக்கும் என்க,　　கறிஉப்பின் குணம்,　(தாஎ௪)

மந்தம்பொருமலறும் வாய்வும்போந்தீபனமாந்
தொந்தித்தலையந் தொடருமோ-சந்ததமு
மக்கினிபின்புட்டி யடருங்கறியுப்பாற்
சிக்குகின்றநீரிறங்குஞ் செப்பு,

(இ-ள்) கறியுப்பினால் அசீரணம்-வயிற்றுப்பிசம்-வாதாதிக்கபம் நீரடைப்பு-இவைபோம்-பசியும்-சாமாக்கினியும் விருத்தி-ஆம், (தாஎ௫)

கல்லுப்பின் குணம்.

ஐயமறுஞ்சூலை யரோசிபித்தஞ்சர்த்தியொடு
வெய்யபிணியட்டகுன்மம் விட்டேகும்-பெய்வளையே
வாதமதிதாக மலக்கட்டும்போமுலகிற்
கோதறுகல்லுப்பைக் கொடு,

(இ-ள்) வளையலணிந்தகாரிகையே-கல்லுப்பினால் கபம்-குத்தல்-அருசி-பயித்தியம்-வாந்தி-உஷ்ணவாயு-அ-விதக்குன்மம்-வாதநோய்-நாவறட்சி மலபந்தம்-இவை ஏகும், (தாஎசு)

தே, கம்பி உப்பின்குணம்,

மல்லாருமட்டகுன்ம மாதருதரக்கட்டி
கல்லாமதைப்புநீர்க் கட்டருக-லெல்லாமே
கம்பிகம்பியென்றுங் கருவுண்டாங்கிநின்ற
*கம்பிகம்பியென்றுரைக்குங் கால்,

இதுவுமது,

சூதகவாயுவொடு சோணிதத்தின்வாதமும்போம்
வாதவலிகுன்மமிவை மாறுங்காண்-மீதாங்
கொடியவயிற்றிழியுங் கோழைகபமேகும்
*வெடியுப்புத்தன்னை விளம்பு*கம்பி-வெடியுப்பு,

(இ-ள்) பஞ்சபூதஉப்பில் தேயுவின் கூறுகிய கம்பிஉப்பினால்-அ-விதகுன்மம்-கருப்பாயசக்கட்டி சோணை-மூத்திரகிரிச்சரம்-நீர்ச்சுருக்கு-சூதிகாவாதம்-வாதசோணிதம்-சாமானியவாதபித்த கபகுன்மங்கள்-பெருவயிறு-ஈளை-சிலேஷ்மதோஷம்-இவைஒழியும்-பேரிளம்-பெண்-பருவங்கடந்தமாதர்கட்குங் கருப்பம் உண்டாகும், (தாஎஎ)

அட்டுப்பின் குணம்,

பித்தங்குடிவிலகும் பேராசுசூலையறுஞ்
சர்த்தியருசியிவை சாரா-மொத்தகச்சிற்
காட்டுப்படாகொங்கைக் காரிகையேசங்கையற
வட்டுப்பின்பேரை யறை,

(இ-ள்) கச்சுக்கடங்காத்தனத்தாளே அட்டுப்பினால் பயித்தியம் குத்தல்வாந்தி-அரோசகமும்-போம், (தாஎ௮)

வளையல் உப்பின்குணம்

துளையார்குடல்வாதந் தொந்தவாதத்தோ
டிளையாச்சுவாசமறு மின்னும்-வளையலுப்பாற்
குன்மவலிசூலைவெப்பங் கூறுப்பிலீகமிவை
சென்மம்விடுந்தோடுமெனத் தேர்

(இ-ள்) வளையலுப்பினால்-ஆந்திரபித்தவாதம்-வாதபித்தம்- இரைப்பு வயிற்றுநோவு-கீல்பிடிப்பு-சுரம்-பிலீகம்-இவைபோம், (௬௨௰)

தே, இந்துப்பின் குணம்

அட்டகுன்மமந்த மதிர்க்கரச்சூர்சிதபித்தந்
துட்டவையநாடிபுண் டோடங்கள்-கெட்டமலக்
கட்டுவிடவிந்துப்பைக் காமியநோய்வன்கரப்பான்
விட்டுவிடவிந்துப்பை விள்,

இதுவுமது.

சென்னிகண்ணுறைபற்றார் செவிகளகண்டம்பகநோய்
சந்நியாசங்காசந் தாகமிரைப்-புன்னிரத்த
மூலஞ்சிலந்திகளி முடிகநஞ்சூலைதவலை
சூலஞ்சிதையுமிந்தாற் ※சொல்※இந்துப்பு,

(இ-ள்) இந்துப்பினால் எண்விதக்குன்மம்-அலசம்- அதிர்க்கரகப்பித்தம்-கபாதிக்கம்-நரம்புச்சிரந்தி-திரிதோஷம்-மலபந்தம்-விஷம் சுக்கிலம் சிலேஷ்மஉபதமசம்-சடுவன்-தலை விழிநாவு நந்தமூலம் - காதுகழுத்து கண்யோனி இவ்விடத்துநோய்கள்-சந்நியாசம் நேத்திரகாசம்-தாகரோகம் சுவாசம் ரத்தமூலம்-சிலந்தி தேள் எலி இவற்றின் விஷங்கள்-வாதக்கடுப்பு-குத்தல்-இவை கெடும், (௬௨௨)

தே-பஞ்சலவணத்தின் குணம்.

சீராமையர்ப்புதப்பு ணைஞ்சுவலிமாகுன்மம்
பேராக்கிராணி பிலீகமந்தந்தீராக்காசு
விஞ்சவுப்பைக்குக்கிநோய் மெய்ச்சூலையுமறக்கும்
பஞ்சவுப்பைத்தின்பையெனிற் பார்,

இதுவுமது.

பஞ்சலவணம்பயித்திய குன்மம்போக்கும்
விஞ்சியசிலேட்டுமத்தை வீழ்க்குங்காண்-மிஞ்சுமே
தீபனமுண்டாக்கும் திரிதோடம்போக்கிவிடும்
சோபனமாமிம்மொழியைச் சொல்,

(இ-ள்) கிஞ்சுகம்போல்பவளே பஞ்ச உப்பினல்-ஆமைக்கட்டி-அர்ப்புதவிரணம்-மார்புநோவு-வலிகுன்மம்-வாதகிரகணி-பிலீகம்- ஆமாஜீரணம் மகாவாதம்-மிகவும் பொருமுகின்ற சிலேஷ்மகுணம் தேகக்குத்தல்-பித்தகுன்மம் கபாதிக்கம் முத்தோஷம் இவைநீங்கும்-பசியுண்டாம் என்க, (தாஅச)

கந்திஉப்பின் குணம்,

உடல்கரையச்செய்துவிடு முட்டினமாம்பொல்லாக்
குடல்வாதந்தன்னைவெட்டிக் கொல்லு-மடலாரு
தந்திமத்தகத்தையடத் தாவுகொங்கைமாதரசே
கந்தியுப்பைநன்ருய்க் கழறு,

(இ-ள்) யானைமத்தகத்தை அடத்தாவுகொங்கைகளையுடையவளே கந்தியுப்பானது-அதிதூலரோகத்தையும்-குடலண்டவாதத்தையும் போக்கும் ஆனல்-வெப்பத்தை உண்டாக்கும்-என்க, (தாஅரு)

சவ்வர்ச்சலவணத்தின் குணம்,

சவ்வர்ச்சமென்னுந் தனிலவணத்தாலுலகில்
வெவ்வச்சுரஞ்சூலை வெப்பமறுங்கவ்விகின்ற
நாடிவிரணமுடனூட்பட்டகுன்மமும்போந்
தேடியனமேயிதனைச் செப்பு.

(இ-ள்) அன்னம்போன்றவளே-சவ்வர்ச்சலவணத்தால்-பித்தசுரம் கீல்பிடிப்பிற்கிளைத்த உஷ்ணம் நரம்புக்கிரந்தி-நீடித்தவயிற்று நோவு இவை ஏகும் என்க, (தாஅகூ)

பிடாலவணத்தின் குணம்,

பிடாலவணமென்றெருகாற் பேசினுலகில்
விடாநீரிழிவகலு மெய்யே-விடலரிய
மந்தமகலும் வளருமதிகபசி
கந்தமார்குழலே கர்ண்,

(இ-ள்) மலர்குழலாளே-பிடாலவணத்தால்-அதிநீரும்-மந்தமும்போம் பசியுண்டாம், (தாஅஎ)

தே, வெங்காரத்தின் குணம்,

சொறிபுடையெண்குன்மநன்மைசோரியரசம்
பறிகிரணிகல்லூனம் புன்னோய் நெறியைத்
தடங்கணங்கபங்கிருமி சர்ப்பவிடஞ்சந்நி
*பிடங்கணங்கலக்கிசபோமென், டங்கணம் வெங்காரம்,

(இ-ள்) வெங்காரத்தினால், தலைச்சொறி-புடை-அஷ்ட-குன்மம்-திவவு-ரத்தமூலம் ஒழுக்குக்கிரகணி-அஸ்மரி பங்குவாதம்-தந்தநோய் நாளவழியைத்தடுக்கின்ற மூத்திரகிரிச்சரங்கள்-கபாதிக்கம்-புழு- பாம்புவிஷம்-சந்நிபாதம்-ஆகிய-இவைகள்விலகும்-என்க, (தாஅஅ)

சீனக்காரத்தின் குணம்,

சீனமெனுங்காரமது சீறிவருபல்லரணை
யானைக்காலகண்டு யனிலமொடு-மானிலத்திற்
றுன்மாங்கிசம்வாய்வு தோலாதவுள்ளமூலை
குன்மமிவைபோக்குங் கூறி,

(இ-ள்) சீனக்காரம், கந்தபிரஷூனம்-சிலிபதம்-சுக்கிலம் வாததிமிரம்-அதிமாமிசார்மம்-வாதப்பிணிஉட்சூடு-குன்மம்இவைகளைநீக்கும்

சவுக்காரத்தின் குணம,

காப்பானைசீதத்தைக் கண்டிக்கும்பேதி
யுரப்பாக்கும்காயுவைவிட் டோட்டுங்-தரைக்குள்
வழலையெனப்பேர் வகித்தசவுக்கார
பழலைகுன்மம்போக்கு மறி,

(இ-ள்) வழலைஎன்கிற சவுக்காரம், கபவன்-சீதளம்-வாதகோபம்-உட்சூடு வயிற்றுநோவு-இவைகளைப்போக்கும் - விரேசனத்தைத்தரும்,

அப்பளகாரத்தின் குணம்,

குடல்வாதஞ்சூலை கொடிதானவாத
மடல்புரியுமையமறுக்கு-நெடுவயிற்றி
னுப்பிசத்திறேடே யுயர்குன்மநோயகற்று
மப்பிளக்கார மது,

(இ-ள்) அப்பளக்காரம், வாதக்குடல்விருத்தி-கீல்வீக்கம்-மகாவாதம்கபாதிக்கம்-வயிற்றுப்பிசம்-வாதகுன்மம்-இவற்றைநீக்கும், (தாகூக)

நவாச்சாரத்தின் குணம்.

குன்மக்குடற்சூலை கொல்லுமகோதரத்தை
வன்மையுறுகல்லடைப்பை மாற்றுங்காண்-சன்மக்
கவிச்சுமுத்தோடங் கனவாதநீக்கு
நவாச்சாரமாதே நவில்,

(இள்) மாதே-நவாச்சாரம வயிற்றுவலி-குடலிற்குத்தல் பெறுவயிறு-அஸ்மரி-சருமத்திற் புலால்வாசம் திரிதோஷம்-வாதநோய்-இவைகளை விலக்கும் எனச்சொல், (தகூஉ)

தே, யவாக்ஷாரத்தின் குணம்,

குய்யங்களனா கொடிறுவாயிவ்விடநோ
யையமிளைப்பிரும லாசனப்புண்-பையவுறு
ஈடவிடஞ்சோமை கிராணியையும்பம்பரம்போ
லாடவிடுமெய்யவக்ஷாரம்,

இதுவுமது.

அட்டகுன்மஞ்சூலை யதிதூலமுட்டினத்தா
லொட்டிவருமாத முதரநோய்-துட்டமந்த
நீடுகப்நீரடைப்பு நீங்காப்பிலீகமிவை
யோடுமெவாக்ஷாரத்தா லுண்,

(இ-ள்) யவாக்ஷாரம், விரணப்பிரமேகம்-களஞ்கம் - ஜிக்வாலஜகம்,தா ளுகளசுண்டிகள்- ஊர்த்வகுதம்-கபவிருக்தி-சுவாசம்-காசம்-பகந்தரவிர ணம்-செந்துவிஷம்-வீக்கம்-வாதகிரகணி அவிதவயிற்றுவலிருத்தல் அ திதூலம்-சுவாவிதவாதம்-சுலோதரம் - விஷாலஜகம், கபநோய் மூத்தி ரோச்சகம்-வாதபிலீகம் இவைகளையொழிக்கும், (தா௲௬)

சத்திக்ஷாரத்தின்-குணம்,

மந்தமொடுதங்கு மலசலம்பிலீசுமடி
யுந்திவருகின்ற வொலியிருமல்-குந்தவைக்கும்
வாதவலிகுன்ம மகோதரங்கிராணியும்போங்
மோதுசத்திக்ஷாரத்தை யுன்.

(இ-ள்) சத்திக்ஷாரத்தினல், மந்தாக்கினி-சிரணமலமூத்திரம் - சிலே ஷ்மபிலீகம்-கோழைவிழுமபடி சத்தியுடன்வராகின்ற க்ஷயகாசம்-ஊரு ஸ்தம்பவாதம் வயிற்றுவலி-பெருவயிறு கிறகணி இவைபோம், ()

தும்பக்ஷாரத்தின் குணம்,

ஈளையுடனே யிரைப்புவலிவாத
மானைவிடாக்குன்மநோயா யதும்போம்-வேளையிமைப்
போதில்வெல்லும்வேழப் புருவைச்சிலேமயிலே
கோதில்தும்பக்ஷாரத்தைக் கூறு,

(இ-ள்) மதனையிமைப்போதில்வெல்லும் வில்லனைய புருவமுடையா ளே தும்பாட்சாரத்தினல்-கோழை-சிலேஷ்மசுவாசம்-வாயுவின் இசி வு திரிதோஷகுன்மம் ஆகிய இவைகள்விலகும்-என்க, (தா௲௬)

உமிலட்சாரத்தின் குணம்

குடல்வாதந்சூலை கொடுங்குன்மமோடும்
விடலருநீர்க்கட்டும் விலகு-மடவார்
கமலவதனக் களக்குழலேநாளு
முமிலிட்சாரத்தை யுரை.

(இ-ள்) தாமரைமலர்போன்ற முகத்தையும் மேகம்போன்றகூந்தலை முடையாளே, உமிலிட்சாரத்தினால்வாதகுடல்விருத்தி-குத்தல்வாதகுன்மம்வாதமூத்திரகிரிச்சரம் ஆகியஇவைகள்நீங்கும்என்க, (தா அ ஏ)

துத்தின்குணம்-இதுவே-மடல்துத்தம்

முற்றிற்குறிப்புண் முளைவிரணஞ் சென்னிதனிப்
பற்றிநின்றவாதம் படர்கரப்பான்-சுத்தவிழிக்
காசங்கணம்பில்லங்கண்ணோய்க்குந்தந்தொல்லையும்
வாசமிகுதுத்தத்தால்வாழ்த்து

(இ-ள்) துத்தத்தினால், அரிசோரோகம்-மூலைகளுள்ள புண்கள் வாதிரசஸ்தாபம் கரப்பான்-கருவிழிமந்தாரகாசம்-சுழுகணம்-இமைப்பில்லநோய்-கண்ணோவு-குந்தரோகம்-ஆகிய இவை ஒழியும் என்க, ()

துரிசின்குணம-இதுவே மயில்துத்தம்,

புண்ணூற்றுங்காமியத்தின் புண்ணூற்றுங்கண்ணோயை
விண்ணேற்றுமுத்தோட விறடக்குஞ்-சண்ணுநின்ற
வாந்தியொடுபேதிதரும் வாய்நோம்சுரந்தணிக்குங்
காந்திதருந்துரிசி காண்,

(இ-ள்) துரிசி, வாதாதிதோஷவிரணம்-அமைந்தகுய்யவிரணம் கண்ணோவு-திரிதோஷம்-சிலேஷ்மமுகபாகம்-வாதசீதசுரம்- இவைகளை நீக்கும், -வமனம்-விரோசனம்-தேசசுஇவைகளையுண்டாக்கும்-என்க,

தே, அன்னபேதியின் குணம்,

மூளைவிரணஞ்சூலைமந்த முட்டாமைக்கட்டி
விளையறன்மகோதரநோய் விட்டும்-வளைமலைபோற்
காட்டுமன்னந்தன்னை கணத்திற்சலமாக்கிக்
காட்டுமன்னபேதியது காண்,

(இ-ள்) அன்னத்தை நீராய்க்கரைக்கின்ற அன்னபேதி, மூளைசட்டிகுத்தல்-அஜீரணம்பாய்கின்ற ஆமைக்கட்டி வீரியசலோதாம்-இவைகளை நீக்கும், (தஉ ௱)

மாங்கிச பேதியின்குணம்,

துன்மாங்கிசங்களைக்குஞ் சோபையழலையொடு
வன்மை நிகுரூடுகப மாற்றுங்கா-ணன்மயிலே
யொப்பறுபிலீகமென வோதுகட்டியைக்கொடுக்குஞ்
செப்பரியமாங்கிச பேதி,

(இ-ள்) நல்லமயில்போல்பவளே மாங்கிசபேதி-விரணஜிகளின் துர்மாமிசம் வீக்கம் உள்வெப்பம்-கீல்பிடிப்பு-கபதோஷம்-பிலீகக்கட்டி இவைகளைவிலக்கும். (௧௨௱௭௧)

அம்பரின் குணம்;

அளகமுளவாரமிர்தே யாண்மையையுண்டாக்கும்
பளபளனமெய்யுரப் பாக்கும்-குளகுளத்த
புண்ணாற்றும்பர் பொரிகரப்பனைப்போக்கும்
விண்ணோர்க்கும்வாசனையாம் விள்,

(இ-ள்) அளகத்தையுடைய ஆரமிர்தனையாளே பரிமளம் உள்ள அம்பர்சுக்கிலவிருத்தியும்-தேஜசையும்பலத்தையும்- தரும் - அளிவிரணத்தையும் கரப்பானையும்-நீக்கும், (௧௨௱௭௨)

குந்திரிக்கத்தின் குணம்,

காசவாசங் கனத்தமேகக்கட்டி
வீசுவிடக்கடி விறுச்சுகுட்டம்-பேசு
படர்தாமரைசிரங்கு புண்டைவிரணங்க
ளிடற்செய்யிற்குந்திரிக்க மேந்து

(இ-ள்)குந்திரிக்கத்தினால் இருமல்-இரைப்பு-மேகம்பிடகம்பலவிஷம் கிருஷ்ணகுஷ்டம்-படர்தாமரைஇறந்தி-நீடித்தசிறங்குகள் இவைபோம்,

குங்கிலியத்தின் குணம்.

பெரும்பாடுமேகம்போம் பேராதடவி
லரும்பியபுண்ணாறு மிவையல்லாற்-றரும்பா
மெலும்புருக்கிபுண்சீழ் மேகமுலகிற்
சலம்பருகுங்குங்கிலியத் தால்,

(இ-ள்) கீரையிழுக்குகின்ற குங்கிலியத்தால்-அசிர்க்கரம்-தந்திமேகம் கிளைக்கிறவிரணம் - அஸ்திசிராவம்-சீழ்விரணம் இவைவிலகும், ()

தே, வெள்ளைக் குங்கிலியத்தின்குணம்,

வெள்ளையளித்த விரணநாபிக்கமலத்
தொள்ளைவிரணம்மேகந் தோற்றுகினு-முள்ளே

வருவரசேமேற்புண் வரினுஞ்சுவேதச்
*சருவரசமேற்பழியைச் சாற்று*சருவரசம்-குங்கிலியம்.

(இ-ள்) வெள்ளைக்குங்கிலியத்தால் மேகத்தாற் பிறந்தநாளப் புண்-உந்திக்கமலவிரணம் சிற்மேகம் உள்மூலவிரணம் இவைநீங்கும், ()

ே த, குக்கில்குணம்.

காததராசிநோய் கட்டிகடிமேகப்புண்
வாதவித்திரஞ்சூலை வன்குநக-மோதிலையித்
திக்கிலிருக்கத்திடமு முளவோவுபயக்
குங்கிலிருக்ககமக்குள்.

(இ-ள்) கருமைசெம்மை என்னும் இருவிதக்குக்கிலால் கர்ணபூதிதிரிதோஷ ஒஷ்டம் கிராணிபாகம்-பிடகம் காணுவிஷம்-மேகரணம் வாதவித்திரிதி-கில்பிடிப்பு-நகங்களைப்பற்றியவிரணம்-இவைபோம், ()

ே ச, அரக்கின் குணம்.

குட்டமசிர்க்குபித்தங் குன்மமிரைப்பெண்புருக்கி
பட்டிடுபுண்ணூச்சூர் பங்கநோய்-கொட்டோ
ராக்கருக்குஞ்சங்கிசுர மையமிலவைக்கெல்லா
மாக்கருக்குநூலே யறி,

(இ-ள்) அரக்கு குறைநோய்-அசிர்க்கரம் சிலேஷ்மபயித்தியம்-வயிற்றுநோவு சுவாசம்-அஸ்திசிராவம்-சத்தியோவிரணம்-இருதாவிருதவாதம் முடம்-சந்திகசங்கிபாதம்-நபாதிக்கம் இவைகளைகெடுக்கும். ()

ே த, மெழுகின்குணம்.

அறைபக்கவாத மதைப்பையழுதை
குறைவிந்திதழ்நோய்தேள் கூளி-கறையைப்
புழுகெடுக்கவங்கமுறு புண்ணிடிப்புண்மடப்புண்
மெழுகெடுக்கவாங்கனு மெய்.

(இ-ள்) மெழுகினல், பாரிசவாயுவு-வீக்கம்-கபநோய் - வாதகோபம் சுக்கிலநஷ்டம்-சிலேஷ்மொஷ்டரோகம்-தேள் விஷம்-பைபசாசம்-குஷ்டம் ஆகந்துகவிரணம் இவையேகும் என்க. (௩௨அ)

புலவகை மெழுக்கின்குணம்.

பொன்மெழுகுமாறல்சுரங் கண்ணோய்போக்கிவிடு
நன்மெழுகுகண்ணோய்க்கு நஞ்சாகு-முன்னுங்
கொசுமெழுகுநாளுங் குறித்தவசியத்திற்
கிசைபுமெந்திரத்திற்கு மெண்.

(இ-ள்) பொன்மெழுகு திரியாகிய சுரத்தையும் கண்ணோயையும் போக்கும். நல்லமெழுகு-விரணத்தில் உண்டாகின்ற நோயைநீக்கும் கொசுமெழுகு வசியத்திற்கும் யந்திரத்திற்கும் உதவும்-என்க. ( )

தே. அப்பிரகத்தின் குணம்.

அப்பிரகம்ரன்றைந்தா லண்ட மகோதரமு
மெப்பிரமியங்களுமுன் னீரிழிவும்-வெப்பூரற்
பேதமும்போர்காமேகப் பித்தமுங்கண்ணோயும்பல்
வாதமும்போந்தாதுவுமா மால்.

(இ-ள்) அப்பிரகத்தில் குடலண்டம் பெருவயிறு பிரமியம் - அதி மூத்திரம்-சுரம்-நமைகள்-மேகபயித்தியம்-கண்ணோவும்பாதா க்ஷேபக முதலியவாதரோகங்கள் இவையொழியும்-வீரியவிருத்திஉண்டாம். ( )

தே, கல்நாரின் குணம்.

காசபித்தம்வாதங் கடுப்பீறுநோயெரிவு
வீசுசர்த்திநீரடைப்பு விந்துநட்டம்-பேசுமசை
தின்னாக்கூவும்நீங் கீக்குடர்க்கல்தாகமிவை
கன்னாக்கூவவிடுங் காண்.

(இ-ள்) கலநாரினால்-பித்தகாசம்-வாதரோகம்-பற்குடைச்சல் பல்லர ணை-நீர்க்குறி எரிச்சல் பித்தவாந்தி-முத்திராதிதம் க்ஷீதசுக்கிலம்-அஜீர ணம்-பித்தக்குடல்வாதம்-பித்ததாகம்-இவை நீக்கும். (கஉயக)

சகஸ்திரவேதியின்குணம்.

அத்திசுரந்தாகசுர மசானவிரத்தமொடு
குத்திவருவாந்திகபங் கூறுசந்நி-மெத்த
நிகழ்த்துகண்ணோய்தாதுநட்ட நீட்டநீங்காமேகம்போகுஞ்
சகத்திரவேதிக்குத் தளர்ந்து.

(இ-ள்) சகஸ்திரவேதிக்கு, அஸ்திசுரம்-தாகபூர்வசந்தி-ரத்தபேதி வமனம்-கபாதிக்கம்-சந்நி-கண்ணோய்-வீரியக்குறைவு-பிரமேகம் - இவை போம். (கஉயஉ)

தே. கல்மதத்தின் குணம்,

கண்டபடிபிணிமேகங் கல்லொடுநீருனடைப்பு
வண்டற்கிரிச்சரநோய் மாபிரமி-யுண்டவினுற்
பன்மதஞ்சேர்தாதுநட்டம் பன்னுமிந்தநோய்க்கூட்டத்துட்
கன்மதஞ்சேரக்கரக்குங் காண்.

(இ-ள்) கன்மதத்தினால், அரைபுகரோகம்-தந்துமேகம்-அஸ்மரி-மூ த்திரபிந்து-வாதவஸ்தி-சதையடைப்பு-தடித்தமூத்திரகிரிச்சரம்- வாதப் பிரமியம் அதிகொழுப்பினாற்பிறந்த தாதுநஷ்டம் இவைதீரும். ( )

தே. சிலாசத்தின்குணம்-இதுவே-கற்பூரசிலாசத்தாம்.

கல்லடைப்புமோகங் கனதூலம்வித்திரிதி
சொல்லடைக்குநீருகற் சோணிதக்கரம்-மெல்லிடையார்க்
கில்லகச்சத்தில்லையெனு மிந்திரியகட்டமுமாங்
கல்லகச்சத்தில்லையெனுங் கால்,

(இ-ள்) சிலாசத்தினால், அஸ்மரி சீழ்மேகம்-அதிதூலம் - வித்திரிதி கிரிச்சரம்-சோணிதவாதம்-சந்ததிக்குஉதவாகிய விந்துநஷ்டம்- இவை போம், இதுமலைக்குள்ளிருந்து வருதலால்-கல்லகச்சத்தென்றார், ()

தே. கோமூத்திரசிலாசத்தின் குணம்.

கோமூத்திரசிலா சத்தாம்குறுகிப்
போமூத்திரமெரிவுட் புண்மேகம்-நாமேவு
வெப்புதிரம்வெப்புமறும வீழ்முனிவிம்பக்
துப்புமஞ்சுமெல்லிதழாய் சொல்,

(இ-ள்) மெல்லிதழாய் கோமூத்திரசிலாசத்தால், மூத்திரகிரிச்சரம் நாளக்கெருவு-உள்விரணம்-பிரமேகம்-நாவிற்குடு - ரத்தக்கொதிப்பு-இவை நீங்கும் என்க, (கஉயரு)

சிலாரசத்தின்குணம்.

தலைவலிநீர்ேற்றந் ததுர்வாதஞ்சந்தி
குலைகுலையுந்தும்மற் குடிபோஞ்.சிலைநுதலே
மாசுடையவஞ்சுகிறம் வாய்ந்திருப்பதன்றிமணம்
வீசுசிலாரசத்தால் விள்,

(இ-ள்) சிலைநுதலாளே மலினமேகநிறமும்மணமுமுள்ள சிலாரசத்தால், சிரஸ்தாபம்-ஜலதோஷம்-ததுர்வாதம்-சந்தி- அதிதும்மற்பீனசம் இவைகள்போம், (கஉயசு)

நண்டுக்கல்லின் குணம்,

நீரருகநீரடைப்பு நீங்காப்பெருவயிறு
நீரொழுகுமேகம்வெட்டை நீங்குங்கா-ணாரமிர்தே
யையமறுக்கு மரியதொருநண்டுக்கல்
செய்யுங்குணமிதுவாந் தேர்,

(இ-ள்) ஆரமிர்தம்போன்றவளே நண்டுக்கல்-கூஷிணமூத்திரம்- அஸ்மரி-மகோதரம் சலப்பிரமேகம்-வெள்ளை வீழ்தல்-கபாதிக்கம்-ஆகிய இவைகளை விலக்கும், (கஉயஎ)

காவிக்கல்-கடல்நுரை இவைகளின்குணம்,

அடலுறுகற்காவிக்க லட்சுரீ ய்மேகம்
வெடியக்கிவாந்திபித்தம் விட்டுங்-கடனுரையே
நேத்திரநோய்விரண நீடுகபங்குன்மமிவை
தீர்த்திடுஞ்சாண்டப்பாது செப்பு,

(இ-ள்) காவிக்கல், கண்ணோவு-மேகநீர்-கிளை-அக்கி-பித்தவமனம் இவைகள்நீக்கும்-கடல்நுரை-விழிநோய்-புண் - க்ஷயம்-குன்மம் இதுகளை நீக்கும், (தஉ௰அ)

சுக்கான்கல்லின் குணம்,

விரணந்தனையாட்டும் வீறுசந்நிநீக்கு
மரணஞ்செய்வாயுவையும் வாட்டுங்-கரணத்தின்
மிக்கானவின்பமருண் மெல்லியலேதூயவெள்ளைச்
சுக்கானெனுங்கல்லது சொல்.

(இ-ள்) சுரதத்தில்மிகுந்த வின்பந்தரும் மெல்லியலே சுக்கானகல் புண்சந்நி. மகாவாதம்-இவைகளை நீக்கும், (தஉ௰கூ)

நான்குவகை நிமிளைகளின்குணம்.

தாதுவைவளர்க்குந் தனிபபித்தநதைப்போக்கு
போதுசந்நிபாதத்தை யோட்டுங்-ா-ஞேநு
வொருநாவுருதே யுயர்பொன்முதலா
மொருநால்வகைநிமிளை யும்.

(இ-ள்) பொன்-வெள்ளி-வெண்கலம்-செம்பு-என்கிறநான்குவித நிமிளைகளும் விந்துவளர்க்கும். அதிபித்தத்தையும் சந்நியையும் நீக்கும்,()

வெள்ளைச் சங்கின்குணம்.

கசிவாமிரத்தபித்தங் கண்ணோய்களேகும்
பசியாரும்வாதம் பறக்கு-மிசிவுடனே
தங்குமுளைவிரணந் தானகலுமேவெள்ளைச்
சங்கம்துவுண்டேயிற் றான்.

(இ-ள்) வெண்சங்கத்தினால், உதிரபித்தம்-விழிரோகங்கள் - வாததோஷம்-இசிவு-முளைக்கட்டி-இவைநீங்கும் தீபனம் உண்டாம் ()

முத்துச் சிப்பின்குணம்.

ளைவிலகு மிருமல்குடியோகங்
முளைவிழுங்காயதேய நீகூட்டவட்டு ருடலித்

கப்பிவருமேகக் கட்டியையம்போமுத்தின்
சிப்பிதனைக்கண்டவிடத் தே.

(இ-ள்) முத்துச்சிப்பினால், கபக்கோழை, காசம், க்ஷயரோகங்கள், மேகப்பிடகம், சிலேஷ்மாதிக்கம், ஆகியஇவைகள்விலகும்-என்க. ()

தே, பலகறையின்குணம். இதுவே-கவடி.

மகாந்தந்தக்கிரணிமா விடச்சுரங்கண்ணோய்
தொந்தம்பரிநாமச் சூலைகய-மிந்த
வுலகறையக்காலொடிவையோடு❊கனைத்த
பலகறையைக்காணி னியம்பார்❊கனை-வெள்ளை

(இ-ள்) வெண்பலகறையினால். அஜலம், தாகம், கிராணி, விஷசுரம் விஷநோய், வாததொந்தம்; பலவிதக்குத்தல், க்ஷயம், கபவாதம்; இவைபோம். (௪௨௩)

கலைமான்கொம்பின் குணம்.

அவயவத்தின்வெப்ப மதிபத்திரமேகங்
கவிழ்திரிதோடம்பொருந்தாகங்க-ளிவைதா
னிலைக்குமோமார்புநோய் நேத்திரநோய்நீக்கும்
கலைக்கொம்பாற்பேயுமிலைக் காண்.

(இ-ள்) கலைமான்கொம்பினால்; கைகால்களில் எரிவு, அஸ்திமேகம், முத்தோஷம், விதாகங்கள், மருமவலி, கண்ணோவு; பிசாசம் இவை விலகும். (௪௨௪)

சோகி-பீங்கான்-மிருகக்கொம்பு- பல்-எலும்புகளின்குணம்.

❊சோகிபீங்கானுக்குத் தன்மாமிசந்தனைக்
கோகுதிரையொட்டைகுரங்குமுவா வேகப்
பலமிருகப்பல்லெலும்பும் பல்விழிநோய்தீர்க்கு
நலமிலகுமாதே நவில், ❊சோகி-பலகறை.

(இ-ள்) நன்மைமிகுந்தமாதே, பலகறை, பீங்கானிவைகள் விருத்திமாமிசாதிநோயையும். பசு, குதிரை ஒட்டை, குரங்கு, யானை, பன்றிமுதலிய பலமிருகங்களின்பல்களும் என்புகளும், பற்பலவிழிப்பிணி, யையும் நீக்கும். (௪௨௫)

பஞ்சலோக-ஐந்தெணணெய்-குதிரைக்குளம்பு,
கழுதைக்குளம்பு-எருமைக்கொம்பு-இவைகளின்குணம்,

பஞ்சலோகச்சார்வு பற்றறுக்குங்கண்ணோயை
யஞ்செண்ணெய்வாத சந்நியைப்போக்கும்-விஞ்சு

குதிரைக் கழுதைக் குளம்பெருமைக்கொம்பும்
குதிரைவலிநீக்குங் குறி,

(இ-ள்) பொன், காரீயம், செம்பு, இரும்பு, நாகம் என்கிற பஞ்சலோகங்கள், விழிப்பிணியையும், வேம்பு, புங்கு புன்னை, ஆமணக்கு, என் இவற்றின் ஜனிதநெய்கள், வாதசந்திகளையும், குதிரை கழுதைக்குளம்புகள் எருமைக்கொம்பு இவைகள் குதிரைவலியையுநீக்கும். ()

சீலை-கம்பளம்-மயிலிறகு-இவ்வகைச்சாம்பலின்குணம்,

அஸ்திபிரமேகம்போ மாடையின்றன்சாம்பலுக்குத்
தத்திவருரத்தந் தடைப்படுங்காண்-சத்தியமாய்க்
கம்பளச்சாம்பலசந்தி காதுமைஞ்ஞைறுத்தோகைபஸ்பங்
கும்புவிக்கல்வாந்தி கெடுக்கும்.

(இ-ள்) சீலைச்சாம்பலுக்குச், என்புருக்கியும், திரத்தமும்போம், கம்பளச்சாம்பல், சந்தியையும், மயிலிறகுச்சாம்பல், விக்கல், சர்த்தியையும் நீக்கும், (௧௨௨௭)

தே, ஒட்டறையின்குணம்-இதனை-ஒட்டடையென்பர்,

குட்டங்களநோய் குருதிமூலம்பேதி
யுட்டங்கசிரணமுள் ளுருகுன்மங்-கெட்டசிரா
வற்புதம்புண் சிதசுர மாப்பவஙிநஞ்சிவைகள்
புற்புகம்போலொட்டறையாற் போம்.

(இ-ள்) ஒட்டறையால், குறைநோய், சிலேஷ்மங்கள், கண்டரோகம் ரத்தமூலம, அதிசாரம், மந்தம், சிலேஷ்மகுன்மம்; நரம்புக்கிரந்தி நடுக்கற்சுரம், சிறுபாம்புவிஷம் ஆகிய இவைகள்போகும் என்க, ()

இந்திரகோபப் பூச்சியின்குணம்,

கருமேகந்தாதுநட்டங் கக்குங்கபம்போக்குந்
தருமேகற்காயசித்தி தன்னைவருமேக
சாலமுறைவாரளகத் தையலேநமாரிக்
காலமுறை*பீயலைது, *ஈயல்-இந்திரகோபம்,

(இ-ள்) மேகம்போன்ற கூந்தலானே இந்திரகோபப்பூச்சி, கருமேகத்தையும், சுக்கிலக்ஷீணத்தையும், சிலேஷ்மரோகத்தையும் நீக்கும் காயசித்தியைச்செய்யும், (௧௨௨௯)

முசறுமுட்டையின் குணம்,

துள்ளுமடல்வாதத் துன்பமந்தம்வல்லிசிவு
தள்ளுவலிக்குழு சதக்கபநோ-புள்ளில்
விசிறுசந்நிபாதம் விலகும்துாகத்தார்
முசறுமுட்டைக்குணத்தை முன்,

(இ-ள்) இலுப்பைபரத்து புசுஈழமுட்டையினுல், மகாவாதம்ரமந்தம் இசிவு, ஐவிதவலி, சீர்க்கபரோய், சந்தி, இவைவிலகும்எகன் (தஉ௩௰)

தே. பூநாகத்தின் குணம்

மாதனமுசெய்வறட்சிமாறும்டங்காச்சந்தி
பாதவறுநோயோபொன்றும் பாறுமடல்-வாதமறு
குண்டபகமீளுமோக்கான மையமும்போம்
*கண்டபதமென்னுங் கால், *ண்டபதம் பூநாகம்,

(இ-ள்) பூநாகத்திறல் மிகவுந்துன்பத்தைவிளைக்கின்றதாகரோகமும் எ-வித அசாத்தியசந்நிபாதசுரங்களும், ஊருஸ்தம்பமென்கிற மகாவாத மாகியபுலியிறைல்கவர்ந்து கொள்ளப்பட்டதொடையும், லுக்காளமும், சிலேஷ்மரோகமுமஒழியும என்க, புலிவாயில்அகப்பட்டஆட்டுதொடை மீளாததுபோல்இந்தம்காவாதத்திலகப்பட்டமனிதர்தொடை இவ்வியாதியில் நின்றுமசீங்குவது அருமையாயிருப்பினும்இது இதைநீக்கும்என்னுந்துணிவுதோன்ற அறுகுண்டபதம என்றார்-அறுகு புலி (தஉ௩௧)

கற்பாசியின் குணம,

பண்டைமேகத்தைப் பறக்கடிக்குமபேதிக்கட்டு
மண்டையெறிவாசனையி லாருங்காண்-தொண்டைக்
கனிக்குமொழிலூட்டுமிதழக் காரிகையேகாரநற்
கனிக்குமொருகற்பாசி தான்.

(இ-ள்) ஆதொண்டைக்கனியினுபழுகியமிதழையுடையவளேமழை சாற்பிறந்தநற்பாசி, நீடுத்தமேகத்தையும, அதிசாரத்தையும நீக்குமவாசனைத்திரவியங்களிலொன்ருகப்பொருந்தும் (தஉ௩௨)

## பாஷாணவகை.

தே. பாதரசத்தின் குணம

விழிநோய்கிரந்திகுன்ம மெய்ச்சூலைபுண்குட்
டழிகாலில் * விந்துவிஞலத்தை-வழியாப்
புரியும்விதியாதும் புரியிலேயெல்லா
மிரியும்விதியாது மிலை-*விந்து பாதரசம்,

(இ-ள்) சிவவீரியம் என்கிறரசத்தை, ரச்சிவரட்சாமிர்த சாஸ்திரமுறைப்படி செய்யத்தக்க சுத்தியெல்லாஞ்செய்து பிரயோகித்தால், நேத்திரநோய், நரம்புக்கிரந்தி, அஷ்டகுன்மம், கீல்பிடிப்பு, மகாவிரணங்கள் பெருவியாதி, ட்சிணவாதம் இவைமுதலியரோகங்களும் விலகும் இதைச்செல்லாத சாஸ்திரமாதொன்றுமில்லை என்க, (தஉ௩௩)

பாதரசதோஷத்தின் குணம்-வி-ம-

கலையைக்கிழிக்கு மவிழ்த்தெறியுங்
கல்லைத்தேடி யெடுத்தெரியு
மலையிற்குதிக்கும புனன்மூழ்கி
மருள்சேர்பித்தந் தனைக்கொடுக்கும
முலையினனல்போ லுடல்வெதுப்பு
மோயாவுழலை வியாவாக்கும
பலகாலமுமே வாய்பிதற்றும
பாதரசதோஷமு மிஃதே,

(இ-ள்) பாதரசத்தைச் சுத்திசெய்யாமையால், வருந்தோஷங்களாவன துணியைக்கிழித்தல், அதனையவிழ்த்தெறிதல், கல்லாலடித்தல், மலையினின்றுங்குதித்தல் தண்ணீரில் முழுகிமுழுகிக்கிளம்பல், மயங்கிப்பித்துக்கொள்ளல் தேகத்தில் அழலையுண்டாகுதல், மாறுதுவாயில்சலமூறல் அதிவேர்வைபெருகல் எப்போதுமபிரலாபித்தல் இவைகளாம,

தே, எண்வகைத்தோஷம நீங்காதரசத்தின்குணம, வெ-பா.

சர்ப்பமவங்கந்திவன்னி சாஞ்சலமலங்காள
மொப்புன்மந்தமென்னோட மோட்டிரத்த-கைப்புசியார்
கொப்புளங்குட்டங்கியெரி கோதுவிந்தினைப்பிறத்த
லப்புளமூர்ச்சைக்குமுரி யார்,

(இ-ள்) ரசத்திற்கு எண்வகைதோஷமுண்டு அவையாவனசர்ப்பமவங்கம.கந்தி,வன்னி,சஞ்சலம மலம,காளம்,மந்தம,என்பனவாமஅதுகளை நீக்காமல் அந்தரசமருந்தை யுண்பவர்கள் முறையேவிரணமபெருவியாதி,தீச்சுவாலை,கபித்தல்,உதிரப்பசையற்ற தேகநிறம்,வீரியநாசம,மரணம,சோபமஎன்கிற அ-விதரோகங்களையுமடைவார்கள் (௧௨௩௫)

ரசாஞ்சனத்தின்குணம-வெ-பா

அரியரசாஞ்சனத்தா லமபுவியிலுள்ள
விரிவிழிநோயெல்லா மறையு-மருவி
வருநாமியவிரண மாறும்புண்ணாறு
மொருமாமயிலே யுரை.

(இ-ள்) மயில்போன்றசாயலாளே,ரசாஞ்சனத்தினல்பூபடலமுதவியவிழிப்புணிகளும்,குய்யரோகப்புண்களும் ஆறாக்கிரந்திகளுமவிலகும என்க (௧௨௩௬)

ரசகருப்பூரத்தின் குணம்.

இடைவாதசூலை யெரிசூலைகுன்மந்
தொடைவாளைவாதமாஞ் சோணி-யிடையாதேர்
வொக்கும்ரசகர்ப்பூர மொன்றேயளவொடுநல்
லிக்குவெல்லத்தேழுநா ளீ.

(இ-ள்) சுத்தித்தரசகருப்பூரத்தைப் பணிகளின் வன்மைக்கொப்ப ல்ல வெல்லத்தில் பிரமாண மாக்வைத்துப் பத்தியத்தோடு ஏழுநாள் கொடுக்கச் சகலவர்த்தவாதப்பிடிப்பு பித்தசூலை வயிற்றுநோய்-சிலேஷ்மஷூருஸ்-தம்பவாதம்-வாதாதிக்கசோணுவாதம் இவைபோம் என்க. ()

தே, சாதிலிங்கத்தின் குணம்.

பேதிசுரஞ்சந்நி பெருவிரணநீரொடுத
காதகடிகாசங் கரப்பான்புண்-ணோத
வுருவிலிங்கசங்கமதா யூறுகட்டியும்போங்
குருவிலிங்கசங்கமதைக் கொள்,

இதுவுமது.

ஆதிபிரதவுருக் காதலாற்சாதிலிங்க
மோதிவிரதகுண முற்றுடலிற்-றீதுபுரி
குட்டங்கிரந்தி கொடுஞ்சூலைவாதமுத
லுட்டங்குநோய்களை யோட்டும்.

(இ-ள்) சிவந்தசாதிலிங்கம், முதலில் பாதரச உருக்காகையால் அந்த ரசகுணத்தைக்கொண்டு, அதிசாரம் ருட்சை-சந்நிபாதம்-அற்புதப்புண் அதிமூத்திரம்-காணுவிஷம் இரும்ல்-கரப்பான்-சிரங்கு-நுணுக்காய்க்கிரந்தி-மண்டல குஷ்டம்-பாமை-சரீரக்குத்தல்-வாதநோய்-அந்தர்முகரோகங்கள் ஆகிய இவைகளைவிலக்கும் என்க. (கஉ௩அ)

தே, சவ்வீரத்தின் குணம்.

குன்மமொடுகுட்டங் கொடியவனிலத்திரட்டு
துன்மாங்கிசப்பெருக்கஞ் சூலைநோய்-வன்மையுறு
காமியப்புண்ணுதியநோய் கண்டாற்சவ்வீரனெனுஞ்
சாமியினாமத்தையுச் சரி.

(இ-ள்) சவ்வீரத்தினுல், குன்மம்-குறைநோய்-மகாவாதங்கள்-வன்ருகின்ற துர்மாமிசங்கள்-கீல்பிடிப்பு-அரிசோரோகம்-இவைநீங்கும், ()

நெல்லிக்காய்க்கந்தகத்தின் குணம்.

நெல்லிக்காய்க்கந்திக்கு நீள்பதினெண் குட்டமெந்தம்
வல்லைகவிசைகுன்ம வாயுகண்ணோய்-பொல்லா
விடக்கடிவுன்மேகநோய் வீறுசுரம்பேதி
இடக்கிரகணிகபம்போந் தேர்.

(இ-ள்) நெல்லிக்காய்க்கந்தகத்துக்கு-௧௮-குட்டம்-அலஜம் வல்லைக்கட்டி-கவிசைமகோதரம்-குன்மம்-குந்தநோய்-மகாவிஷம்-மேகவியாதி-வாதசுரம்-வாதாதிசாரம்-கபகிரகணி-கபாதிக்க மிவைபோம் நீயறிவாயாக.

வாணகந்தகத்தின் குணம்.

வாணக்குழாய்க்கந்தி வாசனையைக்கண்டவுடன்
காணக்கிருமிசெறி காணுவாந்-தோணும்
பெருவியாதிக்கூட்டம் பேருமதனாலின்
மருவியாழுங்கொடியே வாழ்த்து,

(இ-ள்) மதநூலின்வகைகளறிந்தவளே வாணமருந்துக்கான குழாய்க்கந்தகத்தால், ரசரத்ததாதுகளிற்பிறந்த சிறுகிருமி-நமை-குஷ்டங்கள் இவைபோம்-என்க. (௧௨௪௨)

தாளகத்தின் குணம்.

தாளகத்தின்பேருரைக்கத் தாலுகவுணோய்குட்ங்
நீளக்குளிர்காய்ச்ச னீர்க்கபங்க-ணுணகங்கொள்
துட்டப்பற்ங்கிப்புண் சூழமூகண்மண்டைநோய்
கிட்டப்படுமோ கிளத்து.

(இ-ள்) தாளகத்தினால், அதிஜித்வாரோகம்-தாளுகச்சபநோய்-குட்டரோகம் நடுக்கற்சுரம்-க்ஷபகாசசுவாசம்-துஷ்டவிரணம்-ஜலஸ்ராவம் சிரஸ்தாபரோகம் ஆகிய இவைகள் விலகும் என்க. (௧௨௪௩)

சிவந்த அரிதாரத்தின்குணம்,

சிவந்த அரிதாரமது செஞ்சிலைபோற்காட்டு
முவந்ததனையுண்முறையோ டுண்டா-லிவர்ந்தாழ்
சுரங்களிர்மாவாதமுடற் சூலைநமைக்குட்ட
மிரங்குமெனாளு மிசை.

(இ-ள்) சிவந்தகல்லைப்போலிருக்கிற அரிதாரத்தைச்சுத்திசெய்து கிரமமாகவுண்டால் குளிர் சுரம்-மகாவாதரோகம்-சரீரக்குத்தல் தினவு கிடிபகுட்டரோகம் ஆகிய இவைகள்போம் என்க. (௧௨௪௩)

மடல் அரிதாரக்காடுகள் மனோசிலை இவைகளின்குணம்.

மடலரிதாரத்தில் வருங்கரடிரண்டு
முடல்விடங்களைக்களையு முண்மைகொடிபகுட்டம்

காய்ச்சனிக்கலஜ கன்னியிரைப்புச்சிலந்திப்
பேச்சறுமனேசிலேக்குப் பேசு

(இ-ள்) மடலரிதாரத்தில்பலவகை-கட்டியென்கிற உ-விதக்கட்டிகளாலும் உடலிலுறியவிஷங்கள்நீக்கும் மநோசிலையினல்சருமகுட்டம்களிர்சுரம்-அஜீர்ணிகாரோகம்-சுவாசம்-சிலந்திவிஷம்இவைகள்போம் ()

மடலரிதாரத்தின் குணம்,

சளேயுடனேயிருமல் குடிவிலகுங்
கோழைமலமகலுங் கொம்பனையாய்-நாளு
மடலுறுகயங்கரப்பா னுருப்புண்ணும்போம்
மடல தாரத்தை மதி.

(இ-ள்) புட்பககொம்பனையாளே மடலரிதாரத்தினல் தமகசுவாசம்காசம்-சிலேஷ்மமலாவாத்தம்-யக்ஷம-ரோகம்-கரப்பான்-துட்டவிரணம இவை ஏகும். (கஉசசு)

அரிதாரத்தின் குணம்.

காசமுடனே கயநோய்கபவாதம்
பேசரியகுன்மமெட்டும் பேருங்காண்-மாசகன்று
நீற்றுமதிநுதலே கேளாயுள்வேதமது
சாற்றுமரிதாரத்தால்.

(இ-ள்) பிறையையொத்த நெற்றியையுடையவளே, அரிதாரத்தினல், க்ஷயகாசம்-ரோகராஜம், சிலேஷ்மவாதரோகம் அட்டகுன்மம்-ஆகிய இவைகள்போகும் என்க. (சஉசஎ)

பொன் அரிதாரத்தின் குணம்.

மந்தாரத்தாலே வளருஞ்சுவாசநோ
யுந்திவருதீசுரநோ யோடுங்காண்-முந்து
தொனிக்கயஞ்செய்யான் கடியுந்தோற்குட்டமேகுங்
கனிப்பொன்னரிதாரத்தால்

(இ-ள்) பொன்னரிதாரத்தினல் மந்தாரசுவாசம் வாதசுரம் சத்திக்கிறக்ஷயம் செய்யான்விஷம் சருமதலகுட்டம் இவைநீக்கும், (கஉசஅ)

மிருதார சிங்கியின்குணம்.

மிருதாரசிங்கெனவே மெல்லவுரைத்தாலு
முருவாருடைகரப்பா னேடு-மொருவிதமோ
சாலச்சிரங்குபுண்ணுந் தப்பாமலாறிவிடும்
வேலொத்தகண் மயிலேவிள்

(இ-ள்) வேலொத்தகண்ணே மிருதாரசிங்கியினால் உடம்பெங்கும் பரவுகின்ற வித்தவிரணம்-கரப்பான் கிரந்திகூட்டம் மகாவிரணம் இவைவிலகுமென்க. (௧௨௫௪)

வெள்ளைப் பாஷாணத்தின் குணம்,

வெள்ளைப்பாஷாணம் விடங்கடி தீரும்பூசக்
கொள்ளைச்சுரங்தோடன் கோரசன்னி-தெள்ளையுறு
நாசிப்புண்வாய்ப்புண் ணனைகிரந்திபோமுண்ண
வாசிக்குங்கும்பமுலையாய்.

(இ-ள்) பரிமளிக்கின்ற கும்பமுலையாளே வெள்ளைப் பாஷாணத்தைப் பச்சையாக அரைத்துக்கடிவாயில்பூசினால் சர்ப்பவிஷந்தீரும கிரமமாகவுண்ணில் கபசுரம திரிதோஷசந்நிபாதம துட்டசம முக பாகம சிழ்ப்புண் இவைநீங்கும. (௧௨௫௫)

கௌரிபாஷாணத்தின் குணம

அவுரியொடுபாகலிவை யாற்சுத்திசெய்த
கவுரிபாடாணத்தைக் கண்டாற்-சவுரியஞ்செய்
வாதநோய்மந்தமொடு வந்தசுரங்களெலாம
காதிவிழுந்தோடுமெனக் காண்.

(இ-ள்) அவுரி-பாகல்-இவ்விலைகளின்சாற்றால் - சுத்தித்த கௌரிபாஷாணத்தினால், மகாவாதமும-அசலமும வாதகபசுரங்களுமபோம ()

நீலாஞ்சன பாஷாணத்தின் குணம

வன்னிமறுவெட்டுப்புண் மாபிரமியக்கிச்சுர
சந்நியனல்கீடவெட்டு தாகஞ்சூ-டின்னசிர்க்கு
நீங்குநீலாஞ்சனத்தா னீடொளிதண்மேனிருக்க
மோங்குநீலக்குயிலே யோர்.

(இ-ள்) நீலக்குயிலனையபெண்ணே, நீலாஞ்சனத்தால் ரசவன்னி தோஷம-ஆகந்துகவிரணம் பிரமேகம-விழிப்பிணி-சந்நிச்சுரம - புழுவெட்டு-விதாகம-உட்சூடு-ரத்தபித்தம்-இவைவிலகும தேஜசு-குளிர்ச்சி-அழகு-பலம-இவைமிகும. (௧௨௫௭)

தொட்டிபாஷாணத்தின் குணம.

தொட்டிப்பாஷாணமெனச் சொன்னாற்சுரங்கிரந்தி
வெட்டிப்பார்க்காவா மிடருறுதக்க-கிட்டிவரு
வாயுவின்றன்பெருக்குமந்த முளைக்கட்டியுமபோம
மாயினதுவாதவித்தைக் கரம,

(இ-ள்) தொட்டிப்பாஷாணத்தினால் ருட்சை-சிரங்கு-வாதாதிக்கம அசீரணம-முளைவிரணம இவைபோம இதுவசாரத்தொழிற்காக, ()

பஞ்சபாஷாணத்தின் குணம்,

பஞ்சபாஷாணமெனப் பாரிலுரைத்திட்டாலும்
வெஞ்சதையெனிப்புட்டும் வீறுங்காண்-விஞ்ஞாவளர்
சண்புற்றுத்தீருமதி காய்ச்சல்குளிர்மேகம்போம்
பண்புற்றுமாதே பகர்.

(இ-ள்) மேன்மையுடையாளே பஞ்சபாஷாணத்தால், கரம் சிலேபதமுதலிய ரோகங்கள்-விழிச்சதைப்புற்று-மிகுசுரம்- குளிர்-மேகம் இவை நீங்கும், (௧௨௫௪)

நவபாஷாணத்தின் குணம்,

நவபாஷாண [illegible] நற்சுத்திசெய்தல்
குவன [illegible] ரித் துண்டா-னவமாகக்
காயுமிருகுங் கனத்தநோயும்போகு
மாயுநோயெல்லா மதி,

(இ-ள்) சுத்தித்த நவபாஷாணத்தைச் சிந்தூரஞ்செய்து உண்ணில் தேக உண்மை உண்டாகும் மகாவாதமும்-பலசுரங்களும் போகும், ()

## உ லோகவகை.

௧, பொன்னின் குணம்.

அடற்றுவாவிடங்க ளங்கொளிமங்கல்
கடத்தாழுத் தோடகயங்காச-முடற்றுபஞ்
சேகையிருந்தா துகட்டங் கிட்டிநோயிளையிவை
*யீகையிருந்தாலேகு மெண், *ஈகை-பொன்

(இ-ள்) பொன்னினால் தாவரவிஷங்கள், தேஜசுமருங்கல்-அபிநியாசசந்நிபாதம-பித்தக்ஷயம தேகவெப்பு-முதிர்ந்தகபதோஷம க்ஷீணசுக்கிலம விழிநோய்-கோழைகட்டு-இவைவிலகும. (௧௨௫௬)

வெள்ளியின் குணம்,

பாய்க்கூட்டங்காட்டாப் பழையசுரந்தாருவிடம
வாய்க்கூட்டாச்செய்மேக வாதமுத-ஞேய்கூட்டம
மண்டாதுகாணிகொளு மத்திமேகக்கசிவும
*வெண்டாதுகாணிமெய்ம்ய மேல், *வெண்தாது-வெள்ளி

இதுவுமது.

இரத்தக்கயமபித்த மீளேகண்ணோய்காசு
முரத்தையமட்டகுன்மம முதை-வருததும
விரணஞ்சிலேட்டுமநோய் மெய்ப்புளிப்புண் ணூரன்
மரணமுறுமவெள்ளியினல் வாழ்த்து,

(இ-ள்) வெள்ளி பாயலுக்குப்பளுவுாட்டாத துர்ப்பலஞ்செய்கிற புராணசுரம-நரவிஷம-ஒருவரால் உணவை ஊட்டச்செய்கிறமேகவாதப் பிடிப்புமுதலிய நோய்கள் ஒழுக்குவெள்ளை-உதிரபேதி க்ஷயம-பைத்தியம்கோழை-விழிநோய்-இருமல்-மார்புச்சளி இஷ்டகுன்மம வாதகோபம-கிரந்தி நீர்க்கோவைலாஞ்சனம-சிரங்கு சொறி-இவைகளை விலக்கும,

தாமபரத்தின் குணம!

தாமபரத்தாற்சோரிபித்தஞ் சந்நிவழுவைசயம
வீமபாரபிலீகமந்தம் வெண்மேகந்தேமபழலை
சூமகநோய் புண்கிரந்தி தோடசுவாசக!
தாதுநட்டங்கண்ணேய்போஞ் சாற்று,

(இ-ள்) தாம்பரத்தினல், ரத்தபித்தம-சந்நிபாதமவழுவைமகோதரமகபாதிக்கம-பிலீகம-அஜீரணம வெண்குஷடம-பித்தகபம-ரத்தகுன்மம விரணம-திரிதோஷகாசம-கிருமி-தாதுநட்டம-விழிநோய்-இவைபோம.

பித்தளையின் குணம,

தாதுவிர்த்தியுண்டாகுந் தாபச்சுரம்போகுஞ்
சீதளமாமவாதஞ் சிதையுங்காண்-பூகலத்துண்
மாட்டியதோர்பித்தகுன்ம மாறுமலர்த்திருவே
நாட்டியதோர்பித்தளை யினுல்,

(இ-ள்) மலர்மேல்வசிக்கும திருமாதனேயாளே பித்தளையினுல், சுக்கிலப்பெருக்கும-குளிர்ச்சியும உண்டாகும-தீச்சுரம-வாதாதிக்கம-பயித்தியகுன்மம-இவைநீங்கும்-என்க, (௧௨௬௰)

வெண்கலத்தின் குணம,

நேத்திரநோய்சோமவினை நீர்பெருக்கிரத்தபித்தம
வீழ்த்துசுவாசமமந்த மோகமோ-டாழ்த்துகப
வாதவலிசூலை மகோதரமபோமபித்தமொடு
தாதுவுமாம்வெண்கலத்தாற் றன்;

(இ-ள்) வெண்கலத்தினல, விழிநோய்-சோமரோகம்-வெகுமூத்திரம் உதிரபித்தம-இளைப்பு அஜீரணம-கபவாதபிரமேகம-குத்தல்-பெருவயறு-இவைபோம-சுக்கிலமும-பித்தமும-விருத்தியாம-என்க, (௧௨௬௧)

தாரவின் குணம.

சூலையொடுமேழகத்தை தோன்றுமலோட்டிவிடு
மேலைவருகாலை விலக்குநா-ளுல

வராமேவியவல்குலாரணக்கேவேட்டைத்
தராவெனுமுலோகமது தான்,

(இ-ள்,) விடத்தையுடையகர்ப்பத்தின் படமபோன்ற அல்குலாளே வெட்டையாகிய தராவானது இல்பிடிப்பு-வெள்ளைவீழ்தல்-கபவாததொந்தம-ஆகிய இவைகளைப்போக்குமஎன்க, (தஉசுஉ)

வெள்ளியத்தின்குணம-இதுவே-வெண்ணுகம
தாகங்கரப்பான் சலமேகமபித்தகப
மேகமொளிங்கல் வெப்பல-மாகிரந்தி
துள்ளியமந்தார சுவ... மந்தாக்கினியும
வெள்ளியமன்... நீபாக்குமதி,

(இ-ள்) வெள்ளியமதி... யதாகரோகம-சலப்பிரமேகம-பித்தகப தொந்தம-மேகமூத்திரம-தேஜசுகுன்றல்-சுரம-துர்ப்பலம-விரணம- மந்தாரசுவாசம கபஞ்சேர்ந்த-மாந்தாக்கினி-இவைகளை நீக்கும, (தஉசுங)

தே. காரீயத்தின் குணம,

பன்மரநஞ்சக்கிநோய் பாகர்த்தபிவிரணங்
குன்மங்கால்சூலங் குதவிரணஞ்-சன்மம
பெருநாகமேகப் பிணிசுரமிவற்றைக்
*கருநாகமே நீக்குங்காண் *கருநாகம்-காரீயம

(இ-ள்,) காரீயம, கரவீரமுதலிய பற்பலதாவரவிஷம-கண்ணோய்-கர்த்தபிரோகம-வலிவாதகுன்மம-குத்தல்-பகந்தரவிரணம-கஜசரும குஷ்டம ருட்சை-ஆகிய இவைகளை யொழிக்கும என்க. (தஉசுச)

துத்திநாகத்தின் குணம,

மேகங்கிளர்பேதி வெட்டையழலைத்தணிக்கும
வேகங்கிருணிவிலக்குங்காண்-போகாப்
பரியமுளைப்புண்ணைப் பயித்தியத்தைப்போக்கு
மரியதுத்திநாக மது,

(இ-ள்) துத்திநாகம, விரணபிரமேகம-அதிசாரம-வெள்ளை-உட்சூடு சீதரத்தக்கழிச்சல்-முளைவிரணம-பித்தம-இதுகளை நீக்கும், (தஉசுரு)

தே, இரும்பின் குணம-

பாண்டுவெண்குட்டம பருந்தூதநோய்சோபை
மாண்டிடச்செய்யுந்தங் காமாலை-குன்மமபூண்ட
பெருந்தாதுநட்டமுமபோம பேதிபசியுண்டாம
கருந்தாதுநட்டமிடுங் கால்,

3/6

# ௩௱௨ பதார்த்தகுணசிந்தாமணி

(இ-ள்,) இருமபினால், பித்தபாண்டு-சிலேஷ்மவெள்ளைக்குஷ்டம அதிமூலரோகம-வீக்கம-விஷாலஜகம கா மிலம-வயிற்றுநோய்-சுக்கிலநஷ்டம் இவைவிலகும்,—மலவிருத்தியும தீபனமும-உண்டாம, ()

## தே, எஃகுவின்குணம

தந்தமந்தமூலவுரு தாதுநட்டஞ்சோபை கண்ணோய்
வந்தமந்தமபாண்டுவினை வன்மைகுன்றன்முந்த
பெருக்கிடையாய்நீட்டுகப பேதமிவைகட்
*குருக்கிடையர்தோட்டுமுறை, *உருக்கு-எஃகு,

(இ-ள்) எஃகு, தந்தரோகம-தந்த மூல-[illegible] சுக்கிலம-வீக்கம நேத்திரரோகம அலஜம-உடல்வெளுத்தல் [illegible] படுக்கையேகெதியாக வீழ்த்தாநின்ற க்ஷயகாசரோகங்கள்-இவைகளையொழிக்கும். ()

## காந்தத்தின் குணம.

காந்தத்தாற்சோபைகுன்மங் காமிலமேகமபாண்டு
சேர்ந்ததிரிதோஷம்வெட்டை சீதங்கா-லோய்ந்தபசி
பேருதரங்கண்ணோய் பிரமியநீராமையுமபோ
மோரினிறையாயுளுறுமுன்,

(இ-ள்) காந்தத்தால், வீக்கம-குன்மம-காமாலை-பிரமேகமபாண்டுமுத்தோஷம-வெள்ளைவிழல்-சீதளமவாதநோய்மந்தமமகோதரம்விழிநோய்ஜலமேகம-நீராமைக்கட்டி-இவைபோம்பூரணாயுளுண்டாம ()

## மண்டூரத்தின் குணம்

*கிட்டமொன்றாற்சோபை கிளைவீக்கமமத்திசுரந்
துட்டவிடபாகஞ் சுவாசமையங்-கெட்டகொடும
பாண்டுருமநீராமை பாழும்பிரமியமுந்
தாண்டிவிடுமுண்டிரத்த தாது, *கிட்டம-மண்டூரம்

(இ-ள்) மண்டூரத்தினால் வாதசோபைமுதலிய வீக்கங்கள் அஸதிசுரமகொடியவிஷப்பாகமஇளைப்புகபகோபமதேகவெளிறல்-காசமநீராமைக்கட்டி-அசிர்க்கரம-இவைநீங்கும—உதிரவிருத்தியாம (தஉசுஎ

# நவரத்தினவகை:

## மாணிக்கத்தின் குணம,

சுரரோகஞ்சந்திகளின் தோடமதிதாக
முரமானமேக மொழியுந்-திரமாக

ஆணிக்கொணேத்திரநோ யோடுமாவீன்றவொளி
மாணிக்கத்தால்வசிய மாம்.

(இ-ள்) சர்ப்பங்கக்கிய மாணிக்கத்தினால் சரீராதிசுரங்கள்-சந்நிபாத தோஷங்கள்-திரிதோஷதாகரோகம்-வாதபிரமேகம்-கண்ணோய் ஆகிய இவைகள் ஒழியும், வசிகரம் உண்டாகும் என்க. (௧௨௭௦)

வயிரத்தின்குணம் இதுவே வச்சிரம்

ஆறுவிதமாம்வயிர மவ்வவற்றுண் மாரசங்கள்
வீறிநிலைத்திருக்கு மேன்மையினாற்-கூறுமவைக்
கெப்பிணிபுநீக்கு மிணையில்வனம்புமுண்டாஞ்
செப்பிணையின்மாமுலையாய் செப்பு

(இ-ள்,) செப்பைப்போன்றமுலையாளே-தேவபிரமக்ஷத்திரியவைசிய சூத்திரசங்கா எங்கிற ஆறுவகைவயிரங்களிலும்மகாரசங்கள் தங்கியிருப்பதால் அவைகளுக்கு, நேத்திரரோகமுதலியபற்பலரோகங்கள்விலகும், சரீரஅழகுண்டாம், (௧௨௭௧)

வைடூரியத்தின் குணம்

சீதவாதத்தொடு சிலேஷ்மம்புளியேப்பங்
காதுசூலைப்பிணிக ளத்தகுன்ம-மோதுபித்த
மென்றுரைக்குநோய்களறு மெப்போதுந்தோடமிலே
நன்றுவயிடூரியத்தினால்

(இ-ள்) வைடூரியத்தினால், சிலேஷ்மவாததோஷம்-கபம் புளியேதபம்-வருத்துகின்றகீல்பிடிப்பு வாதகுன்மம்-பயித்தியம்-அபத்தியமுபவியாசபததோஷங்கள்-ஆகிய இவை நிவர்த்தியாகும் என்க. (௧௨௭௨)

கோமேதகத்தின் குணம்,

வாதபித்தகோபத்தை மாற்றும்லக்கட்டறுக்கு
மோதுமந்தாக்கினியை யோட்டுங்காண்-மீதி
லறுநருவிகார மற்றுமொளிசெய்யுங்
[illegible]மே தகம்,

(இ-ள்) கோமேதகம், வாதபித்தமிஸ்ரம்-பலபந்தம்-சுரத்தால்பிறந்த தூர்க்குணம்-இவைகளை-நீக்கும்-மினுமினுப்பைத்தரும்; (௧௨௭௩)

புட்பராகத்தின் குணம்,

வீரியவிர்த்தியது மேன்மேலுமுண்டாகுங்
கூரியநற்புத்தியுண்டாக் கூறுங்காற்-பாரிம்

பிணிவருக்கமேகும் பெரும்புட்பராக
மணியாற்புகழுமுண்டாம வாழ்த்து,

(இ-ள்) புட்பராகத்தினல், விருத்திசுக்கிலமும்-நல்லறிவும்கீர்த்தியும் உண்டாகும், மேகமுதலியநோய்க்கூட்டம்-நீங்கும்-என்க, (௧௨௭௪)

பவளத்தின் குணம்,

சுரதோடமையமுத் தோடசுரங்காச
மருசிகிடத்தாலா மாலம்-பெருவிந்து
நட்டமதிதாக நாவறட்சிபோமொளிவுங்
கிட்டும்பவளத்தாற் கேள்,

(இ-ள்) பவளத்தினல், ருட்சைபின்விகாரம்-சுபம் சந்நிபாதசுரம் இருமல் அருசோகம்-கிடவிஷம் சுக்கிலசூதிணம்-விதாகம்நாவில் சுறசுறப்பு-ஆகிய இவைவிலகும், சரீரகாந்தி உண்டாகும் என்க, (௧௨௭௫)

முத்தின் குணம்,

அத்திசுரஞ்சோபை யருசிதுர்ப்பலங்கண்ணோய்
பித்தவிடஞ்சீதளநோய் பேசுகபஞ்-சத்தத்
தயிரியநட்டத்தோடு தாதுநட்டமும்போ
முயிருறுநன்முத்திருந்தா லோது,

(இ-ள்) ஜீவரத்தினம் என்கிற முத்தினல், அஸ்திசுரம் வீக்கம்-அரோசகம்மெலிவு-விழிநோய்- அக்கினிகிடவிழம்- சுட்கசிலேஷ்மம்-குரல்வளையிற் சத்திக்கின்றகோழை- அதயிரியம்- வீரியநாசம்-இவைபோம்.

மரகதத்தின் குணம்.

தாதுகரும்பூதபை சாசங்தமையோட்டு
மீதுவருபுண்ணை விலங்குங்காண்-ஊதுபுரி
நச்சையகற்று நவிமதுமேகம்போக்கும்
பச்சையதுமதுரம் பார்,

(இ-ள்) இனிப்புள்ள மரகதம், விந்துவைவிளைக்கும்-பூத-விதப்பூதபைசாசங்கள்-விரணம்-பலவிஷங்கள் - மதுமேகம்-இவைகளை நீக்கும்,

நீலத்தின் குணம்.

குதிவலிமேகம்பித்தங் கூறரியபாண்டு
மதிமயக்கமெல்லா மருளு-மதிநுதலே
புத்தியொடுமேன்மேலும் போகசுகமுண்டாகுஞ்
சுத்தநறுநீலத்தாற் சொல்,

(இ-ள்) மதிநுதலாளே-நீலத்தினல், குதிகால்நோவு-மேகநீர்- அதிபித்தம்பாண்டுமசைசோர்வு இவைபோகும், நல்லறிவும்-குசுக்கிலமும் உண்டாகும், (௧௨௭௭)

உ

# வைத்தியாங்கம்.

தே, மருத்துவன்குணம்-கழிநெடில்-வி-ம்,

தெய்வவுபாசனைபலநூ லெல்லைகாண்டற்
றிரிகரண சுத்தியன்னோய்தீர்க்கனாகு
கைவகன்றதீரமதி நுட்பஞ்சான்றோர்
நட்பொழுக்கமேன்மைகுண மன்புள்ளானாய்
மெய்வகுதைவிகலையணங் குறைபதார்த்த
விதியுடற்கா தாரமடலங்கிமாத்தம்
கைவருமென் பேதமெலா முணர்ந்துற்றானாய்க்
காணிவந்தமருத்துவன் கைக்காணியுண்டே,

(இ-ள்) வேதாவுபாசனை-பலசாஸ்திரங்களை நன்றாக ஆராய்ந்தறிகுதல்-மனம் வாக்கு காயம்-என்னும்-திரிகாணசுத்தில் பல வியாதிகளைத்தீர்க்குதல்-நாளும்வியாதியைக்கண்டு அஞ்சாததீர்த்துவம் - மிகுந்தபுத்திநுட்பம்-பெரியோர்சிநேகம்-ஆசாரம் மேப்பாடு-நற்குணம்-அன்பு இக்தன்மைகளுள்ளவனாகித்-தேகம்-தேசம் காலம்-ரோகம்-ஔஷதம் பதார்த்தகுணம்-உடம்புக்காதாரம்-உதராக்கினி-தேகபலம் ஆகாரம்-கைபாகம்-செய்பாகம்-இன்னநோய்க்கு இத்தனைநாள்ஔஷதங்கொடுக்கவேண்டுமென்கிற கால அளவு என்னும் இப்பேதங்களையெல்லாம் அறிந்திருப்பவனாகத் தெரிந்தால் அந்தவைத்தியன் கொடுக்குஞ் சஞ்சீவியை ஒக்தமருந்தை உண்ணக்கடவை என்க-சரீரத்துக்குள்ள-ஆதாரபேதமானது-வாதம் பித்தம்-சிலேஷ்மம்-ரசதாது-ரத்ததாது-மாமிசதாது-மேதோதாது-அஸ்திதாது-மச்சைதாது-சுக்கிலதாது-மலம்-மூத்திரம்-என்னும் இப்-௰௨-ம் ஆம் உதராக்கினிபேதமாவது சாமாக்கினி-விஷமாக்கினி-தீக்ஷணாக்கினி மந்தாக்கினி-என்னும்-இந்த-௪-ம் ஆம்-தேகபலமாவது-சகசபலம் காலபலம்-யுக்திகிருதபலம்-என்னும்-இ-ம்-௩-ம்-ஆம்- இப்பேதங்களை ஜீவாகூஷாமிர்தம் என்னுசாஸ்திரத்திரத்தில் தோஷபேதபடலத்தில் காண்க, (௬௨௭௧)

தே, வைபார்த்தமருத்தவன்-நடத்தை-வெ-பா,

கன்மவருநோயதைமுக் கண்கொடறிவுற்றறிந்தார்
தம்மரோடற் சகத்துடனெட்-டின்மையெனி
லங்கைபதத்தூய்மையின்றே லங்குலிபூவெற்றலின்றேற்
சங்கைபதம்புனிறு காண்,

(இ-ள்) நோயானது கன்மரூபமாகையால் அந்தநோயைமூன்று விலைகொண்டு பிணியாளனுடைய நாமுதலாகிய தசவிதநாடி [illegible]

(இ-ள்) பிணியாடர்களிடத்திலிருந்து ஔஷதபாகஞ் செய்கிறவர்கள் அவர்களுக்கு உரிமையுள்ளவர்களும்-மிகுந்தநன்மையுள்ள சிநேகிதரும் வைத்தியர்மனதை ஒத்தவர்களுமாயிருக்கவேண்டும் அத்தன்மையர்களில்லாதபட்சத்தில் மற்ற ஏவலாளிகளுக்குள் தேகபலம் பிணியாளர்களுடைய ஆயுசுவிர்த்தியைவிரும்புதல்புத்திநுட்பம்-சத்திரம்-பரிசுத்தமென்னும் நற்குணம் உள்ளவர்களைபரிசோதித்து ஔஷதபாகஞ் செய்யவைத்துக் கொள்ளவேண்டும் என்க-இந்த சுபாடலும் தேரையர் செய்த்தயில வருக்கச்சுருக்கம் என்னும் சாஸ்திரத்திலிருந்துசேர்க்கப்பட்டவை, ()

{ கருமை-செம்மை-வெண்மை-மஞ்சள்-என்னும் நிறத்தையுடையகலுவங்களின் குணம், }

கருங்கற்கல்வந்தவுழ்தங் காணிலுடற்கின்பா
நெருங்கிவாந்தக் கற்றேருடநீக்கு-மொருங்குவெள்ளைக்
கண்மருந்தொவீரமொடு காரமுமின்மஞ்சளம்பி
யினமருந்தோர்நோய்விலக்கா வெண்.

(இ-ள்) கரிய நிறமுள்ள கலுவத்திலரைத்தமருந்து உடலிற்குநலஞ் செய்யும்-சிவப்புநிற-அம்மினதுமருந்து சகலதோஷத்தையும் நீக்கும் சத்தவெண்மைநிறக்குழுக்கல்லினதுமருந்திற்கு-வீரமும்-சுவையுட்-இன்மையாம்மஞ்சள்நிறக்கல்மருந்துபிணிகளைநீக்காதென்றெண்ணுவையாக

தே, மருந்தினது பக்குவகுணம்,

பக்குவபாகத்தை யுறுபஞ்சின்மருந்தும்பிறழ்
பக்குவபாகத்துப் பருமருந்து-மெய்க்குறுங்கா
லக்காலமும்பருணவாழி மருந்துஞ்சிந்துசேடன்
கக்காலமும்பொருந்து காண்.

(இ-ள்) லகுவானமுறையினாற் செய்யப்பட்ட ஔஷதங்களேயானாலும் பக்குவபாகத்தைப் பொருந்துமானால் அதுதேவர்களுண்ணத் திருப்பாற்கடலில் உண்டான அமிர்தத்துக்கொப்பாம் கனமான முறையினாற் செய்யப்பட்ட ஔஷதங்களேயானாலும்செப்பாகக்கொடுமானல்-அக்காலத்தில் ஆதிசேஷன் கக்கியவிஷத்துக்கொப்பாகும்-என்க, (தஉகூம)

தே, மறுபாகக்குணம்.

மாகமொட்டிக்குளிர்க்க பாணியிரசாயனகல்
வேகவிவேகங்குடி நீர்மெய்ச்சுரச-மேகுமிரா
மீந்தவெஞ்சனதிகளை மீளவொருகாவாண்டி
மாந்தநஞ்சம் வேறிருக்குமா.

(இ-ள்) பக்குவமாகக்காய்ச்சி ஆறினவெந்நீர்-ரசாயனம்-நல்லவீரிய முள்ளமேலிய கஷாயம்-தனியே இடித்துப்பிழிந்து முறித்தசுரசஞ்செ ன்ற இரவில் மீந்த பதார்த்தம் முதலியவைகளை மறுபடியும் ஒருதரம் அடுப்பில்வைத்துப் பாகஞ்செய்து புசிக்கில் இதுவே விஷமாம். ()

மருந்துவைக்கும் பாத்திரத்தின்குணம்.

தெங்கின்கிடுக்கை திகிரிதந்தப்பாத்திரத்தார்
நன்கிராம்பள்மருந்து நன்மருந்தாம்-வெண்கலந்தான்
மையிரும்பாற்கட்டைகளான மரக்கொம்பாற்பாத்திரங்கட்
செய்யினிரண்டாம்பட்சஞ் செப்பு.

(இ-ள்) தேங்காய்க்குடுக்கை-மூங்கில்-யானைதந்தச்சிமிழ் இவைகளில் வைக்கிற நலமில்லாத அற்பமருந்தும்-உயர்ந்தமருந்தாம்-வெண்கலம்-இரு ம்பு-மரம்-மிருகங்களின்கொம்பு இவைகளாற்செய்தபாத்திரங்களிலௌ ஷதங்களை வைப்பது மத்திமபட்சமாம்-என்க. (௧௨அ௧)

தே, மருந்தூட்டும்பாத்திரபேதம்.

வாதமுதன்முப்பிணியோர் வைத்திரயுண்பாத்திரத்தின்
பேதைமுறையேகேள் பெருங்கஞ்சஞ்-சாதகும்பந்
தாம்பரமாமின்றென்னிற் சக்கரிமைப்பாத்திரநன்
றும்பரமாட்கொடுக்கு மாற்கு.

(இ-ள்) வாதரோகிகளுக்கு வெண்கலப்பாத்திரத்தினும் பித்தரோகி களுக்குத் தங்கப்பாத்திரத்திலும்-சிலேஷ்மரோகிகளுக்குத்தாம்பரப்பா த்திரத்திலும் மருந்திழைத்துண்ணக்கொடுக்கவேண்டும்-இவைகளில் லையெனில் தூயப்பாத்திரமே, இதுபூரணயுளைத்தரும்-என்க. ()

தே, மருந்தூட்டுங்காலம்.

அனிலநோயர்க்கசன மாகாமுன்பிறந்த
தனியர்க்கசனநடு தானை-யெனுநோயர்க்
கசரப்பின்னுமருந்தி லுறையப்பிணியாற்
சாகரப்பின்னுலகிற் றுன்.

(இ-ள்) வாதரோகிகளுக்குபோஜனம் செய்யுமுன்னும் பித்தரோகி களுக்குப்போஜன நடுவிலும் சுலேஷ்மரோகிகளுக்கும் போசனஞ்செ ய்தபின்பு-ஔஷதம் உண்ணக்கொடுத்தால் அந்தவியாதியினாலே சமுத் திரஞ்சூழ்ந்த உலகத்தில் அவர்கள் இறக்கார்கள் என்க. (௧௨௯௧)

தே, மருந்தருந்தியபின்பு வாயிலிடும்வஸ்துக்கள்.

சிவற்கனமதுதிராட்சை தம்பைமூக்குடிராகம்
பூவற்சரகெற் பொரிச்சத்தூள்-பூவி

விருந்துண்டநீர்மைதன்று தேற்றுமேன்மக்கண்
மருந்துண்டவாய்க்கிவையா மால்,

(இ-ள்) கொட்டைப்பாக்குச்சிவல்-நாகப்பூ-தேன் - திராட்சைப்பழம் வெற்றிலைக்காம்பு கிராம்பு ஒருவருஷஞ்சென்றநெற்பொறி-பச்சைக்கர்ப் பூரத்தூள்- இவைகள் உண்டமருந்தின்தன்மையைக் கெடுக்காதவஸ்து க்களாதலாலும் வெகுட்டினுல் முகத்தின் சுபாவதன்மைமாறுமலிருக் கும்படிச் செய்யத்தக்கவையாதலாலும் அதுகளில் ஒன்றை ஔஷதம் உண்டமேன்மக்கள்வாய்க்குக் கொஞ்சங்கொடுக்கக்கடவை-என்க, ()

தே, பகல்உறக்கத்தை நீக்கிமருந்தூட்டும்உபாயம்,

வேசையாகூத்தொன்றொருத்த வேறுவேறுங்கூத்தா
லாசியத்தாற்கீதத்தா லற்புதத்தால்-வீசுபுகழ்
றூக்கமருணீக்கிபுரை துய்ப்பித்தணங்கையுள்ளார்க்
கூக்கமருள்வார்மருத்து வர்,

(இ-ள்) பண்டிதர்கள், கணிகைமாதர்பரதக்கூ து ஒன்தவிர பலவித நாடகக்கூத்து விகடம்-சங்கீதம்-அதிசயம்-ஆகிய இவைகளினுல் பகல் நித்திரைமயக்கத்தை விலக்கிநோயாளிகளுக்கு மருந்தூட்டிப் பலம் வர ச்செய்வார்கள். (கஉகூ)

தே, சிகிச்சையின் பேதம்,

சூதகந்திதாதுபஸ்மஞ் சொர்ன்னநாட்டார்சிகிச்சை
யோதரியமூலியிம்மண் ணூர்ச்சிகிச்சை-வேதடருஞ்
சத்திரட்சராக்கினி கிசாசரச்சிகிச்சையென்றே
முத்தரத்தாகு மொழி.

(இ-ள்) சிகிச்சை என்பது-ஒன்றாயிருந்தாலும்-அதுமூவகைப்படும் அவையாவன, ரசம்-கந்தகம்-பாஷாணம்-பஸ்பம் - ஆதிகளைக்கொண்டு வைத்தியஞ்செய்வது தேவகணச்சிகுச்சை விருக்ஷமுதலிய ஔஷதிக ளைக்கொண்டு சிகிச்சைசெய்வதுமனுஷகணச்சிகிச்சை, அறுத்தல்-காரம்வைத்தல்-அக்கினியாற்சுடல்முதலியவைராட்சதகணச்சிகிச்சையாம்,

தே, காலபேதவிரோயனம்,

குடிநீர்கற்கந்தயிலுங் கோடைக்காம்பேதி
கடுமாரிமூகிபனிக் காலங்-கெடும்வைகள்
சோபிக்குமெக்களிக்குஞ் சூதமுப்பிற்குமபேதி
சோபிக்குமெக்காலஞ் சொல்,

(இ-ள்) கஷாயம் அரைத்தகலக்கமருந்து-ஆமணக்குநெய் - என்னும் இ-ம-கூ-ம கோடைக்காலத்துப்பேதிமருந்துகளாம் மழைக்காலமபனிக் காலங்களில் கொடுக்கில், அவைகளின் குணங்கெடும், மேற்கூறிய-கூ

காலங்களிலும, நோவாள-பலவிதக்கள்ளிப்பால் ரசம-உப்பு-இவைகள் சேர்ந்தமருந்துகளைக்கொடுக்கில், கிரமமாகப்பேதியாகும்-என்க. ()

## மருந்துவகை.

### அயச்செந்தூரத்தின் குணம,

அயத்தில்வை சிந்தூர மையமொடுசோகை
*வயிற்றிலுறுகாமாலை மாற்றும்-புயத்திற்குச்
செய்யபலமுண்டாக்குந் தீபனத்தைத்தானெழுப்பும
வெய்யபாண்டோட்டுமிது மெய்.

(இ-ள்) அயச்சிந்தூரம, கப்பிணி - வீக்கம காமாலை பித்தபாண்டு இவைகளைநீக்கும புஜபலத்தையும பசியையும-தரும, நீனிப்பையின் காமப்புகளைப்பற்றியமஞ்சள் நிறத்தால்பிறப்பதால்*வயிற்றிலுறு காமாலையென்றார். (௩௨௬௩)

### காந்தச்சிந்தூரத்தின்குணம.

காந்தச்சிந்தூரங் கருகரிய புந்திவலி
போந்தவதிசாரம பொங்கிவரு-வாந்திபல
காச்சுவாசனை காமாலைபாண்டுவேரடு
பூசல்வினைநீக்கும புகல்,

(இ-ள்) காய்ந்தச்செந்தூரம, நாபிவலி-பேதச்சுரம- வமனம-க்ஷயம் இருமல் இரைப்பு காமிலம-பாண்டு நீங்காநோய்-இவைகளைவிலக்கும்,

### தே. தாமபரபஸ்பத்தின்குணம-சந்த-வி-ம,

உருவங்குறுபசியும பெறுமுரமுமபெறுமிரமா
மிருகண்டருடயன்பெறு மிகையும்பெறுகுவரோ
எறுசெயபுறுமலினந் தெறிவகையுமபொடிவகையும
பருகுமபெருவிதமுக்கெரிபவரமபுவி மிசையே,

(இ-ள்) செமபில்பொருந்திய களிம்பைநீக்கும்வகையும-பஸ்மஞ்செய்யுமவகையும-அதனைவுண்ணுமபெரிதானவகையும-அறிந்தவர்கள், வயிற்றிலுண்டாகுமபசியையும பலத்தையும தவத்தில்உயர்ந்த மிருகண்டமகாரிஷிபுத்திராகியமார்க்கண்டேயர்போல ஆயுசுருத்தியும-அடைவார்கள்-என்க, உண்ணுமபோது-பிராமண அனுபானபத்தியவகைகளை அறிந்துண்ணவேண்டுமென்பதைப்பற்றிப்பருகும பெருவிதமென்றார்.

### இதுவுமது-வெ-பா,

தாமரபஸ்மந் சகலகுட்டங்குறைநோய்
சொம்புகுட்டமெல்லாந் தூரத்துமென்பார்-தேம்பி
யிருக்கின்றபித்தமுடனீளைசுரஞ்சந்நி
குருக்கின்றவாயுவும போக்கும,

(இ-ள்) தாம்பிரபஸ்பம் குன்மங்கள் பெருவியாதி மூர்ச்சைபலகுஷ்டம் அதிபித்தம் சுவாசம் சுரம்சந்தி பிருவாயு இவைகளை நீக்கும், ()

வங்கச்சிந்தூரத்தின் குணம்,

வங்கச்சிந்தூர மதுமேகநீரிழிவோ
டங்குமுறுதாப மகற்றுங்காண்-பொங்கிவரு
மோதவுதிரத்தாலுருவி ரணநோய்போக்குந்
தாதுவையுண்டாக்குமது தான்,

(இ-ள்) வங்கச்சிந்தூரம் மதுநீர் அதிமூத்திரம் சுரம் ரத்தவிருத்தியினாற்பிறந்தபுண் இவைகளை ஒழிக்கும் சுக்கிலத்தைவளர்க்கும். ()

ஆனந்தபைரவம் சுத்தபைரவம் சொர்னானந்தபைரவம்
பிரமானந்தபைரவம் ஆனந்தரசம் விஜேதைபைரவம்,

இவைகளின்குணம்-வி-ம்,

ஆனந்தபைரவம்பி னடர்சுத்தபைரவஞ்சொர்
னானந்தபைரவம் பிர்ம்மானந்தபைரவம்மா
வானந்தரசம்விஜேதை மாம்பைரவமிவற்றால்
வானந்தமேவுருட்சை வருதிரிதோடம்போமே,

(இ-ள்) ஆனந்தபைரவம் சுத்தபைரவம் சொர்னானந்த பைரவம் பிர்மானந்தபைரவம் ஆனந்தரசம் விஜேதைபைரவம் இவைகளினால் முக்கியமானசுரமும் திரிதோஷாரம்பரோகங்களும் போகும் என்க, ()

சுத்தமண்டூரம் மகாமண்டூரம் சித்தமண்டூரம் திரிகடுகாதிமண்டூரம்
நாராயணமண்டூரம் இவைகளின்குணம்-வெ-பா,

சுத்திமண்டூரந் துதிமகாமண்டூரஞ்
சித்தமண்டூரந்திரிகடுக-மொத்திடுமண்
டூரநாராயணமண் டூரமிவைக்குவெகு
தூரமாம்பாண்டொடு சோபை,

(இ-ள்) சுத்தமண்டூரம் மகாமண்டூரம் சித்தமண்டூரம் திரிகடுகாதிமண்டூரம் நாராயணமண்டூரம இவைகளுக்கு ஐவகைப்பாண்டுநோய் களும் ஆறுவிதசோபரோகங்களு ஒழியும் என்க, (௧௨௬௬)

வாதராக்ஷச மாத்திரைதசவித அக்கினிகுமாரம்
இவைகளின் குணம்,

இகல்வாதராக்ஷசனுக் கெண்பதுவாய்வும்
புகலாமலோடும் புறத்தே-பகலார்
தசவிதவக்கினிக் குமாரர்க்குச்சந்நி
நசிசுரங்களும்போ நவில்,

(இ-ள்) வாதராக்ஷசமாத்திரையினால் (அ) விதவாதநோய்களும் தச வித அக்கினி குமாரத்தியினால் சந்நியும் அசாத்தியசுரங்களும்போம்,

கோரோசனைக் குளிகை தாககோபசமனமாத்திரை

இவைகளின் குணம.

கோரோசனைக் குளிகைக்குப்பித்தசுரந்
நீராதநாக்குசிறுவர்சுர-நோராது
தாககோபச்சமனந் தன்னாற்சுரஞ்சந்நி
தாகபித்தமபோமே தணிந்து.

(இ-ள்) கோரோசனைமாத்திரைக்கு பயித்தியசுரமும நீங்காதநாவ ரட்சியும குழந்தைகள் ரூட்சையும விலகும தாககோப சமனமாத்திரை யினால் சுரரோகமும் சந்நிபாதமும் பித்தவிதாகமும தீரும். ()

குன்மகுடாரம சுயம அக்கினி பாஷாணபின்னவச்சிரரசம

இவைகளின் குணம,

குன்மகுடாரமெனக் கூறிலட்டகுன்மமும்போம்
வன்னசுயம்க்கினிக்கு வாதமந்தம-பின்னமுறும
பாடாணபின்னவச்சிர பாரசத்தைப்பார்த்தவுடன்
கோடாகுங்கல்லடைப்பிற் கே,

(இ-ள்) குன்மகுடாரமாத்திரையினால் (அ) விதக்குன்மங்களும சுயம அக்கினிமாத்திரைக்கு தனிவாதஜீரணமும பாஷாண பின்னவச்சிரா சத்தினால்-அ-வகை அஸ்மரி ரோகங்களுமகெடும என்க, (தநாக)

மேகுலாந்தகன்-சர்வசித்திரசம்,

இவைகளின் குணம,

மேககுலாந்தகனன் மேககுலம்போமசிச
யோகசர்வசித்திரச மொன்றுக்கே-போகும
பெருமூத்திரமென்ற பேருமபேதித்து
வருமூத்திரமு மறிவாய்,

(இ-ள்) மேககுலாந்தக மாத்திரையால் (உ0) விதமேகங்களும சர்வசி த்திரசத்திற்கு வெகுமூத்திரம பல சொட்டுமூத்திரங்களும் நீங்கும,

கோடாசலக்குளிகை மகாவன்னிரசம

இவைகளின் குணம,

கோடாசலத்தாற் கொடும்பாண்டுசோபைமுத
லோடாக்கிரகணியு மோடுங்கா-ணீடுமகா
வன்னிரசமென்றுரைக்கில் வாடாச்சலோதரமும
பின்னிடையுந்தப்பாது பேசு,

(இ-ள்) கோடாசலக்குளிகையால் பாண்டுநோயும வீக்கமும்நீங்காக கிரகணியும்போம், மகாவங்கிரசத்திற்கு சலோதாரரோகம வகும், ()

உலோகத்தமரசம வங்கேசுவரம நாரசிங்கரசம

இவைகளின் குணம,

உலோகவுலோகத்தம சரத்தாலுன்னும
விநோதமெனும்பேதி விளையுங்-கனமான
வங்கேஸ்வரத்திற்கு வல்லிகுன்மம்போனுர்
சிங்கமமூலச்சுரந் தீர்க்கும,

(இ-ள்) உலகோத்தமரசத்தால் பற்பலவிபாதிகள் நீங்கும்※விநோத பேதி உண்டாம் வங்கேஸ்வரத்திற்கு வல்லிக்கட்டியும குன்மக்கட்டியு மபோம நாரசிங்கத்திற்கு புராணசுரமவிலகும※இது நகங்களில் உந்தி யில் தடவினுலும புஷ்பச்செண்டில் தெளித்துமோந்தாலும பேதியாகு மபடி செய்வதினுல் விநோதபேதியென்ருர் என்க. (தகடாகு)

சிந்தாமணி திரிலோகசிந்தாமணி என்னும,

இக்குளிகைகளின்குணம்

சிந்தாமணிக்குளிகை சேர்ந்தமலக்கட்டுக்கு
மூந்துசுரவாயுவையு மோட்டுங்கா-ணந்தாத
திரிலோகசிந்தா மணியென்னிற்சந்நி
திரிலோகத்தப்புரமபோந் தேர்,

(இ-ள்) சிந்தாமணிக்குளிகை பழையமலச்சிக்கலையும உஷ்ணவாயு வையும நீக்கும, திரிலோகசிந்தாமணி மாத்திரைக்குச்சந்நிவிலகும.

திரிலோகசூடாமணி திரிலோகரக்ஷாமணி

இவைகளின் குணம,

திரிலோகசூடா மணிக்குந்திறல்சேர்
திரிலோகரட்சாமணிக்கு-மூரவுநோவு
காசமவிக்கல்சந்நி கபந்தலைநோய்மந்தஞ்சு
வாசம்பாண்டுமபோ மதி,

(இ-ள்) திரிலோகசூடாமணி மாத்திரைக்கும திரிலோகரட்சாமணி க்குளிகைக்கும மார்புவலி இருமல் இமோரோகம சந்நிபாதம் க்ஷயமசிர ஸ்தாபம அலஜம இரைப்பு சரீரவெளிறல் ஆகிய இவைநீங்குமஎன்க

ராஜமிருகாங்கம மகாராஜமிருகாங்கம இவைகளின்குணம்.

ராஜமிருகாங்கமது ராஜநோய்போக்கும்கா
ராஜமிருகாங்கமது ராஜநோய்க்-காசகபம்
பாண்டுகாமாலை பலபிசைஞ்சோபை
தாண்டுபித்தநோயகற்றுஞ் சாற்று.

(இ-ள்) ராஜமிருகாங்கமாத்திரை ராஜரோகம் என்கிற க்ஷயத்தையு ம் மகாராஜமிருகாங்கமாத்திரை க்ஷயகாசம் சுவாசம் பாண்டு காமிலம் பற்பலபீநசம் வீக்கம் பித்தகோபம் இவைகளையும் விலக்கும், ()

ராஜகண்டேச்சுரம் ராஜராஜேச்சுரம் ராஜகேசரிவடகம்,

இவைகளின் குணம்.

ராஜகண்டேச்சுரமும் ராஜராஜேச்சுரமும்
வீசுரமெல்லாம் விலக்குங்காண்-ராஜநற்
கேசரியதாம்வடகங் கெதஞ்செய்தோடசுர
நாசமுறக்காட்டுமதை நாடு.

(இ-ள்) ராஜகண்டேச்சுரமாத்திரையும் ராஜராஜேச்சுரமாத்திரையும் வாதசுரமுதலிய சகலசுரங்களையும்போக்கும் ராசகேசரிவடகம்திரிதோஷங்களினாற்பிறந்த ௰௩-சந்நிபாதசுரங்களையும்கெடுக்கும், (௩௩-௱௬)

தே, சந்திரோதயம் சந்திரகாசரசம் சந்திரபிரபாவடகம்

பூரணச்சந்திரோதயம் இவைகளின்குணம்,

சந்திரோதயத்தால்வெப்பந் தணியுஞ்சந்திரகாசத்தாற்
பித்தமுத்தோடஞ்சந்திர பிரபாவடகமோநான்
கைந்துநீர்போக்கும்பூர்ண மாஞ்சந்திரோதயத்தால்
விந்துவும்திக்ரிக்கும் வீறுநோய்சூழ்வும்போமே,

(இ-ள்) சந்திரோதயமாத்திரையால் தாபச்சுரமுதலிய சகலசுரங்களு ம் சாந்தமாம் சந்திரகாசமாத்திரையினால் திரிதோஷவிகுணம் நீங்கும், சந்திரபிரபாவடகமானது (௨௰) பிரமேகங்களையும் விலக்கும்பூரணச் சந்திரோதயத்தினால் வீரியவிருத்தியாகும் பற்பலநோய்களும்போம்,

வசந்தகுசுமாகர மாத்திரையின்குணம்-வெ-பா.

வசந்தகுசுமாகரத்தால் வல்லையங்காச
முசந்தவிடபாண்டுகுன்மம் மூழ்ருய்க்-கசிந்தநீர்க்
கட்டுபுளியேப்பமொடு கல்லடைப்புத்தாகமிவை
விட்டுவிடுங்காண் விரைந்து,

(இ-ள்) வசந்தகுசுமாகரமாத்திரையால்க்ஷயம்இருமல் விஷபாண்டுகு ன்மம்சொட்டுமூத்திரம்புளியேப்பம் அஸ்மரிதாகநோய்இவைநீங்கும்,

தே, மகாவசந்தகுசுமாகரமாத்திரையின்குணம்-வி-ம்,

மகாவசந்தகுசுமா கரத்தால்வந்த
வாயுகபம்பித்தமந்தம் வயிற்றுநோய்கள்
விகாரவுன்மாதங்கா மாலைபாண்டு
விடுநீர்கட்டுசந்நிகுன்மஞ் சோபை,

யாகாதசயகாச சுவாசம்பிரமேக
மதிசாரமெலும்புருக்கி விக்கன்மூலஞ்
சிகாவாதஞ்சுருக்ககுட்ட மார்புநோயுந்
தீரும்தற்கனுபானந் தெரியுங்காலே,

(இ-ள்) மகாவசந்தகுசு மாகரமாத்திரையை கொடுக்கும் அனுபான க்கிளையறிந்து கொடுக்கில், திரிதோஷவிருணம அசலம உதரரோய்கள் உன்மாதம காமிலமபாண்டு விஷபேதி மூத்திரபிந்து வாதவெஸ்து சந்நி குன்மம வீக்கம க்ஷயம் காசம்சுவாசம் மேகநீர்பேதி அஸ்திசிராவம இ த்மாமூலம வாதசிரஸ்தாபம குறைநோய் மார்புவலி இவைதீரும், ()

லங்கேச்சுரம பிரதாபலங்கேச்சுர இவைகளின்குணம-வெ-பா,

இலங்கேச்சுரத்திற் செழுசூதிகைக்கர
விலங்காகிரகணியுமில்லை நலங்கொளபிர
தாபலங்கேச்சுரத்திற் சாந்தமாஞ்சீதசுரம
சோதமுறுநோயினமுஞ் சொல்,

(இ-ள்) லங்கேச்சுரத்திற்கு, சூதிகாவாதமும் கிரகணியும பிரதாபல ங்கேச்சுரத்தினால், சீதசுரமும மூர்ச்சைமுதலிய பிணிகளுமபோம்.

ஏகாதசருத்திரமாத்திரை சிந்தூர பூஷணம,

இவைகளின் குணம்,

ஏகாதசருத்திரமென்னு மாத்திரைக்குப்
போகாதசந்நிசுரம போகுங்காண்-வாகான
சிந்தூரபூஷணத்தாற் சீர்கருப்பமாதருக்கு
வந்தசுரமபோமுணரு வாய்,

(இ-ள்) ஏகாதசருத்திரமாத்திரைக்கு, அசாத்தியசந்நிபாத சுரமும சிந்தூரபூஷணமாத்திரையால் கருப்பஸ்திரிகட்குற்றசுரமும நீங்கும். ()

பூபதிமாத்திரையின் குணம,

நாவிஷடவன்னமுறு நஞ்சுமவிடமபோகு
மேவுசுரஞ்சந்நிகளும விட்டுப்போங்-காவிவிழி
மாதரவசியமது வாய்க்குமிலேபனமாந்
தாளேசேர்பூபதிக்குத் தான்,

(இ-ள்) பூபதிமாத்திரைக்கு, விஷம் சுரம சந்நிபாதங்களும விலகும தீபனமும ஸ்திரிவசியமும் ஆண்குறியெழுச்சியும உண்டாம, ()

நவலோகபூபதி-சூலைப்பூபதி

இவைகளின் குணம,

நவலோகபூபதிக்கு நண்ணுசுரஞ்சந்நி
புவலோகவாழ்க்கைவிட்டுப் போங்கா-ணைவுசூலைப்

பூபதிக்குச்சூலைசந்நி பொங்கனலந்தென்றிசைவாழ்
பூபதிக்காளாகும் புகல்,

(இ-ள்) நவலோகபூபதிமாத்திரைக்கு, சந்தசுரம் சந்நியும் விலகும் சூலைப்பதிக்கு கீல்பிடிப்பும் சந்நியும் தாபச்சுரமும் கெடும், (தசாக)

பூபதிரசம் ரசபூபதி இவைகளின் குணம்,

பூபதிரசத்திற்கு போஞ்சனிமந்தம்மிரத
பூபதிக்குசந்நி பொருச்சிநோய்-கோயமிகு
காசஞ்சுவாசங் கடுஞ்சூலைபாண்டுமுத
ஞசங்கபவாய்வு நாடு,

(இ-ள்) பூபதிரசத்திற்கு, சந்நிபாதமும் அலசரோகமும் போம் ரசபூபதிக்கு சந்நிபாதசுரமுமசோமரோகம் இருமல் இரைப்பு கீல்பிடிப்பு பாண்டுரோகம் சிலேஷ்மவாதரோகம் இவைகள்கெடும், (தசாஎ)

தே, மருந்தருந்தும் கால அளவுகூறல் வி-ம்,

தாதுநட்டபஸ்மாரஞ் சுவாசகாசந்
தனியுன்மாதன் இவைங்காண் டிறையாமென்பர்
மோதுகிறிச்சரம் விரணங்கல்லடைப்பு
முதிர்மேகநீர்க்கு மருந்திரைந்திங்க
ளோதுமுதாவர்த்தமர் தாங்கமேழன்
றுரைவிந்திரிதிக்கு மருந்தரையாண்டன்றி
மீதுவேண்டாவுரைத்த விம்மட்டுண்ணின்
விலகுமவைசேடமற விரும்பிக்காணே,

தே, இதுவுமது;

சோகபகந்தாமூல முத்திரச்சூலை
சூலைகுருதிக்குன்ம மசிர்க்குநோயா
நாகமுபயாட்டில் மெய்திமிரங்குன்ம
நாறுகபமிவைக் குறைநீகஞன்காந்திங்க
ளரகமடிமூர்ச்சை தவுல்லியகிறந்தி
யாமமிலபித்தஞ் சீதபித்தமுட்டி
யேகவருமதிம்தஞ் சோமரோக
மிவைக்குறைமும் மதியுண்ணினினிமீளாவே,

தே, இதுவுமது.

வாந்திவிக்கல்கண மாந்தம்பேதிகட்கு
மண்டலமென்றுரைவாதங் காமிலங்கட்
கேந்திருமண்டமுறை பற்பாண்டுசோபை
யென்மகோதரம்பிரி தானிக்கட்கூக்க

மோய்ந்திடமும்மண்டல நல்லுரைநாட்சென்று
மொழிவில்சுரங்கட்குறை மண்டலநான்குன்னி
மாந்திடபோமித்திரனே சகலநோய்க்கு
மருந்தூட்டின்மீட்டுமவை வாட்டாவாறே,

(இ-ள்) சுக்கிலநட்டம அபஸ்மகரம சுவாசகாசம உன்மாதம என்னுமபிணிகளுக்குஒவ்வொருவருஷகாலமும கிரிச்சரம துஷ்டவிரணம அஸ்மரிமதுமேகமஇவைகளுக்கு(௰)மாதமுமஉதாவர்த்தம பகூகாதம எ-வகைவித்திரிதிக்கட்டிகள்இவைகளுக்கு-சு-மாதமும பகந்தரமமூலம் ரத்தசூலைவாதசூலைரத்தகுன்மமஅசிர்க்கரமஆநாகம அஷ்டிலமபிரத்தியஷ்டிலம்திமிரமகுன்மம சயம் இவைகளுக்கு-ச-மாதமுமஇருதாவிருதவாதம்மூர்ச்சைதவுல்லியவிரணம்ஆமிலபித்தமசீதபித்தம் பசியைக்கெடுக்கின்றஅலசம்சோமரோகமஇவைகளுக்கு-ந-மாதமும வாந்திவிக்கல்கணம்மாந்தம் அதிசாரமஇவைகளுக்கு-ந-மண்டலமவாதம் காமாலை இவைகளுக்கு-உ-மண்டலமும் பலவகைப்பாண்டுசோபை அஷ்டமகோதாரம துனிபிரதிதுனி இவைகளுக்கு-ந-மண்டலமுமபுராணசுரத்துக்கு-ச-மண்டலம ஔஷதங்கொடுக்கவேண்டுமஇவ்வாறே மற்றயுரோகங்களுக்கும எண்என்கிற சாஸ்திர விதிப்பிறகாரம ஔஷதம ஊட்டில் மறுபடியும் அப்பிணிகள் ரோகியை வருத்தாவாம என்க, (௲௩௨௰)

## பத்தியவகை,

---

தே, கஷாயம் சுரசம ஸ்நானபானங்களுக் குரியசலம

இவைகளின் உஷ்ணநிதானம்-வி-ம்,

சுத்தநற்குடிநீர்காண்டஞ் சுரசமுண்டிடிதூரைக்கு
மெத்தவுஞ்சூடாம்பித்தம வெப்பிரத்தஞ்சந்திக்கு
முத்தமங்குளிர்ச்சியாகு மோங்கைக்குச்சிறியசூடாங்
கொத்தடர்தொல்லைநோய்க்குக் குறிசமோட்டினமாங்கூரே,

(இ-ள்) பரிசுத்தமாகியநல்ல கஷாயம் வெந்நீர் சுரசம் முதலியவைகளை அருந்துமிடத்துவாதநோய்க்குமிகுந்தஉஷ்ணமும்பித்தமசுரம சந்நியோவிரணரத்தம்சந்நிபாதமஇவைகட்குக்குளிர்ச்சியும்அதிகரித்த சிலேஷ்மநோய்க்கு அறபச்சூடுடைகையும தொந்தநோய்க்குச்சமவெப்பமுமஉத்தமமாமஎன்க※சமவெப்பமஎன்பது அதிகஉஷ்ணமகுளிர்ச்சி இளஞ்சூடுகை என்னும மூவகை நீரையும சமமாகக் கலப்பதாம,. (௲௩௨௧)

தே, பிணியளர்க்குத் தயிர்தோய்க்கும்விதி-வெ-பா.

காற்செருழிக்கக்கோட்டையுமக் காலொடுசேரையென்னுங்
கூற்செருழிக்கச்சுக்குங் குறுமிள்குமூற்றடுபித்

தம்மொழிக்ககட்டியும்பா றன்னிதிட்டுத்தோய்பர்த்தி
யம்மொழிக்க மாட்டாதவர்

(இ-ள்) தயிரைமோரை நீக்காதரோகிகள், வாயுவை நீக்குதற்குஇஞ்சியும் வாதகபத்தை யொழிப்பதற்குச்சுக்கும் சிறுமிளகும் பித்தத்தை விலக்குதற்குவெல்லமும்பாலிலிட்டுக்காய்ச்சி தயிர்தோய்ப்பார்களென்க,

பிணியாளர்க்குமோர்சேர்க்கும்விதி,

கிரிச்சந்தனக்குவெல்லங் கேள்பாண்டுநோய்க்கு
மரிப்பேதிகட்குஞ் சுக்காகு-மெரிப்பான
மேகந்தனக்குத்தேன் மிக்குபிணிகட்கெளாயு
ளாகங்கொடிவேலி யூட்டு.

(இ-ள்) கிரிச்சரத்துக்குவெல்லமும், பாண்டுவாதாதிசாரம முதலிய நோய்கட்குச்சுக்கும், மேகத்துக்குத் தேனும, மந்தாக்கினியாற்பிறந்த எனையரோகங்களுக்குச் சித்திரமூலப்பட்டையும, தயிரில் பிரமாணமாக வூறவைத்துக் கடைந்தமோரைக்கூட்டவேண்டும்-மென்க. (௩௯௨௩)

மருந்துண்பார்க்குஊறுகாய்வகை,

சண்டைநெல்லிதேருகளா தூதுளைபாவட்டையா
தொண்டைநாரத்தங்கச் சருநிஞ்சி-பண்டைநாட்
சென்றவருணக்காயுஞ் சேருருகாயென்னிற்
றின்றமருந்தீனமுறா தே,

(இ-ள்) சுண்டை-நெல்லி-தேற்றான்களா-தூதுளை-பாவட்டை-ஆதொண்டை-எலுமிச்சை-இக்காய்களும-நார்த்தமபிஞ்சும்- இஞ்சியும-நாட்பட-உப்பிலூறவைத்துப்புசித்தால், தின்றமருந்தின்குணங்கெடாதென்க,

தே, அயச்செந்தூரத்தின்பத்தியம்-வி-ம்,

பத்தியந்திலங்கூஸ்மாண்டம பலங்கிகொள்கடுகுதோரை
கத்திரிபிரமபந்திரி கட்கஞ்சாவபிணிமாதர்
சுத்தமாகாதுபசனெய் துய்திடலாம்புளிப்புப்
புத்தமமகற்றலானு லுத்தமுமபழுதுமின்றே,

(இ-ள்) அயச்செந்தூரத்துக்கு, பூசினி-கொள்-கடுகு-மூங்கிலரிசி-கத்திரி-புகையிலை-கஞ்சா-அபினி இவை ஆகாவாம-புணர்ச்சியோவெனில் பரிச்சேதங்கூடாது-பசுவின்பாலும-ஆகும-இதில்-புளிப்பும-உப்புநீக்கினால்உத்தமமாம அன்றியுமஉத்தமமாகிய-அம்மருந்தும்பழுதுபடாது,

தே, காந்தச்சிந்தூரத்தின் பத்தியம்-வி-ம்,

பத்தியம்புளியுப்பின்றேற் பலிகமாம்வாரத்துள்ளே
நத்திடிவிரண்டுமார நவிலுமிச்சாபத்தியங்கொள்
கத்திரிக்காயகத்தி கடுகுகூஸ்மாண்டமெள்ளு
கொத்தவரைக்காய்மாங்காய் கூலக்காயிவையாகவே

(இ-ள்) காந்தச்சிந்தூரத்துக்கு புளி உப்புநீக்கில் அது (க) வாரத்துக்குள் பயனைத்தரும் அவைகளை விரும்பினால் இச்சாபத்தியத்துடன்(உ) வாரம்உண்ணவேண்டும் இச்சாபத்தியமாவது கத்திரி - அகத்தி-கடுகு பூசினி-திலம்கொத்தவரை-மாங்காய்-பலாக்காம்-இவைநீக்கியுண்பதாம்,

தே, தாம்பரபஸ்பத்தின் பத்தியம்-வி-ம்,

புளியொன்றுதவிரவெல்லாம் புசிக்கினுநவையுறாதை
இளைபெருநெருப்புக்கீர மில்லையென்பதுபோலாகு
மளைமுசலிகுசங்காடியாமிலமடாதுபாகற்
சுளையறமகட்பழம்நெய் சுதைசருக்கரைமானன்றே

(இ-ள்) தாம்பரபஸ்பத்திற்கு புளிப்பொழிந்த மற்றசுவையுள்ள பதார்த்தங்களையெல்லாம் உண்ணினும்குற்றம்வராது ஏனெனில் நீரைவறட்டுகிற பெருநெருப்பிற்கு ஈரமில்லை என்பதுபோலாம் ஆனால் புளித்ததயிர் முயற்கறி எலுமிச்சம்பழம் காடிநெல்லிக்காய் இவைகூடாது பலாச்சுளை வாழைப்பழம் பசுநெய் பால்சர்க்கரை இவைநலமாம், (௩௨௭)

தே, பாதரசத்தின் பத்தியம்-வெ-பா,

மற்சமுப்புசீதோட்டின் மந்தாநிலத்தெண்ணெய்
துற்சமத்தியங்கைப்பு தொங்குபுளியைச்சாற்றுங்
கூட்டாமற்கூதங் கொடுப்பருண்டாரைச்சமன்பாற்
காட்டாமற்றுயிருத்தக் காண்

(இ-ள்) ரசத்திற்கு மீன் லவணம் சீதளவெப்பமுள்ள பண்டம் அக்கினிமந்தவஸ்து எண்ணெய் கள் கசப்பு புளிப்பு இவைகூடாவாம், ()

பறங்கிப்பட்டையின் பத்தியம்-வி-ம்,

மஞ்சளோடெண்ணெய்பாக்கு மாங்கிசமலுவாகார
மிஞ்சிகார்கடுகுகைத்த விழிவுறுபுளிமண்ணுப்பு
மஞ்சுறுவாளைகோலா மடவைமீன்சன்னைவெள்வால்
கிஞ்சிதமருந்திறைலுங் கெடும்பறங்கித்தோன்மாதோ

(இ-ள்) பறங்கிப்பட்டைக்கு கறிமஞ்சள் நல்லெண்ணெய் களிப்பாக்கு மிருகமாமிசம் உறைப்புஇஞ்சிகடுகுகசப்புபுளிப்பு லவணம் இவைக

ளும் வாளைகோலா மடவை சன்னை வெளவால் முதலியமீன்களும் லவ
ஙசமும் சேரலாகாது சேரில் அம்மருந்தின்தன்மை கெடும் என்க, ()

தே, தைலங்களின் பத்தியம்-வி-ம்,

புலர்த்தியபின்பருந்து போசனந்தனிற்புளிப்பு
சலந்தூறுதயிபால்பாகல் சாகம்மீனிறைச்சியச்ச
நிலத்தெழுபிரமபத்திரி நித்திரைமடவாரின்னு
நலத்துறுவகைநீக்குப்பின் னுளும்பத்தியத்துணில்லை

(இ-ள்) தையிலமாடி யிரந்துவட்டியவுடன் நீஉணவில் புளி-தயிர்-பால்-பாகற்காய்-இலைக்கறி-மச்சவகை-மாமிசங்கள்-அகத்தி-புகையிலை- பகல்நித்திரை-புணர்ச்சியின்னும் தகாதநடத்தை இவைகளை நீக்குவதுந்தவிர மறுநாளிலும் பத்தியமாயிருக்கக்கடவை என்க, (௩௩௰)

தே, முக்கியமாகமருந்துகளுக்குதவாத வஸ்த்துக்கள்-வெ-பா,

சிந்தக்கனிமிகுந்த சீவனந்தாம்பூலம்வெல்லம்
பந்தப்பயற்றுப் பருப்புமோர்-சிந்து
கடலையிவையற் றுனைகறித்திடார்தங்க
ளுடலையிவையத்திருத்தா ருன்

(இ-ள்) எவ்விதமருந்துகளுக்கும் முக்கியமாக உதவாதபதார்த்தங்களாவன புளி அதிகஜலபானம் அடைகாய் கன்னல்வெல்லம் காராமணிப்பருப்பு மோர்கடலைப்பயறு ஆகிய இவைகளாம் என்க, (௩௩௧)

பத்தியபதார்த்தங்கள்-வி-ம்,

பொன்னாங்காணிசிறுகீரை புதியநறுநெல்வரால்குறவை
சென்னைங்கோவைக்காய்வற்றல் சுண்டையவரைப்பிஞ்சுடனே
பன்னுவப்பைவெள்ளுள்ளி பரியமுருங்கையிளம்பிஞ்சும்
நன்னீர்விளைத்தசிறுபயறு நன்மாங்காய்க்குட்பிஞ்சுநன்றே

இதுவுமது,

அத்திப்பிஞ்சுகருவாழை யதன்றன்பிஞ்சுபூவாகுங்
கத்தித்திரியுமூக்குருவி காடையுடனேசிவலாமை
சுத்தமாங்காய்நறும்பருப்புஞ் சுறுமீன்றிருக்கைக்கருவாடாம்
பத்தியத்திலிவைதவிறப் பச்சைமீன்கள்பகையாமே,

இதுவுமது-வி-ம்,

வேண்டியமருந்துண்பார்கள் விராலொடுகுறவைதேளி
யாண்டிடுமயிரையூடா னுனசன்னைபஞ்சுதும்பு
நீண்டிடுமிருநெய்த்தோலி யிவைகளையருந்துங்காலை
நீண்டிவையிலர்ந்ததாகும் விரைமலர்க்குழலினாளே

இதுவுமது-வி-ம்,

காடையுடும்புகவுதாரி காட்டினெலியுமூர்க்குருவி
யாடுவிரும்பில்வெள்ளாடா மதுவுமூலர்த்திக்கறிகொள்ளு
நாடுதனில்வாழ்வரால்குறவை நலமாமிவையுமூலர்த்திக்கொள்
கூடுங்கூடாதென்னுதே கூட்டின்மருந்துக்குணந்தருமே

(இ-ள்) வாசனைபொருந்திய கூந்தலாளே பத்தியபதார்த்தங்களாவன-பொன்னாங்காணி-சிறுகீரை-அன்றுருக்கியபசுநெய்-கோவை - சுண்டை முதலியவற்றல்கள்-அவரைப்பிஞ்சு-அப்பைக்கோவைக்காய் வெள்ளைப்பூண்டு-முருங்கைப்பிஞ்சு-பனிப்பயறு-மாவடு - அத்திப்பிஞ்சு - கருவாழைக்கச்சல்வேப்பூ-மாம்பருப்பு-ஆகிய-இவைகளும்-ஏரிவரால்-குறவை சிட்டுக்குருவி-காடை-கவுதாரி-ஆமை-விலாங்கு- கடல்குறவை - தேளி அயிரை-உழுவை-சன்னை-சுதும்பு-சிறியநெய்த்தோலி பெரியநெய்த்தோலி உடும்பு-காட்டெலி-இவைகளின்-கறிகளும்-சுரு-இருக்கை-காடை-கவுதாரி - ஊர்க்குருவி - வெள்ளாடு - இரு-குறவை-இவற்றின்-கருவாடுகளும் - ஆகும், (௩௩௩)

பேதியைக்காட்டுகிற பதார்த்தங்கள்-வி-ம்,

மானேவயிறுகழிவார்க்கு வாழைக்கச்சலத்திக்காய்
தானேதிரியுமூர்க்குருவி காடையுடும்புகவுதாரி
கானையாகுமுயலுலரிற் றக்குளத்துக்கருவாடா
மீனைவிரும்பித்தின்பீரால் வீணேயுயிரையிழக்கிரே

(இ-ள்) அதிசாரரோகிகட்கு - வாழைப்பிஞ்சு-அத்திப்பிஞ்சு-சிட்டுக்குருவி-காடை-உடும்பு-கவுதாரி-முயல்-குளத்துக்கருவாடு- என்னும் இவைகள் ஆகும் பச்சைமீனையருந்தில் உயிருக்கு அபாயம்யென்க, ()

பேதியாகிறபதார்த்தங்கள்-வெ-பா,

காரமணிக்கீரை காட்டுப்பறங்கியிலை
பேராம்பெரும்பயற்றில் பேரிலைகள்-சீரா
ரகத்திபருங்கத்திரிக்கா யாயிழையேயமீன்கள்
பகைத்ததிகபேதிதரும் பார்

(இ-ள்) ஆபரணமணிந்தபெண்ணே காரமணி-பறங்கி-பருமகாரமணி-அகத்தி-என்னும்-இக்கீரைகளும்-கத்திரிக்காயும்-பச்சைமீன்களும் மிகுபேதியை உண்டாக்கும், (௩௩௫)

பத்தியாபத்திய பதார்த்தங்கள்-வி-ம்,

மயறிகுறவைவரால்தேளி மற்றுக்குறவைநாய்க்கெளிறு
அயிரைசன்னைபத்தியமா மகாமீன்களினிக்கேளு

முபரும்வாளையிறால்கூனி யோங்குங்கெளிறுவிலாங்குகெண்டை
கயலோடிவைகளாகாவாங் காரார்குழலேகண்டுவையே

(இ-ள்) கறுத்தகூந்தலாளே பத்தியபதார்த்தமாவன மயறி - குறவை வரால்-தேளி-ஆற்றுக்குறவை-நாய்கெளிறு-அயிரை-சன்னை-என்னும் மீன்களாம்-அபத்தியமீன்களாவன-வாளை-இறா-சன்னக்கூனி - பருங்கெளிறு-பரும்விலாங்கு-பருங்கெண்டை-சேற்கெண்டைஎன்னு - மிவைகளாம் என்க, (௧௩௩௫)

அபத்தியபதார்த்தங்கள்-வி-ம்,

கொள்ளுகாடிகுமட்டிக்காய் கோழிபன்றிகொக்குடனே
முள்ளிற்பெரியபாகற்காய் முதிருமவரைபயற்றங்காய்
பள்ளத்தெழுந்தமடற்சேம்பு படரும்வள்ளிபாலையிலை
யெள்ளத்தனைதான்றின்பீரே லெல்லாமருந்துமிழுந்தீரே

இதுவுமது-வி-ம்,

மாங்காயிளநீர்மாதுளங்காய் மாவின்பண்டம்புளிகடுகு
தேங்காய்நெய்பால்கிழங்குபழந் தின்னுங்காயம்வெங்காய
மீங்காதரிக்குஞ்சுராபான மச்சங்கள்ளுபனங்கள்ளு
மாங்கேயிவற்றுளொன்றேனு மருந்தாதிருந்தால்மருந்தாமே

(இ-ள்) அபத்தியபதார்த்தங்களாவன கொள்ளுகாடி - குமட்டிக்காய்-சேவல்வராகம்-கொக்கு-கொம்புப்பாகல்-முற்றின அவரைக்காய்-காராமணிக்காய்-சேப்பங்கிழங்கு-வள்ளிக்கிழங்கு-பாலைக்கீரை-மாங்காய்-இளநீர்-மாதுளங்காய்-மாப்பலகாரம்-புளி-கடுகு-தேங்காய்-எருமைநெய்-மேற்படிபால்-கிழங்குகள்-முப்பழங்கள்-பெருங்காயம்- வெங்காயம்-கள்ளு-ஈச்சங்கள்ளு-பனங்கள்ளு என்னும் இவைகளாம், (௧௩௩௭)

வாதரோகாரிவஸ்துக்கள்-வெ-பா,

செங்கழுநீர்கோட்டந்தேன் மிளகுநல்வெண்ணெய்
தங்குபெருங்காயந் தழுதாழையெங்குங்
கூட்டுசிறுமுத்துநெய் கோதிலுழுந்திவைகள்
வாட்டுமாநிலத்தை மதி

(இ-ள்) செங்கழுநீர்க்கிழங்கு-கோஷ்டம்-குறிஞ்சித்தேன்-மிளகு-எள்ளின்நெய்-பெருங்காயம்-தழுதாழையிலை-சிற்றாமணக்குயெண்ணெய் உளுந்து ஆகிய இவைகள் வாதரோகத்தைப்போக்குவனவாம்-என்க, ()

பித்தரோகாரிவஸ்துக்கள்-வி-ம்,

கொம்மட்டிவாழைப்பன்னங் கொளித்தியகரியினோடே
சிம்பிதண்ணீர்விட்டான் வேரெனுங்கிழங்குசாந்தஞ்

செம்மைசேர்நெல்லிமுள்ளி சேருமிம்மருந்தெல்லாமே
கம்மியபித்தத்திற்குக் காலனென்றோதுவாரே

இதுவுமது-வி-ம்,

சம்புநாவல்பீத்தாருச் சருமமுமுத்தக்காசுஞ்
செம்பருத்தியுஞ்செழித்த தெங்கிளம்பூவுங்கன்ன
லம்புயத்தாதினோடே யதனுறுவளையநெய்தல்
வெம்பியசிலைச்சாம்பல் வெள்ளைப்பூசினிக்காயென்னே

(இ-ள்) கொளுஞ்சிநாரத்தம்பழம்-வாழைச்சருகுசுட்டகரி-தண்ணீர்விட்டான்கிழங்கு-சந்தனம்-நெல்லிமுள்ளி- சம்புநாவல் - பெருமரப்பட்டை-கோரைக்கிழங்கு-செம்பருத்தி-தென்னம்பூ-கருப்புதாமரைப்பூ-விளாமரந்தம்-மேற்படிவளையம்-செங்குவளைக்கேசரம்- வஸ்திரஞ்சுட்ட சாம்பல்-கல்லியாணப்பூசினிக்காய் இவைபித்தத்தைநீக்கும், (௲௯௪௧.)

சிலேஷ்மரோகாரி வஸ்துக்கள்-வெ-பா,

ஆவினதுபாலரத்தை முள்ளங்கிமயிற்
றூவிநறுஞ்சாம்பல் தூதுளந்தேன்-மாவோமந்
துய்யசருக்கரை துழாய்விதைவிளாம்பழமு
மையமதையோட்டு மறி,

(இ-ள்) பசும்பால்-தம்பராஷ்டம்-முள்ளங்கி-மயிலிறகுச்சாம்பல்-தூதுளைச்சமூலம்-மலைத்தேன்-ஓமம்-வெள்ளைச்சருக்கரை-துளசிவிதை-விளாம்பழம்-முதலியவைகள்-சிலேஷ்மரோகத்தைவிலக்கும், (௲௩௪௪)

மூலரோகாரி வஸ்துக்கள்,

மருள்சாரடைகருணை வச்சரவல்லிகாட்டுக்
கருணைபுளிநரளை காராக்கருணை
மெருகோடுவெள்ளறுகு வெண்சித்திரமூலம்
மருமூலம்போக்கு மருந்து

(இ-ள்) மருட்கிழங்கு வெண்காரட்டைசமூலம்- கருணைக்கிழங்கு-பிரண்டை-காட்டுக்கருணை-புளிநரளை- காராக்கருணை - மெருகன்கிழங்கு வெள்ளறுகு-வெண்சித்திரமூலம்-முதலியவை- மூலரோகத்தைநீக்கும்,

விஷாரிவஸ்துக்கள்,

பேய்ச்சுரைபேய்க்கொமட்டி பேய்ப்பீர்க்கொடுதுமட்டி
பேய்ப்புடலைபுங்கழிஞ்சிற் பேரறிவு-வாய்த்தமலை
வேம்புசிவனார்வேம்பு வெள்ளெருக்குவெள்ளருகு
சோம்புவிடம்போக்குமெனச் சொல்

(இ-ள்) பேய்ச்சுரை-பேய்க்கொம்மட்டி-பேய்ப்பீர்க்கு-தும்மட்டி-பேய்ப்புடல்-புத்து-அழிஞ்சில்-காட்டவுரி-மலைவேம்பு-சிவனார்வேம்பு-வெள்ளெருக்கு-வெள்ளறுகு இவைகள் விஷவேகத்தை நீக்கும், (௪௯௫)

பித்தசமதிரவியம்,

மொச்சைகடலைபெரு முற்கமழுந்தேலம்வெந்தி
மெச்சுமிளகுசுண்டை வெண்ணெயிஞ்சி-பச்சைகிறங்
காட்டுமப்பைக்கோவை கருநிம்பஞ்சீரகங்கள்
கூட்டுகறிபித்தசமங் கூறு

(இ-ள்) வெள்ளைமொச்சைக்கொட்டை - கடலை-பெருங்காராமணி-உளுந்து-ஏலம்-வெந்தியம்-மிளகு-சுண்டைக்காய் பசுவின்வெண்ணெய்-இஞ்சி-அப்பைக்கோவைக்காய்-கருவேப்பிலை-சீரகம்-முதலியவைகள் சேர்ந்தபதார்த்தங்களால் பித்தப்பிரகோபம் சாந்தியாகும் என்க, ()

திரிதோஷசமதிரவியம்-வி-ம்,

ஒன்றிபவாதபித்த கபமிவையுபராவண்ண
கன்றுறுகறிகளெல்லா நாளுமேசமைப்பராய்ந்தோர்
இன்றிமிளகுமஞ்சள் சீரகமுயர்ந்தகாயம்
வென்றிகொளசுக்கேலம் வெந்தயமுள்ளிசேர்த்தே

(இ-ள்) மிளகு-மஞ்சள்-சீரகம்-பெருங்காயம்-சுக்கு ஏலம்-வெந்தியம் வெள்ளைப்பூண்டு-இவைகளை-நல்லபதார்த்தங்களில்-விதிப்படிசேர்த்தாக்கிறதினமுமுண்ணில் திரிதோஷங்கள் ஒன்றுக்கொன்றுவீறுவாம், ()

தே, அறுசுவைகளின் மிகுதிக்குணம்-வெ-பா,

புளிதுவர்விஞ்சுங்கறியாற் பூரிக்கும்வாதந்
தெளியுவாரைப்பேறில்பித்துச் சீறுங்-கிளிமொழியே
கார்ப்பினிப்புவிஞ்சிற் கபம்விஞ்சுஞ்சட்டிரதச்
சேர்ப்புணரிரேயணுகா தே

(இ-ள்) கிளிமொழியாளே புளிப்புந்துவர்ப்பும் அதிகரிக்கில்-வாதம் அதிகரிக்கும் உப்புங்கசப்பும் அதிகரிக்கில்பித்தம் அதிகரிக்கும் உறைப்பும் தித்திப்பும் அதிகரிக்கில் சிலேஷ்மம் அதிகரிக்கும் ஆதலால் அறுசுவைகளை யுக்கிரமமாகப்பதார்த்தங்களிற் சேர்த்துண்ணிற் - பிணிகள் காரவாம் என்க, (௪௯௬)

காலைக்காலக்கறிக்கான பயறுமுதலியவை,

காலைக்கறிக்காகுங் காராமணியுழுந்து
துலக்கடலை துவரையென்று கோலமொச்சை
தட்டைச்சிறுபயறு தாழ்வில்கடுகுகறி
யிட்டசுக்குராயமிவை,

(இ-ள்) காலைப்பதார்த்தங்களுக்குதவும்பயறு முதலியவையாவன கா ராமணி உளுந்து கடலை துவரை நிலம் மொச்சைக்கொட்டை தட்டைப்பயறு கடுகு மிளகு சுக்கு பெருங்காயம் இவைகளாம், (சக-ம)

தே, மத்தியானகாலக்கறிவகை,

கந்தவருக்கங்கனி வருக்கம்வாதமெழு
மந்தவருக்க மாந்தமாம்வருக்கங்-கந்தமுறு
தண்ணடைவருக்கந் ததிமோரிவையென்று
ணுண்ணடையாற்றேடாறு மோர்

(இ-ள்) மத்தியானபோஜனத்தில் கிழங்குவகைகள் - பழங்கள் வாதவஸ்துக்கள் - மந்தபதார்த்தங்கள் மணமும் சீதளமுமுள்ள இலைக்கறிகள் எருமைத்தயிர் - மோர் - முதலியவைகளை - யுண்ணினும் - சூரியவெப்பத்தினாலும்-தேக உழைப்பினாலும்-அவைகளின்தோஷம்நீங்கும், ()

தே, இராக்காலக்கறிவகை.

அவரைப்பிஞ்சத்திக்கா யாப்பான்முருங்கை
துவரைப்பருப்பாற்றுத்தோணி யெவரையுமோ
கண்டாலிழுக்குங் கடத்தூதுணமிவையல்
லுண்டாலிழுக்குமிலை யுண்,

(இ-ள்) அவரைப்பிஞ்சு-அத்திக்காய்-பசுவின்பால் முருங்கைப்பிஞ்சு துவரைப்பருப்பு-ஆற்றுமுளளிக்காய் யாரையுமுட்களாலிழுக்கின்ற காட்டுத்தூதுளங்காய் முதலியவைகளை மாலைக்காலைக்கறிகளாக வுண்ணில் குற்றமின்று, (தக-மஉ)

தே, காலைமாலைபோஜனத்தின் நெய்மோர்பேதம்,

காலைக்கெருமைநெய்மோர் காரத்தோடுண்ணலாம்
மாலைக்காவின்நெய்மோர் வார்த்துணலா-மேலையண்ட
வெப்பப்புக்காலம் விரவிவரலாற்றுகளி
லொப்பப்பகற்கனற்கண் டுண்,

(இ-ள்) அண்டவெப்பப் பகற்காலத்திலும்- குளிர்ச்சி-இராக்காலத்திலும் ஆகமாறிவருதலால் வாயுவான எருமைநெய்மோர் காரவஸ்து யிவைகளைப் பகற்காலத்தில்பசியைக்கண்டுண்ணலாம் உஷ்ணசம்பந்தமான பசுவின்நெய்மோர் இவைகளை இராக்காலத்தில்- உண்ணலாம் உண்ணில் குற்றமில்லை, (தக-மந)

வாதமுதலிய மூன்றுதேகிகட்கும் உப்புவகை,

வாதபித்தையென்றே வருதேகர்க்குக்கல்லுப்
போதவுப்பிந்துப்பா முணர்முறையோ-யோதவெள்ளம்

வற்றியவிந்துப்பதனை வாதமுதலோருந்தக்
குற்றமிலைக்குற்றமிலைக் கூறு,

(இ-ள்) வாததேகிக்குக்கல்லுப்பும் பித்ததேகிக்குக்கடலுப்பும் சிலேஷ்மதேகிக்கு இந்துப்பும்- ஆகும் வாதமுதலிய மூன்றுதேகிகளும் லவணத்திற்றுவதில் இந்துப்பைசேர்த்து உண்ணத்தோஷமில்லை என்க, ()

தே, வாததேகிகட்குக்கறிவகை,

மாட்டுப்பறங்கிவங்க மாமுருங்கைவெள்ளவரை
நாட்டுக்கூரப்பிஞ்சு நற்கருணை-காட்டுளுறை
மாகருணையுங்கருவில் வாதத்தெழுந்துவந்த
தேகருணைநற்கறியாந் தேர்

(இ-ள்) வாததேகிகளருந்தும் - கறிகளாவன - கலியாணப்பூசினிக்காய் - கத்திரிக்காய்-வழுதுணங்காய்-முருங்கைப்பிஞ்சு- வெள்ளவரைக்காய்-மிதிபாகல்பிஞ்சு - காராக்கருணை - காட்டுக்கருணை-என்பனவாம், ()

வாததேகிகட்குக்கீரைவகை,

மேனிமுன்னையாரைநறும் வேளைமணத்தக்காளி
யானைநெருஞ்சின்முசுக்கை யப்பைநெடுங்காணிலுறை
மூக்குறட்டைநல்வசலை முன்பிவைகளாக்கீரை
யாக்குவர்வாயுத்தேகர்க் காய்ந்து,

(இ-ள்) வாததேகிகளுக்குக் கீரைகளாவன குப்பைமேனி-முன்னை ஆரை-நல் வேளை-மணத்தக்காளி-யானைநெருஞ்சில்-முசுமுசுக்கை-அப்பைக்கோவை - காட்டுமூக்குறட்டை-நல்வசலை - இவைகளாம் என்க, ()

வாததேகிகட்குரசவகை,

சக்கரவர்த்திவெள்ளைச் சாரணைபாகன்முருங்கை
பொக்கிலிளந்தண்டுநறுந் தூதுணம்வார்-மைக்குழலே
சீதமுறுகாணியிவை செந்தளிர்களிற்றினமும்
வாததேகிசர்க்கிரசம் வை.

(இ-ள்) கறுத்தகூந்தலாளே-வாததேகிகளுக்கு- சக்கரவர்த்திக்கீரை வெள்ளைச்சாரணைபாகல்-முருங்கைமுளைக்கீரை-நல்லதூதுணம்-பொன்னாங்காணி ஆகிய-இவ்விலைகளில்-நித்தியமும்- ரசஞ்செய்வாயாக-என்க,

வாததேகிகட்கு வற்றல்வகை,

சுண்டைக்காய்பேய்ப்புடற்காய் தூதுளங்காய்நெல்லிக்காய்
தொண்டைமணத்தக்காளி தூவவரை-பண்டைதுள்ளிக்
காயிவற்றின்வற்றல்களுங் கான்புரண்டைவற்றலுமாம்
வாயுதேகர்க்கறிந்துவை,

(இ-ள்) வாததேகிகளுக்கு-சுண்டை-பேய்ப்புடலநூதுணம்-நெல்லி ஆதொண்டை-மணத்தக்காளி-வெள்ளவரை-முள்ளி-ஆகிய-இவ்வகைக் காய்களும்-காட்டுப்புரண்டையும்-வற்றல்செய்வாயாக-என்க,(தஙடுஅ)

வாததேகிகட்கு ஊறுகாய்வகை.

நாரத்தைதான்றிகடு நற்றேற்றூணிடுகளா
சிலரொத்தபுன்களா விவ்வகைக்காய்-காருப்பப்
பூமியகாயாகு முயரிஞ்சியும்மமையுங்
கூறனிலதேகிகளுக் கு,

(இ-ள்) வாததேகிகளுக்கு-நாரத்தை-தான்றி-கடு-தேற்றான்- பருங்களா-சிறுகளா-ஆகிய-இவ்வகைக்காய்களும்-இஞ்சியும்-உப்பு- நீரிலூறிய தாகும்-என்க, பித்ததேகிகட்குக் கறிவகை-வி-ம். (தஙடுக)

கொ[illegible]ரியிரண்டுபாகல் விரிபுடல்பீர்க்குசிம்பை
முள்ளிபூசிலிகத்தாரி முருங்கைமாகளவரம்பை
யெள்ளிலிக்காய்கள்வள்ளி யீருளிதகலிப்பூதண்
டள்ளியுள் ளுணஞ்செய்வ ரும்பித்ததேகர்க்கென்றே;

(இ-ள்) பித்ததேகிகளுக்கு-வெள்ளரி-கொம்புப்பாகல் - மிதிபாகல்-நீளப்புடல்-பீர்க்கு-அவரை-ஆற்றுமுள்ளி-கல்யாணப்பூசினி-கத்திரி-முருங்கை-பருங்களா-வாழை-ஆகிய-இக்காய்களையும்-வள்ளிக்கிழங்கு-வெங்காயம்-வாழைப்பூ-ஷை தண்டு-இவைகளையும்-பதார்த்தஞ்-செய்வார்கள்,

பித்ததேகிகட்குக் கீரைவகை-கலித்துறை.

புளியாரைகோவை முருங்கைவசலைநற்பொன்முசுட்டை
மிளகப்பையோரிதழ்த் தாமரைபாலைவெளிமுசுக்கை
வளர்தூதுணஞ்சுரை வல்லாரைசில்லிமணத்தக்காளித்
தளிரிளங்கீரைகள் பித்தசுதேகிகடாமுண்பரே,

(இ-ள்) பித்ததேகிகள்-புளியாரை-கோவை-முருங்கை - வசலை-நல்ல பொன்முசுட்டை-மிளகு-அப்பைக்கோவை-ஓரிதழ்த்தாமரை-பாலை-காட்டுமுசுக்கை-தூதுணம்-சுரை-வல்லாரை-சிறுகீரை-மணத்தக்காளி- ஆகிய இக்கீரைகளைப்-போஜனத்திற்-சேர்த்தருந்துவர்-என்க, (தஙகூக)

பித்ததேகிகட்கு ரசவகை-வெண்பா.

கொத்துவசலை கொடிவசலைநல்லகத்தி
தத்துபுனல்வழுக்கை தைவேளை-நெய்த்ததாச்
சாகங்களையவித்துச் சாறுவைத்துண்பார்பித்த
தேகங்களையுடையார் தேர்,

(இ-ள்) பித்ததேகிகள்-நொத்தவசலை-கொடிவசலை-வெள்ளை அகத்தி-பிரமி-பவழுக்கை-தைவேளை-காசு-ஆகிய-இவ்விலைகளை-வேகவைத்து-இலுத்தசலத்தில்-செய்த-ரசத்தை-உணவுடன்-சேர்த்தருந்து-வார்கள், ()

பித்ததேகிகட்கு வற்றல்வகை.

சுக்குமுள்ளிபேய்ப்புடோல் தூதுணைக்காய்சுண்டைகண்டங்
கத்திரிபயற்றைமணத் தக்காளி-நித்தமுறு
கஞ்சம்வல்லாரையிவை காய்த்தகறுங்காய்வற்றல்
விஞ்சுபித்ததேகிகட்காம் விள்'

(இ-ள்) பித்ததேகிகளுக்கு-வெண்முள்ளி-பேய்ப்புடல்-தூதுணம்-சாட்டுச்சுண்டை-கண்டங்கத்திரி-பயற்றங்காய் - மணத்தக்காளி - தாமரை வல்லாரை - ஆகிய - இவ்வகைக்காய்களின் - வற்றல்களாகும்-என்க, ()

பித்ததேகிகட்குஊறுகாய்வகை-கலித்துறை.

பச்சைமிளகிஞ்சி தூதுளங்காய்முப்பலநாரந்தங்
கச்சைதமரத்தம்புன்னை வடங்கபித்தம்மிலமா
கொச்சையிளம்பிஞ்சுமாகாளிக் கந்தங்கொளுஞ்சியெலு
மிச்சையுப்பூறியகாய் பித்த தேகர்க்குமிக்குநன்றே,

(இ-ள்) பித்ததேகர்க்கு-பச்சைமிளகு-இஞ்சி-தூதுணம் - கடுகெல்லி-தான்றி-நாரத்தை-தமரத்தை-புன்னை-ஆல்-விளா-தேற்றான் - மா-ஆகிய இவ்விளம்பிஞ்சுகளும்-பருநன்னாரிக்கிழங்கு-கொளுஞ்சிநாரத்தங்காய்-எலுமிச்சங்காய்-இவைகளும்-உப்பிலூறில்-மிகவும்-உத்தமமாம்-என்க,

சிலேஷ்மதேகிகட்குக்கறிவகை-பி-ம்.

கத்திரிபேய்ப்புட லவரையிருபாகல்
பருங்களா கண்டங்காரி
யத்திக்காய்களும் வருக்கைமாபயற்றை
சுரையால்பீர்க் கரும்பிஞ்சும்வோ
மொய்த்தசூரணங் கதலித்தண்டோடப்
பூமுளங்கி முருக்கரும்பு
மத்திபூசினிக்கா யீருள்ளிவள்ளி
யுங்கபத்தோர்க் காணமாமே,

(இ-ள்) சிலேஷ்மதேகிகட்கு-கத்திரி-பேய்ப்புடல்-அவரை- கொம்புப்பாகல்-மிதிபாகல்-பெரியகளா-கண்டங்கத்திரி-அத்தி-ஆகிய - இந்நால்களும்-பலாபயற்றம்பிஞ்சு-சுரை-ஆல்-பீர்க்கு-இவற்றின்பிஞ்சுகளும்-கருணைக்கிழங்கு-வாழைத்தண்டு-தெரு பூ-முள்ளங்கி - முள்முருக்கின்அரும்பு கூஷ்மாண்டம்-வெங்காயம்-வள்ளிகிழங்கு என்னும்-இவைகளும்-ஆம்,

# மூலமும் உரையும்.

சிலேஷ்மதேகிகட்குக் கீரைவகை-வி-ம்,

காரையிருவேலைமுன்னை செம்மைபுடோல்
தூதுவிளைமுசுக்கை நெருஞ்சி
லாரைபுளியாரைமுல்லை மருதநெய்தன்
மேனிகல்வல்லாரைபொன்னா
வாரைமுசுக்கைமுருங்கையிருபீண்ணாக்
கோடுபண்ணை மணலிபின்னைக்
கீரைமுசுட்டையுங் காரமணிமடன்
கடலைபுளிக் கீரிகளாமே,

இதுவுமது-வெண்பா.

வேளைமணத்தக்காளி மென்சிறைதசக்கிரவர்த்தி
பீளைவசலைசுக்கு பொன்னாங்கண்ணி-வேளையிலைச்
செந்தளிர்காலைக்கீரை செய்வர்கபதேகர்நித்
வந்தனியுணர்த்தான் மகிழ்ந்து.

(இ-ள்) சிலேஷ்மதேகிகளுக்கு-காரை - இப்பைக்கோவை-வரிக்கோவை-பசுமுன்னை-பெருஞ்செம்பை-பேய்ப்புடல்-தூதுவிளை- பிரமியவழுக்கை நெருஞ்சில்-சீரானை புளியாரை-முல்லை-மருதம்-நெய்தல்-குப்பைமேனி வல்லாரை-பொன்னாவாரை-முசுமுசுக்கை-பெருபீண்ணாக்கு - சிறுபீண்ணாக்கு - பண்ணைமணலி-முன்னைக்கீரை-முசுட்டை - காரமணி-உளுந்து கடலை - புளிப்புள்ளமலைக்களா - வேளை - மணத்தக்காளி - பொன்னாங்காணி - சக்கிரவர்த்தி - பீளை - வசலை-சுக்கு-கற்றாழை-நாய்வேளை-வேளை - ஆகிய-இக்கீரைகளைச்சமைத்துப்போஜனத்திலுண்பார்கள்-என்க,

சிலேஷ்மதேகிகட்கு ரசவகை,

கந்தவோமஞ்செங்கடுகு சதகுப்பைதரா
வெந்தியங்கொத்தமலி வேளைசுக்குமுந்தகத்தி
நாறுகுறிஞ்சாபாகல் நம்பையிச்சாகங்கள்வெந்த
சாறுகபதேகர்க்காஞ் சாற்று,

(இ-ள்) சிலேஷ்மதேகர்க்கு-ஓமம் - செங்கடுகு-சதகுப்பை-வெந்தியம் கொத்துமல்லி-வேளை-சுக்கு-அகத்தி குறிஞ்சா-பாகல்- தும்பை-ஆகியஇவற்றின்-இலைகளை அவித்திறுத்தசலங்களில்வைத்தரசங்களாகும்-என்க,

சிலேஷ்மதேகிகட்கு வற்றல்வகை.

சுண்டைமணத்தக்காளி தூதுணம்புரண்டையர
தொண்டைமுள்ளிபேய்ப்புடலை தொண்டைகிம்மைகண்டயுரு
கத்திரிநெல்லிப்பிஞ்சு காணரந்தம் பிஞ்சிவகை
ளொத்தவற்றலைத்தேகர்க் குள்,

(இ-ள்) சிலேஷ்மதேகர்க்கு-சுண்டை-மணத்தக்காளி-தூதுணம்-புரண்டை-கோவை-முள்ளி-பேய்ப்புடல்-ஆதொண்டை-அவரை-கண்டங்கத்திரி-இக்காய்களும்-நெல்லி-காட்டுநாரத்தைப்பிஞ்சுகளும்-வற்றல்செய்யலாம்-யென்க, (௲௬௯)

சிலேஷ்மதேகிகட்கு ஊறுகாய்வகை.

மஞ்சண்மிளகுசுண்டை வாழைத்தண்டோடுமாம்
பிஞ்சாலம்பிஞ்சத்திப் பிஞ்சுகளும்-விஞ்சுகப
நாறுநறுந்தூதுணமு நெய்ப்பாகற்பிஞ்சு
மூறுகாயைத்தேகர்க் கோர்.

(இ-ள்) சிலேஷ்மதேகிகளுக்கு-பசுமஞ்சள்-மிளகு-சுண்டை-வாழைத்தண்டு-மாம்பிஞ்சு-அத்திப்பிஞ்சு-கபநாசனியென்கிற-தூதுணம்-மிதிபாகற்பிஞ்சு-ஆகிய-இவற்றின்-ஊறுகாய்கள்-ஆம்-என்க, (௲௭௰)

தே, காலதேகங்களுக்கு அவிரோதபதார்த்தம்,

எல்லாக்கறிகளுமே யெல்லுக்காமல்லுக்கா
மெல்லாக்கறிகளுமெல் வார்க்குமாம்-பொல்லாக்
கறிகளுக்குச்சத்துரு கலந்தமைத்துநன்றாங்
கறிகளுக்குள்வைத்தருந்துங் கால்.

(இ-ள்) தோஷமுள்ள பதார்த்தங்களை அவைகளுக்குச் சத்துருவாகிய வஸ்துக்களால் தோஷத்தைநீக்கி அந்த பதார்த்தங்களை நற்குணங்களையுடைய பதார்த்தங்களுடன் வைத்துக்கொண்டு உண்ணில் பகல் இரவு என்னும் இரண்டு காலங்களுக்கும் வாதமுதலிய மூன்றுதேகிகளுக்கும் விரோதஞ்செய்யாமல் அவைகள்சவுக்கியத்தைக் கொடுக்கும், ()

தே, இவ்விதநோய்க்குத் தாம்பூலங்கூடாதெனல்,

மதமூர்ச்சாரோக முகாசன்னிபாத
மதிருட்சைசுட்கநோ யாறு-முதிர்விடங்கள்
பித்தங்கயஞ்சிரநோய் பேசுமிவைக்காகாது
சுத்தந்தாம்பூலமெனச் சொல்.

(இ-ள்) மதரோகம் மூர்ச்சை-அபிநியாசசந்நிபாதம்-தாபச்சுரம்-அந்தகஷ்கரோகம்-தேகத்திலூறியவிஷங்கள்-பயித்தியம்-க்ஷயம்-சிரஸ்தாபம் ஆகிய இவைகளுக்குப் பரிஷ்காரமாகத் தாம்பூலங்கூடாது, (௲௭௨)

தே, இவ்விதநோய்க்கு நெய்கூடாதெனில்.

குன்மம்ஜீஞ்சந்நி சலதோடந்தோட
மரணமதிகாரமா காசம்வருணவதி
சாரங்கவினவுளை தாவரிக்குன்மங்களுக்கா
தாரங்கவினவுளை தள்,

(இ-ள்) தருணசுரம் சன்னிபாதம் நீர்க்கோவை சப்ததோஷம் பெருவயிறு ஆகாயம்ரோகம் பேதி தொனிகத்தகதவாதம் - வாதகுன்மம் என்னும் இவைகள் அதிகரிப்பதற்கு நெய்யே - காரணமாதலால் அதனைத் தள்ளுவயாக என்க, (௧௩௭௩)

தே, அவ்விதநோய்க்குத் தயிர்கூடாதெனில்.

குட்டமறைதப்பக்கிநோய் குன்மங்காமாலைமந்தந்
துட்டவிடுசிக்களச்சூர் சோபைகபம்-வெட்டசுர
மீரமிவைபீநசம்பி வீகம்புண்பாண்டொடதி
சாரமிவைக்கில்லைத் ததி,

(இ-ள்) குறைநோய்-வீக்கம்-நேத்திரரோகம்-வாதகுன்மம்-காமிலம் அலசம்-விஷூசி-களப்பிணி-சோபை-சலதோஷம்-விஷம்-சுரம்- பீனசம் பிலீகம்-சிரந்தி - பாண்டு - பேதி-இவைகளுக்குத்-தயிர்கூடாது, ()

தே, தற்காலபலாபல பதார்த்தம்,

திரிபதார்த்தம்பலமே செய்யுமுடனே
திரிபதார்த்தமபலஞ் செய்யுந்-தெரிமுறையே
சிதவம்புணர்ச்சியூன் றேனுசொறிநறும்பா
லாதவம்புணர்ச்சி தைலம்.

(இ-ள்) குளிர்ந்தசலம்-நாவுகுருசியைத்தெரிவிக்கின்றமாமிசம்-பசும்டால்-இம்-௩-ம்-தற்காலபலத்தைச்செய்யும்-கவேவெயில் - புணர்ச்சி-நற்றயில்ஸ்நாம்-இம் ௩-ம்-உடனே துர்ப்பலத்தைச் செய்யும்-என்க, ()



உ

சிவசுப்பிரமணியர் துணை.

## சொர்ணவீட்டின்குணம்.

மேனிதனிற்காந்தியெழில் வீறுமுதராக்கினியு
ஞானமுமேதோதாது நன்னுங்காண்-வானே
மிகைசேர்சகலகுண விர்த்திகளும்விர்த்தி
தகைசேர்சொர்னனத்தினில்லத் தால்.

(இ-ள்) மான்போன்றவிழியாளே, சொர்னவீட்டில் வசிப்பவர்களுக்கு சரீரத்தில்தேஜசு-அழகு ஜடராக்கினி-அறிவு-மேதோதாது-பற்பலசிறப்பு இவைகள் விருத்தியாம. (௧௩௭௭)

தே, கருங்கல் வீட்டின்குணம்,

அலங்காரமுமதமு மக்கினியுநீங்குந்
தலங்காதமாருந் தலங்கா-இலங்க
வருங்கலகப் பித்த மனத்துயரநோயுங்
கருங்கலப் பித்தர்க்குக் காண்,

(இ-ள்) கருங்கல்வீட்டில் வாசமாயிருக்குமவ்வியர்களுக்கு, உலகில் விளங்குகின்றசூரியகிரணமுஞ் சந்திரகிரணமுமில்லை, அக்கினி, அழகு மவீரியமும உதராக்கினியும-நீங்கி-கலகஞ்செய்கின்ற பித்தமும மனத்துன்பமும-சிலேஷ்மரோகமும-மிகுதியாகவுண்டாகும,(தகஎஎ)

தே, மேல்வீடு-ஓட்டுவீடு-புல்வீடு இவைகளின் குணம்,

கீட்டையுருமேல்வீட் டீனிலவெப்போடுபல
வேட்டையொழிக்குங்காண் மிக்கெழிலா-லோட்டையுரு
கல்வீடியர்வென்னுஞ் சாவிமகுசாரக்கலத்தாம்
புல்வீடுயர்வாம புகல்,

(இ-ள்) உயர்ந்தமெத்தைவீடானது பூமியின்உஷ்ணத்தோடுவிஷஜெந்து மிருகமுதலியவைகளால் உண்டாகிறபலவிததுன்பங்களையும நீக்கு ஓட்டுத்தடுக்குள்ள கல்வீடானது, அழகினையுயர்வினையும, காற்றும பனியும சாராதகல்லமையினால், விழல்தடுக்கு-வீடே உயிர்வாம, ( )

தே, காலைவிழிப்பின் குணம்,

புத்தியதற்குப்பொருந்து தெளிவளிக்குஞ்
சுத்தகாமபிளற்ற தூய்மைபரும-பித்தெழியுந்
தாலவழிவாதபித்தந் தத்தக்கலையென்னுமதி
காலைவிழிப்பின்குணத்தைக் காண்,

(இ-ள்) உதயகாலத்தில் விழிப்பவர்களுக்கு புத்திக்குத் தெளிவையுணர்த்துகின்ற சுத்தகாமப-என்னும ஒருவிதகாமமினது துவாரத்தில்விறைந்திருக்கின்ற நீரானது கலக்கமின்றிப் பரிசுத்தமாயிருக்கும-பயித்தியகோபம் நீங்கும-உலகத்தில்வழங்குகிற வாதமும-பித்தமும-சிலேஷ்மமும தங்கள் இடங்களிலேயே பொருந்தும-என்க, (தகஎக)

தே, விழித்தவுடன் சுத்தசலம் அருந்தலின்குணம்,

தூங்கிவிழித்தவுடன் சுத்தோதகமருந்தி
லோங்கிநின்ற பித்தமொழிவதன்றித்-தேக்கு
மலமூத்திரந் தங்காவாதியுந்தந்
தலமாத்திரமுலவுந் தன்,

மூகைசடை-மனிதரிடத்தில் விருப்பமில்லாமை கூன்-அழுக்குமேனி விரித்தமயிர்த்தலை-சதா சித்திரை குஷ்டம்கொல்லை-எண்ணெய்த்தலை மனோவியாகுலம்- உன்மாதம் தரித்திரம-கூயரோகம இவைகளையுடையவர் முகத்தையும்-ஆருசம் அழுகைவிதவை-என்னும-மாதர்முகத்தையும் பாம்பு பூனை சாமபல் எருமைவிளக்கு மாறு உலக்கைமுறம என்னும்; இவைகளையும, பார்த்தால் அன்றைக்குக்கெடுதியுண்டாகும, ()

சிலபம் மல்லயுத்தம் குதிரையேற்றம் பாதநடை.

இவைகளால் உண்டாகுங் குணம,

சிலம்பமுதன்மல்லயுத்தந் தேசிநடைகொள்ளிற்
பலம்பரவுமெய்யிருக்கும் பன்னத்-தூலக்குபசி
யுண்டாங்கப்வாத மோடுவலிகளையும்போம்
பண்டாமலமிறங்கும பார்,

(இ-ள்) காலையில் சிலம்பம்-மல்லயுத்தம்-இவைகளைப் பழகுவதாலும், குதிரையேறிச்செல்லுதபாதசாரியாகிய நடக்குதல் ஆகிய இச்செய்கைகளினாலும் வன்மைதளர்ந்த உடல் இறுகுதல் அதிகதீபனம் இவை உண்டாம கபவாதமெராந்தமும வாதசூலையும பழயமலசந்தமுமநீங்கும்,

தே, மிதாமித வார்த்தையின்குணம,

மிதவார்த்தைதக்குள்ளறிவு மெய்ச்சுகமுங்குன்று
மதிவார்த்தைதக்கவ்வுரை கெட்ட போ-டுதிரமிவை
சுண்டும்பொங்கும்பித்தஞ் சூழுதலாலையவினை
யன்டும்பொங்கும் புன்னோய்,

(இ-ள்) மிதமாகவசனித்தால், உள் அறிவுமசரீரசவுக்கியம உண்டாம அதிகமாகவசனித்தால்-முற்கூறிய அறிவும சவுக்கியமும கெடும அன்றியும ரசதாதுவும ரத்ததாதுவுஞ்சுண்டும இவைகுறைவதினால் பித்தம அதிகரிக்கும அதனால் கபநோய் பிறக்கும நீர்ரோகம உண்டாம,

வெயிலால் உண்டாகுங் குணம,

வாதமொடுகாங்கிகெடு மாதுயாமவேர்வைபல
மோறுபசிபித்தமிவை யுண்டாங்-காண்கீதக்
குயிலினிசைபழிக்குங் கோதின்மொழிமாதே
வெயிலினாற்குணத்தை விள்,

(இ-ள்) குயில்மொழிமாதே, வெயிலால் வாதாதிக்கமும்-அழற்கும் விலகும்-வருத்தம்-வியர்வை-வன்னம்-ஜடராக்கினி-பித்தகோபம் - இவை அதிகரிக்கும்-என்க. (தகஅ,

தே, காலை-மாலை-வெயிலால்உண்டாகுங் குணம்,

காலைவெயிற்காய்ந்தார்க்குங் காணுப்பிணியனைத்தும்
பாலைவெயிற்போலப் பரவுங்காண்-மாலைவெயிற்
காய்ந்தார்க்குறுபிணிமுற் காசறுமிலக்கணநூ
லாய்ந்தார்க்குறுவழிச்சொ லாம்,

(இ-ள்) உதயகாலவெய்யிலில் காய்ந்தவர்களுடைய சரீரத்தில் முன்பில்லாத வியாதிகளெல்லாம் பாலைநிலத்துவெய்யிலைப்போல் உக்கிரமாகப்பரவும் மாலைக்காலவெய்யிலில் காய்ந்தவர்களுக்குப்பொருந்திய பிணிகள் பழமையாகியகுற்றமற்ற இலக்கணநூல்களை ஆராய்ச்சிசெய்தபுலவர்களுக்குக் காட்சியிற்பட்டவழுச்சொற்கள்நீங்குவதுபோலநீங்கிவிடுமே

நிழலால்உண்டாகுங் குணம்,

மேனிதழைக்கும் விவர்ணவழகுண்டாகும்
போனவலிவாதமஞ்சம் பூரிக்குந்-தானே
வளர்ந்தேறுஞ்சோம்பல் மதிவதனமாதே
குளிர்ந்தநிழலின் குணம்,

(இ-ள்) மதிவதனமாதே குளிர்ந்தநிழலில் இருப்பவர்களுக்கு சரீரந்தழைத்தலும்-வேறுநிறமான அழகும் நீங்கியகடுப்புவாதமும் - அலசமும் அசதியும்-அதிகமாம், (தகஅஅ)

மழைமந்தாரத்தின் குணம்,

நித்திரைகர்ந்தி நெடியபசிதாகம்போ
மொத்தமகிழ்ச்சிகுளி ருதையொடு-மெத்த
வழைவந்திடச்செயிரைப் பாதியநோயுண்டா
மழைமந்தாரத்தால் வழுத்து,

(இ-ள்) மழைமந்தாரத்தினால் தூக்கம்-ஒளிவு-தீபனம்-தாகம்-இவைபோம்,சளிப்பு-நடுக்கல்-சீதவாயுவு-சுவாசமுதலியபிணிகளும்உண்டாம்

தீக்காய்கலின் குணம்,

தீக்காயில்வாதமொடு சீதஜ்வாரணமா
மூக்கமிருதாகமதி யுட்டினமு-நீக்கர்
விரத்தபித்தநோயு மிரத்தக்கொதிப்பு
முரத்தெழும்புமென்றே யுரை,

(இ-ள்) தீக்காய்தலினால் வாதக்கடுப்பும்-சீதமும்-விலகும்-உபசர்க்க தாசம் சூடு இரத்தபித்தம்-உதிர கொதிப்பு-இவை அதிகரிக்கும். ()

தே-வெள்ளிப்புகை-சுடுகாட்டுப் புகை-தைலப்புகை,

இவைகளுண்டாகுங் குணம்,

மகத்தாமமியாயுள் வளர்க்குஞ்சவஞ்சா

ரத்தாமமந்தை யழிக்கு-மகததா

மருந்தயிலத்தூம மடர்வா தவன்னோய்

விருந்தயினுமென்றே விதி.

(இ-ள்) வெள்ளிப்புகையானது தீர்க்காயுசுகொடுக்கும் சுடுகாட்டுப் புகையானது, உள்ள ஆயுளையும்-கெடுக்கும், மகாதயிலப் புகையானது வாதரோகத்தை விருந்தாக உண்டுவிடும்-என்க, (தசாகூக)

தே, மலசலம் விடுத்தலின் குணம்,

இருமலங்கடங்கா விறக்குங்காண் மூன்று

மிருமலங்காடங்கனிலே யெய்து-மிருமச்

சமனுக்கினிசாருஞ் சாராகோயிட்டஞ்

சமனுக்கினைசாரா தாம்.

(இ-ள்) மலம்சலம் இரண்டையும் சிக்கலின்றிக் காலைமாலைக்காலங் கூடோறும் விடுப்பவர்களிடத்து வாதபித்தகபங்கள் தந்தம்நிலைகளிலுல வும்-ஜடாராக்கினி அதிகரிக்கும்-நோய்க்கூட்டம் ஒழியும், எமனுக்கினை யும் செல்லாவாம, (தசகூஉ)

தே, பல்விளக்கின் குணம்,

துகளிலைகாட்டமிவை தொட்டுத்துலக்கிற

றுகளிலைகாட்டாது தோடங்-துகளிலைகண்

மெய்துவவையொத்திருக்கின் மேனூர்வை மூரன்

மெய்துவவையொத்திருக்குமே,

(இ-ள்) தூள்-இலை கொம்பு-இவைகளால்பல்விளக்கினால், பல்லுகளு க்கூனமில்லை, வாதபித்த கபங்களால் பல்லினிடத்தும-அவ்வேரினிடத் தும-பிறக்கின்ற உ௩-ரோகங்களும் உண்டாகாது-ஆனால், அந்தத்தூளு ம்-இலையும்-கொம்பும்-இயல்பாகத்துவர் உள்ளதுகளாயிருந்தால்இறுதி நாள்வரைக்கும்பல்லுகள்மலையைப்போல் அசைவற்றுறுதியாயிருக்கும,

பல்விளக்கத்தக்க கொம்புகள்.

வேலுக்குப்பல்லிறுகும் வேம்புக்குப்பற்றுலங்கும

பூலுக்குப்போகம் பொழியுங்கா-ணலுக்குத்

துன்டாமெனையாளுஞ் சாருவேளாயுருவி

கண்டால்வசீகரமாங் காண்.

(இ-ள்) கருவேலங்குச்சியால் பற்களுக்குத்திடமும்-வேப்பங்குச்சியால் பற்களுக்கொளியும் நீர்ப்பூலாக்குச்சுக்கு வீரியவிருத்தியும்-ஆலம்விழுதுக் லக்ஷ்மிகடாட்சமும-நாயுருவிவேருக்குமுகசீகரமும-உண்டாம, ()

பல்விளக்கத்தகாத வஸ்துக்கள்.

கல்லுமணலுங் கரியுடனேபானைகளும
வல்லதொருவைக்கோலும வைத்துநிதம-பல்லதனைத்
தேய்த்திடுவாராமாயிற் சேராளேசிதேவி
வாய்த்திடுவண்மூதேவி வந்து,

(இ-ள்) செங்கல்மா-மணல்-கரி-தென்னம்பாளை-வைக்கோல் இவைகளால்நிதமும் பற்றுலக்குவரிடத்தில் லட்சுமிநீக்கி மூதேவிசேர்வாள்,

சுத்தஸ்நானத்தின் குணம்,

சுத்தப்புனலாடத் தொன்மைச்சலாயாசந்
தொத்தெரிச்சற்பாரிப்பு தோன்றுவா-மெத்தனவுங்
காந்திபலம்பசியுங் கட்டழகுமுண்டாகு
மேந்துமூலமாதே யியம்பு,

(இ-ள்) பெண்ணே ஆறுமடுக்களில் அதிகாலைநேரமுமசுத்தஸ்நானஞ்செய்பவர்களுக்கு-திளவு-சோர்வு-வெப்பம-கெக்கனதி - இவைநீங்கும தேஜசும-வன்மையும-தீபனமும-நல்லவனப்பும உண்டாகும என்க, ()

நேர, காலை-மாலைக் குளியலின்குணம,

காலைக்குளிக்குக் கபிமபசியுண்டாநோய்போ
மாலைக்குளிக்கவைகண் மத்திபமே-சோலையுடை
வாசநீர்சுத்தசலம் வன்னிநீராங்கால
தேசமுடற்பேசமுன்னிச் செப்பு,

(இ-ள்) மா-நெல்லி-முதலிய இலைகளை ஊறவைத்த ஜலத்தையாவது சுண்ணப்பொடி தூவியபரிமளஜலத்தையாவது- அது கலவாதசுத்தஜலத்தையாவது-வெந்நீரையாவது-தங்கள் இருப்பிடங்களில்வைத்துக்கொண்டு காலதேச-தேக-பேதங்களையுணர்ந்து அவைகளுக்குப்பொருந்தியவரோ அதிகாலையில்ஸ்நானஞ்செய்பவர்களுக்கு ஜடராக்கினிபுஷ்டியுண்டாம் சகலவியாதிகளும்போம இவ்வண்ணம் மாலைக்காலங்களிஸ்நானஞ்செய்பவர்களுக்கு, மேற்சொல்லியகுணங்கள்-மத்திமமாம், ()

மஞ்சட்குளியலின் குணம்,

மஞ்சட்குளிதனுக்கு மாறுந்தூர்க்கந்தமொடு
விஞ்சுமுகசாட்டியமும விட்டகலுந்-தொஞ்சலுறு
மையமொழியுமடர்வியர்வுங்காணுது
வையமதனுல் வருத்து.

(இ-ள்) பரிமளக்கலவையுள்ள மஞ்சள் சாப்பிட்டுக்கொண்டு ஸ்நானஞ்செய்பவர்களுக்கு, கற்றுமைநாற்றமும் முகத்தி லுண்டாகின்றரோகமும்-சிரணசிலேஷ்மமும்-வியர்வையும-நீங்கும-என்க, (௩௩௯௮)

## அப்பியங்கஸ்நானவிதி,

தே, பஞ்சகற்பத்தின் குணம,

மிருகமதமபித்தமணி வேம்புகடுநெல்லி
சருகுநறுமபாலரைத்துக் காய்ச்சி-யொருகமிட
விக்கற்பநோய்க்குமிடமின்று மெஞ்ஞான்று
மைங்கற்பமீதே யறி,

(இ-ள்) கஸ்தூரிமஞ்சள்-மிளகு-வேப்பமவித்து-கடுக்காய்த்தோல்நெல்லிப்பருப்பு-இவைகளைக்கிரமப்பிரகாரம-காரமபசுவின்பால் விட்டரைத்துக்கொதிக்கவைத்து ஒப்பற்றசிரசிற்றேய்த்துக்கொண்டு ஸ்நானஞ்செய்தால்-எக்காலுமபிணிகளுக்குத் கிஞ்சித்தேனுமஇடமில்லை இதுவேபஞ்சகற்பவிதியென்றறியக்கடவை என்க, (௩௩௯௯)

அப்பியங்கனத்தின் குணம,

தலைமுருக்காற்சென்னிமுழுத் தாளிவைக்குங்காப்
பலமுண்டாக்கேசம படருந்-தலைநோய்போம
பஞ்சேந்திரியம பலத்துத்தெளிவையுறு
மெஞ்சாத்தொனியுமெழு மெண்,

(இ-ள்) அப்பியங்கனத்தால் மெய்-வாய்-கண் மூக்கு-செவி-என்கிற பஞ்சேந்திரியங்களும பலத்துத்தெளிவுறும சிரசு-முழங்கால்கட்குப்பலமும-ரோமவளர்ச்சியும-சுற்றொனியும-உண்டாம-தலைவலிவிடும, ()

நித்திய அப்பியங்கனத்தின் குணம,

தினமப்பியங்கனமே செய்யிற்சரும
மினுமினுக்குஞ்சோமபல் விலகுந்-தனியான
ஐயமுத்தோடமருசி தந்தநோயொழியு
மெய்புஷ்டிகப்பட்டியிடு மே,

(இ-ள்) தினமும அப்பியங்கனம செய்வதினால் தொக்கேந்திரியப்பளபளப்பும்-தேகபுஷ்டியும் உண்டாம-சோருதல்-தனிக்கபநோய் திரிதோஷதொந்தம-அரோசகம-உபகிருசரோகம-இவைநீங்கும (௩௪௦௦)

தே, பசுவினது நெய்முழுக்கின் குணம்,

மைந்தர்முதன்முப்பருவ மாந்தர்க்குமாமுடலின்
மும்மெரிச்சலுன்மாதமூர்ச்சைகப-மும்பிரத்த

பித்தமமாதாகமொடு பேசுவிகாரங்களுக்கு
முத்தமமாமாநெய்முழுக் குள்.

(இ-ள்) பசுவினதுநெய்முழுக்கு-பால்-குமாரவிருத்தர்களுக்கும்-ஆம்ரசதாதுவின்கொதிப்பாற்கண்ட-எரிச்சல்-உன்மாதம் - மூர்ச்சை-மூளையைப்பற்றியகபம்-ரத்தபித்தம்-விதாகம-இவைகளை நீக்கி-நன்மையைத்தரும, தே, த, தைலாதிகளின்குணம், (தசா௨)

எள்ளினெய்முழுக்கூட் டெனுநெய்யுமாநெய்யும
வில்லுகயிலாதியென விறுநெய்யுமுள்ளபடி
வாரந்தனக்கிருநாள் வைத்தாடிநோய்களதி
காரந்தனக்கிடமிற் காண்.

(இ-ள்) எண்ணெய்-முக்கூட்டுநெய் - பசுவின்நெய் - உயர்ந்தயிலம் முதலியவைகளை எட்டுத்தினத்திற்கு இரண்டுதரம ஸ்நானஞ்செய்யில் சகலரோகங்களும தேசத்தை வருத்துதற்கு அதிகாரம இன்றும். ()

தே, த, தைலம தேய்க்குமவிதி-வி-ம,

எடுத்தநற்றயில நாசிசெவிரண்டாறுகாதுக்
கடுத்திடத்துளிவிட்டுச் சியங்கந்தாளடிகளிற்கு
கொடுத்திடாத்தேய்த்தூறச் செய்திட்புறஞ்சிகைகாய்வெந்நீர்
விடுத்துடனுடிநீருமவியர்ப்புமற்றிடப்புலர்த் தே,

(இ-ள்) நல்லதயிலங்களை-மூக்கில்-௪-துளியும-காதில்-௬-துளியும விட்டு-சிரசு-உடமபு-பாதத்தினடி இவைகளிலிட்டுக்-கடுகை - பிறவாமல் தேய்த்து-ஊறவைத்துப்-பின்பு-சிகைக்காய்தேய்த்து-வெந்நீரில்-ஸ்நானஞ்செய்து-அந்தநீரும-வியர்வையும-நீங்குமபடிஉலர்த்துவாயாக. ()

தே, த, பாதாதிகளில் தைலமிடலின் குணம-வெ-பா,

பாதத்திடிற்கண்ணோய் பாறுமக்கட்கிடினோ
காதுற்றெழுநோய் போங்காது-விடி-னோதுந்
தலைநோயகலுந் தலைக்கிடினேயெல்லா
நிலையாவறலாடி னெய்,

(இ-ள்) எண்ணெய்முதலியதயிலங்களை, உள்ளங்காலிற்தேய்க்கில் கண்ணைப்பற்றிய நோய்களும-கண்ணுக்குக்கட்டினல்-செவிரோகங்களும-செவியிற்குத்தினல்-சிரஸ்தாபங்களும-சிரசில்-தேய்த்துஸ்நானஞ்செய்தால்-சரீரத்திலுள்ள-சகலரோகங்களும-நிவிர்த்தியாகும, (தசா௫)

அரைப்புவகை.

சிங்கிராந்தூள்விரண தேகர்க்கரைப்பாகு
மாங்கிலுப்பைக்கட்டிசொறிய ளர்க்குத்-தூக்குமணிப்

புங்கைப்புஞ்சியக்காயும் போக்கடிக்குமெண்ணெய்களைக்
கந்துலுறைகூந்தன்மின்னே காண்,

தே, க இதுவுமது,

பருப்பைப்புக்கோடிநெய் பண்ணுமெண்ணெய்யாதிக்
கறைப்புச்சிகைக்காயு மாகும்-தெருப்பன்றி
நெய்யாதியாநெய்க்கு நீள்களைப்பூண்டாதி
மெய்யாறைப்பாகும் வின்.

(இ-ள்) மேகம்போன்றகூந்தலாளே விரணதேகிகட்கு உதிலத்தாலும் சொறிதினவை உடையவர்களுக்கு - இலுப்பைப்பிண்ணாக்கும் எண்ணெய் முதலிய தயிலங்களுக்குப் பொன்னாங்காயும் சிகைக்காயும் பசுவின்னெய்க்குப் பச்சைப்பயறும் பன்றி காக்கை முதலிய நெய்கட்குக் காரைச்செடிகளின் தூளும் அரைப்பாகும், (தசாள)

தே, த, ஸ்நானகாலவிதி-ந ச-ளம,

ஐயமானிவைக்கைம்பத்துளியாழ் குளிர்க்கட்டமத்தன்
வையமாகனிக்குங்கோல்கேட்டுநா நான்குவின்மாணிரண்டே
பயமார்கடமர்ச்சத்திற்குந் திரிக்குட்பார்திங்களி
னையமாந்தயிலங்காடவரோகமெய் நண்ணுவரே.

(இ-ள்) சித்திரை வைகாசி மாதங்களில் சூரியன் உதயமான - ஐந்து நாழிகைக்குள்ளும் ஆனி ஆடி மாதங்களிலெட்டு நாழிகைக்குள்ளும் ஆவணி புரட்டாசி ஐப்பசி கார்த்திகை மாதங்களில் நாலு நாழிகைக்குள்ளும் மாசி பங்குனி மாதங்களில் மூன்று நாழிகைக்குள்ளும்- பக்குவபாக முள்ள தைல ஸ்நானஞ்செய்தால் ஆரோக்கியதேகத்தைப் பொருந்துவார்கள்-என்க, க்ஷவரத்தின்குணம்-வெண்பா. (தசாஅ)

தூக்கம்விரணந் தொடைவலிசூலங்காசந்
தற்காலசாந்தஞ் சவரத்தால்-மிக்குடற்குஞ்
சாந்திமனப்பூரிப்பு கண்ணொளிருகாமமுமாஞ்
சேர்ந்ததிங்களுக்கிரண்டாந் தேர்,

(இ-ள்) ஒருமாதத்திற்கு இரண்டுதரஞ்செய்துகொள்ளுகிற க்ஷவரத்தினால் மனத்துயரம் புண் தொடைநோவு குத்தல் இருமல் ஆகிய இவைகள் உடனே நொந்துவுக்கிரமாம் தேகவொளிவும் மனச்சந்தோஷமும் விழிக்குப்பிரகாசமும் காமவிருத்தியும் உண்டாகும், (தசாகூ)

## வஸ்திர வகை.

### சாலுவையின் குணம்.

சலதோடம்போகுங் கலைவலியுமேகு
முலவிவருநோய்வாத மோடும்-வலிய
வயிற்றுவலிபோங்குளிரை மாறுப்பனியைச்
சயித்தவொருசாலுவைக்குத் தான்,

(இ-ள்) நல்லசாலுவைக்கு நீரேற்றம் சிரோரோகம் வலிவாதம் வாதகுன்மம் குளிர் மூடுபனி இவை யொழியும்-என்க. (தசாய)

### பட்டுவஸ்திரத்தின் பொதுக்குணம்,

பித்தகபமகலும் பேராமகிழ்ச்சியொடு
புத்திமிகும்வியர்வை பூணுங்கா-ணித்தியமும்
காந்தியதுவுண்டாங் கனஞ்சேர்பட்டுத்துகிலுக்
கேந்துமுலைமாதே யியம்பு.

(இ-ள்) பெண்ணே உயர்ந்தபட்டுவஸ்திரத்தினால் பயித்தியசிலேஷ்மம் விலகும், மனக்களிப்பு ஞானம்வியர்வு தேஜசு இவையுண்டாகும்-என்க,

### வெண்பட்டுவஸ்திரத்தின்குணம்.

வெண்பட்டுடையால் விரிசுரமுஞ்சீதமும்போம்
பண்பட்டவாதம் பறக்குங்காண்-பெண்டிட்டுங்
காந்தியுமுண்டாகுங் கதித்தஅழகுமுண்டாங்
காந்திமதிமுகத்தாய் காண்,

(இ-ள்) பிரகாசமுள்ளசந்திரவதனியே வெள்ளைப்பட்டு வஸ்திரத்தால் அதிசுரமும் குளிரும் வாதநோயும்போம் ஸ்திரீவசியமும் ஒளியும்வனப்பும் உண்டாம் என்க, (தசாய௨)

### நாருமடியின்குணம்,

சளியோடுநீரேற்றந் தங்காதகலும்
வளியோடுசந்நியும்பின் வாங்குமளியினங்கள்
சேருமடிக்கூந்தன்மின்னே தேகமிகச்சுத்தியதா
நாருமடிக்கென்றே நவில்,

(இ-ள்) வண்டுகள்மொய்க்கும் வாசனைபொருந்திய கூந்தலையுடையவளே நாருமடிக்கு கபக்கட்டு சலதோஷம் - குடல்விருத்திவாதம் சந்நிபாதசுரம் ஆகிய இவைபோம் சரீரஞ்சுசிகரமாம், (தசாய௩)

வெள்ளைவஸ்திரத்தின்குணம்.

ஓடுந்திரிதோட மோங்காயுசும்பெருகும்
கூடுந்திருவழகுங் கூர்களிப்பு-நீடுமதி
போதமுறும்வெற்றிவரும் பூரிக்குமெய்யயர்வு
னேதமறும்வெண்டுகிலுக்கே.

இ-ள், வெண்துகிலுக்கு வாதாதிதோசங்களுங்-அயர்வும்விலகும் ஆயுசுவிருத்திலட்சுமிவிலாசம்-வனப்பு மகிட்சி அறிவு-பலம் இவையுண்டாம்

சிவப்புவஸ்திரத்தின்குணம்-

ஏந்துபித்தமுட்டின் மெதிர்ந்ததருணசுரம்
வாந்திபருசிகப மந்தமிவை-சேர்ந்திடுங்காற்
செய்யகடுஞ்சிவப்புச் சேலையுடுத்தாலவைகள்
பையவதிகரிக்கும் பார்.

(இ-ள்) அதிபித்தியம உட்சூடு தருணசுரம - வமனம் அரோசகம் சிலேஷ்மகோபம அலசம என்னு மிவைகளில் ஏதேனும் ஒருரோகம் அனுசரித்திருக்குங்காலத்தில் மிகவும் சிவந்தவஸ்திரம - உடுக்கலாகாது உடுத்தால் - மேற்சொல்லிய ரோகங்கள்- விருத்தியடையும என்க, ()

மஞ்சள்வஸ்திரத்தின்குணம,

நீர்க்கடுப்புகாசமொடு நீடுவிசுரமுந்
தீர்க்கமையும்வெப்புஞ் சோமலமுங்-பார்க்குண்மிக
வஞ்சியேயேகுமஞ்சளாம வத்திரமபுனைந்தால்
வஞ்சியேநன்றாய் வழுத்து.

(இ-ள்) பெண்ணே மஞ்சள்வஸ்திரத்தினால் வாதநீர்ச்சுருக்கு இருமல் விஷசுரம மாறுந்தினவு தனிச்சுரம மலபந்தம இவைநீங்கும என்க,

பச்சைவஸ்திரத்தின்குணம.

மெய்பழலேயேகும் விழிக்குக்குளிர்ச்சியுண்டாம்
பொய்பிணுடலமெல்லாம பூரிக்கு-மையமுறு
நச்சைதிகருநளினவிழிப்பெண்ணமிர்தே
பச்சையுடையின்குணத்தைப் பார்.

(இ-ள்) நஞ்சமொத்தகண்ணுளே பச்சைவஸ்திரத்தினால் உட்சூடு சிலேஷ்மதோஷமுமபோம கண்ணுக்குக் குளிர்ச்சியும - தேகப்பூரிப்பும உண்டாம என்க, (கசாடன)

கறுப்புவஸ்திரத்தின்குணம்.

காசமொடுவெப்புங் கறுத்தசொடுவிடமும்
பேசுமந்தாக்கினியும் பித்தமும்போ-நேச
வெறுப்புறுமென்பநய மெல்லியலேகேளக்
கறுப்புநிறமாந்துகிற்குக் காண்.

(இ-ள்) வெறுப்புறுமின்பமுடையாளே கறுப்புவஸ்திரத்திற்கு இருமல் சுரம் மகாசர்ப்பநஞ்சு அக்கினிமந்தம் பயித்தியதோஷம் ஆகிய இவைகள் ஒழியும் என்க. (தசயஅ)

தே, அழுக்குவஸ்திரத்தின்குணம்.

நோயடருங்காந்திகெடு நுண்ணறிவும்போமொளிக்குந்
தீயகுளிர்துக்கந் திளைவுசங்கை-வாய்பேசக்
கூசுதலுமுண்டாகுங் கோதாருமாசுடைக்குப்
பேசுதலுமியாதிதற்குப் பின்பு,

(இ-ள்) அழுக்குவஸ்திரம் தரிப்பவருக்கு, பற்பலதுன்பம் மிகுகுளிர் துயரம் நமைச்சல் கிரகசங்கை நாணம் ஆகிய இவைகள் உண்டாகும் சரீர ஒளியும் நுட்பமாகிய அறிவும் விலகும் என்க. (தசயகூ)

கம்பளத்தின்குணம்.

பெரும்பாடசிரணங்கள் போராக்கிராணி
யருஞ்சூலைபேதி யகற்றுங்-கருஞ்சீழைப்
போக்குங்குளிர்வாடை பொல்லாப்பனிநீக்கிக்
காக்கும்பருங்கம் பளம்.

(இ-ள்) சீதனக்காட்டையும் மூடுபனியையும்விலக்கி உடலைக்காக்கின்ற பெரியகம்பளம் அசிர்க்கரம் அசீரணங்கள் திரிதோஷகிரகணிசூல்பிடிப்பு அதிசாரம் கறுப்பாக ஒழுகுகிற சீழ் இவைகளைநீக்கும். ()

முண்டாக-கவசம்-நடுகட்டு-இவைகளின்குணம்.

முண்டாகவாதபித்த முன்பொழிக்குமெய்க்கவச
முண்டாயிற்காந்திபுட்டி யுண்டாகுந்-திண்டாடு
பித்தமறுந்தீயாம் பினைத்தநடுக்கட்டுக்குக்
கொற்றமுறுவீரியமாங் கூறு.

(இ-ள்) சிறசிற்கட்டுகின்றமுண்டாசு, வாதபித்ததொந்தத்தைப்போக்கும் கவசம்என்கிற அங்கியினால் தேகஒளியும் புஷ்டியும் உதாக்கினியும் உண்டாவதுந்தவிரப் பித்தகோபமும் நீங்கும் - நடுக்கட்டு என்கிற அரைக்கச்சைக்கு பலம்பொருந்திய ஆண்மையுண்டாம் என்க, ()

தே, ஆபரணத்தின்குணம்.

ஆபரணஞ்சூடி லசிரியலீலாலயமா
மாபரணமெய்க்குமதி மங்கலந்தான்-சோபமனத்
தாக்கத்தொடுநோய்போந் சொல்லவசியமுறும்
மிக்குக்களிப்பட்டு மெய்.

(இ-ள்) ஆபரணம்பூணில், அநுமதன்கூத்துக்கு ஓரிடமாயிருப்பது ந்தசரிரச் சரீரத்துக்கு அழகியபரணம் என்கிறகுவசமுமாகும் இதனால் மங்களகரமும் வசிகரமும் மகிழ்ச்சியும் உண்டாகும் சோர்வு மனத்துயரம் வியாத்தி போன்மாதம் முதலிய ரோகங்களும் நிவர்த்தியாம். ()

# புசிப்புவகை.

தே, பசியின்குணம்.

பசியாலழநாண்மை பாழிபின்புமோகஞ்
சுதியாவிவார்த்தையிவை சோரும்-பசியாலாந்
தாதினத்தின்சிரணமுந் தள்ளுகிழத்தனமு
மோதினத்தின்பேதமுமா மோர்.

(இ-ள்) பசியினால், வனப்பு-பலம்-மகிழ்ச்சி-ஆசை-ஆசாரம்-உயிர்பேச்சு இவைநீங்கும் அன்னரசத்தால்வளருகின்ற சப்ததாதுகளுக்கு விகற்பமும் முப்புத்தன்மையும் சுற்றத்தார் விரோதமும் உண்டாகும், ()

தே, போஜனகாலவிதி,

தன்மமிரண்டேயூண்டப்பி முக்காற்கொள்ளினினன்
றின்மதலேநாளைமுற்றற் சேர்பருவ-நன்முகூர்த்த
மொன்றுக்குணன்குக்கு ளோதுயிரண் டிக்குளுண்பர்
நன்றுக்குத்தீயோர் நயந்து.

(இ-ள்) தருமசாஸ்திரத்திற்கூறிய இரண்டுகாலபோஜனமே நலமாம் அதுதப்பி மூன்றுகாலபோஜனங்கொள்ள வேண்டுமானால் சூரியனுக்கிளம்பருவமாகிய உதயமுதல்-௩-௪-நாழிகைக் குள்ளும் காளைப்பருவமாகிய-௰௫-நாழிகைக்குள்ளும், மூப்புப்பருவமாகிய இரவில் ௭௨ நாழிகைக்குள்ளும்-நலம்பெறுதற்குச் சமாக்கினியையுள்ளவர்கள் கொள்ளுவார்,

தே, காலாகாலபோஜனகுணம்.

மூன்றுநாள்காறெண் முகூர்த்தங்களின்முறையே
ஞான்றுளுண் ணுமந்த நறுமுணவே-தோன்றுடலுங்
கொக்குமிந்நோயமு ரோகமுமிற்கந்தாஞ்செய்
விக்குமிதமாராய்ந்து விள்.

வருநாளுண்ணெழுநாலுமாறினகு தெழுதா துவையும்வளர்த்தே
தருநாளுஞ்சோராதவலியுதனை யெட்டாநாட்சடத்தினுக்கே,

(இ-ள்) ஒருநாளுண்ட வுணவுல்நின்றும் பிரிவுற்ற அன்னரசமானது அன்றைக்குரசதாதுவை நனைத்து ஊறித்தங்கும் உ-ம் நாள் உண்ட அன்னரசம் அந்தரசதாதுவிலேற முன்பு ஊறிநின்றரசம் ரத்ததாதுவிற்பாயும்-இவ்வாறே ௩-ம்-நாள்மாமிசதாதுவிலுப-ச-நாள்-மேதோதாதுவிலும் - எ - ம் - நாள் சுக்கிலதாதுவிலுமாகச்சென்ற அத்தாதுக்களை விருத்தியடையச்செய்து- அ-ம்-நாள் - தேகத்திற்குக் - குன்றாதவன்மையைக்கொடுக்கும். (தசஉகூ)

## உண்கலவகை.

### தங்கக்கலத்தின்குணம்-வெண்பா.

தங்கக்கலத்திலுண்ண தாதுவிர்த்தியும்பசியும்
பொங்கமிகுதிடமும் பூரிப்பு-மக்குறையும்
பித்தசோர்பைப்பிணியிப் பேருலகைவிட்டகலுஞ்
சுத்தரசத்தீங்கினியே சொல்.

(இ-ள்) தங்கப்பாத்திரத்திறபுசிக்கில்-சுக்கிலவிருத்தியும்- சமாக்கினியும்-வன்மையும்-உச்சாகமும்-உண்டாம்-பித்தசோபை-நீங்கும். ()

### வெள்ளிக்கலத்தின்குணம்.

வெள்ளிக்கலத்திலுண்ண வீறிவருகபமுந்
துள்ளியெழுபித்தமும்போஞ் சொல்லவே-விள்ளிய
காந்தியுண்டாநாளுங் களிப்புண்டாந்தேகத்திற்
சேர்ந்திவரும்வாதமுண்டாஞ் செப்பு,

(இ-ள்) வெள்ளிப்பாத்திரத்தில் அருந்த சிலேஷ்மகோபமும் - பித்தகோபமும்நீங்கும் தேஜசும்-மகிழ்ச்சியும் வாதாதிக்கனும்-உண்டாம்,()

### செம்புகலத்தின்குணம்.

செம்புகலத்திலுண்ணத் தேகவாரோக்கியமாம்
பம்பிரத்ததோடம் பறக்குங்கா-ணம்புவியி
லண்ணியிடுங்காந்தி யணங்கேவிழியொளியாம்
புண்ணியமுநண்ணும் புகல்.

(இ-ள்) தேவமகளீரையொத்தபெண்ணே செப்புப்பாத்திரத்திலுண்ணில் சரீரசவுக்கியம் தேஜசு-கண்ணுக்கொளிவு சுகிர்தம் இவையுண்டாம் ரத்தபித்தரோகம் விலகும் என்க, (தசஙஉ)

வெண்கலத்தின்குணம்.

தாம்பரத்தில்வெள்ளியந் தான்கலக்கவெண்கலமென்
றாம்பெயர்பெறுங்கலத்து ளன்னமுண் ணிச்-றேம்புகின்ற
சோபமொடிரத்தபித்தந் தோன்றவுறியாதனங்கன்
சாமமெனச்சொன்னுதலே சாற்று.

(இ-ள்) மதன்வில்லனையபுருவத்தாளே-வெண்கலப்பாத்திரத்திற்- புசிக்கசோர்வும் உதிரபித்தமும்-போம்-என்க. (௧௪௩௩)

தாம்பரம்-வெள்ளி-கலப்பி-வெண்கலம்
இவ் - உண்கலங்களின் குணம-விருத்தம,

தக்கதாமபரத்தின்வட்டிற் றுனைதிரத்தபித்த
மெய்ச்சுருதகற்றுமவெள்ளி விலக்கிடுமையந்தன்னை
யொக்கவேகலப்புவட்டி லுறுதிரிதோடய்போக்குங்
கக்கியவுதிரமேறுங் கனத்தவெண்கலத்திற்கென்னே.

(இ-ள்) செப்புக்கலம ரத்தபித்தத்தைவிலக்கும், வெள்ளிக்கிண்ணிக பந்துன்பத்தைநீக்கும், கலப்புலோகவட்டில் திரிதோஷங்களைமாற்றும வெண்கல உண்கலத்தினுல் குறைந்தரத்ததாது விருத்தியடையும், ()

தே, உண்கலத்தில் இவைகள்முக்கியமெனல்-வெண்பா,

வாழைவெள்ளைப்பன்னநன்று மற்றிலைகண் மத்திமமா
மாமைவெள்ளிவெண்கலமு மாநன்றாம்-சோழை
கயப்பாண் டநோய்போங் கருதினிவைக்கெல்லாக்
குயப்பாண் டமேலசனங் கொள்.

(இ-ள்) மனுச்சாகபோசனத்திற்கு வெள்வாழையிலைநன்று, மற்றைய இலைகள் மத்திமமாம்-தங்கம-வெள்ளி-வெண்கலம-இவைகளாற்செய்த உண்கலங்கள் மிகவுநலமாம இவைகளைவிட மட்கலமேசிறந்தது இதில் புசிக்கில், க்ஷயமும பாண்டுரோகத்தாற்பிறந்த - நீர்ச்சுரப்பும் விலகும்,

தே, வாழையிலையின்குணம்,

தொக்கினூறுமின்னுஞ் சுகபோகமுமன்னு
மக்கினிமந்த மபலமொடு-திக்கிடுகால்
பாழையிலைப்புமறும் பன்னுபித்தமுஞ்சமனும்
வாழையிலைக்குணமறு வாய்.

(இ-ள்) வாழையிலைக்கு. சருமதாதுவிற்பளபளப்பும் சுகபோகங்களும் பொருந்தும மந்தாக்கினி துர்ப்பலம க்ஷீணவாதம சிலேஷ்ம அரோசகம இவைநீக்கும், பித்தகோபம் சாந்தமாம் என்க, (௧௪௩௫)

தே, பலாஇலையின்குணம்,

பலாவிலையிலுண்ணப் பதுங்கினின்றபித்தங்
குலாவியெழும்பிக் குதிக்கு-முலாவிவரு
கன்மமகோதரநோய் காணாதகலாத
குன்மமகலுங் குறி.

(இ-ள்) பலாஇலையில் உண்டால், அடங்கியபித்தமும் அதிகரிக்கும் ஊழால்வந்த பெருவயிறும் குன்மரோகமும் நீங்கும் என்க, (தசுஙஎ)

தே, பாலுள்ளமரத்திலைகளின்குணம்.

பாலிருக்கின்றமரப் பன்னங்களிலுண்டாற்
கோலிருக்கச்செய்வாதங் கோழைகபங்-கால
வசிர்க்குபித்தந்தாகமிவை யண்டாதகலு
முசுக்குமதிசீதளமா மோர்.

(இ-ள்) பாலுள்ளமரத்தின் இலைகளில்உண்ணில்-பங்குவாதம்-க்ஷயம் அசிர்க்கரம பயித்தியம்-தாகம- இவைநீங்கும்-அதிக்குளிர்ச்சியுண்டாம,

தாமரையிலையின்குணம்.

தாமரைப்பன்னத்திலுண்டாற் றுங்கரியவுட்டினமா
நாமவாதஞ்சினந்து நண்ணுங்காண் - ஆமமுறு
வாக்கினிமந்தங்களுண்டா மன்றேமலர்த்திருவத்
திக்கினிலிராளெனவே தேர்,

(இ-ள்) தாமரையிலையிற்புசிக்கில், வெப்பமும்-வாதரோசமும்-மந்தாக்கினியும் உண்டாகும் சமபத்துநீங்கிவிடும என்க. (தசுஙஅ)

கரபாத்திரத்தின்குணம,

கைப்பாத்திரத்திற் கலந்தன்னங்கொள்ளுங்கால்
வைப்பாமனச்சேட்டை மாறுங்கா-ணிப்பாற்
சருவகிலேசமும்போஞ் சாற்றவென்றாலின்னும
பெருவருசிநோயும்போம பேசு.

(இ-ள்) சகலரசிகளுங்கலந்த அன்னத்தைக் கைப்பாத்திரத்தி லுண்ண மனச்சேஷ்டையும் மனோதுக்கமும பல அரோசகமும போம, ()

## சோற்றின்வகை.

அதிசுடுகையன்னத்தின்குணம.

அதிசுடுகையன்ன மரத்தபித்தந்தாகம
பிதிரேறவீக்கப் பிரமை-மதரோக

மென்றுரைக்குநோய்கட் கிடங்கொடுக்குந்தப்பாது
குன்றுரைக்கும்பூண் முலையே கூறு.

(இ-ள்) ஆபரணத்தையணிந்த குன்றனையமுலைகளையுடையவளே நித்தியமும் புசிக்கின்ற மிகுசுடுகை அன்னமானது - உதிரபித்தம் தாகம் பிரமை மதரோகம் இவைகளையுண்டாகும் என்க, (தசசக)

அற்பச்சுடுகையன்னத்தின் குணம்.

அற்பச்சூட்டன்னம்வா தாதிகளாற்பீனசத்தா
லுற்பவித்தநோயை யொழிதுடற்கு-நற்பலத்தைச்
செய்யுமருசிதனைத் தீர்க்குஞ்சர்வோத்தகம்
பெய்யும்வளைக்கைமாதே பேசு.

(இ-ள்) வளையலையணிந்த கரங்களையுடையவளே கொஞ்சஞ்சுடுகையுள்ள அன்னமானது, உத்தமத்திலுத்தமமாம் அதுவாதபித்த கபங்களிலும் பீனசத்தாலும் விளைகின்றநோயையும், அரோசகத்தையும் நீக்கும், சரீரத்துக்கு வன்மையைத்தரும் என்க, (தசசஉ)

புழுங்கலரிசி யன்னத்தின்குணம்,

தென்புவியினுளுஞ் செழித்துவளருஞ்சாலி
வன்புபுழுங்கல் வழிசாத-முன்புணவே
வாயுவிலையத்தால் வலியும்வன்றோயுமில்
நோயுடையார்க்காகு நுவல்,

(இ-ள்) புழுங்கலரிசி அன்னத்தைப்புசிக்கில், வாதகோபமும் பலமும் வலியரோகங்களும் இல்லை இதுநோயாளருக்குதவும்என்க,(தசசங)

பச்சையரிசியன்னத்தின்குணம்,

பச்சரிசிச்சோறு பலங்கொடுக்கும்வாயுவென்பார்
நிச்சயமாகப்பித்தை நீக்குங்கா-ணச்சமற
மூத்திரக்கிரிச்சரத்தை முன்பொழிக்குஞ்சேய்க்குமந்த
மாத்திரமுண்டாகும் வழுத்து,

(இ-ள்) பச்சரிசியன்னமானது, பலத்தையும் குழந்தைகளுக்கு மாந்தத்தையும் உண்டாக்கும், பித்தகோபத்தைதரிங் கிரிச்சரத்தையும் நீக்கும் என்க இதில் வாயுவுண்டென்பார், (தசசச)

நன்றாகச்சமையாத அன்னத்தின்குணம்.

நன்றாச்சமையா நடுத்தண்டுலச்சோறு
தின்றால்மலஜலமுஞ் சிக்குமென்ப-தொன்றேகேண்
மற்றைநாளுஞ்செரிக்க மாட்டாததுவுடலிற்
சற்றும்வியாபிக்காது சாற்று,

(இ-ள்) நட்டரிசியன்னத்தைப்புசிக்கில், மலசலஞ்சிக்குவதுந்தவிர அதுமறுநாளும் சீரணத்தியாகாது, அவ்வன்னரசம் உடலிலும்பரவாது,

குழைந்த அன்னத்தின்குணம்,

குழைந்தசோறுண்ணிற் கொடுமேகங்காச
மருந்துமந்தாக்கினியு மாறும்-விழுந்திடச்செய்
துர்ப்பலமும்பீநசமுந் தோன்றுமரிவையர்க்குட்
பொற்படருமாதே புகல்,

(இ-ள்) மாதருக்குள்சிறந்தமாதே அளிந்தஅன்னத்தைப்புசிக்கில் வர்தபிரமேகம் இருமல் - அக்கினிமந்தம் துர்ப்பலம் பீநசம இவை உண்டாகும என்க, ※ சுத்த அன்னத்தின்குணம், (௧௭௪௫)

சுத்தவன்னங்குற்றமிலேத் தோஷங் கோயகற்றுன்
முத்தாத்மேகிக்குமது முக்கியங்காண்-பத்தியத்திற்
காகுமதுமுப்பிணிக்கு மாமவியஞ்சனங்கலந்து
ணேகுமுண்ணேயெல்லா மிரங்கி

(இ-ள்) குற்றமநீக்கிய அன்னத்தை நற்கறிகளோடுண்ணில், அதுவாதபித்தசிலேஷ்மம் என்னும மூவித்தேகிகளுக்கும முக்கியமாக உதவும பத்தியத்திற்கும வாதாதிமூவிதரோகங்களுக்கும ஆகும அன்றியும குடலைப்பற்றியநோய்கள் - முழுமையும விலகும - குற்றமில்லை என்க, ()

※ சுத்தன்னம என்பது, பழைய அரிசியைத் தவிடுநொய்முதலியவை போம்படி நன்றாகத்தீட்டி முழு அரிசியாக ஆய்ந்து எடுத்து இளவெந்நீராற்கழுகி வஸ்திரத்திற்கொட்டிச் சற்றே ஆறவைத்து ஒருபாண்டத்தில் அரிசிக்கு மூன்றுபங்கு சலம்விட்டு அடுப்பேற்றி அதநுரைகட்டிக்கொதிக்கும்பொழுது அந்த அரிசியை அதிற்போட்டு முக்காற்பாகமாகவெந்தவுடன் கரண்டியால்விழாவிவடித்துக்கொண்டுமறுபடியும் தணலில்வைத்துப் பக்குவமாயிருக்குஞ்சமயத்தில் இறக்கிக்கொள்ளுவதாம்.

பொங்கல் அன்னத்தின் குணம்,

பொங்கலெல்லாமந்தம் பொருமலெனுநோய்விளக்கு
மங்கமெலாம்வாத முண்டாக்குமன-லங்கொடுக்குஞ்
சம்பாநெற்பச்சரிசித் தன்பொங்கற்றுவிர்த்தி
யென்பார்பெரியோர்களென்.

(இ-ள்) பச்சரிசிப்பொங்கல் அன்னமெல்லாம், சகல அலசரோகம் வயிற்றுப்பிசம் அங்கலசனவாதம் வெப்பம் இவைகளை உண்டாக்கும் சம்பாப்பச்சரிசிப் பொங்கலன்னம் விந்துவை வளர்ப்பிக்கும் என்பர், ()

பாலும் அன்னமும் புசித்தலின்குணம்.

பாலுமன்னமும்புசிக்கிற் பன்னுபித்தந்தாகமறு
மேலுமற்பமந்தமென்பார் மேனியிடு-ஞாலமதி
லப்பொழுதேதாதுவிர்த்தி யாகுஞ்சிசுவர்த்தி
யெப்பருவத்தர்க்குமாமென்.

(இ-ள்) பாலும்சோறும் உண்டால், பித்தகோபமும் தாகமும் விலகும் கொஞ்சமந்தம் தேகபுஷ்டி உடனே வீரியவிருத்தி இவை உண்டாகும்=இது, பால கவுமார விருத்தர் பரியந்தம் உதவும் என்க, ()

பசும்பாலின் பத்தியம்.

ஆறினமுதனடுவா காவாப்பாலைவளர்க்கு
பீறின்சுவையிரண்டேற்றென்பர்கசர்ப்-பூறினுறுங்
கண்டோக்குமுண்ணெண் களையொழிபாத்தோடருந்தப்
பண்டொக்குமுண்ணி பகர்;

(இ-ள்) பசுவின்பாலைச்சாப்பிடவேண்டுமானால், புளிப்பு துவர்ப்புஉவர்ப்பு கைப்பு கார்ப்பு இனிப்பு என்னும்-சு-சுவையில்-க-வதும் உவதும் ஆகிய ச சுவையுள்ள வஸ்துக்குள் எதனையும் அனுபானமாகச் சேர்த்துக்கொண்டு உண்ணலாகாது சுக்கிலத்தை விருத்திசெய்யும் படியான கடைசியிற்சொல்லிய-உ-சுவையுள்ள வஸ்துக்களை அனுபானமாகச் சேர்த்துக்கொண்டு உண்ணெனச் சிலர் சொல்லுவார்.

ஆனாலும், அந்த-உ-சுவையில்-க-ஆகிய-கார்ப்புள்ள-பொருள்நோயுற்றபோது-அனுபானமாகக்-கொள்ளலாகும் மற்றக்காலத்தில்-பாலைத்தனியே உண்ணவேண்டில் அதற்கு அனுபானம் கற்கண்டுப்பொடி பொருந்தும்-அ-வகைக்குற்றங்கள்நீக்கிய அன்னத்துடன் உண்ணவேண்டில் மதுரமுள்ளபழம் அனுபானமாகப்பொருந்தும் ஆதலால் இவ்வாறு முறைப்படி உண் என்று சொல்லுவாயர்க என்க, அன்னத்திற்கு எப்போ

364



ஸ்துக்கள் மிகுவன்மையுள்ளவை யாதலால் அங்கிலத்துவரையை விசேஷமாகக் கூறினர். (௲௪௫௲)

தே, நெய்சேர்த்துண்பதின்குணம்.

பருப்பிலெழுவெப்பும் பருங்குடன்முறைப்பும்
திருப்புறுமுன்மலத்தின் சிக்கும்-தரிப்புறு
மெய்க்குள்ளகாந்தி விலகாதழகுறுநன்
னெய்க்குள்ளவுண்மை நெறி.

இதுவுமது.

புத்திமிகுஞ்சிக்குவைநோய் போயொழியுநேத்திரத்தின்
மெத்தவொளியும்-விளங்குங்காண் -பித்தமொடு
வாதகபமாறு வறட்சியெல்லாநீங்குங்
கோதினறுநெய்யைக் குடி.

(இ-ள்) போஜன ஆரம்பத்தில் நெய்சேர்த்துண்பதினால் துவரம்பருப்பினது உஷ்ணம் குடல்விறுத்தல்பழையமலபந்தம்சிக்வாகண்டகரோகம் பித்தாதிக்கம் வாதகபதோஷம் நீங்காச்சொறி இவை நீங்கும அதிஞாபகம தேஜசு வனப்பு கண்ணுக்குஒளிவு இவையுண்டாம என்க, ()

தே, பொரியலின் பேதகுணம்.

காரமிகுபொரியல் காயந்தனிற்கபத்தைச்
சேரவுறவாக்குந் திண்ணமே-சோரப்
புளியிட்டிடும்பொரியல் போர்மந்தத்தோடு
வளியிட்டிடுமெனத்துள் வை.

(இ-ள்) உறைப்புச்சுவையதிகரித்தபொரியல் கபத்தைத்தரும் புளிச்சுவைமிகுந்தபொரியல் அலசநோயையும் வாதப்பிணியையும் விளைக்கும்

தே, வரலின் பேதகுணம்.

இளவருப்பானமந்த மெழும்புங்கருக
லுளவறுப்பான்முத்தோட மோங்கு-மளவருத்த
மையவறற்பிணிக்கும் வாதமடுமாயினஃ
தையவறற்பிணிக்கு மாம்.

(இ-ள்) இளவருப்பாகவறுத்த பதார்த்தத்தினால் மந்தமும் கருகும்படிவருக்கில் வாதபித்தகபதோஷங்களும் உண்டாகும் இவற்றில் இரண்டிற்கும் நடுத்தரமாகவறுத்தகறிகள் தொந்தவாதத்தை நீக்குவது மன்றி கபசம்பந்தமான சகலதோஷங்களுக்கும் உதவும் என்க, (௲௪௬௰)

தே, பச்சடியின்பேதகுணம்.

புளிப்பானபச்சடியாற் போம்பித்தங்கார்த்தால்
வளைப்பானபச்சடிக்கை வாத-மிளைக்கு

மினித்தபச்சடிக்கருசி யேருந்துவராற்
சனித்தபச்சடிக்குறும் வாதம்.

(இ-ள்) புளிச்சுவையுள்ள பச்சடியால் பித்தபிரகோபமும் உறைப்புப் பச்சடியால் சிலேஷ்மவாதமும் இனிப்புள்ளபச்சடியால் - ஆரோசகமும் நீங்கும - துவர்ப்புள்ளபச்சடியால் வாதாதிக்கம உண்டாம என்க,

தே, துவையலின்பேதகுணம,

புளிப்பாயிலைத்துவையல் போக்குமபித்தத்தைப்
புளிப்பாலமைதுவையல் பொல்லா-புளிப்பில்
வெறுந்துவையனன்றதற்கு மிக்கவுறைப்பிட்ட
நறுந்துவையலென்றினு நன்று.

(இ-ள்) புளியாரைமுதலிய புளிப்பிலைத்துவையல் பித்தகோபத்தை நீக்கும வெறுமபுளித்துவையல், ரத்தத்தைமுறிப்பதால் நன்மையன்று புளிசேராத்துவையல், நலமாம ஆதிக்காரமசேர்ந்த நல்லதுவையல் பசியையெழுப்பலால் உத்தமத்திலுத்தமமாம-என்க, (தசகூஉ)

குழம்பின் பேதகுணம.

சொல்லவுறைக்குங்குழம்பாற் றோன்றுதனிலமஃ
தில்லையெனில்வாத மிருக்குங்காண்-தொல்லுலகி
னீர்த்தகாரக்குழம்பா னீடுமுத்தோடேமுன்பின்
பார்த்தோடுமென்றே பகர்.

(இ-ள்) உறைப்புள்ளகொழம்பால், வாததோஷம்சனிக்காவாம், அவ்வாறில்லாக்குழம்பால், வாதசின்னம் உண்டாம் காரத்தோடும் நீர்க்கவைத்தகுழம்பால், வாதாதிமுத்தோஷங்களும் விலகும் என்க, ()

துவரம்பருப்பின் துரசகுணம்-கலிப்பா.

நவரைவாழைக்கனி பலவின்கனி
நல்லமாங்கனி பாலொடுநெய்க்கறி
கவரிலப்பொழுதே மந்தமாம்பரி
காரங்கேட்கும் பயித்தியக்காரரே
யெவருங்காண்க வறைகுதுமன்னத்தி
லிட்டுணுங்கரி தன்னுடன்கூடவே
துவரைநீர்மிளகுள்ளி யிட்டுக்கொளீர்
துட்டவாதமுந் துஞ்சிடுமுண்மையே.

(இ-ள்) வாழை பலாமர என்கிற முப்பழங்களையும் பாய் நெய்க்கறிகளையும மிதமின்றிப்புசிக்கில், உடனே அக்கினிமந்தம்பிறக்கும் அதை

தரிதரும்மலமும்வாய்வுந் தாகமும்போகுங்காணே

(இ-ள்) பசும்பாலில் பச்சரிசிசேர்த்துக் காய்ச்சியகஞ்சியால் பித்த எரிவுநீங்கும் புத்தியும் சுக்கிலமும் விருத்தியாம் நெற்பொரிக்கஞ்சி பயித்தியதோஷத்தைப்போக்கும் சாதத்தில்வடித்த சுடுகஞ்சிக்கு, பலமும வாதரோகமும் தாகவிடாயும விலகும் என்க, (௧௭௨)

தே, கொள்ளுக்கஞ்சியின்குணம்-வெண்பா.

கொள்ளுந்தண்டேலமுமாய்க் கூட்டியடுக்கஞ்சியது
கொள்ளுங்காற்றீபனத்தைக் கூறுவதோ-வெள்ளை
நசிக்கிப்பிழிபலமு நல்விந்துவுமே
வசிக்குங்கிழவர்கட்கும் வை.

(இ-ள்) கொள்ளும் அரிசியுஞ்சேர்த்துக்காய்ச்சிய கஞ்சியைக்குடிக்கில், அதிகபசி எள்ளைக்காற்கசக்கிப் பிழியும்படியான பலம் வீரிய விருத்தி - ஆகிய - இவைகள கிழவர்களுக்கும் உண்டாகும் என்க,()

தே, எவாக்கஞ்சியின்குணம்-வெண்பா.

துன்பன்றியின்பருளாச் சுட்கசபத்தோரு
மென்பன்றியூன்பசை யிழுந்தோருந்-தென்பின்றி
போய்ச்சலுடன்வீழ்வாரு முன்னையடிப்பாரென்னிற்
காய்ச்சவாக்கஞ்சியுரை காண்.

(இ-ள்) துன்பமேயன்றி யின்பந்தாராத சட்ககாரோகிகளும் சரீர முழுதும் எலும்புதவிர மாமிசப்பசையிழந்தவர்களும பலமற்றுக் கை கால்லயந்து வீழ்கின்றவர்களும் உன்னைப்பிராத்திப்பாரேயாகில். அவர்களுக்கு எவர் அரிசிக்கஞ்சியையே மருந்தாகக்கொடுப்பாயாக, ()

தே, கோதுமைக்கஞ்சியின்குணம.

கோதுமைக்கஞ்சி கொடுஞ்சுரநீரேற்றமிவை
காதுமைக்குஞ்சந்நிக்குங் காதரமே-போத
வுடலுந்திடமா மொலிவண்டுங்கூற்றுங்
கடலும்பணிவிழியே காண்.

(இ-ள்) வண்டும் நமனுக்கடலும் வணங்கும்விழியாளே கோதுமைக் கஞ்சியானது, வாதசுரம் ஜலதோஷம் கபம் சந்நிபாதம் இவைகளைவிலக்கும் தேகத்திற்கு வன்மையைத்தரும். (௧௭௫)

சிறுபயறு-உளுந்து-பச்சரிசி-இவைகளின்-கஞ்சிக்குணம்,

சிறுபருப்புக்கஞ்சிபித்தந் தீர்க்குமுழுந்தி
னறுபருப்புக்கஞ்சிவளிக் கூக்கு-நறியகபம்
பச்சரிசிக்கஞ்சி பவனகபத்தைப்போக்குங்
கச்சிறுக்குங்கொங்கைமின்னே காண்.

(இ-ள்) வாறிறுகிறுக்கிய கொங்கைகளையுடையவளே சிறுபயறும் பச்சரிசியும் சேர்த்துக்காய்ச்சிய கஞ்சி, பித்தகோபத்தைவிலக்கும் உழுந்து சேர்ந்தகஞ்சி வாதத்திற்கு உரமாம் பச்சரிசிக்கஞ்சி வாதசிலேஷ்மத்தைப்போக்கும்-என்க, (தசஎசு)

தே, கஞ்சி அன்னத்தின்குணம்-வி-ம்.

கஞ்சியன்னத்திற் காயம்பருத்திடு
மஞ்சிவெப்பமகலுஞ் சிலேஷ்மமோ
விஞ்சியுற்றிடு மேனிமினுத்திடும்
பஞ்சிபோலப் பறந்திடும்பித்தமே.

(இ-ள்) வடித்தகஞ்சியும் அன்னமுமாய்க்குடிக்கில், தேகந்தூலித்தலும்-ஒளிவும்-கபாதிக்கமும் உண்டாகும். வெப்பமும்-பித்தகோபமும் நீங்கும், புனற்பானத்தின்குணம்-வெ-பா, (தசஎஎ)

புனற்பாகமுத்தோடம் போக்குமருந்தி
னைற்பாகந்தன்னை யடக்கும்-தனிக்குணங்க
ளும்மட்டோவாய்க்கிதமா மாரோக்கியங்கொடுக்குங்
கமழிட்டபூவனமே காண்.

(இ-ள்) இலக்குமியனையாளேபுனற்பாகமானது, வாதாதிமூன்றுதோஷங்களையும் சுரவெப்பத்தையும்போக்கும் குடிப்பதற்கு இதத்தையும் சரீரசவுக்கியத்தையும்தரும் என்க, புனற்பாகம் என்பது ஒருதரம்வடித்த அன்னத்தை, மறுபடியும் வெவ்வேறு உலையிலிட்டுவடித்து அதை மறுவுலைபாய்ச்சிச் சலரூபமாகக்கொடுப்பதாம் இதனைத்தாரகபத்தியம் என்பர், தே, பஞ்சமுஷ்டிக்கஞ்சியின்குணம். (தசஎஅ)

பஞ்சமுட்டிக்கஞ்சிகெடும் பட்டினியிற்கொள்ளுங்கால்
விஞ்சனிலபித்தகபம் வீறுவாம்-விஞ்சு
மிளைப்பகற்றுந்தாரக் விலங்கனத்திற்கேற்குந்
திளைப்பவெழும்பூண்முலையே செப்பு,

(இ-ள்) அனுபவிக்கப்பூரித்தெழுந்த தனங்களையுடையாளே தாரகபத்தியத்திற்குதவாநின்ற பஞ்சமுஷ்டிக்கஞ்சியை, நீடித்தலங்கன்முடிவில் அருந்தில், திரிதோஷவிகாரம் அதிகரிக்காது ஆயாசம்நீங்கும் என்க,பஞ்சமுஷ்டிக்கஞ்சியாவது துவரை உழுந்து கடலை சிறுபயறு பச்சரிசி யி

௩-௫-ம்-வகை-க-க்கு-ஒருபிடியெடுத்துத் தனித்தனியே மெல்லிய சீலைகளில்முடிந்து ஒருபாத்திரத்திற்போட்டு அதில் ஆற்றுச்சலம் -உ- படி விடித்து அ-ல்-ஒருபங்காகக்காய்ச்சுவதாம், (௧௯எ௪)

முடிச்சுக்கஞ்சியின்குணம்.

வாயுசுரநீரிரத்த மாறும்பசியெழும்பு
மோயும்பலபிணிக ளுண்மையே-யாயுங்கா
லுண்டிபாருத்திடுமெய் யுண்ணுயேகும்முடிச்சுச்
சுண்டியநீர்க்கஞ்சியினாற் சொல்,

(இ-ள்) அரையாழாக்கு அரிசிக்கு இரண்டுபடிசலம்விட்டு அரைப்பலம்சுக்கை சிவித்தரித்துத் துணியில்முடிந்து அதிற்போட்டு நாலிலொருபங்காகக் காய்ச்சிய கஞ்சியில்தெளிவைக் குடிப்பதனால், வாதசோகம் வெப்பம் இவைந்து இறங்குகிறமூத்திரம் பித்தாதிக்கத்தா லுண்டாகிய சிற்சிலநோய்கள் குடலேப்பம்மியசெரியாமந்தம் முதலியரோகங்களும் நீங்கும், உதராக்கினி விருத்தியும் போஜனப்பெருக்கமும் உண்டாம்,()

வடிகஞ்சி-உறைகஞ்சி-கொதிகஞ்சி-இவைகளின்குணம்,

கஞ்சியெலாமந்தமவை கண்ணுக்குத்தான்குளிர்ச்சி
விஞ்சிவரும்பித்தமது விட்டகலு-முஞ்சு
மதிகஞ்சிவாயுவதி சிதஞ்சேர்க்குங்
கொதிகஞ்சிவெட்டையைப் போக்கும்.

(இ-ள்) சாதத்தினின்றுவடிக்கப்பட்ட கஞ்சிகளெல்லாம் மந்தமேயானாலும், விழிக்குக் குளிர்ச்சியாம் இவற்றால் பித்தகோபம் நீங்கும், காலாதீதப்பட்டுத் தயிரைப்போலுறைந்தகஞ்சியானது, வாதாதிக்கத்தையும் கபப்பெருக்கையும் உண்டாக்கும் சாதம்வேகும்போது மீட்கின்றகொதித்தண்ணீ ரென்கிறகஞ்சி, நீர்ச்சுருக்கைப்போக்கும்-என்க, ()

பழஞ்சோற்றின்குணம்.

பழஞ்சோற்றையந்தப் பழையநீராகாரக்
கொழுஞ்சேர்க்கையோடுதயங் கொள்ளி-லெழுந்தாது
பித்தவாதம்போம் பெரும்பசியாமெய்யெங்கு
மெத்தவொளிவுண்டாம் விரி.

(இ-ள) இரவில்நீர்பூட்டிய அன்னத்தை அந்நீராகாரத்துடன் சூரியோதயகாலத்தில் அருந்தில், சுக்கிரவிருத்தியும் உதராக்கினியும் சரீரமுழுதும் தேஜசும உண்டாம் பயித்திய வாததொந்தம்விலகும் என்க, ()

மோர்சேர்ந்தபழைதின்குணம்.

மோருஞ்பழையதுமாய் மோடெடுக்கவுண்டாக்குந்
தீருமெரிவெல்லாஞ் சேயிழையே-தீராத
பித்தப்பிணியும் பிரமைநோயும்பறக்கு
முற்றகபந்தூக்கமிகு மூன்.

(இ-ள்) புராதன அன்னத்தில் மோர்சேர்த்துத் இருப்பதாகவுண்பவர்களுக்கு தேக எரிச்சலும் பித்தரோகமும் பிரமைமுதலியநோயும் நீங்கும் சிலேஷ்மாதிக்கமும் நித்திரையும் அதிகரிக்கும் என்க, ()

புளித்தசோற்றின்குணம்.

புளித்தபழங்காடியன்னம் பொங்கனலாநாளுந்
தளிர்த்தபித்தகோபத்தைச் சாடுங்-வெளுத்தமல
மந்தத்தைநீருக்கும் வாந்திதனையொழிக்கு
மந்தமுறுமணங்கே யாய்.

(இ-ள்) புளித்தபழையகாடிச்சாதம் உஷ்ணமாம்பித்தாதிக்கம் மந்தத்தினால்வெளுப்பாக இறங்குகிறமலம் வமனம் இவைகளை நீக்கும், ()

ஊசியசோற்றின்குணம்.

ஊசலன்னமுண்டா லுடனேவருமுறக்கம்
பேசுவதேன்வாதம் பிரபலமா-மாசித்துச்
சீதளமும்பித்தமும் விசேடிக்கும்வள்ளையொத்த
காதளவுநீள்விழியாய் காண்.

(இ-ள்) நீண்டவிழியாளே ஊசிய அன்னத்தை உண்ணில் உடனே நித்திரை வாதகோபம சீதாதிக்கம பித்தவிருத்தி இவைஉண்டாம் நொந்து நாவிழைந்தாம். (தசஅடு)

கூழ்-களி-இவைகளின்குணம்.

கேழ்வரகின்கூழாற் கிளர்வாதபித்தமொடு
வீழ்வயிறுஞ்சாந்தமென விள்ளுவர்காண்-காழாங்
களிக்கும்பலமுண்டாங் காணிலதிவாதந்
தளிர்க்குமுலகிலிதைச் சாற்று,

(இ-ள்) கேழ்வரகின்கூழினால்வாதபித்தமிஸ்ரமும-உதரரோகமுமநீங்கும் என்பர் ஷெ களிக்கு வன்மையுமவாதகோபமும் உண்டாம், ()

கம்புச்சாதத்தின்குணம.

கம்பினதுசாதத்தாற் காச்சுவாசஞ்சிரங்கும்
பம்புமுடலமிகப் பாரிக்குஞ்-செம்பாலோ
வற்றுவதுமன்றிநிற மாறுமென்பார்வாமமெலா
மூற்றுமூலமாதே மொழி,

(இ-ள்) பெண்ணேகம்பஞ்சாதத்தினால் உதிரஞ்சுண்டுவதுமன்றி இரு மல்இரைப்புவிரணம்சரீரந்தூலித்தல்விவர்ணம ஆகியஇவைஉண்டாம்,

தினையின்மாசாதம்-கஞ்சி-இவைகளின்குணம.

தினைமர்கபவாதந் தீர்க்குமதன்சாதம
புனைபித்தமாயினுநற போகந்-தனைக்கொத்து
வாதமபோக்குமகஞ்சி மாசோபைத்தோடமிதன்
பேதமபோக்குமெனவே பேசு.

(இ-ள்) தினைமா சிலேஷமவாதமெொந்தக்கைவிலக்கும மேற்படிசோறு பித்தகுணத்தை யுற்றிருந்தாலும் வீரியத்தை விருத்திசெய்து வாத கோபத்தை நீக்கும கஞ்சி வீக்கதோஷ வருக்கங்களை ஒழிக்கும, ()

சாமைச்சாதம அதன்கஞ்சி இவைகளின்குணம.

சாமைச்சோறுண்டாற் றனிவாதங்கோழைகபந்
தீமைக்காதாரமாய்ச் சேர்சோபை-போமெத்தப்
பித்தமொடுதாதுவுமாம் பேசுமதன்கஞ்சிக்கு
முத்தோடம்போகு மொழி.

(இ-ள்) சாமைச்சாதத்தை உண்ணில் வாதகோய் க்ஷயம் சிலேஷம விருத்தி வீக்கம இவைபோம பித்தமுமம சுக்கிலமுமம விருத்தியாம அதன்கஞ்சிக்கு வாதாதி மூன்றுதோஷங்களும் விலகும என்க, (தச-அசு)

வரகுச்சாதத்தின்குணம.

எறிகபத்தோடேபலநோ யெய்துமவறட்சி
சொறிசிரங்குபித்தந் தொடரு-நிறையுங்
கரகரெனப்பூரித்த கச்சுமுலைமாதே
வரகரிசிச்சோற்றால் வழுத்து.

(இ-ள்) பொன்காசமன்ன புணர்முலையாளே வரகுச் சாதத்தினால் மூச்செறிகின்ற சுவாசம் இதைச்சேர்ந்த சிலநோய்கள் புடை தினவு கிரந்தி பித்தாதிக்கம் இவை உண்டாம். (தச-கூ)

சோளச்சாதங்களின் குணம்.

சோளமெனப்பேர்படைத்த சோறுகளினாலுடலில்
மீளச்சொறிசிரங்கும் விர்த்தியா-நாளும்
கரப்பனுமுண்டாகுங் கனமருந்தும்பாழாம்
பரப்பனையகண்மாதே பார்.

(இ-ள்) பெண்ணே கருமை வெண்மை செம்மை என்னும் சோளச்சாதங்களினால், தினவும் விரணமும் கரப்பானும் அதிகரிக்கும் நல்ல ஔஷதமும் கெடும். (௧௪௧௧)

காடைக்கண்ணிச் சாதத்தின்குணம்.

எரிவோடுபித்த மெழும்புமையவாதங்
கருகிமுறிந்தோடிக் கரக்கு-மரியசந்த
வாடைபொடிமணக்கு மாமுலைமாதேயுலகிற்
காடைக்கண்ணிச்சோற்றைக் கண்டு.

(இ-) களபமணக்குமுலையாளே காடைக்கண்ணிச் சாதத்தினால் சரீரஎரிச்சலும் பித்தாதிக்கமு முண்டாகும் கபவாத தொந்தம் ஒளிக்கும் என்க. (௧௪௧௨)

சித்திரான்ன வகை

பாற்பொங்கலின் குணம்-வி-ம்.

ஒப்பில்லாப்பாலில்வெந்த வுயர்சுவையன்னமுண்ணில்
வெப்பில்லாவாதமுண்டாம் வெவ்வழற்பித்தந்தாழுந்
தப்பிலாவிதிநெய்வெல்லஞ் சார்ந்திடுந்தன்மையாலே
செப்பிலக்கபமேலாடுஞ் செம்பித்தமொடுங்குங்காணே.

(இ-ள்) உருசியுள்ளபாற பொங்கலருந்துவதினால் தனிவாதகோபமும் இதில்நெய்யுஞ் சருக்கரையுஞ் சேருவதால் சிலேஷ்மாதிக்கமும் உண்டாகும் சுராந்தத்தில் சனித்தபித்தமும் ரத்தபித்தமும் நீங்கும்என்க

பருப்புப்பொங்கலின் குணம் வெண்பா.

போகமிகவுண்டாகும் பொங்கியபித்தந்தணியு
தேகமதில்வாதமிகச் சேருங்காண்-வாசார்
பொருப்புப்போல் விம்முமுலைப்பூங்கொடியே பச்சைப்
பருப்புப்பொங்கற் சோற்றைப்பார்.

(இ-ள்) குன்றனையதனத்தாளே பச்சைப்பருப்புப்பொங்கல் அன்னத்தினால் வீரியவிருத்தியும் வாதப்பெருக்கமும் உண்டாகும் பித்தகோபமும் விலகும் என்க. (௧௪௧௪)

சருக்கரைப் பொங்கலின் குணம்.

வாயினரோசகத்தை மாற்றிவமனம்போக்கு
மாயில்பித்தகோபத்தை மாற்றுங்காண்-நேயச்
செருக்கரைசெந்தேளாற் றிருத்துமடமாதே
சருக்கரைப்பொங்கற்சாதங்காண்.

(இ-ள்) பெண்ணே சருக்கரைப்பொங்கல் அருசி வாந்தி பயித்தியம் இவைகளைநீக்கும். (௧௪௧௫)

மிளகோதனத்தின் குணம்.

மிளகோதனமருந்த விம்முகின்றவாத
மிளகும்பசியுமெழும்புங் களகளெனக்
கூவும்வயிற்றின் குடலிரைச்சலுங்கபமும்
தாவுபித்தமுந் தணியுஞ்சாற்று.

(இ-ள்) மிளகோதனம் உண்பதினால் பொருமுகின்றவாயு குடலிரைச்சல் கபாதிக்கம் பித்தகோபம் இவைவிலகும் தீபனமுண்டாம். ()

புளியோதனத்தின் குணம்.

வாந்தியுமரோசியு வாய்நீர்ச்சுரப்பேகுஞ்
சாந்தியுறுப்பித்தமது சாந்தியாம்-வாய்ந்த
வளியோவயிலோ லென்றையுறச்செய்கண் ணாய்
புளியோதனத்தால்புகல்.

(இ-ள்) வண்டோவேலோ வென்றை யுறங்கண்ணாளே புளியோதனத்தால் வமனவேகம் அருசி பயித்தியமும் போம். (௲சகூ)

கடுகோதனத்தின் குணம்.

உரியகடுகும புளியுமொவ்வக்கலந்தே
யரியமனக்தோட்மைத்த வன்னம-பருகினால்
வாதமொடுஐயமும பின்வாங்கிவிழுந்தோடுஞ்
சீதமலர்த்திருவே தோ.

(இ-ள்) கடுகும்புளியும் சேர்த்தமைத்த அன்னத்தை உண்டால் வாததோஷம் சிலேஷ்மகோபமும் ஒழியும் என்க. (௲சகூஅ)

எள்ளோதனத்தின் குணம்.

செப்பரியவாதபித்தத் தீமையகலுங்கபம
துப்பிவளருமுடலிருகு-முப்பழத்தின்
கள்ளோதுஞ்செய்ய கனிமொழியே நீகேளா
யெள்ளோதனத்தினாலே

(இ-ள்) எள்ளோதனம் உண்டால் வாதபயித்தியதொந்தம் விலகும் சிலேஷ்மாதிக்கமும் தேகவலுவும் உண்டாகும் என்க, (௲சகூகூ)

உழுந்தோதனத்தின் குணம்.

எஞ்சுகபவாத மிகவேறுமதி மந்தமுறும
விஞ்சுபித்தந் தாழுமெய்யுரக்கு-மஞ்சு
மெழுந்தோதம ங்கு மினியாடைமாதே
வுழுந்தோதனத்திற்குறை.

(இ-ள்) இனியநடையாளே உழுந்தோதனத்தினல் சிலேஷ்மவாத தொந்தமும அலஜரோகமும சரீரவன்மையும அதிகரிக்கும பித்தகோபமும நீங்கும,

தயிரோதனத்தின் குணம.

ஆறுவழலகற்று மாந்தபித்தநோய்போக்குஞ்
சேறுதமெய்யை மிகத்தேற்றுங்காண்-மாறு
மரியோதைகொள்ளும வதனமயிலே
தயிரோதனமெலாஞ்சாற்று.

(இ-ள்) சந்திரவதனியே தயிரோதனமானது மாறுஉட்சூட்டையும பித்தநோயையும விலக்கும உடலையிரட்சிக்கும ஆதலால் இதுசிறந்த தெனக்கூறுவாயாக. (தருாக)

கட்டமுதின் குணம,

சூலைசுக்கிலாஸ் மரிசுவாசகாசங்கண்ட
மாலைமுதலியநோய் வந்தணுகு-மாலுலகிற்
றுட்டமிரத்தமொடு தொன்மேகமுமபறக்குங்
கட்டமுதை நீயுண்ணுங்கால்

(இ-ள்) கட்டமுதை நித்தியமுமபுசிப்பையாகில் தேகமுற்றிலுங் குத்தல் சுக்குலாஸ்மரி இளைப்பு இருமல் கண்டமாலை முதலிய ரோகங்கள் உண்டாகும ரத்தபிரமேகமும ஒழுக்கு வெள்ளையும விவிர்தியாம. ()

## பலகாரவகை

உழுந்துவடையின் குணம.

வெறுமுழுந்திற்செய்வடைக்கு மென்மேலும்வாத
முறுமபித்தஞ்சற்றேயொடுங்கு-நறுந்தீ
பனமபோமபுசிப்பிற் பருகநன்றாய்வாலி
யனமபோனடையாயறி.

(இ-ள்) அன்னநடையாளே சுத்தஉழுந்திறைசெய்த வடைக்குவாதாதிக்கமாம பித்தகோபமும உதராக்கினியும கெடுமஇதைஉண்டியோடுண்ணில் நலமாம. (தருாங)

தே, தயிருழுந்தின் வடைக்குணம.

உழுந்தின்பருப்பை யுயர்த்ததியூறச்செய்
வழுந்தாதரைத்து வடையாக்கிச்-செழுந்தேனிற்
கூட்டியுணவைய பித்தசோபைமறு மூதையிலே
நீட்டியவேற்கண் மாதே தேர்.

(இ-ள்) வேற்கண்மாதே உளுந்தமபருப்பைப் புளித்தயிரில் ஊற வைத்துப் பருமபடிசாக அரைத்துப்பாகமாக சுட்டவடையை நல்லதே ணில் தோய்த்து உண்ணில் சிலேஷ்மபயித்தியரோகமும வாததோஷமும நீங்கும என்க. (௩௱௪)

தே, பேயன்வாழைக்கனி சேர்ந்தவடைக்குணம

பேயன்கதலிபுலம பெய்தமாழுந்தின்வடை
நேமுயறவைமைத்து நித்தலுமேநேயமுடன்
றுணருந்தில்வாதபித்தந் தத்தநிலைகொண்டமருந்
தேனருந்தாத் தேனேதெளி,

(இ-ள்) தேன்போன்றவளே பேயன்வாழைக்கனிசேர்ந்த உழுந்துவ டையை வெய்த்தொட்டுத் தினமுண்ணில் திரிதோஷங்கள் அதனதன் இடத்தை உற்றிருக்கும. (௩௱௫)

தோசையின் குணம்

மிகுத்தெழுந்தபித்தத்தை வீறுதடக்கு
மகத்துளனிலகப மாற்றுஞ்-சகத்திலுறு
தேசைபெருமயிலே தின்னரிசேர்மாழுத்தின்
றோசைக்குணமிதனைச் சொல்.

(இ-ள்) அழகுபொருந்திய பெண்ணே உழுந்தும அரிசியுமசேர்த்து ச்செய்த தோசையானது பித்தகோபத்தையும் வாதசிலேஷ்மதொந்தத் தையும நீக்கும என்க. (௩௱௬)

சமபாரத்தோசையின் குணம.

காயமிளகிஞ்சி கருவேப்பிலைமுதலாஞ்
தூயபலகாரமிட்ட தோசைக்கு-வாயுவிலை
பித்தகபவேகப் பெருக்கொழியுந் தாதுவுமாஞ்
சுத்தவன சத்திவேவ சொல்

(இ-ள்) இலக்குமியாளே பெருங்காயம மிளகு இஞ்சி கருவேப்பிலை முதலியபரிசுத்த முள்ளபலசமபாரஞ் சேர்த்ததோசைக்கு வாததோஷ மும பயித்தியசிலேஷ்மகோபமும விலகும சுக்கிலவிருத்தியுண்டாம.

சுத்தஇட்டலி சமபார இட்டலி இவைகளின் குணம,

வெறுமாக்க ளிட்டலிக்கு வேகமறுங் காரப்
பெறுமாக்களிட்டலியைப் பேசி-லறுமனில
பையபித்தங்க ளதிகரிக்கு மோமார
னேய்வெய்யிங்கண்ணாய் நவில்.

(இ-ள்) மதனைவெய்யுங்கண்ணளே உழுந்தரிசி இமமாவுகளாற் செ ய்த சுத்தஇட்டலிக்கு பித்தகோபம நீங்கும காரஞ்சேர்த்த மேற்படிமா வுகளாற்செய்த சமபாரஇட்டலிக்கு திரிதோஷங்கள் அதிகரிக்காவகம என்க. (௩௱௮)

முருக்கின் குணம

ஐயமொடுபித்த மதிகரிக்குந்தாழாத
செய்யவனிலஞ் சிறிதடங்கும-வைய
நிறுக்குமிருகற்பையுறு நேரிழையேநாளு
முறுக்குன் குணமா மொழி,

(இ-ள்) கற்பிற்சிறந்தவளே முறுக்கு என்கிற ஒருவிதபலகாரத்தால் சிலேஷ்மமும பித்தமும விருத்தியாகும வாதகோபங்கொஞ்சந்தணியும என்க. (தருாக)

தேன்குழலின் குணம.

ஓங்குங்கபவாத முட்டினமுமீறிவரும்
வாருஞ்சலங்கொஞ்ச மந்தமுமாந்-தேங்குமிசை
யான்குழலுமியாழுமிக வஞ்சுமொழிக்கிஞ்சுகமே
தேன்குழலுக்காங்குணத்தைத் தேர்.

(இ-ள்) யாழினியமொழியாளே தேன்குழலுக்கு சிலேஷம்வாத தொந்தமும் வெப்பமும் அதிதாகமும் உண்டாகும் பசிகொஞ்சம் மந்தப்படும் என்க. (தருாய)

அதிரசத்தின் குணம்.

ஐயமொடுபித்தமிகுமாகந் திதிக்கவுறுந்
தாய்யவனிலஞ் சுழிக்குங்காண்-சையத்
தெஇரசத்தையூர்வோ னெனுங்கற்புமாதே
யதிரசத்தை நன்றுயறி.

(இ-ள்) கற்புள்ளமாதே அதிரசத்தினுற் கபமும் பித்தமு ... த்தியாகும் தேகசவாட்சணைக்குரிய சுத்தவாதம் கழிக்து வுள் ... )

பிட்டின் குணம்;

செம்புனலுங்கட்டுந் தெளியுமுரமாகும்
வெம்பினில முட்புறத்தில் வீருங்காண்-செம்பு
வட்டைப்பழிக்கும் வன்முலைமாதேயரிசிப்
பிட்டைப்புசிப்பார்க்குப் பேசு,

(இ-ள்) வன்முலைமாதே அரிசிமாவின் பிட்டு உண்பவருக்கு வன்மையும் உள்ளிலவாதவெப் ... கட்கு ருதுகாலத்தில் மிதமன்றி ஒழுகுகிற உ ... வையுறும் என்க.

மோதகத்தின் குணம்-இது

வாதமுறுமாங்தமிகு மாறுதவெப்ப
சீதகபவிருத்திசேருங்காண் - தீது
போதகமுஞ்செப்பும் பொருப்
மோதகமுன்பார்க்கு மொழி

ா) ஆனைசெப்புமலையென்றென்னுமுலையாளே மோதகத்தையரு
க்கு வாதவிருத்தி உதராக்கினி மந்தம் சிலேஷமாதிக்கம் ஆகிய
இவைகள் உண்டாகும்-என்க. (தருகங)

தே, கோதுமை அடையின் குணம்.

தேகம்பலக்குமதி தீபனமுண்டாகுநிறை
மேகம்பெருகுமைய மூர்க்கமறுங்-கோபமிக
வோதியடையு முயர்கொங்கைமாதரசே
கோதியடையைக் கொடு.

(இ-ள்) சிறந்தகொங்கையாளே கோதுமை அடையினால் சரீரவன்
மையும் உதராக்கினியும் சுக்கிலதாதுவும் அதிகரிக்கும் சிலேஷ்மகோ
பம் நீங்கும் என்க. (தருகச)

பொரியுண்டையின் குணம்.

சாந்திபித்தவாதந் தணியும் வலுத்தெழுந்த
சுத்தகபவாதந் தொலையுங்காண்-மெத்த
வரியுண்டவேல்விழியாய் வையகத்திற்சாலிப்
பொரியுண்டை நன்றும் புசி.

(இ-ள்) வேல்விழியாளே பாகிற்சேர்த்துப்பிடித்த நெற்பொரியுண்
டையை யுண்டாயாகில் நலமாம் வாந்தி பயித்தியம் வாதகோபம் கபவா
தமிவ்ரா இவைபோம். (தருகரு)

தே, சேர்க்கை அவலின் குணம்.

சர்க்குண்ணிற் பலமாக்தனிகண்மந்தக்
மோரயர்வு தாகமெரி-வேணி நக்கு
சுங்கா லாகுமினையொழியு
த்திலவலில்.

லும் நெய்யும் சேர்த்துவுண்டால் சரீரத்துக்குப்
தயிரகளில்கலந்து உண்டால் மந்தம் உண்டா
சாபமும் எரிவும் விலக்கும் சலத்திலூறலை
டினால் அதுவும் வாய்மடங்கத் தக்கஉறு
ம் ஏற்றுக்கொள்ளாது ஏதாவதுபுளி
ராகம் நீங்கும் என்க. (தருகசு)

யின் குணம்.

காகம்வாந்திமந்த

(இ-ள்) அறுசுவையோடு மிக்கப்புசிக்கின்ற அன்னத்தால் உடலுக்குண்டாகின்ற பலத்தைவிட, அ-பங்குபலம் மாவும் அவலும் ஆம் இவ்விரண்டைப்பார்க்கிலும், அ-பங்குபலம் பாலும் பழமும் ஆம் இவைகளைவிட, அ-பங்குபலம் மாமிசமும் கிழங்கும் ஆம் இவைகளுக்குமேல் அ-பங்குபலம் பற்பலநெய்களும் ஆம் இந்தநெய்கள் இவ்வாறே பலத்தையும் மிதந்தப்பில் தீமையையும் செய்யும் என்க. (தடுஉக)

தே, உண்பதற்கு முன்பின் உண்ணுங்கனிகளின் குணம்.

அருந்தற்குமுன்பருந்த ளாமாமகல
மருந்தற்குப்பின்பிலந்தையாகும்-பொருந்தியவெங்
காலுங்கபித்தக் கனியாகுமாகாவெக்
காலுங்கதலிக் கனி.

(இ-ள்) புசித்தற்குமுன் நெல்லிக்கனி பின்பு இலந்தைக்கனி இவ்-உ. காலங்களிலும் விளாங்கனியும் புசிக்கலாம் வாழைக்கனி எப்போதுங் கூடாது. (தடுஉஉ)

தே, உண்டபின்பு குறுநடை கொள்ளுதலின் குணம்.

உண்டபின்புநூறடிவைத் தோங்காக்குறுநடையை
கொண்டவர்க்குமுன்புகுடர் கொண்டவருந்-திண்டியெலாஞ்
சேர்ந்தொன்றாய்ச் சீரணிக்குந் தீயமுத்தோடங்களதி
லார்ந்தொன்றமாட்டாவறி.

(இ-ள்) இராப்போஜனஞ்செய்தவுடன் தனதுகாலால் சிறுநடையாக-ரா-அடி உலாவியபின் நித்திரைகொள்பவர்களுக்குமுன்புவுண்ட அன்னத்திற் சேர்ந்த விஷம்பதார்த்தங்களெல்லாம் ஒன்றாகக்கலந்து சீரணிப்பதுந்தவிர அவ்வுண்டியில் திரிதோஷமுஞ்சாராதென்றுணர்க. ()

## பரிமளவகை.

தே, மணக்குழம்புப் பூசுதலின் குணம்,

பூசமணத்தாலின்பம் பூணுமணுக்கிருமி
நாசமுறுமுட்டைக்கு நலவலியாம்-தேசமுறு
நாதவிந்துவும் விளைத்தீ நண்ணமிகவிளையுஞ்
சீதவிந்துவின் குளிர்போக்கேர்.

(இ-ள்) புசித்தவுடன் பகலிரவிலும் பூசப்பட்ட மணக்குழம்பினால் மகிழ்வும் உதராக்கினிக்கு வன்மையும் இவ்வாசனையின் கூட்டினால்

சோணிதசுக்கிலவிளைவும்-உண்டாகும், ரசதாதுவில் ஊருகின்ற க்கிருமிகளும் சந்திரகிரணத்தால் வராநின்றசீதளக்குளிரும் நீங்கும்,

கார்காலமணப்பூச்சின் குணம்-வி-ம்,

கார்காலந்தனிற் பூசக்கருப்பூரஞ்சந்தங்
கஸ்த்தூரியகிற்கூட்டுகாந்தியுமுண்டென்பர்
சீர்மேவுசிறப்புண்டாஞ் சீர்த்தியும்வந்தெய்துந்
தேகத்தின்வியர்வகலு மிளைப்போடுட்சுரம்போம்
கூர்மேவுகாசமிழுப் பிருமலிவைவிலகும்
குட்சிவாய்வதுதொல்லையு நேத்திரமூன்றுலங்கு
மார்வமிகுந்தாகமுறும் வீரியமுநண்ணு
மறிந்தென்று நடந்திடுவர்க்கம் புவியின்மீதே,

(இ-ள்) மழைக்காலத்தில், பச்சைக்கருப்பூரம்-கஸ்தூரி-அகில்கூட்டு இதுகளைக்கிரமப்படி நல்லசந்தனத்திற்சேர்த்தரைத்துப்பூச-அழகு மேன்மை-கீர்த்தி-விழிக்குட்பிரகாசம்-இச்சைசுக்கிலவிருத்தி ஆகிய இவை உண்டாம்வியர்வை-அயர்வு உட்சுரம்-இருமல் சுவாசகாசம் வயிற்றுவலி-தாகம் இவைவிலகும்-இது, உஷ்ணம் என்பர். (தருஉரு)

பனிக்கால் மணப்பூச்சின் குணம்-வி-ம்,

பனிக்காலந்தனைத்தேடிக் குங்குமங்கச்சோரம்
பகருமகில்கஸ்த்தூரி சாந்துசவ்வாதுடனே
பனிப்பகலச்சமஞ்சேர்த்துப் பனிநீர்குழைத்துப்
பண்புபெறப்பூசியிடி லூர்க்கமுடைமையதாஞ்
செனிப்பானதாகமொடு பித்தமறுங்கபம்போந்
தினவுகெடும்வீரியமாஞ் செயமுயருமழகாந்
தனிப்பானசெய்யமலர்த் திருவுமருங்கணைவாள்
சவுரியமுஞ்சேருமுகச் சந்தோடமுறுமே.

(இ-ள்) பனிக்காலத்தில் குங்குமப்பூ கிச்சிலிக்கிழங்கு அதிற்சாந்து கஸ்தூரி-சந்தனம் சவ்வாது இவைகளை முறைமைப்படிப் பன்னீர் விட்டுக்குழைத்துப்பூசில், சரீரபலம் தாதுவிருத்தி மாதர்கூட்டம் வனப்பு லட்சுமிவிலாசம் வீரியம் களிப்பு இவைகள் உண்டாம் தாகம் பயித்தியம் சிலேஷ்மதோஷம் நமைச்சல் ஆகியஇவைநீங்கும் என்க,(தருஉசு)

தே, மாலையணிதலின் குணம்-வெ-பா,

முல்லைமுதனீடும்ண மொய்த்தயலர்தொத்தணிவார்
கில்லையெனுக்காதுநட்ட மில்லைமாறெல்லைமனத்
துக்கமொழியுஞ் சுகமோழியும்பூரிப்பு
மிக்கமொழியவரு மேல்,

(இ-ள்) முல்லைமுதலிய மிருவாசனையுள்ள மலர்மாலையைப் புனைபவர்க்கட்கு. சுக்கிலதாதுவிருத்தியும் மங்களவார்த்தையும் மகிட்சியுறைவும் மலர் புகழ்ச்சியும் உண்டாம் மனத்துயரம்போகும் என்க, (தருஉஎ)

பன்னீரின் குணம்,

பன்னீர்மிகக்குளிர்ச்சி பாராய்சுகசந்திக்
கிங்கீருண்ணேரு மிளைப்புமறுஞ்-சந்நிகளும்
வாதபித்தையமொடு மானேவியாகுலமும்
பூதலம்விட்டேகும் புகல்,

(இ-ள்) பன்னீரை-ஒளஷத அனுபானங்களிற்கூட்டி அருந்தில், சுகசந்நியும் சந்நிபாதங்களும் விலகும் தனியேகுடித்தால், ஆயாசமும் திரிதோஷங்களும் மனச்சங்கடமும் நீக்கும் பன்னீர்ப்பூ சீதோஷ்ணதிரவியம் ஆதலால் இதில் இறங்கிய நீரைக்குளிர்ச்சி என்றார், (தருஉஅ)

## தாம்பூலவகை.

தாம்பூலப்பொதுக்குணம்-வி-ம்,

தக்கோலந்துவருறைப்பு காரமர்மச்
சாரங்கடாயமறிற் சிலேதோட்டம்போ
கிற்காதுகிருமியையந் தாகம்பல்நோய்
கிறமபசியாமாதர்குழா நெருங்குமேலு
மிக்கானசுவையுதரஞ் சுத்தியாகும்
விடாய்நீங்குமறிவொளிருந் தாதுமுண்டா
மெக்காலுந்தரும்மெய்துங்கனையுஞ்சேரு
மெக்கருமங்கட்குமிஃதேதங்குங்காணே,

(இ-ள்) தாம்பூலரசத்தினுல் கிருமி கபம்-தாகம்-பல்நோய்-விடாய் இவைகள்நீங்கும்-பசிஸ்திரீகள் உரவு நாவுரிகை-மலசுத்தி நுண்ணறிவு சுக்கிலவிருத்தி-தருமகுணம் அழகு இவைகள் உண்டாம் அன்றியும் இது சுபாசுபங்களுக்குமுதவும்-என்க-தக்கோலம்-என்பது ஏலம்-முதலியவாசனைதிரவியம-துவர்பாக்குஉறைப்புவெற்றிலை-காரஞ்சுண்ணம்பு

(இ-ள்) கற்சுண்ணத்தால் அன்னஞ்சீரணமாவதுந்தவிர, குடலிற்பிடித்த செச்சிக்குபேதி வாதகிரிச்சரம் பூரான்கடிமுதலியபலவிஷம்காயங்களாலொழுகின்ற ரத்தம் நெருப்புச்சுட்டபுண் கிரங்கு தினவு அளிந்த விரணம் களநோய்மண்டைப்புற்றுதலைநோய் சந்நி இவைநீங்கும்சுக்கிலத்திற்குப்பலமும்தந்தங்களுக்குறுதியும் உண்டாகும், (௩௫௭)

முத்துச்சுண்ணத்தின் குணம்,

முத்துச்சுண்ணத்தால் முதிர்ந்தவதிசாரமையுங்
குத்துக்கிருமியொடு குன்மநோய்-நத்தியதோர்
வாதவரோசகமு மாரிவிடுமலர்ந்த
போதிலுறைமாதே புகல்,

(இ-ள்) இலக்குமியனையபெண்ணே முத்துச்சுண்ணத்தினால் நீடித்தபேதி கபக்கட்டு மலக்கிருமிவயிற்றுநோய் வாதஅரோசகம் ஆகியஇவைபோம்-என்க, (௩௫௮)

தே, தாம்பூலத்தில் காய்ச்சுக்கட்டி சுக்கு-லவங்கம்
இவைகள் சேருகலின் குணம்,

காய்ச்சுக்கட்டிக்கிறுகுங் கட்டவிழ்ந்ததந்தமங்கார்
சூச்சிக்குமாமிப் புனலிற்சா-மாச்சுக்
கிலவங்கமாதிகளா லின்புண்டாமின்னுஞ்
சொல்வங்கநோயுமறுஞ் சொல்

(இ-ள்) காய்ச்சுக்கட்டிசேர்ந்த தாம்பூலத்தினால் அசைவுற்றபற்கள் இறுகும் அந்தச்சாற்றினால்மலக்கிருமிகள் கெடும் சுக்கு கிராம்பு முதலிய மணவருக்கங்கூடிய தாம்பூலத்தினால் மகிழ்ச்சிப்புண்டாம்சரீரத்தைப் பற்றிய சிலரோகம் அஜீரணம் முதலியவை நீங்கும் என்க (௩௫௯)

தாம்பூலந்தின்னுங் காலபேதம்,

காலைபிளவதிகங் கட்டுச்சிநீரதிக
மாலையிலையதிக மாயருந்தில் வேலைவிலக்
காலைமலங்கழியுங் கட்டுச்சிதீபனமா
மாலைமணங்குலவும் வாய்

(இ-ள்) தாம்பூலந்தின்னுவதில், காலையில் பாக்கையதிகமாகச்சேர்க்கில், சாரியாக மலங்கழியும் மத்தியானத்தில் சுண்ணத்தையதிகப்படுத்த நல்லபசியுண்டாம்மாலையில்வெற்றிலையதிகப்படுத்தவாயில்மணம்வீசும்

இதினின்னதைமுதலிற்றின்ன வேண்டுமெனல்.

வெற்றிலைக்குமுன்னம் வெறும்பாக்கைவாயிலிட்டாற்
குற்றமுறுமுறவோர் கூட்டம்போம்-வெற்றிலையைப்
முன்னிட்டுப்பாக்கருந்து மூதறிவோர்தம்மார்பின்
மன்னிட்டுவாழும்பூமாது.

(இ-ள்) தாம்பூலந்தரிக்குமிடத்தில் முதலில் வெற்றிலையை யன்றிப் பாக்கைமாத்திரம் போட்டுக்கொண்டால் குற்றமுண்டாகும்பந்துக்களின் உறவுநீங்கும் முன்னுதாக வெற்றிலையைத்தின்று பின்புமுறைப்படிக்குப் பாக்குவெற்றிலைகளைத் தின்னவேண்டும் இவ்வண்ணம் நடத்துகிற விவேகிகளிடத்தில் லட்சுமிநிலைபெற்றுவாசஞ்செய்வாளென் பதுவர்த்தல் சொக்குதல் மூர்ச்சைப்புமூ உளுத்ததூள் பிசிபிசிப்புமுதலிய குணங்கள் இயற்கையாகப் பாக்குகளிலிருப்பதால் இதைமுதலிற்றின்றால் உடற்கு அபாயம் நேரிடும் என்பதைக் கருத்திக்குற்றமுறும் என்றும்பந்துக்களின் கூட்டுறவு நீங்குமென்றும் சுண்ணந்தடவாத புனிதமுள்ளஒருவெற்றிலையை முதலில் மென்று அந்தச்சாற்றைவிழுங்கில் நெஞ்சுலரலும் கபடக்கட்டும் மேற்கூறிய பாக்கின்றோஷங்களும் விலகுவதால் லட்சுமிவாசஞ்செய்வாளென்றும் கூறினர். (தருசக)

தாம்பூலத்தில் இன்னவை விலக்கவேண்டுமெனல்.

நீற்றிலையுமூக்கு நெடியநரம்புடனே
தீற்றும்புறவுரியுந் தின்றக்கால்-மாற்றரை
வெல்லப்போற்செய்யும் விறனெடுமாலாயிடினுஞ்
செல்லப்போய்விடுக்குந் திரு.

(இ-ள்) தாம்பூலந்தின்னும்போது சுண்ணாம்புவைத்தது காம்பு நுனி நீண்டநடுநரம்பு பிற்புறத்தோல் இவைகளை நீக்காத வெற்றிலையைத்தின்னலாகாது தின்றால் அவர்களிடத்தில் லட்சுமிசேராள் என்க. ()

தாம்பூலரசத்தின் குணம்.

வாயுமந்தம் பீநசசுவாசகாசம்மருசு
யேயுகரதோடமிவைபோக்கும்-தூயுடற்குக்
காந்திதரும்புத்திக்குங்கட்கு நலஞ்செய்யுமணஞ்
சார்ந்ததாம்பூல ரசம்.

(இ-ள்) வாசனைவருக்கஞ்சேர்ந்த தாம்பூலச்சாறானது மணவாத்தவாதம் அக்கினிமந்தம் நாசிரோகம் சுவாசகாசம் அரோசகம் வயிற்றைப்பற்றியதூர்க்குணம் ஆகிய இவைகளை நீக்கும் சரீரத்திற் கொளிவையும் அறிவுதிமிர் இமைக்குநலத்தையும் விளைக்கும் என்க. (தருசசு)

தாம்பூலரசம் விழுங்கும் வகை.

அடைக்காய்தின்பதி லூறுமு தனீர்நஞ்சா
மதிபித்தமிரண்டாவ தூறுநீரோ
கடையமிர்தமூன்றாவ தூறுநீர்கான்
கனமதுரமான்காவ தூறுமந்நீர்
மடையெனவேயைந்தாரிற் சுரந்துள்ளநீரி
வருநீர்களைச்சுவைத்து மனங்கொண்டுண்டாற்
றடையுறுப் பித்தமொடு மந்தநோயுந்
தவிபாண்டுநோயுமுண்டாந் தானுஞ்சொன்னோமே.

(இ-ள்) பாக்கு வெற்றிலை சுண்ணம் அவைகளை ஒன்றாக மெல்லும்போது அதில் நின்று ஊறிய முதல் நீர் நஞ்சு உ-வது நீர்மிகுபித்தியம் [illegible]வது நீர் அமிர்தம் ச-வது நீர் அதியினிப்பு ரு வது சு-வது நீர்கள் பித்ததோஷம் அக்கினிமந்தம் பாண்டுரோகம் இவைகளை உண்டாகும். (௬௫௪)

## வாகன வகை.

யானையேற்றத்தின் குணம்-வெண்பா.

தாதுவிர்த்தியும்பசியுங் காமா துறற்பலமுந்
தீதுபித்தமும்வளரும் திண்ணமே வாதமைய
மேமூகடற்புவியுளெங்கு நிலையாவாம
வேழமடாத்துவர்க்கு மெய்.

(இ-ள்) யானையேறி நடாத்துபவர்கட்கு சுக்கிலம் ஜடாரக்கினி பலம் பித்தம்இவைவிருத்தியாகும் வாதகபதோஷங்கள் ஒழியும் (௬௫௫)

குதிரையேற்றத்தின்குணம்

உடலிருகுந்தீபனமு முண்டாகுநாளுங்
குடலிரங்குமவெப்பாங் குளிரோ-குடிபோம
பொரியிருமற்போராடுமே பூமாதுஞ்சாவான்
பரிநடத்துவார்தமக்குப் பார்.

(இ-ள்) குதிரையேருவதற்கு தேகமிறுதல் பசி குடலண்டம் உஷ்ணமசிற்றிருமல்லட்சுமிவிலாசம இவையுண்டாம குளிர்நீங்கும். ()

பல்லக்கேற்றத்தின் குணம்,

வாயுமிகவுண்டாகு மாறுதபித்தமறு
மேயபசிகலங்கியெய்துங்காண் தீசமதன்
வெல்லற்கரியமலை வின்ஞஞ்சுகலணங்கே
பல்லக்கிலூர்வையெனிற் பார்,

(இ-ள்) மதனகலைவிள்ளும்மாதே-பல்லசகில்-ஏறினால், வாதகோபமும் கலங்கியபசியும் உண்டாகும் ஒழியாக பித்தகோபம்விலகும்என்க ()

தண்டிகையேற்றத்தின் குணம்.

கண்ணொளிவுதாதுபுஷ்டி காமமெழிலுடனே
யெண்ணெளிருங்காந்தி யிவையுண்டாம்-விண்ணுலகு
ளெண்டிசையுமெச்சமிளமயிலேயெப்போதுந்
தண்டிகையையூர்வார் தமக்கு.

(இ-ள்) இளமயிலனையாளே-தண்டிகையை ஏறுபவர்கட்கு, நேத்திர பிரகாசம-வீரியவிருத்தி-சையோகவிருப்பு-அழகு ஒளிவு ஆகிய இவை யுண்டாகும்-என்க,

ஒயுல்வண்டியேற்றத்தின் குணம.

சரீரமுறுநோய் போந்தனிவாதமேகுங்
கரீரமெனவூருபித்தங்காணு தரிய
வயில்வண்டினந்தானென் றண்டியஞ்சுங்கண்ணா
யொயில்வண்டியேறுவர்க் கென்றோர்

(இ-ள்) வண்டும்வேலும் அஞ்சுங்கண்ணாளே ஒயில்வண்டியேறுபவர்கட்கு ஆவிருகவாதமும்-தனிவாதரோகமும்-அதிகபித்தஷோமும் நீங்கும் என்க, (தடுசக)

பாதுகையிட்டநடைபன்குணம.

பலபண்பேசத்தாற் படருகின்றரோக
குலமேகும்விந்துகெடுங் கூறி-னிலவாமே
வாதபித்தவையமறு மாதரசேநாடோறும்
பாதுகையை நீயணிந்து பார்.

(இ-ள்) மாதரசே மிதியடியிட்டுநடமவர்கட்குமன் பேதங்களால்வருகின்ற சேற்றுப்புண் முதலிய ரோகங்கள் சுக்கிலவிருத்தி திரிதோஷம் இவை விலகும், (தடுநிம)

கே, கால்கவசமிட்ட நடையின்குணம.

தரணிவெப்பநோயுந் தரையாலாநோயு
மரணிகன்முள்ளாலாமருப்பும்-தரணியடர்
தேட்புழுக்களாதிகளாற் சேரும்பருவாலுங்
காற்கவசத் தாற்கின்றுகாண்,

(இ-ள்) காலிற்கவசமிட்டு நடப்பவர்கட்குசூரியகிரணம்பட்டபூமியால்வருநோயும், கட்டை கல் முள் இவைகளால்உண்டாகின்றரணங்களு தேள்கிருமிமுதலியவற்றாற்றொடராநின்ற இடரும், இல்லை, ()

சதாபாதநடையின் குணம்.

சதாமிருந்தபாதநடை தன்னுலொளிவுஞ்
சதாவங்கபுட்டியொடு தும்பு-விதானமுமும்
வீரியவிர்த்ததியும்போ மேனிகிழமேனியதாஞ்
சிறியநற்கொங்கைமின்னே செப்பு

(இ-ள்) சிறப்புத்தகொங்கைகளையுடையவளே எப்போதும் அதிநடை நடப்பதால் காந்தியும் சகசதேகபுஷ்டியும் பலமும் மத்திபமாம் சுக்கிலட்சீணமும் கிழரூபமுமுண்டாம், (௩௫௫௨)

அதிக ஓட்டம் சதாஉட்காந்திருக்குதல் நொந்த

சோறுண்ணல் மிகுகாற்று விரும்புதல் இவைகளின் குணம்.

ஓட்டமிதினுமுளுக்காந்திருந்திடினுஞ்
சூட்டாவிநொந்தபகந் துய்த்திடினுங்-காட்டிகமாய்க்
காற்றுடலிற்பட்டிடினுங் காரிகையேநோயுடலாஞ்
சாற்றுகின்றவாதமுறுந் தான்.

(இ-ள்) இளைக்கும்படி ஓடுதல் சதாஉங்காந்திருத்தல் சுடுபுகைபடும்படிவுலாவல் நொந்தசோறுண்ணல் மிகுகாற்று விரும்புதல் என்னும் இச்செய்கைகளினால் முறையேக்ஷயம் அதிதூலம் நேத்திரரோகம் அக்கினிமந்தம்முதலியநோய்வருக்கமும்மகாவாதரோகங்களும்-உண்டாகும்,

ஊன்றுகோலின் குணம்

பலமிருகத்தாலாம் பயமனைத்துநீக்கு
முலவுவிழிபுத்தியிவைக் கொக்கும்-பலமருளும்
வீறுதயிரியமும் வீரியமுமுண்டாக்கும்
கூறிலயர்வோட்டுங் கைக்கோல்.

(இ-ள்) கையில்பிடிக்கின்றதடி கண்ணுக்கும் அறிவிற்கும் ஒத்திருப்பதன்றி நாய்முதலிய பற்பலமிருகங்களினா லுண்டாகின்ற பயத்தையும் இளைப்பையும் நீக்கும் வண்மைதிடம பராக்கிரமம இவைகளைத்தரும்.

## சயனவகை.

தே, புஷ்பசயனயின் குணம்.

தீபாக்கினிதழையுங் இன்றமருந்தாலெழுந்த
தாபாக்கினியுந்தணியுங்காண்-யாபரா
நட்புவருவிந்துறு நாளுமுடலஞ்செழிக்கும
புட்பவணைக்கென்றே புகல்

(இ-ள்) முல்லைமல்லிகை முதலிய புஷ்பமெத்தையில் துயில்பவர்கட்கு பசி போகத்திச்சிஷ்டம் சுக்கிலவிருத்தி சரீரசெழித்தல் இவைஉண்டாம் மருந்தினால் உண்டாகிய உஷ்ணந்தீரும் என்க. (௲௫௫)

இலவம்பஞ்சு பருத்திப்பஞ்சு இவ்வணைகளின்குணம்

இலவம்பஞ்சுபடுக்கைக் கேகுமனல்
மலர்பருத்திப்பஞ்சி னணையோ-உலவிரத்தம்
விந்திவைகளைப்பெருக்கு மேல்விரகமுண்டாக்குங்
குந்தசுரத்தையழைக்கும்.

(இ-ள்) இலவம்பஞ்சுமெத்தையிற் படுக்கையால் உட்சூடுநீங்கும்பருத்திமெத்தை ரத்தம் விந்து காமம் சுரம் இவைகளை விருத்திசெய்யும்.

ரத்தினக்கம்பளத்தின் குணம்-வி-ம்,

பஞ்சவன்னஞ்சேர்நற்கம் பளத்தமுஞ்சலனைதோடம்
விந்திடும்பித்தந்தாது விர்த்தியுமுண்டாஞ்சீத
மஞ்சிடுங்கோபவைய மலைந்திடும்பாண்டுவோடு
நஞ்சுகளெல்லாந்தீரு நலம்பெருமுட்குணமாமே.

(இ-ள்) வெள்ளைசிவப்புமஞ்சள் பச்சைகறுப்பு என்னும் ரு-நிறரோமங்களால் நெய்தரத்தினகம்பளத்திற்கு சீதளதோஷம்குளிர் கபாதிக்கம் பாண்டுவிக்கம் பற்பலவிஷம் இவைகள் நீங்கும் பித்தமும் சுக்கிலதாதுவும் அதிகரிக்கும் இதுமிகவும் உஷ்ணமாமென்க. (௲௫௭)

சகலாத்தின் குணம் வெண்பா.

குளிர்சுரத்திற்கேற்கும் குளிர்பனியைப்போக்கும்
வளர்பெரும்பாடதனை மாற்றுமளிக
சகலாத்தேரியலணியளகமின்னே
சகலாத்தெனவேநீ சாற்று.

(இ-ள்) அழகியகூந்தலையுடையபெண்ணே சகலாத்தென்கிற ரோமவஸ்திரம் நடுக்கற்சுரத்திற்குபயோகப்படுவதுமன்றி குளிர் பனி அசிர்க்கரநோய் இவைகளைநீக்கும் இதுஉஷ்ணகுணத்தையுடைய துவர்ன்னச்சேர்க்கையால் அனந்தபேதமுற்றிருப்பினும் எவைகட்கும் அக்குணமே ஆம் ஆனால் வெண்மை பசுமைநீலம் ஊதா என்னும் நிறங்களுள்ளவைகள் அற்ப உஷ்ணமாம். (௲௫௮)

தாழம்பாயின் குணம்.

தாழம்பாய்வாந்தி தலைசுழற்றலைபாண்டுபித்த
மாழஞ்சேர்நீராமை யாம்பிணியும்-வீழ்ந்தண்
ணீரிழிவும்போக்குயிக நேசிந்தவர்குலத்திற்
கரிழியுங்கூந்தன்மின்னே காண்

(இ-ள்) மேகமபோன்ற கூந்தலாளே தாழம்பாய் வமனம-தலைச்சுழற்றல்-பாண்டுரோகம-பித்ததோஷம - நீராமைக்கட்டி வெகுமூத்திரம இவைகளை விலக்கும-என்க, (௩௫௩)

கோரைப்பாயின் குணம,

கோரையின்பாய் நற்குணமாங் கூறரிய மந்தமறுங்
கூரியதேகங் குளிர்ச்சியுறும்-வாருலகி
ன்னித்திரைகூடு நாடாதுருட்சையிதை
யுன்னிப்புவியி லுரை

(இ-ள்) நற்குணமுள்ள கோரைப்பாயினல் அக்கினிமந்தமும்-சுரவேகமும் நீங்கும் தேகக்குளிர்ச்சியும்-சுகநித்திரையும்-உண்டாகும், ()

சாதிப்பாயின் குணம.

※சாதிப்பாய்சீதளமாஞ் சாருமிதனன்மூலம்
பேதிக்குட்சிதம் பிசறுங்காண் -வாதிக்குஞ்
சீதசுரங்காணுஞ் சிகசுமிகக்கனக்கு
மேதமிகு நோயாக்கிசை.

(இ-ள்) பிரப்பம்பாயினல், மூலரோகம்-சீதமலப் பேதி-சீதசுரம-சிரோமாரம்-இவையுண்டாம்,இது சீதளமாம், ※ சாதிஎன்பதுபிறம்பு, ()

பேரிச்சோலைப்பாயின் குணம

பேரீச்சுப்பாயினிதம் போராதுறங்குவர்க்குப்
பாரித்தகுன்மம் பறக்குங்காண் -பூரித்த
வீக்கமறுந்தீபனமா மெய்யைவெளுப்போடுண்ண
மாக்கிவிடுமென்றே யறி,

(இ-ள்) பேரிச்சோலைப்பாயில், தூங்குபவருக்கு, வாதகுன்மமுமசோபையும்-நீங்கும்-பசி-பாண்டு உஷ்ணதிக்கம்-இவையுண்டாம்,(௩௫௨)

சிற்றீச்சோலைப்பாயின் குணம்,

சிற்றீச்சுப்பாயிற் றினமும்படுப்பவருக்கு
குற்றிடுமேகாந்த லூடர்புலருந்-சுற்றியதோர்
வாயுவறும்பித்தமறு மற்றுங்கபந்திருந்
தாயகமாமிக்குணத்தைச் சாற்று,

(இ-ள்) சிற்றீச்சுப்பாயில்துயில்பவருக்கு உஷ்ணமும்-தேகவுலாவும உண்டாம, ஆவிருதவாதம-அதிபித்தம-கபச்சினம இவைகள் நீங்கும,

மூங்கிற்பாயின் குணம,

நீர்க்கடுப்புமெத்தவுறு நீடுபித்தமுமபெருகு
மார்க்குமனல் மதிகரிக்கும-பாக்குளுறை

கோங்கினறியமுகைக் கொங்கைமலர்த்திருவே
மூங்கிலின்பாய்க்கு மொழி,

(இ-ள்) கோங்கருமபனையகொங்கைமின்னே-மூங்கிற்பாய்க்கு மூத்திரகிரிச்சரம பித்தகோபம-மிகுவுஷ்ணம ஆகியஇவைகள் விருத்தியடையும-என்க. (௩௫௪)

தே, தலைக்கணையின் குணம,

கழுத்திற்குந்தோளிற்குங் கண்டவுயர்வாய்
வழுக்துகீளத்தில்வைத்த மட்டாயிழைத்தநறும்
பஞ்சின்றலைக்கணைக்கெப் பானரமபுநன்குறுமபோந்
துஞ்சின்றலைக்குமுச்சிச் சூர்,

(இ-ள்) கழுத்துக்குமதோளுக்கும மத்தியிலிருக்கும அளவானவுயரமுள்ளதாகவும-நீளமவேண்டியமட்டாகவும-இலவம்பஞ்சினல் தைப்பித்ததலைக்கணையின்மேல், சிரசுவைத்துப்படுத்துக்கொண்டால். பாதாதிகேசம வரைக்கும உள்ள எந்தப்பக்கத்து நரம்புகளும பிசகாமல், சமமாகவிருக்கும அதுவுமல்லாமல்! சிரசைப்பற்றிய ஆவர்த்தநோய்களும நீங்கிவிடும, நாமசொன்னதுசந்தேகமாயிருந்தால் அவ்விதமாக இப்போதே நீ கித்திரைசெய்து பரீக்ஷை பார்ப்பாயாக-என்க. (௩௫௫)

## விசிறிவகை.

மயில்விசிறியின்குணம,

சந்நிவிடங்குன்மம தலைச்சுழல்பித்தமவிக்க
றன்னுசுவேதமவாத தோடமுமபோம-பன்னவதி
லுன்னடிமாமபுந்தி யொளிருமபசுந்தோகை
யிட்டமயில்விசிறிக் கே.

(இ-ள்) மயிலிறகினுற்செய்தவிசிறிக்கு, விஷம சந்நிபாதம வயிற்றுவலிதலைச்சுழலல்-பித்தகோபம-விக்கல்-வியர்வை-வாதகோபம இவை நீங்கும-அறிவுவிளங்கும, இதுவுஷ்ணகாரியம-என்க, (௩௫௬)

வெட்டிவேரின் குணம,

வாசவெட்டிவேர்விசிறி வன்பித்தகோபமொடு
வீசுமெரிச்சலையும வீழ்த்துங்காண்-பேசுங்கா
ருகமற்றுஞ் சகலமனேக்கியமா
மோகமருண் மாதே மொழி,

(இ-ள்) மோகம் அருள்மாதே, மணமுள்ள வெட்டிவேர்விசிறி பைத்தியதோஷம்தேக எரிவு விதாகம் இவைகளைநீக்கும் மனோச்சாகத்தை உண்டாக்கும் என்க, (தருகள)

பனையோலைவிசிறியின்குணம்,

பனைவிசிறிதன்னாற் பருத்தகொருவாத
வினையையநோயும் விலங்கும்-கனபித்த
நோயிமருசியென்ற நோயுங்குடியேகுத்
தேயுமிடைமாதே தெளி,

(இ-ள்) நுண்ணிய யிடையாளே, பனையோலைவிசிறியினால் வாததோஷம்சிலேஷ்மரோகம் பித்தாதிக்கம்அரோசகம்ஆகியஇவைகள்நீங்கும்,

வெண்சாமரையின்குணம்.

வெண்சாமரத்தால் வியர்வையாயாசமொடு
திண்சோஷைமூர்ச்சைத் திருக்குமறுந்-தண்சாரத்
தாகமறும்வெப்பந் தணியுந்திருவமரும்
போகமுறுமாதே புகல்.

(இ-ள்) போகமுறுமாதே வெள்ளைச்சாமரத்தினால், வியர்வை ஆயாசம் மயக்கம் மூர்ச்சையால் வாராநின்ற ஞாபகமறதி நாவறட்சி உஷ்ணம் ஆகிய இவைபோம் லட்சுமி விலாசமும் புணர்ச்சியி லிச்சையும் உண்டாகும் என்க, (தருஅக)

## புணர்ச்சிவகை.

இவ்விதமாதர்போகம் கூடாதெனல்-க-க-றை.

துக்கம்பயமக்க கேசந்திரிமலந் துஞ்சல்வி
வெட்கம்பசிகருப்பந் தாகமுப்பு வெறுப்பசுபஞ்
சுட்கமலட்சியங்கோபம் ரூபமெய்த் துற்கந்தங்கோண்
மிக்கதிதூலமுடைமாதர்போகம் விலக்குவித்தே.

(இ-ள்) துயரம்- அச்சம்- தேகமுழுதும்ரோமம் - திரிதோஷகோபம் தூங்கிவிழுதல் அவித்தன்மை நாணம பசிகருப்பம்தாகம் தன்வயதுக்கு மேற்பட்டவயது புணர்ச்சியில்வெறுப்புசுபமின்மைசூசி முகயோனிரோகம் அலட்சியம் கோபம் அழகின்மை கற்றுழைநாற்றம் - கோள்சொல்லுதல் அதிதூலரோகம் ஆகிய இவைகளையுடைய - மாதர்கள்போகம் சகலரோகங்களுக்கும் காரணமாம் என்க, (தருஎம)

தே, இதுவுமது-வெண்பா.

தேவகுருவாசதின தூரத்தையலர்
பாவவமங்கலமாம் பாவையர்பான்-மேவுயின்பங்

கண்டாரைச்சாருமுறு கண்ணிடுக்கமின்றியே
விண்டாரைச்சாருமுன் னிவள்.

(இ-ள்) தேவஸ்திரீ குருபத்தினி இராஜபத்தினி ஏழைஸ்திரி தாசஸ்திரி பதிமாது விதவை இவர்களைப் போகிப்பவர்களை தாரித்திரமும் துன்பமும் தொடருமே அல்லது இவர்களைவிட்டு மற்றயாரைத்தொடரும். (௧௫௭௧)

தே, புணர்ச்சிசெய்யும்-விதி.

அங்கமுற்றும்பாகியமா யார்வமொன்று யன்பொன்று
யங்கமுற்றும்போகமொன்று யாருங்கா-லங்கத்
துறையுஞ்சகசவிகலுற்ற கருவிங்க
ளுறையும் பருவத்தவர்.

(இ-ள்) சகசபதம் என்கிற பருவமுள்ள ஸ்திரியும் புருஷனும் சரீர முழுவதும் மறைப்பில்லாமல் இருவர்க்கும் ஆசையொன்றாகியும் அன்பொன்றாகியும் போகம் ஒன்றாகியும் கூடுங்காலத்தில் உண்டாகும் கருவானது தாய்தந்தைகளுக்கு உள்ளபலத்தைத் தன்சரீரத்தில் பொருந்தும்-என்-ஆர்வம்-என்பது புணர்ச்சியைக்குறித்து உண்டாகும் ஆசை அன்பு என்பது எப்போதும் உண்டாயிருக்கும் ஆசை. ()

அரோசசந்தானப் புணர்ச்சியின்-குணம்.

பதினாறெனுமியாயுட் பாவையுநாலைந்தென்
றதியாயுட்காளையுமெய்யொவ்வின்-மதியோர்
தாமிரவிலுண்டாந் தநுசர்க்குந்தேகந்
திரமிரவிமஞ்சசுறு கண்டோர்,

(இ-ள்) பதினாறுவயதுள்ளஸ்திரீயும்-இருபதுவயதுள்ள புருஷனும் மாதருதுக்குளொருநாள் இராத்திரிகாலத்தில் சரீரசம்சந்தப்பட்டால்உற்பவிக்கும் குழந்தைகளுக்கும் தேகம்திடமாயிருக்கும் வியாதிவராது வந்தாலும் சூரியனைக்கண்ட பனிப்போல் நீங்கிவிடும் என்கதநுசர்க்கும் என்ற எச்ச உம்மையால் தாய்க்குந் தந்தைக்கும் தேகம்உறுதியாயிருப்பதுமன்றி வியாதியுமணுகாதென்பதுகருத்துமேற்சொல்லியஸ்திரீக்குக் கருப்பையும் சோணிதமுஞ் சுத்தமாயிருக்கவேண்டும் புருஷனுக்கோவென்றால் சுக்கிலமும்-வாதமும் இருதயமும்சுத்தமாயிருக்கவேண்டும் இவ்வாறு இருந்தால், நல்லகருத்தரிக்கும்முன்சொன்னமுறைப்படிகூடுவதும்; ஸ்திரீக்கு மாதாந்த ருதுகாலமாகிய ௧௨ நாளுக்குள் கூடவேண்டும் ஏனெனில், அந்தநாட்களில் சுக்கிலம் போய்த்தங்குகின்ற கருப்பையினது துவாரமானதுராத்திரிகாலத்தாமரைப்பூவைப்போல்மூடிக்கொ

ள்ளாமலிருப்பதினாலென்றுகொள்ககருதுவானமுதன், ௩-நாளும்-அசுத்தநாளாகையால்புருஷன்சேரக்கூடாது அதன்விவரம், கருப்பப்பையின்முகத்துவாரமாகியயோனித்துவாரம்பிரமாணத்தைத்தப்பி அதிகமாகத்திறந்திருப்பதால், அவ்வழியாகச்சுக்கிலத்தின்பங்குமிகுதியாகச்சொல்லப்படுகின்றது அப்போது அவ்விடத்துச்சோணிதமும் இதுவும் ஏற்றக்குறைச்சலின்றி சமமாகத்திரண்டு ஆணும்பெண்ணு அல்லாத அலிப்பிள்ளையாகப் பிறக்கும் இந்த ஏதுவைப்பற்றியே முதன் ௩-நாளுக்கும் அசுத்தநாளென்றதும் சேரக்கூடாதென்றதுமாம் மற்ற ஒன்பதுநாளுக்குள் இரட்டித்தநாட்களில் சேர்ந்தால், ஆண்குழந்தையும்ஒற்றைப்பட்டநாட்களில் சேர்ந்தால் பெண்குழந்தையும் உற்பவிக்கும்இந்தவிவரத்தை யெல்லாம் சாரீரம் என்னும்சாத்திரத்தில் முதல் அத்தியாயத்திற்காணக இதுவற்ற சிலமாதாந்திரத்தில்வசந்தகாலமுதலியகாலபேதத்தினால் மேற்சொல்லிய முறைதப்பிப்புணரலாமென்றுசொல்லப்படுகின்றது ஆயினும் அவ்விதப்புணர்ச்சியினால்பிறக்கும்சிசுவுக்கும் தாய்தந்தைகளுக்கும் மிகுரோகசம்பவமேயாம், (௩௫௭௩)

தே, தினப்புணர்ச்சியின் குணம்,

அநந்தவிதபந்தக்கோ டல்லும்பகலு
மனந்தளின்றிச்சேர்ந்தா ரக்கண் கனிந்தநோய்ச்
சங்கைக்குமுப்புமிலேச் சார்ந்தமருந்துவர்க
டங்கைக்குமுப்பு மிலேத்தான்

(இ-ள்) கொக்கோக நூலிற் சொல்லாநின்றபலவிதலீலைகளுடன் இரவும்பகலும் நித்திரையுமின்றி ஸ்ரீபோகத்தில் அழுந்துவருக்குமிகுதியாயுண்டாகும் விபாதிகளின் அளவிற்குமுடிவும் அவைகளை நிவர்த்திசெய்யவந்த மருந்துவர் கைகளுக்கு ஓய்வும்-இல்லை-என்க (௩௫௭௪)

தே, சுக்கிலசோதனத்தின் குணம்,

விந்துவை மருக்கிங்கால் வீக்கம்பிரமேக
மூந்துவளிகல்லடைப்பு மூடுசுரஞ்-சந்துகைகா
லாசனநாப்பக்கமிடுப் பவ்வழிநோமார்புவலி
வீரணீர்க் கட்டிவையாமே,

(இ,ள்) விருப்பமிருந்தும் போகியாமல் சுக்கிலபந்தஞ் செய்வதினால் சோபையும் சீழ்ப்பிரமேகமும்அண்டமும் அஸ்மரியும் காமசுரமு மகில் கைகால் குதம் ந பாரிசம் சகனம் ஆகிய ஸ்தானங்களில்சரிக்கா[illegible] யாதிகளும்-மார்புநோயும்-பித்தகிருச்சரமும்-உண்டாம், ( )

தே, நித்திரைசெய்வதின் குணம்,

ஐந்திந்திரிய வசவுந்தியம்கலு
மைந்தமனத்துச்சாகநண்ணுங்காண்-பைந்தொடியே

மேனீட்டுமாயனுறு மெய்யி னயர்வொழியுங்
கானீட்டப் பள்ளிகொள்ளுங்கால

(இ-ள்) முறைமைப்படி இடதுபக்கமாகப்படுத்துக் காலைநீட்டிக்கொண்டு நித்திரைசெய்தால், பஞ்சேந்திரியங்களின் அயர்வும்-சரீரவருத்தமும்நீங்கும் இளைந்தமனத்திற்கு உச்சாகமும் ஆயுசுவிருத்தியுமுண்டாகும் (௧௫௭௧)

முக்காட்டுநித்திரை செய்வதின் குணம்,

முக்காடிட் டங்கமுற்று மூடித்துயிலின்இரண்
டக்கிக்குந்தோட்கு மதிபலமா-மிக்கான
சீதமவெயில்தூசிபனி சீறிவருகாற்றிவையா
லோதவருதுன்புமில்லை யுன்,

(இ-ள்) தேகாதிபாதம்வரைக்கும் வஸ்திரத்தினால்மூடிக்கொண்டு நித்திரைசெய்யில் இரண்டுநேத்திரங்களுக்கும் இரண்டுபுஜங்களுக்கும் வன்மையுண்டாம் அன்றியும், குளிர்வாடை-வெய்யிலின் மேகம் தூசி-பனி காற்று இவைகளால் விளைகின்ற குற்றங்களும் விலகும் என்க, ()

தொக்கணத்தின் குணம்,

தொக்கணத்தினாலிரத்தந் தோலூனிவைகட்கு
மிக்குசவுந்தியஞ்ச மீரணும்போ-மெய்க்கதிக
புட்டிரக்கம்புணர்ச்சி யிவைகதிக்கும்
பட்டவலைச்சலறும் பார்,

(இ-ள்) தொக்கணத்தினால் இரத்தசரும் மாமிசதாதுக்களுக்கு மிகவும் போஷணையாவதுந்தவிர தேகபுஷ்டியும் நித்திரையும் புணர்ச்சியிலிச்சையும் அதிகரிக்கும் வாதாதிக்கமும் உழைப்பினால் வந்தவருத்தமும் நீங்கும்தொக்கணம்என்பது கையினால்குத்திபிதவாகப்பிடிப்பதாம்,

தே, இரவில்நித்திரைப் பங்கத்தின்குணம்.

சித்தமயக்கஞ்செறியும் புலத்தயக்க
மெய்த்தலனுக்கமைந்த மென்பவைக-ளித்தமுற
வண்டுஞ்சிலைாநாயாய்ப்பன்னோய் நிவ்வுமிராக்
கண்டுஞ்சிலைாநம்பிக் காண்,

(இ-ள்) இரவில் துயிலாதவர்களை நம்பி, புத்திக்குத் தெளிவின்மை ஐம்புலச்சோர்வு கட்கம் பயம் அக்கினிமந்தம்முதலியநோய்கள் தினமுஞசேருவனவாம் அன்றியும், வேடருடையநாய்கள் கவ்வுதல்போம் ல

ப்பல் வியாதிகளும் கவ்விக்கொள்ளும் என்க இரவில் நித்திரை செய் யாதவரை மேற்சொல்லிய ரோகங்கள் வருத்தும் என்பது கருத்து, ()

தே, பகலநித்திரையின்குணம்-வி-ம்,

தண்டமேட்டரக்ஷிய மூருத்தம்பஞ்
சருவாங்சமுக்கிராக் கிரகஞ்சுப்தி
துண்டமுறுவனுத்தம்பந் திருக்குத்தம்பஞ்
சோணிதமாட்டியப்புருவா டோபகந்தண்
ணண்டுகிருக்திரசியூர்த் துவஞ்சம்பூக
மவபேதமவதந்திர மவதானந்தாள்
விண்டவிவுர்தாசியமிப் பதினெண்காற்கும்
வித்தாகும்பகலனந்தன் மேவின்மாதோ,

(இ-ள்) பகல்நித்திரையானது தண்டம் மேட்டாரட்சியம் ஊதஸ்தம் பம் சருவாங்கம் உக்கிராக்கிரகம் சுப்தி அனுஸ்தம்பம்திருக்குஸ்தம்பம் சோணிதம் ஆட்டியம் புருவாடோபகம் கிருத்திரசி ஊர்த்துவம் சம்பூ கம் அவபேதம் அவதந்திரம் அவதானம் விவுர்தாசிமை என்னும் ௰அ வித வாதரோகங்களைத் தருதற்கு ஒருவித்தாகும்-என்க, (தருஅம)

தே, பத்தியத்தோர்பகற்றுயிலின் குணம்-வெ-பா,

அண்டவங்கியுண்டவுறை பங்கியரும்பத்தியத்தா
லண்டங்கிமூன்றோ டனந்தலது-கொண்டவங்கி
கூடுங்காநேத்திரநோய் கூடுமிரத்தபித்த
நீடுங்காண் விந்துவு நீராம்,

(இ-ள்) பத்தியங்கொண்டவர்களுக்கு சூரியவெப்பம் ஔஷதவெப்ப ம் கடும்பத்திய வெப்பம் என்னும்-௩-வெப்பத்துடன் பகல் நித்திரை செய்வதால் பிறக்கின்றவெப்பமுங்கூடுமாயின் விழிநோய் உண்டாகும் ரத்தபித்தரோகம் அதிகரிக்கும் விந்துவும் நீர்போலாகிவிடும்-என்க,()

சீரணகால அளவைகூறல்,

ரசம்-கற்பம்-செயநீர்-குளிர்ந்தநீர்-வெந்நீர்,

இவைகளின்-சீரணகாலம்-வி-ம்,

பாரினின்மாந்தருண்ணும் பற்பலபண்டமெல்லாஞ்
சீரணமாகுங்காலந் தெளியவே-செப்பக்கேண்மோ
காரணரசமோரேழு கடிகையாங்கற்கஞ்செய்நீர்
வீரணத்தண்ணீர்சாமம் வெந்நீருமிரண்டேயாமம்,

(இ-ள்) உலகினில்மனிதரந்தும் பலவாகிய பதார்த்தங்களின் சீரண கால அளவைகூறுமிடத்து, யாதேனுமொன்றை பிடித்துப்பிழிந்தரசம்

எ-நாழிகையிலும் அரைத்த-மருந்துகள்ஜெய்நீர்கள்குளிர்ந்தநீர் இவைகள் ஒருசாமத்திலும்-வெந்நீர் இரண்டுசாமத்திலும் சீரணமாகும், ()

காய்ந்தாறியசலம்-கஷாயம்-பழச்சாறு,

சோறு-பால்-தேன்-இவைகளின் சீரணகாலம்,

சாலவேகாய்ச்சியாறுஞ் சலம்பதமூன்றேமுக்காற்
சீலமாங்கஷாயமூன்று சேர்பழச்சாறுமாறுந்
தாலமாஞ்சோறிரண்டு சாமமாமிருபதாகும்
பாலுதேன்பன்னிரண்டு நாழிகைபகருவாயே,

(இ-ள்) மிகவுங்காய்ந்தாறியசலம்-மூன்றேமுக்கா நாழிகை-கஷாயம்-ஙு-நாழிகை கனிரசங்கள்-கூ-நாழிகை-அன்னம்-உ- சாமம்-பால்-உ௰-நாழிகை தேன்-௰உ-நாழிகையிலும்-சீரணமாம்-என்க, (தருஅங)

தயிர்சோறு மோர்ச்சோறு-நீர்ச்சோறு-வெண்ணெய்ச்
சோறு-சாராயம்-இவைகளின் சீரணகாலம்,

வார்துவைதயிரும்சோறும் வகுத்திடிற்பதினைன்றுகு
மோர்விடுபதம்பன்மூன்று மொழிபதம்பதினெட்டாகு
மாறுவச்சோறிரண்டு சாமமாமரியவெண்ணெய்
காருமாபன்னஞ்சாமஞ் சாராயங்கடிகையைந்தாம்,

(இ-ள்) தயிர் அன்னம்-கக-நாழிகை-மோர்-அன்னம்-௰ங-நாழிகைநீர் அன்னம்-௰அ-நாழிகை-வெண்ணெய் அன்னம் - உ-சாமம்-சாராயம்-௫ சாமம், அல்லது-ரு-நாழிகையிலும் சீரணமாகும்-என்க, (தருஅ௪)

சூரணம்-தைலம் லேகியம்-கிருதம்-பஸ்பம்-கறிகள்
பழங்கள் இவைகளின்-சீரணகாலம்.

சூரணந்தைலமிலேகங் கிருதஞ்சொற்பனிரண்டென்னச்
சேருநாழிகையாம்பஸ்மஞ் சீரணமனைச்சாமத்திற்
கூறியகறிகளெல்லாங் கூறிநாழிகையேழாகுஞ்
சீரியபழங்களெல்லாஞ் சீரணஞ்சாமந்தன்னில்,

(இ-ள்) சூரணம் தயிலம் லேக்கியம் கிருதம் இவை- ௰உ-நாழிகை பஸ்மம்-ங-முக்கால்-நாழிகை கல்லபதார்த்தங்களெல்லாம்-எ நாழிகை உயர்ந்தபழவர்க்கங்களெல்லாம்-எழரை-நாழிகையிலும்சீரணமாம்-என்க

கருணைமுதலியகிழங்குகள்-வெந்துபாகமான-விதைகள்
பழச்சாறுகள்-பச்சையாய்-அல்லது வெந்ததாயுள்ள
ஆறுவகைச்சுவை-அவைகளின் சீரணகாலம்,

உரைகருணைக்கிழங்கோடுட்கிழங்கெல்லாஞ்சாமம்
விரைகளும்பழத்தின்சாறும் வெந்திடிற்சாமமேயாஞ்

பரிசுறுசுவைகள்பின்னும் பச்சையதாய்த்தின்றாலுங்
கனையவெந்ததைத்தின்றாலுங் கடிகையைந்தன்மேலில்லை

(இ-ள்) கருணை காராக்கருணை புளிகருணைநீர்க்கருணை சேனைக்கரு முதலியகிழங்குகளெல்லாம் ஏழரை-நாழிகை வித்துக்களும் கனிகளும்-ஏழரை-நாழிகை அறுசுவைப்பதார்த்தங்களைப் பச்சையாக வது பாகஞ்செய்ததாக உண்ணில்-ரு-நாழிகையிலும் சீரணமாம்,

கழுநீர்-காடி-மா-உண்டை-பொங்கல்-பசும்பால்
இவைகளின் சீரணகாலம்,

காவிநேர்கண்ணாய்கேளாய் கழுநீர்காடியுமைந்தாகு
மாவுடனுண்டைபொங்கல் வகைகளோடாவினற்பால்
மேவுமோர்தினத்திந்நான்கு விதமுஞ்சேர்த்தருந்துமுண்டி
பூவினாலைந்துநாழிபோய்பின் சீரணிக்கும்,

(இ-ள்) நீலோர்பலம்போன்ற கண்ணாளே-கழுநீர்-காடி-ரு-நாழிகையிலுமமா-பொரியுண்டை-பிளகோதனம-பசுவின்பால் இவைகளையெல்லா ஒன்றாகக்கலந்து ஓர் தினத்திலருந்தில்(உ௰)நாழிகையிலும சீரணமாம் என்க, (தருஅள)

கஞ்சிவகை-நல்லவெல்லம-தேன்-காய்கள்-பச்சரிசி
இவைகளின் சீரணகாலம,

வர்த்திக்குமவடித்தகஞ்சி வகையேழிற்சீரணங்காண்
நித்திக்குநல்லவெல்லந் தேனிருபதுநாழிக்கு
ளூற்றிடுங்காயினங்க ளற்றிடுமெண்பதத்துட்
கததுமபச்சரிசிநாலைங் கடிகையுட்சீரணிக்கும,

(இ-ள்) தேகத்தைத்துலிங்கச் செய்கின்ற வடிகஞ்சிமுதலியகஞ்சிகள் ஏ-நாழிகை-நல்லவெல்லம-தேன் பச்சரிசி(உ௰)நாழிகை-கக்கரிக்காய்-முதலிய-காய்வருக்கங்கள் (அ) நாழிகையிலும-சீரணிக்கும, (தருஅஎ)

இளநீர்-சருக்கரை-பானக்கம-தயிர்-மோர்களின்
மேல்சலம-வறுத்தமா-இவைகளின்சீரணகாலம.

இளநீர்சர்க்கரைபானக்க மெழுநாழிகையிற்செரிக்கும
வளமுளதயிரின்மேலும வார்த்துணுமோரின்மேலுந்
தெளிவுறுதண்ணீருண்ணச் செரிந்திடுங்கடிகையைந்தில்
தெளிநல்வறுமாநீருஞ் செரித்திடுங்கடிகையேழில்,

(இ-ள்) இளநீர்-சருக்கரை-பானக்கம(எ)நாழிகை-தயிரன்ன-அல்லதுன்னம-புசித்து அதன்மேல் தண்ணீர்குடிக்கில்(ரு)நாழிகை-வறுவைத்தண்ணீரிற்கரைத்துக்குடிக்கில்(எ)நாழிகையிலும-சீரணம

கடுநீர்-முக்காற்சுண்டிய நீர்-ஆறியநீர்-இவைகளின் சீரணகாலம

சுட்டநீருண் ணுங்காலை சொல்லியவாறுமுக்கால்
மட்டிலேகொதித்தவெந்நீர் வருக்கிலேழரையேயாகுந்
திட்டமாய்க்குளிர்ந்தநீர்தான் சேரிக்குமொன்பதின்மேலென்ன
வட்டமுலையினாளே வழுத்துநாழிகையைத்தானே,

(இ-ள்) அடிபரந்ததனங்களையுடையாளே காய்ந்தநீர்-௩-நாழிகை மு
க்காற்கூறுசுண்டியநீர்-ஏழரை-நாழிகை - அருந்தும பதமாயாற்றியநீர்
(௯)நாழிகையிலும-சீரணமாம். (தருகூ)

மகரம-பூ-தளிர்-இவைகளின் சீரணகாலம,

தருசெடிகளிலுண்டாங்கேசரங்கள் பூகொழுந்தேயெல்லா
மரிவையேநின்றிடிற்சீரணஞ் சாமந்தனிலிவ்வாறே
திரவியவிசனங்கட்கெல்லாஞ் செப்பிடுமவேதமென்றே
குருபரனடியைப்போற்றுங் குறுமுனியுரைத்தவாறே,

(இ-ள்) விருக்ஷம-செடி-கொடி-புல்-இவற்றாலுண்டாகின்ற கேசரம
புஷ்பம் தளிர் இவைகள்-ஏழரை-நாழிகையில்சீரணமாம, இவ்வண்ண
மாகவே சகலதிரவியங்களுக்கும, சீரணகால அளவையை ஆயுள்வே
ங்கூறுகின்றதென, அகத்தியமுனிவர் கூறியவாறும-என்க, ()

தே. நோயணுகாவிதி-வெ-பா,

திண்ணமிரண்டுள்ளே சிக்கவடக்காமற்
பெண்ணின்பாலொன்றைப் பெருக்காம-லுண்ணுங்கா
லீர்கருக்கிமோர்பெருக்கி நெய்யுருக்கியுண்பவர்தம
பேருரைக்கிற்போமே பிணி,

(இ-ள்) மலசலத்தை அடக்காமலும-விந்துவை அதிகமாக விடாமலு
ம உண்ணுமிடத்து நீரைக்காய்ச்சு மோரைவிளாவி நெய்யையுருக்கி உ
ண்ணலுமாகிய தன்மையுள்ளவர்களின் நாமத்தை யுச்சரிப்பவர்கட்கும
பிணிவிலகும, (தருகூ)

தே. இதுவுமது-வி-ம,

பாலுண்போமெண்ணெய்பெறின் வெந்நீரிற்குளிப்போம
பகற்புணரோமபகற்றுயிலேம பயோதரமுமுத்த
வேலஞ்சேர்குழலியரோடிள் வெயிலுமவிரும்போ
மிரண்டடக்கோமொன்றை விடோமிடதுகையிற்படுப்போம
மூலஞ்சேர்கறிநுகரோ மூத்ததயிருண்போ